உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது சரித்திர உண்மையை விளக்கும் ஆசார்யபிரபாவம்.

இஃது

**கா. ஏ. ஆலாலசுந்தரம்பிள்ளை அவர்களால்**

இயற்றப்பட்டு

திருமயிலை

ஸ்ரீ வாயிலாநாயனார்தொண்டர்க்குத்தொண்டன்

திரு. மு. துளசிங்கநாயகரவர்கள்

வேண்டுகோளின்படி

பழநி - வெங்கடசாமி கிராமணியாரவர்கள்

பொருளுதவியால்

சென்னை

**கணேச அச்சியந்திரசாலையில்**

பதிப்பிக்கப்பட்டது

விலை ரூபா - உ

**1918.**

விலாசம்:—

கா. ஏ. ஆலாலசுந்தரம்பிள்ளை அவர்கள்,

நெ. 19, ரண்டாலஸ் சாலை,

வேப்பேரி, சென்னை.

திருச்சிற்றம்பலம்

# ஆசார்யபிரபாவம்.



## உபோற்காதம்

ஆச - சாஸ்திரார்த்தங்களை முற்றுமுணர்ந்தவர் ஆசரதி - உணர்ந்தவண்ணம் தான் நல்லொழுக்கத்தில் நடப்பவர், பிறரையும் அவ்வழியிலேநடத்துபவர் என்னும் தாதுக்களின்வழியாய்ப்பிறந்த ஆசார்ய என்னும்பதம், ப்ரபாவம் (மகிமை) என்னும் மொழியோடுசேர்ந்து ஆசார்யப்ரபாவம் எனவாயிற்று. ஆகவே, அஞ்ஞான இருளைப் போக்கிச் சாஸ்திரார்த்தங்களையும் அவற்றின் அனுபவங்களையும் பிரகாசப்படுத்துந் தன்மையுடையார் மகிமை எனப்படும். அத்தகையராவார்—ஆளுடைய பிள்ளை, ஆளுடைய அரசுகள், ஆளுடைய நம்பிகள், ஆளுடைய அடிகள் என்று போற்றப்படும் சமயாசாரியர்கள்

அவர்கள் அபிமதம்— (1) சிவன்றன திருக்கடைக்கண் (அனுக்கிரக) நோக்கஞ்சேர்ந்துள்ள சமயாதீத சித்தாந்த சைவ சமயம் (2) அச்சமயத் தெய்வமாகிய அநாதிமலமுத்த பரம சிவம் (3) வேதசிவாகமப் பிரமாண்ய திரிபதார்த்த ஸ்தாபனம். (4) ஞான யோக கிரியா சரியைகளென்னும் சதுஷ்பாதம்.

அவர்களால் போக்க (நிக்கிரகிக்க)ப் பட்ட குற்றங்களாவன:— (1) புறசமயிகளால் நிந்திக்கப்படும் சைவசமய நிந்தை (2) பரசிவபரத்வதூஷணம் (3) திரிபதார்த்த அபார்த்த ஆபாசம் (4) அத்வைதபத அபார்த்தம்.

அவர்களால் அநுக்கிரகிக்கப்பட்ட குணங்களாவன:— (1) சைவசமய நிந்தா நிக்கிரகம், (2) பரசிவ பரத்வ ஸ்தாபனம், (3) திரிபதார்த்த சித்தாந்தபோதம், (4) அத்வைத பதார்த்தப் பிரகாசம்.

இங்ஙனம் கூறிப்போந்த, நிக்கிரகிக்கப் படுவனவும், அநுக்கிரகிக்கப் படுவனவுமாகிய செயல்களைச் செய்யவந்தவை யாவையோவெனின், ஞானசம்பந்த சொரூபமாகியும் பஞ்சாக்ஷர சொரூபமாகியும், சிவபோக தேஜோரூபமாகியும், சிவானந்தானுபவ சொரூபமாகியுமுள்ள மாபரனாகிய பரசிவனுடைய ஜங்கமத் திருமேனிகளாகும்.

இவ்வுண்மையால், ஞானசம்பந்த சொரூபம் திருஞானசம்பந்த மூர்த்திகளெனவும், பஞ்சாக்கரசொரூபம் வாகீச மூர்த்திகளெனவும், சிவபோக தேஜோரூபம் சுந்தரமூர்த்திகளெனவும், சிவானந்தானுபவ சொரூபம் மணிவாசக மூர்த்திகளெனவும், திருவுருக்கொண்டு ஆசாரியமூர்த்திகளாய் வந்தன என்று அறியக்கிடக்கின்றன.

இதனால், ஞானசம்பந்தமாயும் பஞ்சாக்கர சம்பந்தமாயும் சிவபோகசம்பந்தமாயும், சிவானந்தானுபவ சம்பந்தமாயுமுள்

ளது பரசிவத்தின் சொரூபவடிவமென்றும், அந்நான்கும் தனித்தனி திருவுருக்கொண்டுவந்த நால்வராசாரியர்களது திருவுருவங்கள் தடத்தவடிவங்களென்றும் அறியக்கிடக்கின்றன. இவ்வுண்மை தோன்றவே "தாபர சங்கமங்கள் என்றிரண்டு உருவில் நின்று மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க்கு அருளை வைப்பன" என்று சித்தாந்தங்கூறிற்று

ஞானசம்பந்தமாதி நான்கினையும் குணங்களாகக்கொண்டு சொரூப வடிவமாய பரசிவம் இருப்பின் ஆன்மாக்கள் உய்யும்வகையும், சைவசமயம் புறச்சமயங்களால் இகந்துபடாமல் ஓங்கும்வகையும், இவ்வையகமுற்றும் சிவநாமமே சூழும்வகையும், சிவநாமமாகிய பஞ்சாக்கரப் பிரதிபாத்தியமாகிய திருப்பதார்த்தங்கள் பிரகாசிக்கும்வகையும் எவ்வகையான் ஆகும்.

ஆகவே, அவையெல்லாம் பிரமாணமுகத்தானும் இலக்கணமுகத்தானும், சாதன முகத்தானும், பயன முகத்தானும் உலகமெல்லாம் உணர்ந்துய்யவே சொரூப குணமாயுள்ள ஞானசம்பந்தாதி நான்கும் தனித்தனி திவ்ய திருவுருவங் கொண்டுவந்து, ஆன்மாக்களுக்கு ஞான சம்பந்தம் உண்டாக்கி அதனால், ஆன்மசத்தியை வருவித்து, அந்த ஆன்மசத்தியால் தன்னுள்ளத்தில் பரமான்மாவாகிய பரசிவன் நிற்கும் கலப்பினைப் பஞ்சாக்கரத்தால் பிரகாசப்படுத்தி, அந்தப் பிரகாசத்தால் 'சோஹம்' என்று பாவிக்கும் அத்வைதக் கலப்பால் தானென்றும் அவனென்றும் வேறு வேறு தோன்றுமாறின்றி சிவமேயாய் சிவபோகத்துக்கு

ஆளாக்கி, சிவானந்தானுபவத்தில் நிலைபெற்று வாழச்செய் யும். இதனால், ஞானசம்பந்தராதி சைவாசாரியார்கள் பரசி வத்தினுடைய தடத்தவடிவங்களென்று பிரகாசமாகிறது.

இத்தகைய ஆசாரியர்களன்றி சித்தாந்தசைவசமயமும், அச்சமயத் தெய்வமாகிய பரசிவமும், சிவசாதனபூஷணங்க ளும் பாசஞான பசுஞானங்களைக் கடந்த சிவஞானமும் பிரகா சிக்குந்தன்மையுடையன ஆமோ? ஆகா.

இதுகாறுங் கூறிவந்தனவன்றி ஆணவாதி குற்றங்களைப் போக்கும் வன்மையுடையாரே ஆசாரியராவார் என்றும், அக் குற்றங்களையுடையார் ஆன்மாக்கள் என்றும், அக்குற்றங்களைப் போக்கும் கடப்பாடுடையான் சிவபெருமான் என்றும், அவன் அநாதிமலமுத்தன் என்றும், அவன் ஆன்மாக்களுக்கு அக் குற்றங்களைச் சித்தாந்தசைவசமயத்தில் போக்குவன் என் றும், அச்சமயம் இனிப்பிறவாப் பிறவியாகிய தவப்பிறவி ஆன்மாக்களுக்குக் கூடவருங்காலத்தில் என்றும், அது கூட வருங்காலத்தில் சிவபெருமான் ஞானசம்பந்தாதி நால்வகை இலக்கணங்களையும் நிறைபவரை ஆசார்யவுருவங்கொண்டு வரு வனென்றும், அந்த ஞானத்தில் ஞானம் என நான்கு வகை யாய்க் கூறப்படும் அவற்றால் மும்மலக்குற்றங்களைப் போக்கு வனென்றும், இக்குற்றங்கள் இந்த நால்வகையானன்றி வேறு வகையால் நீங்கத்தக்கன அன்றென்றும், அந்நால்வகை உபாயங்களால் மலநீக்கம் செய்யும் வன்மை நின்மலசொரூபனா கிய சிவபெருமான் கொள்ளும் ஆசார்யத் திருவுருவங்களுக்குக்

கூடுமேயன்றி மலசொரூபிகளாகிய ஆன்மாக்கள் கொள்ளும ஆசாரியத் திருவுருவங்களுக்குக் கூடாவெனறும, தெள்ளிதின் அறியக்கிடக்கின்றமை காண்க

அவ்வுண்மை நன்குவிளங்கவே, நால்வராசாரியர்களும சொரூப சிவத்தினுடைய தட்டத்த திருமேனிகளாதலான், அத்திருமேனிகள திருவுருக் கரந்தகாலத்து, ஞானசம்பந்தத் திருமேனி எல்லாவுயிர்களுடைய அறிவினிடத்தும அறிவாகநின்று கலந்திருக்கும ஞானசோதியாகிய சிவசோதியிற்கலந்தது வாகீசத் திருமேனி. சராசரங்களாகிய எல்லாவுயிர்களும தோன்றி ஒடுங்கும திருமேனியாகிய சிவலிங்கத்திருமேனியிற் கலந்தது மணிவாசகத் திருமேனி, சிவானந்தாகாரமாகிய சிதாகாச சிற்சோதியிற் கலந்தது, சுந்தரேசத் திருமேனி, ஞானசம்பந்தாதி தட்டத்த திருமேனிகளைத் திருவருளுக்குரிய சந்நிதியாகத் தம உத்தமாகவெல்லாம கண்டுகளித்து சிவானந்தானுபவிகளாய்ச் சிவசாயுஜ்யம பெற்றவாறு. திருத்தொண்டத்தொகையை அதியருளிய அரியதிருமேனியாதலான் அத்திருமேனியைக் கரவா (மறைக்கா)து இந்திராதி தேவர்களும கண்டுகளிக்குமாறு ஆயிர ஞாயிறுபோன்று பொங்கு பேரொளியோடு வெள்ளை யானையின்மேல தேவர் முனிவர் யாவரும புடைசூழ்ந்து போற்ற வேதசிவாகமங்களெல்லாம பேரொலியோடு ஸ்தோத்திரஞ் செய்ய சகல சம்பிரமத்துடன் ஸ்ரீகயிலாயத்தைநோக்கிச் சென்று ஆலாலசுந்தரமூர்த்தியாகவே அங்குவீற்றிருந்தது, இங்ஙனமான திருமேனிகளின் பெருமை இவ்வளவின வென்று இங்கு வரைந்து முடியுமோ? முடியா. இன்னும்பலவுள.

இனி, ஆசாரியபிரபாவமாகிய இந்நூல் வெளியிடுதற்குக் காரணமான சில விஷயங்களை எடுத்துப் பேசுவாம்.

அஃதாவது—அகண்டதேஜோரூபமாய் விளங்கும் சூரியமூர்த்தியினிடத்தில் பாக்கசபந்த வாச்சியனும் அந்தர்வியாப்தனும் பரசிவன் விளங்குவதுபோல, அகண்ட வியாபகமாய்ப் பிரகாசிக்குஞ் சைவசமயாதித்தனாகிய சூரியனிடத்தில் ஞானசம்பந்தாதி வாச்சியார்த்தப் பிரகாசகர்களாய் உள்ளொளியாய் விளங்கும் முன்சொல்லிவந்த மகிமைமிகச்சிறந்த ஆசாரியமூர்த்திகளைச் சைவசமயிகளாக எண்ணப்பட்டவர் "தாபர சங்கமங்களென்று இரண்டிருவில் நின்று பரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைச்செய்பவன்" என்னும் உண்மையைச் சிறிதேனும் ஆராயும் ஆராய்ச்சியற்று, ஒருமல இருமல வாசிகளாகிய விஞ்ஞானகல பிரளயாகலர்களாகிய ஆன்மவர்க்கங்களோடு சேர்த்தும், அவ்வளவில் அமையாது சகலரினும் வைத்து மாயாமலவாசிகள் அனுபவிப்பதுபோல இன்பதுன்பானுபவங்களை அனுபவித்தாரென்றும், காமாதிகுணங்களை மேற்கொண்டிருந்தனரென்றும், சிவபெருமானால் சிற்சில காரணங்களாற் சாபமேற்றுப் பூவுலகின்கண் வந்து பிறந்து மானுடசரீரிகளாய்ப் புறச்சமயங்களிற் புக்குழன்றும், பந்தவசப்பட்டு இறைவனை மறந்தும் மயங்கிநிற்கும்பொழுது இறைவன் திருவருளால் புறச்சமயங்களினின்று நீங்கியும், தடுத்தும் ஆட்கொள்ளப்பெற்றவரென்றும், பின் சரியையாதி பக்திமார்க்கங்களினின்று ஆலயங்கள்தோறுஞ் சென்று வழிபட்டாரென்றும், அவ்வழிபாட்டின்

விசேடத்தான அவர்களைக்கொண்டு சில அற்புதச்செயல்களை இறைவன் செய்வித்தனனென்றும், பின்னர் சாயுஜ்ஜியத்தில் சிவ சாலோகாதி பதமுத்திகளை யடைந்தனரென்றும், தமதுள்ளத் திலும் அஞ்சாது எண்ணி; பிரசங்கங்கள் நேரிடுங்காலங்களி லும் சபையின் நோக்கமறிந்து சுருக்கமாகவும் பெருக்கமாக வும் பேசி, பின்னர் அனபிற் சிறந்தவர்களென்றும், அடியவர் களிற் பெரியவர்களென்றும், பத்திமார்க்கத்தை மறவாதவர்க ளென்றும், சிற்சில அருமைகளையும் எடுத்துப்பேசி அதன்பின் னர் சைவாசாரியர்களென்றும் "சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் என் சுந்தரனும், சிற்கோல வாதவூர் தேசிக னும், முற்கோலி வந்திலரேல்! நீறெங்கே? மாமறைநூல் தான் எங்கே? எந்தைபிரான் ஐந்தெழுத்தெங்கே" என்றும் மிகவியந்து பேசுவர்.

இஃதென்ன அறியாமை! இஃதென்னகொடுமை! இஃ தென்ன பாவம்! அந்தோ! அந்தோ!! பாசசம்பந்திகளாகிய ஆன்மாக்களில் இவர்களும் ஒருவராயின் இவர்கள் திருவாக் குகளாகிய தேவாராதிகள், பதிவாக்காகிய திராவிடவேதங்க ளென்றும், உபநிடத சாரங்களென்றும் அவைகளைச் சிவசந்நி தானங்களில் ஓதவேண்டுமென்றும் தேவாரங்களால் பாடப் பெற்ற க்ஷேத்திரங்களே சிறப்புடை க்ஷேத்திரங்களென்றும், அல்லாதன சிறப்புடைத்தன அல்லவென்றும் கூறுவர். 'அர வகல அல்குலாாபால் ஆசைநீத்தவர்க்கே வீடுதருவம் என்று அளவில்வேதம் சாற்றியதலைவன் தன்னை, பரவைதன் புலவி

தீரபபான் கழுது கண்படுசகும்பாளுள இரவினில துாது கொண்டோன்" என்றும் இதுபோலும் பல அரிய திருப்பா சுரஙகளை எடுதது்க்கூறி அன்பு பராட்டுவா.

இங்ஙனமான செயலுமு சொலலுமு அறிவினர் கூற்றே! அறிவிலாப பேதையர்கூற்றே! யாம அறிந்த்சொலலுந் தர முடையோமலலேம. எலலா ஆனமாககளுடைய கணக்குக ளெலலாம பாரதது தண்டஞசெய்யவல்ல இயமன்தான் அறி வனே! அவனும அறியான்.

இங்ஙனமான தீயினுங்கொடிய புனமொழிகள் எமது செவியினுட் எம்மையபோனற சிலருடைய செவிகளினுமபுக, அமமொழிகள எம உள்ளங்களிறபுககு ஆறுபபுண்ணுக்கிவருந தத தலைப்பட்டமையான் அவையிறறை ஒருவாற சமாதானப படுததி ஆறறிக்கொளள ஆகாய பிரமாவமென்னும் இந் நூலை எழுதி திருமயிலை அப்பு முதலி தெருவு 12-வது நெமப ருளள வீட்டிலிருக்குமு பழநியாண்டவ நககுப பரமபகதரா கும பழநி வேஙகிடசாமிசிராமணியாரவாரள உபகரிததபொ ருளுதவியால் அசசுவாகனமேறறி வெளியிடலாயிறறு. நமது சித்தாநத சைவாசாரியாகளாகிய நாலவா திருவடிகளில் மெய் யன்புபூணடவாகளுமு, பரசிவபராததிறகுபபயந்தவர்களுமு சைவசமயததினை ஏற்றதமைத சிததாநத நூலாராய்சசியால நன ருய்த் தெளிநதவர்களுமு பெறறு கணணுற்கண்டு தமது நல் லறிவால் கூர்நது அறிவாராயின் அடங்காமகிழ்சசி யெய்தி எமமை வாழ்த்துவர் என்பதில ஐயமிலலை. அஃதேபோல

ஏனோர் எம்மை அறிவிலி என்று வைவாரெனப்படினும் சிறிதும் ஐயமே இல்லை.

யாம் பிறர் வாழ்த்துவதையும், வைவதையும் எண்ணி இந்நூல் எழுதி வெளியிடத் தொடங்கியதன்று. எமக்கு ஆசாரியர்கள்பால் உண்மையாயுள்ள பற்றுடைமையாலும், சிவபெருமானை வாழ்த்தி வணங்கப்பெற்ற இப்பாக்கியம் எப்பிறவியினும் எம்மைவிட்டுப் போகாது வாழ்வேயாம்.

இங்ஙனமான உண்மையை எமக்குத் தந்தவர் வேதாகமோக்த சைவசித்தாந்தசபைத்தலைவரும், வைதிகசைவசித்தாந்த தசண்டமாருதமென்னும் பட்டப்பெயரைப் புனைந்தவரும் சைவசிகாமணியுமாகிய எமது ஸ்ரீலஸ்ரீ-சோமசுந்தர நாயகரவர்களே யாம். அப்பெரியோர் முதலாசிரியரைப்பற்றி ஞானசம்பந்த பரத்வநிரூபணம் ஆசாரியபிரபாவம் என்னும் நூல்களில் பல பிரமாணங்களைக் கொண்டு தமது ஆற்றலை நன்றாய் விளக்கியிருக்கின்றனர். அவ்வழியே நல்வழியெனக் கடைப்பிடித்து எமது சிற்றறிவுக்குப் புலனாயவழி தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்திகளுடைய பரத்வநிரூபணத்தை ஆசாரியபிரபாவமென்னும் பெயரிய நூலால் வெளியிடத்துணிந்தேம். இஃதேபோல் திருநாவுக்கரசுகள், மணிவாசகமூர்த்திகள் என்னும் நமது சைவாசாரியர்களுடைய பிரபாவமும் அச்சுவாகனமேற்றி சைவநாடெங்கும் உலவிவாழ இறைவன் திருவருளால் நிச்சயித்துள்ளேம். அன்றியும் நமது ஆசாரியமூர்த்திகளிடத்துள்ள எமது பேரவாவையெல்லாம் இப்போது

வெளியாய்வரும்பெரியபுராணத்திற்கு யாமெழுதிவரும் சித்தா ந்தபோத ரத்னாகரமென்னும் பேருரையில் நிரப்புவோமாக.

ஆசார்யமூர்த்திகளாகிய சுந்தரமூர்த்திகளுடைய பிரபாவ மென்னும் இந்நூலுக்கு யாம்கொண்ட பிரமாண நூல் ஒன்றே. அது "உலகெலாம்" என்றடியெடுத்துக்கொடுக்க அத்திரு வருளடியை முதலாகக்கொண்ட பெரியபுராணமேயாம். திரு வருள்வாக்காகிய பெரியபுராணம் எமக்குப்பிரமாணமாகவிருத்த லால், இவ்வாசார்ய பிரபாவத்துக்கும் அத்திருவருளே துணை யாகவிருந்து பிரகாசப்படுத்தும் என்பதில் ஐயமின்று.

பரவை மணவாளன் பொன்னடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆசார்யப்பிரபாவம்.

---

## ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் புராண இருதயம்.

பாயிரம்.

### நடராஜமூர்த்தி வணக்கம்.

உலகெலாம் உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

எடுக்கு மாக்கதை யின்றமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை யைந்துடைத் தாழ்செவி நீள்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம்.

வேத சிவாகமங்களால் இன்னதன்மையன் என்று அறிய வொண்ணாத சிவன்தன்னையே அச்சிவபிரான் அருளால் இன்னதன்மையனென்று உணர்ந்து அவ்விறைவன்பால் தைலதாரைபோல நீக்கமில்லாமல் எக்காலத்தும் ஆர்

வங் தழைத்திருக்கப் பெற்றவரும் துவாரகாபுரிக்குத் தலைவராய் யாதவகுலத்தில் வளர்ந்த மாதவராகிய கண்ணபிரான் முடிமேல சிவதீக்ஷாகாலத்தில் தமது திருவடியை வைத்த ஆசிரியரும் சர்வபூதபதியாய்விளங்கும் பசுபதியினது ஞானயோகக் கிரியாசரியைகளாகிய ஒப்புயர்வற்ற திருத்தொண்டுக்கு ஆதியந்தம் என்பதில்லாமையை யுணர்ந்து அதனை எப்பொழுதும் மேற்கொண்டிருக்கப்பெற்ற நித்தமுத்தரும் நடராஜப்பெருமானைப் பாலுக்குவேண்டிடத் தந்த பாற்கடலைத் தாயினது பாலை அருநதுவதுபோல் அருநதி சித்தநகளிகூர்ந்து இனி என்றும் மற்றொரு தாய்முலைப்பாலை வேண்டுதலையொழித்து பிறவாநெறிபெற்று வல்லாளராய் வளாநதவரும் இததகைத்தான அரியகாரணங்களால் யாவரானும் நினைத்தற்கரிய சிறப்பினை வாய்க்கப்பெற்றவருமான உபமன்னியர் என்னும் மஹாசைவமுநிவர் மேலே கூறியுள்ள "உலகெலாம் உணர்நதோதற் கரியானைத" தன்னகத்துக் கொண்டிருக்கும் பெருமிதம் வாய்ந்த ஸ்ரீகயிலாயத்தின் அடிவாரத்தில், சிவபக்தர்களாகிய பல்லாயிர முநிவர்களும் சிவயோகிகளும் தம்மைச் சூழ்ந்திருப்பத் தென்திசையை நோக்கியிருக்கும் அப்பொழுது ஆயிரஞ்சூரியர்களுடைய குறையாதோங்கும் பேரொளியெல்லாம் ஒரொளியாய்த் திரண்டு ஒளிர்வதுபோல் ஜோதியொன்று முன்னே தோன்றிற்று.

யாதொரு தோற்றமும் அற்று உபமன்னிய முநிவரது திருவாக்கினின்றும் வெளிவரும் சிவஞானபோதத் தோற்

றத்தையே கண்டுகளிக்கும் தூய்மை யுடையவராய்ச் சூழ்ந்திருந்த மாதவமுடைய முன்சொல்லிய முநிவரரும் யோகிகளும்கண்டு நமது கண்கள் கூசுதலடைய இன்று இப்பொழுது காணப்பட்ட இவ்வொளி எவ்வொளி? இஃது என்ன அதிசயம்? இவ்வதிசயம என்றும் கண்டறியாத அற்புதம்! என்றனர் இவர்கள் இப்படிச் சொல்லிக்கொண் டிருக்கவும் அந்த ஒளிப்பெருக்கத்தோடு இந்தவோசைப்பெருக்கையும் கண்டுகேட்ட உபமன்னியமுநிவர், அக்கணமே அநதிப்போதில் தோன்றப்படும் தேய்ந்துபோதலை யறியாத ஓர் கலையையுடைய சந்திரனைச் சடைமுடியின்கண் சூடிய சிவபெருமானது சர்வஜ்ஞதையாகிய அருட்குணத்தைச் சிந்தித்தனர் சிந்திக்கவும நாம காணத்தோன்றிய இவ்வொளி நமது கயிலையின்கண் இருந்த ஆலாலசுந்தரரொளி; இவ்வொளியாகிய சுந்தரப்பெருமானார நம சிவபெருமான் ஆணைதடுப்பதற்கஞ்சி அவவாணையாகிய அருள்வழியே அன்று தென்திசை நோக்கிச்சென்று "நாவலாகோன்" என்று நாவினது செல்வியின் திருவருள் பெற்றவரால் நாவாரப் புகழ்ப்பெற்று அத்திசைக்கண் வாழ்ந்திருந்து இன்று தமதிருப்பிடமாகிய ஸ்ரீகயிலாய வாழ்க்கையைக்கருதி கயிலாயநாதனது உத்தரவைநாட நாடியவண்ணமே அநநாதனும் உத்தரமளிக்க இவ்வுத்தரதிசையை நோக்கி வருகின்றார் என்றுணர்ந்து சித்தங்களிகூர்ந்து சிரமேற் கைகூப்பித் தென்திசைநோக்கித் தொழுது மீண்டும் அவ்வொளிப்பெருமானைக் காணும ஆசையாலெழுந்து என்றும் அனுபவித்தறியாத ஆனந்தவாரி தமது

மெய்யெலாம் சிலிர்ப்பி அவர்பாலுந்த விரைந்து சென்றனர். செம்மேனிபடைத்த நீண்டசடையினையுடைய அம்முனிவர் செல்லும்பொழுது ஒளிகண்டு அதிசயமுற்றிருந்த அந்த ணர்கட்கெல்லாம் தென்திசைக்கண் கண்டவொளி இன்ன வொளியென்று அறியவாராமையான் எழுந்த ஐயத்தோடு இன்று இம்முனிவரிடத்துக் காணப்படும் இவ்வாசைக் கோலம் நாம் என்றுங் கண்டிலோமே என்னும் ஐயமும் மேலிட்டு இவ்விரண்டனுள் இவர்பாலுண்டாகிய இவ்வைய த்தை முன்னர் நீக்கிக் கொள்வானெண்ணி முனிவரெல்லாம் வினவுவாராயினர்.

எங்கள் பிரானுராகிய உபமன்னிய முனிவரே! தேவரீர் உமது அத்தனாராகிய சம்புவினது திருவடித் தாமரையை வீழ்ந்து வணங்குவதல்லது மற்றொருவரது அடியை வணங் கலீர். அச்சீலமுடைய அடிகள் இன்று யாவருடைய அடி யைக்கண்டு அடிக்கடியும் வணங்குகின்றீர்? இது என்ன அதிசயம்! இது என்றுங்கண்டறியாத அதிசயமன்றோ என் றனர். கடற்பாலுண்ட முனிவர் ஐயங்கொண்ட ஐயர்களை நோக்கி ஓ ஐயனமீர்! ஈண்டுகாணப்பட்ட அகண்டாகாரப் பேரொளியார் தனக்கு மேலொருபிரானை யறியாத தம்பிரா னைத் தமதுள்ளத்தால் தழுவப்பெற்ற பேராளனார் ஆகலான் அவர் நம்மால் வணங்கப்படும் தெய்வத்தன்மை யுடைய வரே என்று சொல்லவும் அவ்வந்தணர்கள் சம்புவினது திரு வடியன்றி மற்றையரது அடியில் படாத முடியையுடைய

முனிவரது அடியை வணங்கிச் சோதிவடிவமாய்க் காணப படும் இவர் பூவுலகின்கண் செய்தசெயலெல்லாம் தவச்செய லேயாமன்றி அவச்செயலாகா ஆகலான் அந்த மேன்மை யானசெயலை நன்றாய்க் கேட்க விருப்பமுடையோமா யிருக் கின்றோம். அதனை இப்போது சொல்லியருள்வீராக என்று சொல்லி வணங்கவும் முனிவா அதற்கிசைந்து நடந்த வண் ணஞ் சொல்லத் தொடங்கினர்.

முனிவர்காள்! இபபேரொளியை யுடையார் இக்கயி லாயததின்கண் கங்காதரனும் சடாதரனும் எவவுருவமுங் கடநத மெய்பபொருளாய் எழுநதருளியிருக்கும வளள லார் திருமேனியில் சாததத்தகும் தேன்நிறைநத மலராற் றொடுக்கப்படும மாலையினையும் திருநீற்றினையும் தமது திருக் கரத்தால் எடுத்து அணியும தகைமைவாய்நது ஆலாலசுந் தரர் என்னுநாமத்தோடு இங்கு வாழ்ந்திருந்தவர். இவர்முன் ஓர்நாள் இறைவனுக்கு இனியவாகிய அன்றலர்நத மலர்களை இக்கயிலையின்கண் உள்ள நந்தனவனத்தில் பறிக்கச்சென்ற னர். இவர் அஙகு செல்வதற்குமுன் ஆளுடை நாயகியாகிய தேவியாரது இயற்கை மணங்கமழுங் கூந்தலுக்கு அணி யத்தகும மலர்களை நாடோறும வநது பறித்துக்கொண்டு போவதுபோல அன்றுங் கொண்டுபோக அததேவியாரது சிறநதசேடியர்களாகிய அநிநிதை கமலினி என்னும் இருவ ரும் வநது கொத்துக் கொத்தாயுள்ள மலர்களைக் கொய்து கொண்டிருந்தனர் அப்பொழுது எத்திசைகளும் செய்தற்

கரிய பெரிய தவத்தைச்செய்த தென்திசையானது வாழ்ந்திடவும் அத்திசையின்கண் வாழும மெய்யடியார்களெல்லாம் உய்யும்வண்ணம் குற்றமற்றதிருத்தொண்டத் தொகையை அவர்கட்குக் கொடுக்கவும், பூவுலகுக்கு வரவேண்டிய காரணரா யிருததலால் அவ்வாலாலசுந்தரர் அவ்விருமங்கையர் மேலும் மனத்தைச் செலுததினர். அம்மங்கையரும் அவரைக்கண்டு அவரது திருமேனியில் ஆசையுடையவர்களாய் அவரையே காணுங் கண்களை யுடையவராயினர்.

மாதர்மேல் மனத்தைப்போக்கிய ஆலாலசுந்தரர் மனம் போனவழியே அவர்பால் போகாமல் ஒழுகிவர்களே! என்னை யாளாகக் கொண்ட சிவபெருமானுக்குப் பொருந்துவன வாகிய அன்றலர்ந்த பலமலர்களைக்கொண்டு இறைவன்முன்னே போயினர். அவர் போனபின்னர் அன்னப்பறவைபோன்ற அவ்விருமங்கையரும் தேவியாருக்குரிய பலமலர்களைக் கொய்துகொண்டு அவ்விறைவிமுன்னே சென்றனர்.

ஆதிமூர்த்தியாகிய இறைவன் ஆலாலசுந்தரரது வன்திறத்தைக்கண்டு அவரைநோக்கிச் சுந்தரா! எமது தேவியினுடைய சேடியர்கள்மீது மனததை வைத்தனை யாகையால் வைத்தபடியே அவர்களிடத் துண்டாகும இன்பத்தை அவர்களோடு கலந்து அனுபவிக்கவேண்டி யிருப்பதால் நீ அவர்களோடு தென்திசைக்கண் சென்று அங்கு லீலாவினோதமாயிருந்து மீண்டுவருவாயாக என்று கட்டளையிட்டனர்.

சுந்தரர் அக்கட்டளையைக் கடப்பதறகஞ்சி இறைவன் முன்னே இருகரஙகளையும் அஞ்சலியாகக் குவித்துநின்று மனங் கலங்கினவராய் என்னையனே! உனது திருவடியை நீங்கிச்செல்லும் சிறியேனாகிய யான் பிரபஞ்சமயககத் துட்பட்டுழலும மானிடரைபபோல் மானிடனாய் யான் அங்கு மயங்குமபொழுது நீ என்னைததடுத்து ஆண்டு அருள் செய்யவேண்டும என்று பிரார்த்திததனர்.

அழகிய கிருபாநோக்கத்தையுடைய இறைவன் சுந்தரரைநோக்கி உனது வேண்டுகோளின்படியே செய்கின்றோம் என்று அனுககிரகஞ்செய்தபின்னர் நம்பியாகிய சுந்தரர் அநிநதிதை கமலினி என்பவரோடும பூலோகத்திற்சென்று மானிட சரீரமுடையவராய் அம்மானிடசரீரிகள் நீங்காத துன்பத்தை அனுபவிப்பதுபோல் அனுபவிக்காமல் பேரின்பத்தைப் பொருநதி சிவபோகச் செல்வராய் வாழ்ந்து, இப்பொழுது யாமகாண சோதிசொரூபராய் யானைமீதேறிவந்தருளி "தானெனை முன்படைத்தான்" என்னும் பதிகத்தை நாவாரவோதிககொண்டு ஆனநதபரவசத்தராய்த் தமது தோழராகிய சேரர் பெருமானோடு வருகின்றார் என்று அவரது திருவருட்செயலெல்லாம சொல்லிமுடித்தனர்.

இவ்வதிசய அருட்செயலைககேட்ட அரபத்தர் முதலிய அநதணாளர்கள இவ்வுலகின்கண் காணப்படும் எட்டுத்திசையும் மானிடர்கள்வசிககும இடமாகவே யிருப்பதன்றி தென்திசைமாததிரம அன்று. அஙஙனமிருக்க, ஆலாலசுந்த

ரர் ஏனைத்திசைகளைவிட்டுத் தென்திசைக்குவருகும்வண்ணம் இறைவன் கட்டளையிட்ட காரணம் என்னை ? அத்திசை செய்த புண்ணியம் யாது ? என்றனர்.

உபமன்னிய முனிவர், முனிவர்காள் ! எமது தந்தை சிவ பெருமானை அருச்சிக்கும அருச்சனையே தான் பெறும்பே ருக எண்ணி விலங்கினங்களில் ஒன்ருகிய புலிக்காலை இறை வன் தரபபெறறு விதிபபடிமலர்கொய்து அருச்சித்து யாவ ராலும் வியாக்கிரபாதரென வழங்கப்பட்டவராய்த் தமபெய ரையே அந்த க்ஷேத்திரமும பெற்று (அஃதாவது புலியூ ரெனப்பெயர்பெற்று) வழங்கும்படிச்செய்த சிதம்பரக்ஷேத் திரமும், பூமிதேவிக்கு இதயமாகிய திருவாரூர் என்னும் க்ஷேத்திரமும், எம்பிராட்டியாராகிய காமாக்ஷிதேவியாரால் என்றும் ஏத்தி வழிபடப்பெற்ற காஞ்சிஎன்னும க்ஷேத்திர மும், நந்தி எம்பெருமான் பேரருள்பெற்ற திரு ஐயாறு என் னும் க்ஷேத்திரமும், ஊழிக்காலத்தில் தோணியாய் மிதக் கும் சீகாழிஎன்னும் க்ஷேததிரமும், இவைபோலும் ஒவ் வொருமகிமைவாய்ந்துள்ள பலக்ஷேததிரங்களும் அத்தென் திசையின்கண் உள்ளன. அதனுல எததிசை புண்ணியத்திற் சிறந்த திசை என்று ஆராய்நது சொலலுமிடத்து தென் திசையே புண்ணியத் திசையென்று சொல்லவரும் அத் தென்திசைக்கு மற்று எநதததிசையும் ஒப்பாகா.

அன்பர்காள்! ஸ்ரீகயிலாயத்தின்கண் உபமன்னிய முனி வர் ஆலாலசுந்தரரது திவ்யசரித்திரத்தை மிக்க ஆசையோடு

அப்பொழுது சொல்லியபடியே யானும் இப்பொழுது எனக்குள்ள பேராசையினால் இவ்விடத்தில் திருத்தொண்டத் தொகையின் விரிவைச்சொல்லுகிறேன் என்று சேக்கிழார் பெருமான் சொல்லத்தொடங்கினார்.

## சூசனை.

பெரியபுராணம் எனப்படும் இந்நூல் யாவரால் சொல்லப்பட்டது? எனின் உபமன்னியமுனிவர் என்னும் பெரிய முனிவரால் சொல்லப்பட்டது. சொல்லியவிடம் யாது? ஸ்ரீ கயிலாயம். அக்கயிலையில் எப்பொழுது சொல்லப்பட்டது? இப்புராணத்திற்குத் தலைவராகிய ஸ்ரீ சுந்தர மூர்த்திகள் தென்திசையினின்றும் புறப்பட்டு ஸ்ரீகயிலாயத்தை நோக்கி வரும் அப்பொழுது சொல்லப்பட்டது. கேட்டவர் யாவர்? மேலே சொல்லிய உபமன்னிய முனிவரைச் சூழ்ந்திருந்த முனிவர்களும் யோகிகளுமே யாவர். உபமன்னிய முனிவர் என்பவர் யாவர்? யோகிகளுட் சிறந்த வியாக்கிரபாதர் என்னும் மஹா முனிவருடைய புத்திரர். அந்தவியாக்கிர பாதர் யோகிகளுள் சிறந்தவர் என்றது யாது காரணத்தால் எனின்? தன்னுடம்பினுள்ள மூலாதாரமுதல ஆக்கினைவரையாயுள்ள ஆறு ஆதாரங்களில விநாயகர்முதலிய மூர்த்திகளைக் கற்பித்து அம்மூர்த்திகளை நோக்கி அம்மூர்த்திகளாகிய அணுவில ஆன்மாவாகிய அணு நெகிழத் தோன்றாதிருக்கப்பார்த்து அந்நிலைமை பார்த்ததாகிய தியான முதிர்ச்சியினால் "இவனைத் தான் ஒழிந்திட்டு" (அஃதாவது-நாம்தியா

ணிக்கின்ற ஆதாரமூர்த்திகளோடு ஒன்றுபட் டிருக்கின்றே மென்கிற நினைவையொழித்து, "ஏகமாம் ஏகத்து அவனு கை" (அஃதாவது மூர்த்திகளாய்க் காணப்படும் ஒன்றாகிய அப்பரம்பொருளிடத்துத் தான்தோன்றாது அப்பொருளே யாய் நிற்கை) யாகிய ஆதாரயோகம் கைவரப்பெற்று அது கைவரப்பெற்றபின்னர் "ஆக்கப்படாத பொருளாய் அனைத் தினிலும் தாக்கித் தான் ஒன்றேடு தாக்காதுநீக்கி உடன் நிற்கும் பொருளுடனே உடனிற்கும் பொருளாய் அசை வற நிற்கையாகிய நிராதாரயோகத்தில்" அஃதாவது ஆன்ம போதத்தாற் கற்பிக்கப்படும் உருவங்களாகிய ஆதாரமூர்த்தி களைப்போல் தன்னால் கற்பிக்கப்படாத பொருளாய, தன் னால் கற்பிக்கப்பட்ட அவ்வாதார மூர்த்திகளைப் பொருந்தி யும், அம்மூர்த்திகளுள் ஒன்றினும் பொருந்தாமலும் அம் மூர்த்திகளோடு தியானமுதிர்ச்சியால் கலந்திருக்கும் ஆன் மாவை அம்மூர்த்திகளினின்றும்வேறாக்கி அவ்வான்மாவோடு இறைவன் உடனாய் நிற்ப, இவ்வாறு தன்னுடனாய் நிற்கும் அப்பொருளின் நிலைமையுணர்ந்து, தான் அப்பொருளுட னாய் நிற்பதாகிய நிராதாரயோகத்தில்) நின்று, நின்ற அந்த நிலையில் காண்பானாகிய தன்னைத் தன்னால் காணப்பட்ட அப்பொருளுக்கு வேறாகக் காணுமலும் காணப்பட்ட அப்பொருளைத் தனக்கு வேறாகக் காணுமலும் இவ்வாறு காண்டலாகிய காட்சியைக்கண்டு அநனம் கண்டகாட்சி இவ்வகைத்தெனப் பேசுந்தன்மை யுடைத்தன்றாகலான் அப்பேசாமையாகிய மேலாந்தன்மையைப் பெற்று, பரதெ

ன்றினும் செல்லும் செலவுமொழிந்து,) அஃதாவது சிவன் இதிலிருக்கின்றான் இதிலிருக்கின்றான் என்று வெவ்வேறாக (கண்டம் கண்டமாக)க் காணும் செயலினும் எல்லாமாயிருக்கின்றானென்று அகண்டகாரமாகக்காணுஞ் செயலினும் செல்லுதலொழிந்து) இங்ஙனம் கண்டத்திலும் அகண்டத்திலும் செல்லும் தன்னறிவின்கண் அசசிவஞானம நிற்கும்நிலையை உணராது உணர்ந்து அந்த வுணர்வைப்பற்றி ஏனையவுணர்வுகளைப் பற்றாதொழிந்து "தாழ்ந்தமணி நாவே போல் ஓசையெலாம்"(அஃதாவது கருவிகரணச் சேட்டைகளெலாம) அற்று, அறறஅநநிலையில கேட்கபபடும பரநாதமெனப்படும் திருச்சிலம போசையைக்கேட்டு அவவோசை யெழுநத அவ்விடததிறபொருநதி அடஙகிநிறபார்கரு அவருள்ளக் கமலததில இறைவனகாட்டும ஆனநதத் தாண்டவ கோலததையும அவ்வானநதத் தாண்டவத்தையும கிரியா மார்க்கததில் கூறப்பட்டிருககும மலர்பறிதது அருச்சித்தலாகிய பணியை மேற்கொண்டு அப்பணி யொன்றினாலேயே மேலேசொல்லிய ஆதாரயோக நிராதார யோகநிலையெல்லாம் தானேவநது கூடவும், அவவளவில ஒழியாது "நாம அல்ல இந்திரியம; நமவழியின் அலல, வழிநாமலல, நாமும் அரன் உடைமை" என்றுணரும சித்தாநதஞானமும் உள்ளததே யூறிப்புறத்தேயுணரவும், உணர்ந்தஅவ்வழியே அவனடிமையாகியதான் அவ்விறைவனோடு ஏகனாகிநிற்கவும், அவனுடைமையாகிய இந்திரியாதி தத்துவக் கூட்டங்களெல்லாம் அவனருளின் வழியே செல்லுமிடந்தோறும் செல்லவும், தான்

அடிமையாகவும் இந்திரியாதிகள் உடமையாகவும் அவ் வழியில் அஞ்ஞான கன்மங்கள் பிரவேசியாமல் தடைபட் டுப்போகவுமான தமது சருமத்தை வெளியேகாணப்படும் அம்பலத்தின் கண்ணேகண்டு முடித்துக் கொண்டனராக லின் வியாக்கிரமபாதர் யோகிகளுட சிறந்தவராயினர்.

இந்த வியாக்கிரபாதரது புத்திரராகிய உபமன்னியர் பெரிய முனிவரென்பது என்னையெனின்;—அவர் இன்னதன் மையன் என்று அறியாசசிவன தனனையே உணாந்து ஆர் வந்தழைக்கின்ற காரணததானும, துவாரகாபுரிக்கு இறை யாகிய மாதவன் முடிமேல அடிவைதத காரணத்தானும், பூதநாதன் பொருவருந தொண்டினுக்கு ஆதியநதம இலா மை அடைநத காரணத்தானும, அததாதநத அருட்பாற் கடல் உண்டு சித்தமார்நது தெவிட்டி வளர்நத காரணத்தா னும, முத்தராய முனிவர் பல்லாயிரர் சுததயோகிகள் சூழ இருக்கும் காரணததானும பெரியமுனிவா என்று அழைக் கப்பட்டனர்.

இங்ஙனம் கூறிவந்தவற்றுள் - இன்னதன்மையன் என் றறியாச்சிவன் என்றது என்னையெனின்;—தன்மையாவது முக்குணத்தன்மை அம்முக்குணங்களின் காரியப்பாடா யுள்ள பலவகைப்பட்ட குணங்களின் தன்மை இவையனை த்தும் மலசம்பந்தமுள்ளன மலசம்பந்தமாயுள்ள இத்தன் மைகளனைத்தும் மலசம்பநதிகளாகிய ஆன்மாக்கள் உடைய வராவர். சிவன் "நிறைமலம அறுதியில நீங்கிநிற்பவன்" ஆக

வின் நிறைந்தமலமுடைய ஆன்மாக்களால் இத்தன்மையன் என்று அறியக் கூடாதவனாயினான். அறியக்கூடாத அச் சிவன்தன்னை உணர்ந்து ஆர்வந் தழைக்கின்றான் என்றது எங்ஙனங்கூடுமெனின், "அநாதி சிவனுடைமையால் எவை யும் ஆங்கே, அநாதி எனப்பெற்ற அணுவை - அநாதியே, ஆர்த்த துயர் அகல அம்பிகையோடு எவ்விடத்தும், காத்தல் அவன் கடனே காண்" என்ற சித்தாந்தத்தின்படி பெத்தான் மாக்கள் எனவும் முத்தான்மாக்கள் எனவும் அறியக்கூடாது ஆணவ கேவலத்திலிருந்த ஆன்மாக்களைப் பெத்தான்மாக்க ளென வெளிவரச்செய்து, அது செய்தபின்னர் இறத்தல் பிறத்தல்களால் அவர்களுக்கு மலபாகம் வரச்செய்து அது வந்தபின்னர் பெத்தான்மாக்களினின்று அவர்களை வேறு பிரித்து அவர்களுக்குச் சத்திநிபாதம் வருவித்து அச்சத்தி பதிவால் தன்னை எண்ணும் வகைசெய்து அவைசெய்த பின்னர் தானே ஆசிரியனாய்வந்து சிவஞானநூலை உபதேச முறையால் உபதேசித்து அதன்பொருளையுணரவல்ல ஞான நோக்கத்தைக் கொடுத்து அந்த நோக்கத்தால் தன்னை யுணரும் வகைசெய்து தன்னை யுணரவந்தபின்னர் காட்டும் உபகாரத்தையும் காணும் உபகாரத்தையும் செய்யும் தனது கருணைப்பெருக்கை நினைந்து நினைந்து உருகும் ஆசைப்பெ ருக்கைத்தந்து அப்பெருக்கவழியான் "கறந்தபால் கன்ன லொடு நெய் கலந்தாற்போலச் சிறந்தடியார் சிந்தையுள் தேனூறி நின்று" எனவும், "ஐயாறன் அடித்தலம் சிந்திப் பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப்பொழி

வன" எனவும் போந்த திருவாக்குகளான் மெய்யடியார் உள்ளத்து இறைவன் இனித்திருக்குந் தன்மையன் என்று வெளிப்படலான் அங்ஙனம் இனிக்குந்தோறும் அவ்விறைவன்பால் அவர்கட்கு ஆசைதழைபும என்பது நிச்சயமாகலின் இங்ஙனங்கூறிவந்த முறைப்படி உபமன்னியமுனிவர் இறைவனால் ஆளப்பட்ட பெருந்தகையாளர்; ஆகவே உணர்ந்து ஆர்வந்தழைக்கின்றூர் என்பதில் ஐயமும் உளதோ இல்லை என்க.

மாதவன் முடிமேல்அடிவைத்த காரணம் என்னையெனின்,—உபமன்னியமுனிவர் யமுனைநதிக்கரையில் ஓர்நாள் சிவபூஜைசெயயவந்தபோது அப்பூஜைககு வேண்டிய பத்திரபுஷ்பங்கள் கிடையாமற்போக, அச்சமயததில அநநதிப் பெருக்கில் திவயமாகிய புஷ்பஙகள் அடித்துவரக்கண்டு இம்மலர்கள் இவ்வெள்ளத்தில் எங்கிருந்து வருகின்றது என்று தமது மாணுக்கர்களைக்கேட்க, அவர்கள் கிருஷ்ணமூர்த்தியினல் செய்யப்பட்ட சிவபூஜையின நிர்மாலியமாகும் இம்மலர்கள் என்றுசொல்ல, அதனைக்கேட்ட உபமன்னியமுனிவர் அம்மாணுக்கர்களைப்பார்த்து மாணுக்கர்காள்! அவன் ஆசார்யமுகமாய்ச் சிவதீக்ஷைபெற்றுச் செய்யும் பூஜையன்று, ஆகவே இம்மலர்கள் நிர்மாலியமாகா ஆகலான் அம்மலர்களை அள்ளிக்கொண்டு வாருங்கள் என்று கட்டளையிட, அக்கட்டளையாகிய வாய்மொழி கண்ணபிரான் காதிற்புக, அந்தோ! என்றேங்கி நாம் இதுகாறும் செய்துவந்த சிவ

பூஜை அவலமாயிற்றே என்று வருந்தி, இனி எங்குசென்று யாரைக் குருவாகக் கொள்வது இவரையே கொள்வோம் என்று அவர்பால் அன்புடையராய் மிக்க ஆவலுடன் வந்தணுகி அடிபணிந்துநின்று சிவதீக்ஷையற்றுச் சிவபூஜையைச் செய்து சிவப்பேறிழந்த சிறியேன் யான், இனி யான் அச் சிவப்பேறெய்துமாறு என்னையடிமைகொண்டருளல்வேண்டுமென்று வேண்ட, அவர் வேண்டுகோளுக்கிரங்கி சிவபூஜைக்குரிய விசேஷதீக்ஷையைச செயயத்தொடங்கி அஃதாவது "சிந்தையிலும் என்றன் சிரத்தினிலும் சேரும்வகை வந்தவனே" என்ற சிந்தாந்தவாக்கியப்படி உள்ளும்புறமும் செய்யப்படும் பூஜாவிதியை மேற்கொண்டிருப்பது கிரியை அதற்குச் செய்யத்தருவதாகிய தீக்ஷை விசேஷதீக்ஷை அதில் சொரூபவடிவாய்விளங்கும் திருவருளை உள்ளத்தினிடத்தும் அவ்வருளின் தடத்தவடிவாய் விளங்கும் திருவடியைச்சிரத்தின்மேலும் வைத்தல் முறைமையாகலின் அம்முறைப்படியே மாதவராகிய கிருஷ்ணமூர்த்திக்குச் செய்யத் தொடங்கிய காலத்து அவருள்ளத்தில் அருளைவைத்தும் அவரது தலையில் அடியைவைத்தும் சிவபூஜைக் குரியபலன் பெறுமாறு செய்தனராகலின் "மாதவன் முடிமேல அடிவைத்தவன்" என்றார்.

இனி, பூதநாதன் பொருவருந் தொண்டினுக்கு ஆதியந்தம் இலாமையடைந்தவன் என்றது என்னையெனின்,—பசுபதியினது திருவருள் பெறுதற்குப் பூர்வகாலமாகிய ஆதி

யில் சரியையைச்செய்து கிரியைக்குவரும்போது சரியையை விட்டும், அஃதேபோல் கிரியையை அனுஷ்டித்து யோகத்திற்குப் போம்பொழுது கிரியையை ஒழித்தும், யோகநெறியில் நின்று ஞானஆராய்ச்சிக்குப போம்பொழுது யோகத்தைக்கடந்து ஞான ஆராய்சசியிற் றலைபபட்டும் இவ்வகையாய்ப் பாசநிவிர்த்தியின்பொருட்டுச் சோபான முறையாய் ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்றும் அம்முறையைவிட்டு, (அஃதாவது பூர்வகாலமாகிய ஆதிஎன்னும பெத்தத்திசையின்கண் சரியையாதிகளில் ஒனறை ஆதியாகக்கொண்டு ஒன்றை அந்த மாக்குவதாகிய அநதச்சோபானத்தைவிட்டு) உத்தர காலமாகிய அந்தமென்னும் முததித்திசையின்கண் சிவானுபூதி சிததியாதறபொருட்டு ஞானஆராய்சசி நிலையில் "சென்றுசென்று அணுவாகியும் (பின்) தேய்நது தேய்ந்து (அந்நிலையில)ஒனறாகியும" போவதாகிய முறைமையைக் கூட்டும் ஞானச்சரியா கிரியைகளையும், யோகஞானங்களையும் விடாமற்செய்து பேரின்பத்தை இடைவிடாமல் நுகரும் நித்த முததராந தன்மையைப் பெற்றவராகலின் ஆதியந்தம் இலாமை யடைந்தவர் என்றார்.

அத்தர் தந்த பாலுண்டு வளர்ந்தவர் என்றது என்னையெனின்;—இவ் வுபமன்னியமுநிவர் குழந்தைப் பருவத்தில் இவரது நல்லம்மானாகிய வசிட்டமுநிவருடைய ஆச்சிரமத்தில் தாயுடன் சென்றிருந்தபோது அங்கு தாய்ப்பாலொழிந்து காமதேனுவின்பாலை மிக்க இன்புடன் உண்டு

வசித்து மீண்டுந் தன் தந்தையாரிடம் வந்து சேர்ந்தனர். அங்குக் காமதேனுவின் பால் இல்லாமையினால் தாயானவள் அரிசிமாவை நீரிற்கரைத்து சர்க்கரைகலந்து இதனை உண்பாயென்று ஊட்ட அதனை உண்டபொழுது அது இனிக்காமையினால் உமிழ்ந்துபுலம்பினார். அவரது புலம்பலைக்கண்டதாய்தந்தையர் மிகவும் மனம் இரங்கினவர்களாய் குழந்தையைநோக்கி அப்பா குழந்தாய்!*"தவம்புரி நிலையில்லைகும் சார்பினோம அதாஅன்று முன்னாள், சிவன்றனை வழிபடாமை இலம்படும் திறத்தினோங்கள், அவநெதறும் ஆன்பால யாண்டுப்பெருகுவம அப்பா முக்கண்; பவன்றனை வழிபாடாற்றிப் பாலமிகப் பெறுதிகண்டாய்." (அஃதாவது எப்பொருளும் வேண்டும் என்னும விருபபத்தைவிடவும், எப்பொருளும் வேண்டாம என்னும் வெறுப்பைக் கொள்ளவுமாயிருக்கின்ற தவநிலையைச் சார்ந்திருக்கும் தன்மையுடையோமா யிருக்கின்றோம் இப்பிறப்பில் அப்படி யிருப்பினும் முற்பிறப்பிலும இல்லாமை என்னும் கொடிய வறுமை எங்கள்பால் வந்தணுகாவண்ணம் சிவபெருமானை வழிபடாதொழிந்தோம். ஆகலான் நீ இப்பொழுது விரும்பும் இனிய பாலை நாங்கள் எங்ஙனம கொடுக்கபெறுவோம். நாங்கள் கொடுப்பதற் கில்லாதொழியினும் நீ பண்புடை மகனாயிருத்தலின் வேண்டுவார் வேண்டுவதை இல்லையென்னாது அளிக்கவல்ல நடராஜவள்ளல் நாம்காண நடனஞ்செய்கின்றனாகலின் அப்பெருமான்பால் சென்று நீ வேண்டிய பாலைப்

* கோயிற் புராணம்.

பெறுவாயாக) என்று ஏவினர். அங்ஙனமே நான் அவர்பாற் சென்று வேண்டும் பாலைப்பெற்று அருட்பாலனைப் பின் உங்கள்பால் வருகின்றேன் என்றுபோய் நடராஜன்முன்னே நின்று தத்தித்தத்திக் கூத்தாடி குஞ்சிதபாதத்தைக் கண்டு களித்து இவ்வடி *"அரவணையான்சிந்தித்து அரற்றும் அடி (அன்றே) அருமறையான் சென்னிக்கு அணியாம் அடி (அன்றே) சரவணத்தான் கைதொழுது சாரும் அடி" (அன்றே) சரவணத்தானாகிய தன் மகனுக்கேயன்றி என்னைப்போல்) "சார்ந்தார்கட்கெல்லாம் சரணாம் அடி" (அன்றே) குறைந்து அடைந்தார் ஆழாமைக்காக்கும் அடி, (அன்றே) கைதொழுது நாமேத்திக்காணும் அடி (அன்றே) பற்றற்றார்பற்றும் பவளஅடி" (அன்றே) என்று திருவடியைப் பலவாகப்புகழ்ந்து எம்பெருமானே! யான் பற்றும் பொருள் ஒன்றுமின்றி உன்னடியையே பற்றும்பொருளாகப்பற்றினேன். எனக்குப் பாலினும் இனியானே! நான் வேண்டும் பாலைத்தருவாயாகவென்று வேண்ட, பெருமான் இரங்கிப் பாற்கடலாகிய பாலில் தனது அருளாகிய சர்க்கரையைக்கலந்து உண்ணும்படிச் செய்ய அவர், அப்பாலைத் தெவிட்டவுண்டு பாற்குறைவற்று வளர்ந்தவராகலின் அத்தர் தந்த அருட்பாற்கடல் உண்டு சித்தமார்ந்து தெவிட்டி வளர்ந்தவர் என்றார்.

பாலுண்ணும் பருவத்தோடு கூடியிருக்கும் அவரையோகிகள் முனிவர்கள் சூழ்ந்திருக்கும் காரணம் என்?

* அப்பர்சுவாமிகள் தேவாரம்.

இறைவன் இவருக்குபபாலைக யொடுததபினனர் இவர்பால் தமக்குண்டாகிய காருண்ணிய மிகுதியால் இவரை நோக்கி நீ நாமிருக்குங் கயிலாயத் தாழ்வரையில் என்றும் நீங்காது வாழ்ந்து இங்குவரும் யாவருக்கும் திருநீறளிக்கும் தீக்ஷா குருவாயிருந்து நமது சைவதரும பரிபாலனத்தைச்செயது வருவாயாக என்று கட்டளையிட்டனர். அவ்வரிய பெரிய செயலை முனிவர்முதலாயினோர் அறிநது அவருக்கு ஆட்பட்டு இறைவன் அருளை அவர் பாற்கடலால் பெற்றதுபோலும் அப்பேரருளை இவர்பால் பெறவேண்டுமென்று சூழ்நதிருக் கின்றனர் ஆகலின் சுத்தயோகிகள் சூழ என்றார்.

யாதொன்றின் தன்மையினையும் அறியுந் தன்மையினை யுடைய எவ்வகை மேம்பட்டோர்க்கும தன் தன்மை இதுவாமென்று அறிதற்கரிய இறைவன எக்காலத்தும நீங் காது வாழப்பெற்றுள்ள பெருமையிற்சிறநததும், பொன் னின்மேல் வெள்ளிய திருநீற்றை முற்றும பூசப்பட்டுள்ள தென்று சொல்லும்படி வெண்ணிறமாய்ப் பிரகாசிககும் பெரிய இமயமலையின் பக்கத்திலுள்ளதும், யாவர்க்குந தலை வனுகிய இறைவனைத் தன்னிடததில் வீற்றிருக்கப் பெற்றிரு க்குங் காரணத்தினுல் மூன்றுலகில் உள்ளவர்களும் நான்கு வேதங்களும் அளவில்லனவாகிய பெரியதவங்களைச்செய்ய வந்து கூடிய புண்ணியங்களெல்லாம் ஒன்றுகத் திரண்டிருப் பதுபோல் காணப்பட்டுள்ளதும், சிவமயமாய் ஓங்கிப்பிரகா

5ம் எண்ணிறந்த க்ஷேத்திரங்களையும் படர்ந்திருக்கும்

பசிய தளிராகக்கொண்டு மேலெழுந்ததாகிய உலகமென்று சொல்லப்பட்ட ஓர் அழகிய கொடியின்மேல் மலர்ந்திருக்கும் ஓர் வெண்டாமரைபோல் பிரகாசிக்கப் பட்டுள்ளதும், நாற்பக்கங்களிலும் யாவராலும் போற்றப்படும் நான்கு வேதங்களுடைய பெரிய கோஷமும் வித்தியாதரர்கள் கானஞ்செய்கின்ற வீணையின் இனியகோஷமும் மேகங்களுக்கு மாறாக மதநீரைப்பொழிகின்ற யானைகள் முழங்குகின்ற முழக்கமும் தேவதுந்துபிமுதலிய தேவவாத்தியங்களின் முழக்கமும் முழங்கிக் கொண்டிருக்கப் பெற்றுள்ளதும், முன்பக்கங்களில எல்லாம் வணங்கிச் சூழ்ந்துநிற்கின்ற தேவர்களுடைய கிரீடங்களின் வரிசையும் கற்பகமலர்களால் தொடுக்கப்பட்ட பொன்மாலைகளின் வரிசையும் முனிவர்களெல்லாம் கைகளைக்குவித்திருக்கும் அஞ்சலிகளின் வரிசையும் அணியணியா யிருககப்பெற்றுள்ளதும், ஏனைய விசாலமாகிய பக்க இடங்களிலெல்லாம் தேவர்களுடைய பதங்களை வேண்டுவோர்க்கு அப்பதங்களையும் பஞ்சபூதங்களை நூதனமாகப் படைக்கவேண்டுவோர்க்கு அவ்வாற்றலையும் கொடுக்கவல்ல குறள் வடிவினதாகிய சிறிய பூதங்களெல்லாம் பாடுவதும் ஆடுவதுமாயிருக்கப் பெற்றுள்ளதும், பிரமதேவன் இறைவனுடைய திருவடிகளைத் தெரிசிக்கும்பொருட்டு உள்ளேசெல்ல சென்ற அக்காலம் இவன் தெரிசிக்கும்படியான காலம் அல்லாமையினால் வெளியேவந்து தன்னிடம்போய்ச் சேர்வதற்குத் தனது ஊர்தியாகிய அன்னப் பறவையைப் பார்க்கும்போது அப்பறவை அங்குவீசும் வெள்ளிய ஒளி

போய்கெலந்து வேறாகக் காண்பதற்கில்லாமற் போனபடியி
னால் நமதுபறவை எவ்விடத்திற் பறந்துபோயிற்றோ என்று
ஐயங்கொள்ளுமாறு ஒளிவீசும் கிரணக்கூட்டங்கள் அமைந்
திருக்கப் பெற்றுள்ளதும், பிரமன் சென்றதுபோல் உள்ளே
சென்ற திருமாலானவர் தான்சேவிப்பதற்குக்காலம் அல்லா
திருப்பினும் அதுகண்டு திரும்பாது சேவிக்குங்காலத்தை
எதிர் பார்த்துக்கொண்டு வெளியேவராது உள்ளிடத்திற்
றானே யிருக்கக் கருடன் அதனையறியாது நமது தலைவரா
கிய மாயவர் இவ்வளவுநேரம் உள்ளிடத்திலேயே இருக்க
மாட்டாரே வெளியேவந்திருப்பரே இங்கு எப்பக்கம்போயி
னரோ என்று ஐயமுற்று சுற்றுப்பக்கங்களிற் சென்று பார்
த்து வரும்போது அங்கு ஓர்முழையுள் விநாயகருடைய
ஊர்தியாகிய மூஷிகம் வெள்ளொளிப் பிழம்பாய்ப் பிரகா
சித்திருக்க அந்தப் பிரகாசமிகுதியால் அதனை மூஷிகம்
என்று அறிவதற்கில்லாமல் வராகம் எனக்கண்டு அந்தோ!
நமது திருமாலானவர் பூர்வம் பிரமனோடு போர்புரிய
நேர்ந்தகாலத்தில (அஃதாவது யானேபிரமம் யானேபிரமம்
என்று தங்களுக்குப் பிரமபட்டத்தை நிலைபெறுவித்துக்
கொள்ளப் பெரும்போர் மூண்டகாலத்தில) நீவிர் இருவரும்
எவ்வாற்றால் பிரமம் ஆவீர் என்று அவ்விருவரையும் விலக்கு
தற்குச் சிவபெருமான் செஞ்சுடராய் எழுந்து இருவரையும்
சுட அவ்விருவரும் சுடப்பட்டு அகன்று வேறாய்நின்று இச்
சுடர் யாது' இது இச்சமயத்தில் நம்மிருவருடைய நடுவில்
தோன்றவேண்டிய காரணம் என்னை! என்று மேலுங்கீழும்

பார்க்கும்போது மேலே ஓங்கிச்சென்றிருக்கும் முடியையும் கீழே ஆழ்ந்து சென்றிருக்கும் அடியையும் காண்டற்கில்லா தொழிந்தாரென்றும் பின்னர் இருவரும் பிரமமாவதில் தீவரங்கொண்டிருந்த அவ்வெண்ணம் ஒழிந்தவராய் அந்தச் சோதியினுடைய அடிமுடிகளைக் காண்பதற்குத் தீவரதர முடையவராய்ப் பன்றியாயும் பக்ஷியாயும் கீழும்மேலும் சென்று காணுமற்போயினுரென்றும் அதன்பின்னர் எவவி டத்திலிருந்து சென்றனரோ அவ்விடத்திலேயே மீண்டும் வந்து சேர்ந்தனர் என்றும நாம் கேட்டிருக்கின்றோமன்றோ அததிருமாலானவர் இன்று இங்குவந்தபோது மனமயங்கி அக்காலத்தில் நாம்கண்ட அச்செஞ்சுடர் இன்று வெண் சுடராய் இங்கு காணப்படுகின்றது என்று எண்ணி அன் றெடுத்த அந்த வராக அவதாரத்தையே எடுத்து இதனடி யைக் காண்பதற்கு முயல்கின்றனர் போலும் என்று கருதி அவ்வாராக மூர்த்தியைபபாராப்பதற்கு அம்முறையின் சமீ பத்தே அக்கருடன் வநதிருக்கப் பெற்றுள்ளதும், அயன் அரி என்னும் அவவிருவருள் ஒருவர் பட்சியைததேடுகின்ற வராயும ஒருவர் பட்சியினுல் தேடப்பட்டவராயும் இருக்க ஏனைய இந்திராதி தேவர்களெல்லாம் இரண்டு கைகளிலே யும் மலர்களை நிரம்ப ஏந்திக்கொண்டு அம்மலர்களை இறை வனது அடியிலே அர்ச்சித்துத் தாம் தாம் எண்ணியிருக் கும் வரங்களைப் பெறவேண்டி ஆசையுடன்வர ஒளிமிகு தியால அங்கு வழிகாணுது திகைததுப் பின்னர் வரிசைவரி சையாய் நெருங்கியிருக்கும் விமானங்களின் வரப்பினைக்

கண்டு அதுதான் நாமனைவரும் செல்லும்படியான கோபுர வாயிலென்று தெளிந்து அவ்வழியே அவரெல்லாம் செல்ல அவ்விருபக்கத்தும் அரம்பையர் நடனஞ்செய்யவும் அவர் பக்கங்களிலே நின்று அந்நடனத்துக்கேற்ப மத்தளமுழக்கு வோர் மத்தளங்களை முழக்கிக் கொண்டிருப்பவும் அவர்க ளின்பின்னே அவர்கள் முழக்குட முழக்கத்திற்கிசைய அரு விகள் தாம்வீசும் அலைகளால் அவ்வோசையை உண்டாக் கிக்கொண்டிருக்கப் பெற்றுள்ளதும், இவ்வாறான அலங் காரவரிசையில மிகச்சிறந்திருப்பதேயன்றி பிரமன் திரு மால் இந்திரன் முதலிய பெருந்தேவாகளும் மற்றை எண் ணிறந்ததேவர்களும் இறைவனை உள்ளேசென்று தெரிசிக்க வேண்டும் என்கிற ஆசையினால் ஒருவரோடொருவர் நெருக் குற்றுக் கிடப்பதாகிய முதல் துவாரமாகிய இரத்தினமய மாய்ப் பிரகாசிக்கும் பெரிய கோபுரத்துவாரத்தை பூதவே தாளமுதலிய பெரியகணநாதர்கள் போற்றத் திலைப்பொது வின்கண் நின்று நடனஞ்செய்தருளும் நடராஜமூர்த்தியா யும் யாவர்க்கும் முதற்கடவுளாகியும் இருக்கின்ற இறைவ னது கோயிலைக்காக்கும் தலையான அதிகாரத்தைப் பெற் றுள்ள நந்தி எம்பெருமானார் தமக்குரிய ஆஸ்தானமாகக் கொண்டிருக்கப் பெற்றுள்ளதும், சிவசாரூப்பியம் பெற் றுள்ள அனேகரும் சிவபெருமானுக்குரிய அடிமைத்திறத் தில் ஆசையுள்ள அடியவர் திருக்கூட்டத்தவரும் சிவபெரு மான் திருவருளைப்பெறுதற்கு ஆசைகொண்டுள்ள அன்பர் கூட்டத்தவரும் இவரொழிந்த அடிமை என்று சொல்

லப்பட்ட பெருங்கூட்டத்தவரும் ஆகிய யாவர்க்கும் முதன்மையாயிருக்கும தலைமையான பணியையும் அதற்கேற்ப உடைவாளையும்பிரம்பையும் இறைவன் அருளாற்பெற்றவருமாகிய மேலே சொல்லிய நந்திதேவரால் ஆளபபெற்றுளளதும், மான்மழுதரிக்கப்பெற்ற திருக்கரங்களை யுடையவரும் கங்கை தங்கியிருக்கப்பெற்ற சடையினை யுடையவரும கிரணங்களைப் பரப்பும் இளம்பிறையை மாலையாக உடையவரும் ஆகிய பரமகாததா வீற்றிருக்கும் தன்மையினாலும் அளவிடபபடாத பெருமையினாலும அழிவில்லாமல் பரிசுத்தமாகிய வெண்ணிறமுளள கிரணஙகளைப் பரபபுவதனாலும் வெண்கொற்றக் கொடையினை யுடையவனைப் செங்கோல்செலுத்தும அநபாயச் சோழமகாராஜாவினது திருவுள்ளத்தைப்போல் விளங்குவதனாலும் மிக்கபெருஞ் சிறப்பினைப்பெற்றுள்ளதுமான அநத ஸ்ரீகயிலாயததின் அடிவாரத்தில் மேலே சொல்லிய உபமன்னிய முனிவர் நீங்காதிருக்கின்றவராகலின் அன்னதன் திருததாழ்வரை யின்னிடதது என்றார்.

இங்ஙனங் கூறிவந்த கயிலாயச்சிறப்பின் சூசனை யாதெனின்;-நகரங்களை யெல்லாம் ஆளுகின்றவனாகிய அரசன் மாளிகை இதுவாம என்று மிகஎளிதில் யாவரும் அறிந்துகொள்வதற்குப் பொற்கோபுரம் பொற்கலசை முதலியவற்றால் அவன்மாளிகை அழகுபெறப் பிரகாசிப்பதுபோல் சமயங்களையெல்லாம் ஆளும் (அஃதாவது-"அறுவகைச்சமயத்

தோர்க்கும் அவ்வவர் பொருளாய்" என்ற சித்தாந்த வாக்கி யப்படி எல்லாச்சமயிகளாலும் கொண்டாடப்படும் அவ்வத் தெய்வங்களாகி அச்சமயங்க ளனைத்தையும் புறப்புறமாக வும் புறமாகவும் அகப்புறமாகவும் அகமாகவும் ஆளும்) வன்மையினை யுடைத்தானதாய்ப் பிரகாசிக்கும் சித்தாந்த சைவனுதனாய்* "தேவர்கோவறியாத தேவதேவனாய், செழு பொழில்கள் பயந்து காத்து அழிக்கும் மூவர்கோனாய்நின்ற முதல்வ (துரிய) னாய் மூர்த்தியாய மூதாதையாய் ஏந்தை யாய்" "மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்தமேனியனாய்,, இருக்கும் எமயிறைவனாகியசிவபெருமான் மாதாளும்பாகத் தனாய் வீற்றிருக்கும் இடமாகிய ஸ்ரீ கைலாயம இதுதான் என்று யாவரும எளிதிற்காண இமயமலையானது பனியி னால மூடப்பட்டு விபூதியினது வெண்ணிறத்தைக் காட்டிப் பிரகாசிக்கின்றது என்பது தோன்றப் பொன்னின் வெண் திருநீறு புனைந்தெனப் பன்னுநீள்பனி மால்வரைப் பாலது எனவும், ஏனைச் சமயத்தாரது குறிகளெல்லாம் சாபமென் கிற களங்க முடைத்தாகலின் அக்களங்க மில்லாதது இத் திருநீறு என்பதுதோன்ற வெண்ணீறு எனவும், ஏனைச்சம யத்தெய்வங்களெல்லாம் வாக்குமனங்களால யாவரும் அறித ற்கு எளியதன்மை யுடைத்தாயிருப்பதுபோ லன்றி, இவன் வாக்குமனாதீதன் என்பதுதோன்ற தன்னையார்க்கும அறிவ ரியான் எனவும், ஊழிதோறும் அழிந்து ஆவதின்றி ஊழி தோ றோங்கும் பெருஞ்சிறப்பினையுடையது இக்கயிலை என்

* திருவாசகம.

பதுதோன்ற மன்னிவாழ்கயிலையெனவும், பிரமன்முதலியோர் தமக்கு அசுரராலும் மற்றைப் பலவகையாலும் இடுக்கண் வருந்தோறும் அவைகளைப் போக்கிக் கொள்வதற்கும் வேதங்கள் இறைவன் பொருள்சேர்புகழை எடுத்துபோற்று தற்கும்சைவமாகிய புண்ணியம் வாழ்தற்கும் இக்கயிலை புக லிடமாயும் முதலிடமாயும் உள்ளது என்பதுதோன்ற மூன் றுலகும் மறைகளும் எண்ணில்மாதவம் செய்யவந்தெய்திய புண்ணியந் திரண்டுள்ளது போலவது எனவும், உலகமெங் கும் உள்ள சிவஸ்தலங்கள்தோறும் இருந்து சரியையாதிக ளால் வழிபடுவார்க்கு சாலோகாதி பதங்களைக்கொடுத்து அவர்கள் உள்ளத்தை மலரச்செய்வது இக்கயிலையே என் பதுதோன்ற உலகினை ஓர் கொடியாகவும், தலங்களைத் தளி ராகவும், கயிலையை மலராகவும் கூறியதெனவும், நான்மறை களும் நாதத்திற்சிறந்த வீணைமுதலியவைகளும் ஒலிக்கும் ஓசைகளெல்லாம பிரமன்முதலியோர் வாழும் இடங்களின் உள்ளிடத்திலிருந்து நீங்காது ஒலிக்கத்தக்கனவாயினும் இக்கயிலையின் உள்ளிடமெல்லாம் அன்பர்களால கோஷிக கத்தக்க ஹரஹரஎன்கிற ஓசையும் பிரமனுதியர் குறையிரக் கும ஓசையும நிறைந்திருத்தலால நான்மறைநாதமுதலிய அவ்வோசைகள் வெளிபபக்கங்களிலேயே நின்று கோஷித் துக்கொண் டிருப்பனவாயின என்பதுதோன்ற நான்மறை நாதமும்வீணையிரைசையும் துந்துபியார்ப்பும் மருங்கெலாம் எனவும், கயிலாயம் மலைவடிவாயிருத்தலால் அம்மலைவள முந்தோன்ற தானமாக்கள் முழக்கமும்எனவும், விண்ணுல

கத்துள்ள அமரரும் மண்ணுலகத்துள்ள முனிவரும் அனுப விக்துவரும் போகமோக்ஷானு பவங்களாகிய செல்வங்க ளெல்லாம் இக்கயிலையின்கண்ணே நின்றுதான் பெறுகின்றவர் என்பதுதோன்ற அமரர் அணிமுடிமாலையும் முனிவரஞ்சலி மாலையும் முன்னெலாமெனவும், கயிலையைக்காக்கும் காவற் றொழில்படைத்த சிறுபூதங்களுடைய ஆற்றல்தோன்றவும் அங்குள்ள ஏனைய உயர்ந்தோரது ஆற்றலைச் சொல்லாமே யமையும் என்பதுதோன்றவும், தேவர்நிலைகளும் ஐம்பெரும் பூதங்களைக்கொண்டு செய்யும் செயலகளும் தேவர் முதலி யோர்க்குப பெருமையுடைத்தானதேயன்றி கயிலையில்வாழ் வார்க்கு அவைமிகச்சிறுமையுடைததானதென்பது தோன் றவும நீடுதேவர்நிலைகளும் நாடும்ஐம்பெருமபூதமும் நாட்டுவ எனவும், சைவசமயத்தின் ஏற்றம் புறச்சமயத்தெய்வமாகிய அயனுக்கு சிவசமயங்கிடைக்கபபெறாது மீண்டனன் என்ற தனலதோன்ற நாயகன்கழலசேவிக்க நான்முகன் மேயகா லம் அலாமையின் மீண்டனன எனவும், ஒருவற்குச் சைவச மயம் கிடைக்கப் பெறுதொழியினும சைவசமயததை நோ க்கும நோக்கமேனும் கிடைக்கபபெறுமாயின் அவன் அப் பொழுதே தான்முன்னிருநத புறச்சமயநிலையை ஓர் பொரு ளாகமதியான் என்பது தோன்ற தமது பெருந்தன்மையை மதிக்காது காதில் வெண்குழைபோன் கழல்தொழ நெடி யோன் காலம் பார்த்திருந்தனன் எனவும், சைவசமயத் தின் முன்னர் ஏனைப் புறச்சமயங்க ளெல்லாம் அடங்கி ஒளிமாழ்கிக் கிடக்குந் தன்மை யுடையனவே யன்றி ஓர்

முதலாகத்தோன்றிப் பிரகாசிக்கும் சத்தியுடையன அன்றென்பது தோன்ற அன்னம் தூயமால்வரைச் சோதியில் மூழ்கி ஒன்றுயது எனவும், சித்தாந்த சைவமொன்றே எல்லாச்சமயங்களையும் தனக்கு வேறுக ஒதுக்காது எல்லாவற்றையும் தனக்குள்ளடக்கி வைத்துக்கொள்ளும ஓர் பெருந்தன்மை யுடைய தென்பதுதோன்ற சோதிவெண் கயிலைத் தாழ்வரை முழையில் தீதிகைபோன ஊாதியைக்கண்டு ஆதிசேனமதாய்க் கிடக்கலுற்றுன எனறு அதனைவந தனை தரும் கலுழன் எனவும, இந்திராதியர் தேவரேயாயினும சிவார்ச்சனையை விரும்பி அதனைச செய்யத தலைபபடின் அவர்கள் அடியார்களைப்போல் அப்பொழுதே செய்யப் பெறும் பாக்கிய முடைய ரல்லரெனபதும, அப்பாக்கியத்தை அவர்கள் சோபானமுறையாற பெறத்தகும மந்தபக்குவம் உடையவரேயன்றி தீவிரதரபக்குவம உடையவ ரல்லரென்பதும தோன்ற புரந்தரன்முதலாம கடவுளர் வரமபெறுங்காதல் மனத்துடன் தெய்வமதுமலர் இருகையும ஏந்தி விமானசோபான நீடுயா வழியினுல ஏறிபபோற்ற எனவும். சைவமார்க்கத்தை யறியாது வேதமார்க்கப் பிரவர்த்தகரா யிருப்பவர் எவ்வளவு பெரியராயிருப்பினும அவா சிவபெருமானைக்காணும் மார்க்கத்துள் ஒருசிறிதும நுழையபபெறுர் என்பதுதோன்ற வேதநான்முகன் மால்புரந்தரன் முதலாம் விண்ணவர் எண்ணிலார மற்றுங் கதலான் மிடைந்த முதற் பெருந்தடையாங் கதிர்மணிக் கோபுரத்துள்ளார் எனவும், முத்திநெறிக்குப் பிரதமமாகிய பகதிமார்க்கத்தைக்காட்டும்

சைவமார்க்கத்தில் நிற்கப்பெறும் வல்லாளர் *"நல்ல சிவதன்மத்தால் நல்ல யோகத்தால் நல்ல சிவஞானத்தால் ஞானமுறிய அன்புசெய வல்லவரே வல்லராவர்" என்பதுதோன்ற ஆதி தேவஞானகோயில் நாயகன் நந்தி எம்பெருமான் † கோபுரத்துள்ளார் எனவும், "முத்திநெறிக்குப் பிரதமமாகிய பக்தி மார்க்கத்தைக்காட்டும் சைவமார்க்கத்தில் நிற்கப்பெறும்வல்லாளர் அன்புசெய்ய வல்லவரேயாவர்" எனறு மேலேசொல்லியதை வலியுறுத்தவே துவாரபரிபாலகராய் கோபுரத்தை யிடமாகக கொண்டிருக்கும் நந்தி எம்பிரானுரது அனபும் அவரது பெருமையும் இத்திறமெனபது தோன்ற நெற்றியில் கண்ணர் நாற்பெருந்தோளர் நீறணிமேனியர் அனேகரும, பெற்றமேல்கொண்ட தம்பிரான் அடியரும்,பிஞ்ஞகன் தன்னருள் பெறுவாரும, மற்றவர்க்கெலலாம தலைமையாம் பணியும் மலர்க்கையிற்சுரிகையும் பிரம்பும்,கற்றைவார்சடையான் அருளினல் பெற்ருன் எனவும் கூறப்படும பெருஞ் சிறப்பினையுடையது ஸ்ரீகயிலாயம் என்பதேயாம்.

இங்ஙனங் கூறிவந்த வுண்மையால் அக்கயிலாயம் சரியை கிரியாயோகமாகிய அழிவில்லாத தவங்களை இயற்று

---

* திருக்களிறறுப்படியார். † கோபுரத்துள்ளார் - என்பதனல் தேவர்களும் நந்தி எம்பெருமானும் இடமாகக கொண்டுள்ளாரென்று பொருள்கொள்க. அன்றியும் - கோபுரம் தேவர்கள் தடைபட்டு நிற்பதற்கு இடமாயும், நந்தி எம்பெருமான் ஆஸ்தானமாகக் கொண்டிருப்பதற்கு இடமாயும் உள்ளதென்பதாம்.

வோர்க்குச் சாலோக சாமீப சாரூபம் என்னும் பதமுத்திக ளாகிய அவாந்தரப்பயனை அழிவில்லாமற்கொடுக்கும் பெரு ம்பதமாயுள்ளதெனவும், அங்குவசிப்பவர் சாலோகாதி பத முத்திகளை அடைதற்குரிய சரியையாதிகளை இயற்றிய மூவ ருமேயாவர் எனவும், அவர்கள் *"பசித்துண்டு பின்னும் பசி ப்பானையொக்கும்" என்னும் காமியப்பயன்களைத் தருவன வாகிய வேள்விமுதலிய அறங்களைச் செய்வார்களுக்குள்ள காமக்குரோதாதி குணங்களற்ற சன்மார்க்கத்தினர் எனவும், அவர்கள் அங்கு வேண்டுவதாயுள்ளது சிவானுபவத்தைக் கொடுப்பதாகிய ஞானமொன்றேயாம் எனவும் வெளியா யிற்று. இதனால் ஸ்ரீகயிலாயம் சாலோகாதி பதமுத்திகளைக் கொடுக்கும் முத்திஸ்தானமேயன்றி வேள்விமுதலியன இய ற்றுவோர் அடைதற் பாலனவாகிய போகஸ்தானங்களில் ஒன்றாகிய பந்தஸ்தானம் அன்றெனவும், முத்திஸ்தானமா கிய அவ்விடத்தில் பந்தத்துக்கேதுவாகிய காமாதி குணங் கள் நிகழப்பெறா எனவும், அங்குநிகழ்வன † "சங்கரன்றன் கோயில் தலம் அலகிட்டு இலகு திருமெழுக்குஞ் சாத்திப், போதுகளுங்கொய்து பூந்தார்மாலை கண்ணி புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்துபாடித், தீதில் திருவிளக்கிட்டுத்திரு நந்தவனமும் செய்து" என்றற் றொடக்கத்தனவாகிய சரி யைத்தொழிலும், "புதியவிரைப்போது புகை யொளி மஞ் சனம் அமுதுமுதல்கொண்டு ஐந்து, சுத்திசெய்து பூசன மூர்த்திமானும் சோதியையும் பாவித்து ஆவாகித்துச் சுத்த,

* சிவஞானபோதம். † சிவஞான சித்தியார்.

பத்தியினால் அர்ச்சித்துப் பரவிப்போற்றிப்பரிவினோடும் எரியில்வரு காரியமும்பண்ணி" எனறற் றொடக்கத்தனவாகிய கிரியைத்தொழிலும், "புலன் ஒடுக்கித் தடுத்து வெளியிரண்டும்சலிப்பற்று முச்சதுரமூலாதாரங்கள், அகமார்க்கம் அறிந்து அவற்றின் அரும்பொருள்கள் உணர்ந்து அங்கு அணைந்துபோய் மேலேறி அலர்மதிமண்டலத்தின், முகமார்க்க அமுது உடலமுட்டத்தேக்கி, முழுச்சோதிநினைந்திருந்தல முதலாகவினைகள்" என்றற் றொடக்கத்தனவாகிய யோகத்தொழில்களுமே யாம் எனவும், இவையன்றி ஐம்புலச் சேட்டைகளும் அந்தக்கரண விகற்பங்களும் தற்போதத்தடிப்பும இயங்குதற்கான தொழில்களும பிரகிருதிசம்பந்தமான முக்குணங்களும் அங்குநிகழ்வன அன்றெனவும், அநந்முமமைபபதத்தரும் எண்ணிவேண்டுவது "ஒன்றாகாமல் இரண்டாகாமல ஒன்றும்இரண்டுமே இன்றாகாமல்,,என்ற அதவைத பதத்தைக் கொடுப்பதாகிய ஞானமேயன்றி "அரிவையர் இன்புறு பதத்தைக் கொடுப்பதாகிய அந்தஞானம் அன்றெனவும் அறியக் கிடக்கின்றது ஆகலான் உபமன்னிய முனிவர் அங்குவசிக்கும் பெரும்பாக்கியத்தை இறைவனால் அடையப்பெற்றனர்.

இதுகாறும் சுந்தரமூர்த்திகளது புராணமாகிய இப்பெரியபுராணம் சொன்னவர் உபமன்னியமுனிவரென்பதும், அவர் "இன்னதன்மையன் என்று அறியாச் சிவன்தன்னை யேநினைந்து ஆர்வந்தழைக்கின்றவர்" என்று அவரது ஞான

சீலத்தையும், "பூதநாதன் பொருவருந தொண்டினுக்கு ஆதியந்தம் இலாமை அடைந்தவர்" என்று அவரது அன்பின திறத்தையும், "யாதவன் துவரைக்கிறையாகிய மாதவன்முடிமேல் அடிவைத்தவர்" என்று அவரது ஆசிரிய இலக்கணத்தையும், "இம்மையே தரும சோறும கூறையும் ஏத்தலாம இடர்கெடலுமாம, அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும ஐயுறவில்லையே" எனறதிருவாக்கின்படி "அத்தர்தநத அருட்பாறகடல் உண்டு சித்தம் ஆரநது தெவிட்டி வளர்நதவர்" என்று இம்மைநகுவேண்டிய பாலைப் பரமபிதாவாகிய சிவபெருமானிடததுப பெற்றஅவரது அருட்டிறத்தையும், "பததராயமுநிவர் பலலாயிரர் சுததயோகிகள் சூழஇருநதுழி" எனறு அவரது திருக்கூட்டத்தாருடைய சிறப்பையும், "திருததாழ்வரை" என்று அவர் இருக்கப் பெற்ற ஸ்ரீகயிலாயததின் மகிமையுங்கூறினும். இனிஅம்முநிவரால சொல்லப்பட்ட எம்பெருமானுகிய சுந்தரமூர்த்திகளுடைய பிரபாவத்தை முறையே எடுத்துக்கூறுவாம்.

உபமன்னியமுநிவர் கயிலாயத் தடிவாரத்தில முநிவர் முதலிய பல்லாயிரவரோடு * "ஞானநூல்தனையோதல் ஓதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்றாய், ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவன் அடிஅடைவிக்கும் எழில் ஞானபூசை" என்று கூறியுள்ள சித்தாந்தவாக்கியப்படி (எனவே - நூலின்கண் ஆராய்ச்சி

* சிவஞானசித்தியார்.

செய்யும் அதிகார முடையராயினர் ஞானநூலைத் தாம் ஓதுதலும், அந்நூலைப் பிறர்க்கு ஓதுவித்தலும், நன்மை யாகிய அந்நூலைப் பிறர்க்குக் கேட்பித்தலும், அந்நூற் பொருளைத் தாம் செவ்விதாகக் கேட்டலும குறைவில்லாத அப்பொருளைச் சிந்தித்தலுமாகிய ஐவகைப்பட்ட அழகிய ஞானவேள்வி எனப்படும், ஞானபூசகராய்த் தாமும் தம் மைச்சூழ்ந்துள்ள முநிவரும் இருக்கும்பொழுது இவர்க ளது ஞானபூஜைக்கு ஞானப்பிரகாச சொரூபியாகிய இறை வன்காட்சிகொடுப்பதுபோல் அவர்களுக்கெதிரில பேரொளி யொன்று தோன்றினமையால் அங்கண் ஓரொளி என்றும், ஓரொளியாய்த தோன்றிய அது ஓரொளிக்குள்ள பிரகாச மாய்த் தோன்றாது அகண்டாகாரப் போரொளியாய்க் காட் சிப்பட்டபடியால் ஆயிரஞாயிறு பொங்குபேரொளி போ ன்று என்றும், ஞாயிறு தோன்றுவது கீழ்த்திசையாதலால் அத்திசையில் அவ்வொளிதோன்றாது தாம் நோக்கியிருக் கும் தென்திசையின்கண்ணே தோன்றினமையால் முன் தோன்றிடஎன்றும், கீழ்த்திசையின் கண்ணே நாடோறும் தோன்றும் ஒளி எப்பொழுதும் ரதத்தின்கண்ணே வருவது என்று சொல்லப்படுவதுபோலக் காணப்படாது யானையின் மேல் காணப்படலால் இங்கு இதுஎன்கொல் அதிசயம் என் றும், அக்காட்சியைக் காணப்பெற்றவரே சிறந்த தவமுடை யராகலான் துங்கமாதவரென்றும், ஒளிவேற்றுமையானும் ஊர்திவேற்றுமையானும் ஒன்றுக்கொன்று அதிசயச்செய லே காணவந்தபடியால் அவ்வதிசயத்தை முநிவர்கள் தம்

முன் அடக்குவதற்கின்றி ஆசிரியருக்குங் காட்டத்துணிந்து அவருக்குங் காட்டிக் கூறினாராகலின் என்றலும் என்றும், முனிவர்களால் காட்டக்கண்ட அப்பேரொளி அவருக்கும் வாக்குமனாதீதமாய்க் காணப்பட்டபடியால் இதனுண்மையை வாக்குமனாதீத கோசரனாகிய இறைவன் அருள் உணர்த்த நாம் உணரப்படுமேயன்றி நமது சிந்தனையால் நாம் உணரப்படும் தன்மை யுடைத்தானதன்று என்று நிச்சயித்துத் திருவருளை யுணர்த்துமாறு சிந்தித்தனராகலான் தான் சிந்தியா என்றும், எவற்றையும் உணர்த்தவல்ல அவ்வருட் சத்தியை உடையவன் மஹா தேவனாகிய சிவபெருமானன்றி மற்றைய தேவர்கள் அன்றென்று அறுதியிட்டுக் கூறும் வேதவுண்மையை யுணர்ந்த பேரறிவாளராகலின் அந்திவான்பிறை சூடிய அண்ணல் என்றும், தனது ஆன்மஞானத்தி னிடத்து ஏகமாய் விட்டு நீங்காத இறைவனைத் தம்மால் காணப்பட்ட ஒளியின் உண்மையை உணர்த்தும் வண்ணம் சிந்திக்கவே உள்குவார் உளகிற்றை உள்ளத்தால் உற்றுக்காணும் அவ்விறைவன் இவர் சிந்தித்த அவ்வொளியினது உண்மையை உணர்த்தினனாகலின் உணர்த்தென்றும், அங்ஙனம் உணர்ந்தது நாவலர்கோன் என்று புகழப்பட்ட வன்றொண்டப் பெருமானார் (தென்திசை வந்த என்பதுமுதலாக அத்தென்திசையி னின்றும் மீண்டும் கயிலாயத்துக்கு) எந்தையார் அருளால் இப்போது அணைகின்றார் என்பது சுருக யாவும் விடாதுதாமே அறியப் பெற்றனராகலான் தென்திசைவந்த நாவலர்கோன் புகழ்

வன்றொண்டன் எந்தையர்ர் அருளால் அணைவான் என அம்முனிவர் உணர்ந்தார் என்றும், இவர் உரைப்பெற்ற அந்தச்சுந்தரமூர்த்திகளுடையசரித்திரத்தில இறைவன்திருவருளானது சுந்தரரென்னும் ஓர் திருப்பெயர் கொண்டு தென்திசைக்கண்வந்து, அங்கு வேதாகமப்பிரமாணங்களால் கூறப்படும பதி பசு பாசங்களின் உண்மைகளை அனுமானப் பிரமாணத்தால் உணர்ந்து, அதன் பின்னர் அவற்றின் இலக்கணங்களைப் பிரத்திபக்ஷப் பிரமாணத்தால் உணர்ந்து, அது வுணர்ந்தபின்னர் ஆதமாவாகிய தம்மைச் சதசத்தென்றும, கடவுளாகிய பரசிவததைப் பதியாகிய சத்தென்றும, பிரபஞ்சமாகிய உலகினை அசத்தாகிய பாசமென்றும் தெளிந்து, தெளிந்தவழியே அடையவேண்டிய பயனைத் தான் அடையவேண்டியிருததலின் சதசத்தாகிய தான் பயனற்றதாகிய அசத்தை யொழிக்குமவழியேயொழித்து, பயனுடையதாகிய சத்தை அடையும்வழியே அடைதற்குரிய சரியை கிரியா யோகங்களாகிய தவங்களைச்செய்து அவை முற்றுப்பெறறவிடத்து அவற்றின்பயனாகிய ஞானததை யுணருமுகத்து அது அதனையுணர்த்தும் ஞானசாரியனன்றி உணரப்பெறு என்று குருதரிசனத்தை நாடியிருக்கும் சததினிபாதகர்களுக்கெல்லாம் ஞானத்தினையும் ஏனையவற்றையும் உணர்த்தவல்ல ஞானசிரியன் தானே என்று உணாததும் வண்ணம் தான் ஆன்மநிலையில்நின்றும், பிறைசூடிய பெருமானாகிய பித்தனைத் தன்னையாட்கொண்டருளும் ஆசிரியநிலையில் நிறுத்தியும் காட்டியதுபோலுமாம் என்று நாவலரும்

தொண்டரும் போற்றப் பாசவீடு செய்யும்வகை இவ்வணி த்தாமென்றும், சிவப்பேறு எய்துமுறை இம்முறைமைத்தா மென்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோற் காட்டி(மீண்டும்) இக்கயிலைக்கு எழுந்தருளுகின்றதுபோலும் என்று அவரது அருட்டிறமெல்லாம் நினைந்து நினைந்து கசிந்து கசிந்து அவ ரைச் சமீபித்துநோக்கி நீர்தென்திசையின்கண்ணேசென்று ஆன்மாக்களுக்கு உணர்த்திய பாசவீடும் சிவப்பேறும் நா னும் உணர்ந்து சிவானந்தம் எய்துமாறு எனக்கு அருளல் வேண்டுமென்று கைகளைக் கூப்பிப் பன்முறையும் வணங்கி னாராகலான் இவரது அற்புதச்செயலைக் கண்ட முனிவர்கள் நாம்கண்டபேரொளி அதிசயத்திலும் இஃதோர் பேரதிசய மெனக்கருதி அப்பேரொளி நமக்கு ஐயத்தை விளைவித்தது போலும் இவரது செயலும் பெரியதோர் ஐயத்தை விளைவி க்க இவ்வையங்களை யெல்லாம் போக்கும் வன்மையாளர் இவ்வாசிரியரன்றி வேறு யாவருள்ளாரென்றுகேட்கத்துணி ந்தனராகலின் அந்தணர் ஐயநீங்க வினவுவோர் என்றுங் கூறினர்.

இனிப்பாசஞான பசுஞானங்களற்றுப்பதிஞானத்தால் பரமசிவனைப் பதியெனக்கண்ட பரமஞானிகள், “மற்றுத் தேவரை நினைந்து உனைமறவேன் நெஞ்சினூரொடு வாழவு மாட்டேன்” என்ற திருவாக்கின்படி உறுதியாளராய் “கொ ந்தாவொண்சுடரே றனையே நினைந்திருந்தேன், வந்தாய் போயறியாய் மனமேபுகுந்து நின்ற, சிந்தா யெந்தைபிரான்

திருமேற்றளியுறையும், எந்தாய் உன்னையல்லால் இனியேத்த மாட்டேனே" "நானேல் உன்னடியே, நினைந்தேன் நினைதலுமே, ஊனேரிவ்வுடலம் புகுந்தாய் என் ஒண்சுடரே, தேனே என்னமுதே திருமேற்றளியுறையும், கோனே யுன்னையல்லால் குளிர்ந் தேத்த மாட்டேனே" "தோளார் கோவணமுந் திருநீறு மெய் பூசியுன்றன், தாளே வந்தடைந்தேன் தலைவா எனை யேன்றுகொள் நீ, வாளார் கண்ணிபங்கா மழபாடியுள் மாணிக்கமே, கேளா நின்னையல்லால் இனி யாரைநினைக்கேனே" "நாளார் வந்தணுகி நலியாமுனம் நின்றனக்கே, ஆளா வந்தடைந்தேன் அடியேனையும் ஏன்றுகொள்நீ,மாளாநாளருளும் மழபாடியுள் மாணிக்கமே, ஆளா நுன்னையல்லால் இனியாரை நினைக்கேனே" "மறிசேர் கையினனே மதமாவுரி போர்த்தவனே, குறியே என்னுடைய குருவே உன் குற்றேவல் செய்வேன், நெறியே நின்றடியார் நினைக்குந் திருக்காளத்தியுள், அறிவே உன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே" நீறார் மேனியனே நிமலா நினையன்றி மற்றுக்,கூறேன் நாவதனாற் கொழுந்தேயென் குணக்கடலே, பாறூர் வெண்டலையில் பலிகொண்டுழல் காளத்தியாய், ஏறே யுன்னையல்லால் இனி யேத்த மாட்டேனே" என்று கூறியருளிய ஒழுக்கத்தைக் கைக்கொள்வர். ஏனெனில் பரமசிவனைப் பதி எனக்கொண்ட பரமஞானிகள்கொள்ளத்தகும் இன்றி யமையாததோர் இலக்கண மாகலின் என்க. அஃதாவது ஆத்மாவாகிய தம்மை ஆன்ம சத்தியாகவும், பதிஞானத்தாற்கண்ட பரமசிவத்தை ஆன்மசத்தியா

கிய தமக்கு ஆன்மநாயகனுகவுங் கொள்ளுதல் முறைமையா கலின் அங்ஙனங் கொள்ளுகைகால் நாயகித் தன்மையை இவர் உடையவராவரென்க. அத்தன்மையாதெனின் நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்று சொல்லப்படும் நான்குமே யாம. நாணமாவது - தன்னை யுடையவனுய் வந்து தனனுட னுய்த் தன்னளவில் தன்னையாளாகக்கொண்ட நாயகனை யன்றி மற்றொருவரை நாயகனுக எண்ணுதலிலும் சொல்லு தலிலும அருவருப்படைதலே நாணமெனப்படும. மடமா வது - தனது நாயகனது சவுந்தரிய விசேஷங்களைப்பற்றியும், குணவிசேஷங்களைப் பற்றியும், செய்கை விசேஷங்களைப் பற்றியும் எண்ணுதலிலும, பிறருக்கு எடுத்துச்சொல்லுதலி லும், அறிவுடையளா யிருத்தலேயன்றி பிறரது சவுந்தரி யாதி விசேஷங்களைப்பற்றி எண்ணுதலிலும், சொல்லுதலி லும், அறியாமை யுடையவளாயிருத்தலே மடமெனபபடும். அச்சமாவது - இங்ஙனங்கூறிவந்த முறைப்படி கொள்ளப்ப டும் நாணம் மடம என்னும் ஒழுக்கத்தைக்கைவிட்டு கூடா வொழுக்கத்தை மேறகொண்டு எனவே, தன்னையுடையவ னுய்த் தன்னை யாளாகக்கொண்டு நாயகியாக்கிய நாயகனை எண்ணுதலிலும், சொலலுதலிலுப், நாணமுடையவளாய்ப் பிறரை நாயகனுக எண்ணுதலிலும், சொல்லுதலிலும், நா ணமற்றவளாயும், அஃதேபோல் தனதுநாயகனது சவுந்தரி யாதி விசேஷங்களை எண்ணுவதிலும் சொல்லுவதிலும் அறி யாமையுடையவளாய்ப் பிறரது சவுந்தரியாதிகளை எண்ணு வதிலும் சொல்லுவதிலும் அறிவுடையவளாயும் இருத்த

யில் ஊக்கங்கொண் டிருப்பவரைக் காண்பதிலும் அவ ரோடு கூடிவாழ்தலிலும் பயமுடையவளாயிருத்தலே அச்ச மெனப்படும். இவ்வுண்மைதோன்றவே "கற்றைவார் சடை யெம்மண்ணல் கண்ணுதல் பாதம்நண்ணி, மற்றும் ஓர்தெய் வந்தன்னை உண்டெனமதித்து எம்பெம்மான், கற்றிலா தவ ரைக்கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே" என்றார் ஆசாரி யர். பயிர்ப்பாவது கண்டாலே அஞ்சத்தக்கவராயிருக்கின்ற அக்கூடாவொழுக்க முள்ளவரைக் கண்ணாற் காண்டலால் உண்டாகும் கட்பரிசத்திலும், அவரது வார்த்தைகளைக் கே ட்பதனால உண்டாகும் செவியினதுபரிசத்திலும், அவரோடு தாமபேசும் வார்த்தைகளால் உண்டாகும் வாக்கினது பரி சத்திலும, அவர்கள் உடம்பினைக் கைகளாற் றொடுவதனு லுண்டாகும கைப்பரிசத்திலும் அருவருப்புடையவளாயி ருத்தலே பயிர்ப்பெனப்படும் இந்தநான்கினையும் பெண்க ளில் நல்லவராய் பெருநதவத்தினராயுள்ள கற்பினையுடை யார் தாம் அணிந்து கொள்ளப்படும் பூஷணங்களாகவும், தாம் சேகரிககப்படும் செல்வமாகவும், தாம் அனுபவிக்கப் படும் சுகமாகவும், தமமைக் காத்துக்கொள்ளுதற்குத் தாம் அமைத்துக் கொள்ளப்படும் காவலாகவும் கொள்வரென் பது துணிபாதலால் இவரும் அவர்களைப்போல் கொண் டிருக்கும் கடப்பாடுடையரா யிருத்தல் திண்ணமென்க.

ஆகவே, இங்ஙனங் கூறிவந்த கற்பிலக்கணத்திற் சிற ந்து விளங்குவோரா இந்த உபமன்னிய முனிவரென்பது அவ

ரைச்சேர்ந்த யோகிகள் முதலாயினு ரெல்லாம் யாதொரு வகையாலும் ஐயமின்றி அறிந்தவராகலான் அன்று அக்கற் பிலக்கணத்திற்குமாறுக சுந்தரமூர்த்திகளாகிய ஒளியைக் கண்டு இப்பேரொளி எனது நாயகமல்லவா என்று நாண மென்பதை இழந்தும், இப்பேரொளியாரது புகழை நான் என்னென்று சொல்லுவேனென்று புகழ்ந்து மடமையை யிழந்தும், இவ்வொளியுடையாரை நான் அணுகிக் களிக்க வேண்டுமென்று அணித்தாய் அணுகிச்சென்று அச்சமென் பதை இழந்தும், இச்சோதியாரை நான் தழுவப்பெறுவ னே பெறேனே என்று தமது இருகைகளையும் தழுவுமாறு போல் விரித்துக் குவித்துக்காட்டிப் பயிர்ப்பென்பதை இழ ந்தும் போயினரே இவர் இவ்வாறு இழத்தற்கு இச்சோதி யை என்னென்று உணர்ந்தனரோ அதனை நாம் அறிவோ மென்று எண்ணிக் கேட்கத் துணிந்தனராகலின் சம்புவின் அடித் தாமரைப்போதலால் எம்பிரான் இறைஞ்சாய் இஃது என்னென என்றும், இது என்னென்று கேட்ட அம்முனி வர்களை உபமன்னியமுனிவர் நோக்கி முனிவர்காள்! இப்பொ ழுது எம்மால் தொழப்படும் இச்சோதியார் ஆணவமென் னும் பேரிருளிற்கிடந்து வந்த நம்மைப்போலும் சிவத்தன் மை யுடையவரன்று. அது ஒழிந்த சிவன்முத்தத் தன்மை யுடையவருமன்று. இவர் சிவசொரூபமாகிய சோதிப்பிழம் பிற் கிடந்துவந்த சிவனைப்போலும் சிவத்தன்மையுடையவர். ஆகலான் சிவத்தன்மை யுடையவரன்று. முன் சிவனுயிரு ந்து பின் சிவன்முத்தத் தன்மை யடைந்தவரிடத்தில் சிவன்

காட்டுகின்ற உபகார முடையவனுகவும், காண்கின்ற உப கார முடையவனுகவும் அவரைத் தழுவியிருப்பதுபோ லல்லாமல் இவர்பால் உபகாரமற்றிருக்க, இவர் சிவபெருமானைத் தழுவியிருக்கின்றவ ராகலான் சீவன்முத்தத் தன்மையும் உடையவருமன்று. எனவே - இவர்முன் சீவனுயிருந்து பின் சீவன்முத்தித்தன்மையை யடைந்திருப்பின் இறைவன்காட்டும் உபகாரமுடையனுயும் காணும் உபகாரம் உடையனுயும் இருப்பன். இவர் சிவசோதிசொரூபரே யாகலானும் இவருக்கு அமைந்துள்ள உள்ளமும் அச்சோதி சொரூபத்தைத் தழுவியுள்ள உள்ளமன்றி இவருக்கென்று வேறுருள்ளம் இல்லாமையானும் இவர்பால் இறைவன் அவ்விரண்டுபகார மும் உடையனல்லனுகவேயிருந்தனன். சோதிசொரூபத்தைத்தழுவியஉள்ளத்தை உடையவராயிருக்கும் இவர் அவ்வுள்ளத்தால் இறைவனை எக்காலமும தழுவியேயிருக்கும் பெருந்தன்மை யுடையவராகலான் தம்பிரானைத் தன்னுள்ளந் தழீஇயவன் என்றும், இங்ஙனம் கூறிவந்தகாரணங்களான் இப்பேரொளியார் அநாதிமுத்த சொரூபர் என்பதும நாமெல்லாம் முன் அனுதிபெத்த சீவசொரூபராயிருநது பிற்காலமாகிய இம்முத்தித்திசையில் சீவன் முத்தராயிருக்கின்ளும் என்பதும் நிச்சயம். இவ்வேற்றுமை யுண்மையான் அவர்தொழப்படும் தெய்வத்தன்மையுடையர். நாம் தொ தொழத்தகும் அடிமைத்தன்மை யுடையர் ஆதலின் நாம் தொழுந்தன்மையான்* என்றுங்கூறினர். ஐம்புலன்களால் அனுபவிக்கப்படும் செல்வங்களுள்ளே செவியினுல் அனுப

விக்கப்படும் செல்வமே தலையாயசெல்வம் எனவும், அச்செ விச் செல்வத்துள் செல்வம் அருட்செல்வமெனவும் கூறிய படி அம்முனிவர்கள் சுந்தரமூர்த்திகளது பிரபாவமாகிய அருட்செல்வத்தைத் தங்கள ஆசிரியர்பால் கிடைக்கப் பெ ற்றனராகலின் இதற்கு நாம் செய்யத்தகும் கைம்மாறுவண ங்குதலன்றி வேறுளதன்னையுள என்று அன்புபாராட்டி தொ ழுதனர் என்பதுதோன்ற என்றுகூற முனிவர் இறைஞ்சி ன்றும், சிவசோதியென்று அன்பும் அருளும் அருமையும் அடிமையும் பாராட்டிக் கூறிய சுந்தரமூர்த்திகளை "தமபிரா னை த தன்னுள்ளந்தழீஇ இவன்" என்றும், "நம்பியாரூரன் நாம தொழுந தன்மையான்" என்றும் கூறிய விசேடத் தையும் காரணத்தையும நன்றாய்க் கேட்டு நாங்களும் அவரடிக் காட்படவேண்டு மென்னும் ஆசைமிக்குடையரா யிருக்கின்றேம ஆதலின் அருள் மிக்குடைய எங்கள் ஆசிரியரே ! அச்சுந்தர மூர்த்திகளுடைய மேலாகிய தவ த்தைக் கேட்பதைக் காட்டிலும இனி நாங்கள் செய்யத்த கும் தவம் யாதிருக்கின்றது ? ஏனெனில் - உலகமுழுவதும் பரந்துகிடக்கும பேரிருளைத் தன்னொளிப்பரப்பால் அடக்கி ஆளும் கிரணப்பரப்பினையுடைய உலகுக்கெல்லாம் ஒருவ னாகக் காணப்படும் சூரியனது கிரணப்பரப்பை தமது பே ரொளிப்பரப்பான் வென்று மின் மினியைப்போல் ஒளிசெய் யச்செய்து தமதுபேரொளியே சூரியன் என்று யாவருங்கரு தும்வண்ணஞ் செய்தபேராற்றலை உடையராகலின் அவ்வ ருட்சோதியாரே எங்கட்கு உறவும் பொருளும் ஒண்பொ

கமும் கல்வியும் கல்வியுற்றதுறவும் துறவிப்பயனும் ஆக எண்ணியுள்ளோம். ஆகலின் எங்கள் வேண்டுகோளின்படி நாளை என்னாது இன்னே (இப்பொழுதே) கேட்கவேண்டும் என்னும் தீவரதர முடையோமாயிருக்கின்றோம் என்பது தோன்ற இன்றெமக்கு உரைசெய்தருள் என்றும், வென்ற பேரொளியார் செய்விழுத்தவம என்றும, நன்றுகேட்கவிரு ம்பும் நசையினேம் என்றுங் கூறினர்.

இதனால் - சடப்பொருளை விளக்கும் ஒளியைப்போ லல்லாமல் ஆன்மாவாகிய சத்துப்பொருளுக்குப் பரமான்மா வாகிய சித்துப்பொருளைத் தோன்றுவண்ணம் செய்த ஆணவ இருளை விளக்கும சிதசோதியாய்ப் பிரகாசித்தலின் வெ ன்றபேரொளியார் எனவும, ஆணவவிருளை ஒழியப்பெற்றார் பின் செய்யக்கடவதாகிய தவத்திறம் இதுவாமென்று இவ ரது தவம் காட்டுவதாகலான் விழுததவம் நன்றுகேட்க விரு ம்பும நசையினேம் எனவும, இவரது திருமேனியைக் கா ண்பதிலும் தவச்செயலை எண்ணுவதிலும தேவரீரது ஆசை தீவர முற்றிருப்பதுபோலும் நாங்கள் அவரது அருள்விலா சமுழுதும் கேட்க தீவரதரமுடையரா யிருக்கின்றோம் ஆக லான் இன்றெமக்குரைசெய்தருள் எனவுங்கூறியதாமெனக.

பரஞ்சோதியாராகிய சுந்தரமூர்த்திகளது விழுத்தவத் தைச் சிரவணஞ்செய்யத் தீவரதர பக்குவமுடைய தமது மாணாக்கர்களாகிய முனிவர் முதலாயினர் பொதுநீங்கி (என வே சித்தாந்தத்திற் கூறப்படும் பொது - உண்மை என்ற

இரண்டனுள்பிரமாணஇயலாலும் இலக்கணஇயலாலும்முப் பொருளுண்மையைச் சிறப்புவகையானன்றிப் பொதுவகை யான் உணர்ந்து அதனின்றும் நீங்கி) பின்னர் சாதனவியலா லும் பயனியலாலும் சிறப்புவகையான் உணரப்படுவனவெல் லாம் உணரவல்ல அதிகார முடையவரா யிருத்தலான் அவர் களுக்கு அவ்விரண்டியலாலும் கூறப்படுவனஎவையோ அவை யே அடங்கிக்கிடக்கும் சுந்தரமூர்த்திகளது திவ்யசரித்திரத் தின் அந்தவுண்மையை உண்மையாகச் சொல்லத்தொடங்கி னாராகலான் உள்ளவண்ணம் முனிவன் உரைசெய்வான் என வும், உள்ளவண்ணம் உரைசெய்யும் அவற்றுள்மாறுபடாது உள்ளவண்ணம் அவருள்ளத்தில் அமைய எனவே ஸ்ரீபா தங்களை யணையுமாறு உணர்ந்தமுத்தர்கள் தமக்குள்ள அறி விச்சை செயல்களுள் அறிவைத் தம்மையுடையானாகிய பர மேஸ்வரனது சொரூபவியலை யுள்ளவா றுணரும் வழியிற் செலுத்துவர். அங்ஙனம் செலுத்துங்கால் அசிந்திதனுய் நின்ற அப்பதி சிந்திதனுய் இவரது இச்சையைக்கிரகிப்பன். அஃதுணர்ந்து கிரகிக்கும் அவனிச்சைவழியே தமது இச் சையை நிறுத்துவர். எங்ஙனமெனின்,"வேறுவுன்னடியேன் விளங்குங்குழைக் காதுடையாய், தேறேன் உன்னையல்லால் சிவனே என்செழுஞ்சுடரே, காறூர்வெண்மருப்பா கூடலூர்த் திருவீரட்டத்துள், ஆரூர் செஞ்சடையாய் எனக்கார் துணை நீயலதே" இதனுள்-சிவனே உன்னடியேன் உன்னையல்லால் வேறாகத்தேறேன் (ஏனெனில்) நீ அலது எனக்கார்துணை. என்கொண்டுகூட்டிப்பொருள் கொள்க. இப்பொருள்கொ

ண்டு அங்ஙனம் இச்சையை நிறுத்தவே சொரூப வடிவின ருகிய அவ்விறைவன் இவரதுசெயலும் தம்மாட்டேநிற்கத் தடத்த வடிவங்கொண்டு அவ்வடிவுக் கேற்பனவாகிய பணி யைக்கற்பித்து அதில் ஈடுபட்டிருக்கச்செய்வன். அங்ஙனம் செய்யும் பேரருளோநாடி "அல்லல் என்செயும், அருவினை என்செயும்,தொல்லைவல்வினைத்தொண்டநதான் என்செயும் தில்லைமாநகர்ச் சிற்றம்பலவனார்க், கெல்லையில்லதோர் அடி மை பூண்டேனுக்கே" என்று மகிழ்ந்து தமதுசெயலை அப் பணியில்நீங்காது ஈடுபட்டிருக்கச்செய்வர், என்னும் சித்தா ந்தத்திற் சித்தாந்தமாகிய உண்மை அம்முநிவர்கள் உள்ளத் தில் அமையத், திருவுள்ளங் கொண்டனராகலான் வெள்ள நீர்ச்சடை மெய்ப்பொருளாகிய, வள்ளல்சாத்து மதுமலர் மாலையும்,அள்ளுநீறும்எடுத்து அணைவான்எனவும் கூறினர்.

இதனுல் மெய்ப்பொருள் என்றது சொரூபவடிவமெ னவும், வெள்ளநீர்ச்சடை வள்ளல் என்றது தடித்தவடிவ மெனவும் கொள்க. மெய்ப்பொருளாகியவள்ளல் என்றது என்னையெனின்,—சொரூபவடிவமுடையது எந்தப்பொரு ளோ அந்தப்பொருளே தடத்தவடிவமும் உடையது என் னும் அவ்வொற்றுமை தோன்றவேயாம். எங்ஙனமெனின் * "ஒன்றினீர்கள்வர் துரைமினோ நமக்கிசையுமா நினைந்து

* நமக்கு அடிகளாகியஅடிகள (சிவபெருமானது) சொரூபம் தடத்தம் என்னும் இரண்டுவடிவத்தில் உங்களுக்குப் பொருந்திய தொரு திருமேனியில் உங்கள்இச்சை பொருந்துமாறு நினைக்கின்

எத்துவீர், குன்றிபோல்வதோர் உருவரோ குறிப்பாகி நீறு கொண் டணிவரோ, இன்றியே யிலராவரோ அன்றிவுடைய ராய் இலராவரோ, அன்றியே மிகஅறவரோ நமக்கடிகளாகிய அடிகளே" எனவருந்திருவாக்கான் உணர்க. மதுமலர் மாலையும் அள்ளுநீறும் எடுத்தணைதலாகிய செயலைக்கூறவே அச்செயல்அறிவு இச்சையன்றி நிகழாதாகலான் அவ்விரண்டும் நிகழுமுறைமை யீண்டுககாட்டவேண்டிவந்ததென்க

யாதொன்றும் இலனாகிய தான் சிவன் என ஓர் உருவமாகவும், தனதுஅருளே சத்தி என ஓர் உருவமாகவும் தனி

---

நீர்கள். எத்துகின்றீர்கள். நினைத்தல சொரூபவடிவத்தை. எத்தல் தடத்தவடிவத்தை. நம் அடிகளுக்கு நினைத்தற்குக் காரணமாயிருக்கின்ற சொரூபவடிவமே உள்ளதெனின் எத்துதற்குக் காரணமாயிருக்கின்ற தடத்தவடிவம் உடையரல்லரா யிருத்தல்வேண்டும். எத்துதற்குக்காரணமாயிருக்கின்ற தடத்தவடிவமே உள்ளதெனின் சொரூபவடிவம் உடையரல்லரா யிருத்தல்வேண்டும். நும்மைச சில வினவுகின்றேன். நீங்கள்வந்து உரைமின்கள். என்னையெனின், நம் அடிகட்குஉருவம் இன்மையாகிய சொரூபவடிவம் உண்மையெனவும், உருவம் உண்மையாகிய தடத்தவடிவம் உபசாரம் (அஃதாவது வாஸ்தவமன்று) எனவுங்கூறுகின்றனர். சொரூபமாகிய உண்மைவடிவமே யுடையநம்மடிகள் தடத்தமாகிய உருவத்தை உண்மையாகத் தம்மிடத்தில் இல்லாதவராகவே இருக்கின்றனரா? அன்றி உடையவராகவே இருந்து இல்லாதவராக இருக்கின்றனரா? சொரூபத்தில் தடத்தம் இல்லையென்பதா? தடத்தத்தில் சொரூபம்இல்லையென்பதா? அன்றி உருவமற்ற சொரூபமாயிருப்பவரும் அன்று. உருவமுடைய தடத்தவடிவமா யிருப்பவரும் அன்று என்பதா? இவையெல்லா

த்தனிகொண்டு யாவருங்கண்டு களிக்குமாறு வீற்றிருப்பது போல் பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் பொலி ந்து இலங்கும் தமது அரிய சுந்தரத்திருமேனியும் ஓர் திரு வுருவமாகக் கொண்டுவர, அதனைத தாமும் ஏனையோரும் கண்டுகளிக்குமாறு திருவுளத்தெண்ணி எக்காலத்தும் எவ ரும் கண்டறியாத ஓர் அரிய * சுந்தரதேஜோ ரூபத்தை தேவியார் வேண்டுகோளின்படி கொண்டு தம்முனனிருந்த கண்ணுடியை நோக்கி அக்கண்ணுடியிற் றோன்றிய தமது சுநதர தேஜோரூபத்தை வெளிவரச்செய்து அவ்வுருவத்

---

மனறு எனெனில, உருவமறறசொரூபாளனின உருவமுடைய தட தத்ராய்வருதல்கூடாது. உருவமுடைய தடததரெனின் உருவமற்ற சொரூபராயிருததல் கூடாது. ஆகவே-அவர் அறவர் எனவே அறக் கடவுள். அஃதாவது-தடத்தவடிவத்தால் பாசவிமோசனத்தையச் செய்யும உபகாரமும், சொரூபவடிவததால சிவபபே றடைவிக்கும் உபகார மும் செய்யும் கடவுளேயாவர் என்பதாம். இவற்றுள் எதுஉஙகட்கு இசைந்ததோ அதனை வந்துசொல்லுஙகள் என்பதாம். இதனுல் அறவரென்பதே உண்மையாமென்று கூறியதாம் என்க.

* போகம்வேண்டினார்க்குப் போகவடிவஙகொண்டும், யோகம் வேண்டினார்க்கு யோகவடிவஙகொண்டும், நிக்கிரகம்வேண்டினார்க் குக் கோரவடிவஙகொண்டும் போகயோக நிக்கிரஙகளை அனுக்கிர கித்து அவரவரைத் திருப்திசெய்தது வந்தமைபோல் பார்வதிதேவி யார் நம்பெருமான் என்றும் சர்ப்பாபரண பூஷிதராகவும், என்பா பரண பூஷிதராகவும் பிரஹ்ம விஷ்ணுக்களுடைய சிரோபூஷண ராகவும் காணப்படுகின்றாரேயன்றி இவையெல்லாம் ஒழிந்த சுந் தரதேஜோரூபராய் நமது உள்ளஙகவருமாறு காணப்படவில்லையே என்று வேண்ட அவர் வேண்டுகோளின்படியே அத்தேவியாரைத் திருப்தி செய்யக்கொண்ட கோலமாமென்க.

தைச் சுந்தரா! என்றழைக்க அதனையே திருநாமமாகக்கொண்ட மூர்த்தியென்பதுதோன்ற அன்னவன்பெயர் சுந்தரன் என்றும், கண்ணாடியினின்றும் அழைக்கவந்த சாயாவுருவமாகிய அத்திருமேனி சிவபெருமானது உண்மைத் திருமேனியாகுமோ, அவரது திருமேனியே யாமாயின் அத்திருமேனிக்குள்ள ஆற்றல் இச் சாயாவுருவினிடத்தும் வெளிப்பட்டிருத்தல் வேண்டுமே அஃது எங்ஙனம் வெளிப்பட்டது என்றுசிற்றறிவுடையார் ஐயுற்று இடர்ப்படுவார்களாகலான் அவர்கள் அவ்விடரொழிந்து உய்யும்வண்ணம் அவ்வாற்றலுடைதென்பதுதோன்ற சுந்தரர் என்னாது ஆலாலசுந்தரர் என்றும், இச்சுந்தரமூர்த்திகளது காலம் ஏனைய தேவர்களுக்கு வகுத்துச்சொல்லப்படும் காலம்போல் வகுத்துச் சொல்லப்படும் அளவினை யுடையதன்றென்பது தோன்ற முன்னம் ஆங்கு ஓர்நாள் என்றும், இம்மூர்த்திகளால் செய்யப்படும் தொண்டு குணமூர்த்தியாகிய உருத்திரருக்கன்று துரியமூர்த்தியாகிய மஹாருத்திரமூர்த்திக்கு என்பது தோன்ற முதல்வன் தனக்கு என்றும்,இன்ன திதிக்கு இன்னமலர் இன்ன வாரத்துக்கு இன்னமலர் இன்ன நக்ஷத்திரத்திற்கு இன்னமலர் என்று அருச்சனைக்கு விதிக்கப்பட்டிருக்கின்றனவோ அவ்விதிப்படியே அவ்வம்மலர்களை அவ்வத் திதி வாரநக்ஷத்திரங்களை நினைத்து எடுக்கும் விதிமார்க்கங்களிற் சிறந்தவரென்பதுதோன்ற இன்னவாம் எனும் * நாண்மலர்

---

* நாள்என்றது-அன்றலர்ந்த புதியனவும், திதி வார நக்ஷத்திரத்தினைக் குறிக்குங்கால் எனவுங்கொள்க.

என்றும், மலரைக் கொய்வோரிடத்தும், கொய்தமலரை மாலையாகத் தொடுப்போரிடத்தும், தொடுத்தமாலையைத் திருமேனியிற்சாத்துவோரிடத்தும் இறைவன் அருளுடையனே ஆயினும்அவ்வருளுடைமை அவரவர்செய்யும் அவ்வச்செயலளவாக இருக்குமேயன்றி ஒத்தஅளவினதாக இருத்தல் கூடாவாகலான் அவ்வருள்முழுவதும் தாமே பெறவேண்டும் என்னும் அவாமிக்குடையராய் மாலைசாத்தும பணியொன்றிலேயே நில்லாது மலரை.எடுத்தல் தொடுத்தலாகிய இருவகைப்பணியையும் மேற்கொண்டியற்றி இறைவனருள் முழுவதும் தம்மாட்டேவரப் பூந்தோட்டத்தில் மலர்கொய்யச்சென்றார் என்பதுதோன்ற நந்தனவனச்சூழலில் (மலர் கொய்திடத்) துன்னினன் என்றுங் கூறினர்.

இனி, சுந்தரமூர்த்திகளைப்போலவே பார்வதிதேவியாருக் குரிய பணிசெய்வதிற் சிறந்த தோழியர்கள் உளர் என்பதும், அவர்களும் அந்த நந்தவனத்தின்கண்ணே நாள்தோறும் சென்று தேவியாருக்குரிய மலர்களைக் கொய்துகொண்டுபோகும் நியதியுடையவரென்பதும், அங்ஙனம் கொய்துகொண்டு போதல் சுந்தரமூர்த்திகளுக்குப் பின்னன்றி முன் என்பதும் தோன்ற அங்கு முன்னரே நாயகி குழற்கு ஆமலர் கொய்திடச் சேடியர் எய்தினா என்றும், இறைவன் நாயகியினால் ஆளப்படும் அழகினை ஆளும் சுந்தரப் பெருமானாயிருப்பதுபோலும் இறைவியும் அவ்விறைவனால் ஆளப்படும் அழகினை ஆளும் சுந்தரச்செல்வியாய் விளங்கினாள் என்பதுதோன்ற கொங்குசேர்குழல் ஆளுடைநாயகி என்

றும், சுந்தரமூர்த்திகள் திருவாரூர்க்ஷேத்திரங்களை ஆராய்ந்து அவ்வவற்றிற்குரிய மலர்களைக் கொண்டுபோதல்போலும் இச்சேடியர்களும் தேவியாருக்குக் கூறியிருக்கும் விதிப்படி மலர்களைக்கொண்டுபோவார் என்பதுதோன்ற ஆம் மலர்கொய்திட என்றும், இறைவன் கண்டத்தில் * மாலையைச்சிறப்பாகக்கொள்ளல்போல் இறைவியும் கூந்தலில் மலர்களைச் சிறப்பாகக் கொள்ளுந் தன்மையுடையவள் என்பதுதோன்ற குழற்காமலர் என்றும், கூந்தல் இயற்கை மணங்கமழுந் தன்மையுடையதாதலால் நறுமணங்கமழும் மலர்மாலையை அணிவது அலங்காரத்திற்கே யன்றி வாசனை யூட்டுவதற்கு அன்றென்பது தோன்ற கொங்குசேர்குழல் என்றும், ஆளுடைநாயகி தமது திருவுள்ளத்தில் எண்ணுங்குறிப்பைச் சேடியர்களுக்கு உணர்த்த எண்ணுந்தோறும் அவர்களுடைய முகத்தைப் பார்க்கும் இயல்பினை யுடையவள் ஆதலாலும், அங்ஙனம் பார்க்குந்தோறும் சேடியர்களது

* இறைவன கணடததில அணியும மாலை தேவியாரது திருமுகத்திலும், தேவியாரது கூந்தலில் அணியும் மாலை இறைவனது திருமுகத்திலும் மணம் வீசிக்கொண்டிருக்கும் என்று பொருள் கொள்ளலும் ஒன்று. எனவே,—இருவரும் ஒத்த அளவினதாகிய திருமேனியை உடையவராக இராமல் இறைவன் இறைவியினும் சிறிது நீண்ட திருஉருவினை உடையவனாகவும், இறைவி அவ்விறைவன் கண்டத்தளவாக இருக்கும் திருமேனியை யுடையவளாகவும் இருப்பர் அதனால் இறைவன் கண்டத்தணிமாலை இறைவிதிருமுகத்திலும், இறைவி கூந்தலில் அணிமாலை இறைவன் திருமுகத்திலும் மணம் வீசிக்கொண்டிருக்கு மென்பதாம்.

முகம் தேவி தம்மைப் பார்க்கப்பெற்ற அருணாடி பூரண சந்திரன்போல் பிரகாசிக்கும் சிறப்பினை யுடைத்தாதலா னும் முகமன்றி வேறு அங்கவிசேடங்களை ஈண்டெடுத்தோ தல் சிறப்புடைத் தன்றென்பது தோன்ற திங்கள் வாண் முகம் என்றும், ஏனைய அங்கவிசேடங்களைத் தனித்தனி கூறாதொழியினும் முகவிலாசத்துக்கேற்ப ஏனைய அங்கங்க ளும் சிறப்புடையனவாகவே பிரகாசிக்குந் தன்மையுடை யன என்பதுதோன்ற பொங்குகின்ற கவினுடைப் பூவை மார் என்றுங்கூறினார்.

முகத்தைத் திங்கள்வாண் முகமென்றும், அழகைப் பொங்குகின்ற கவின் எனவும் கூறியதனால் முன்னர் சந்தி ரன் நிறைந்த கலையினையுடைய மதியாய்க்காட்டிப் பின்னர் கலைதேய்ந்த பிறையாய்க் காட்டுதல் போலன்றி (எனவே, இவர்கள் முகத்தழகு வளர்ந்துதேயுந் தன்மையுடையது மன்றாய், தேய்ந்து வளருந் தன்மையுடையது மன்றாய், என்றும் ஒருபெற்றித்தாயிருக்குந் தன்மை யுடைத்தென் பது தோன்றவும், அஃதேபோல் இவர்களுடைய அழகும் * பேதை முதலாகக்கூறும் பருவந்தோறும் வளர்ந்துவரும்

† மங்கையர்க்குக்கூறும் பருவம் ஏழு, அவையாவன:—(1) பேதை, (2) பெதும்பை, (3) மங்கை, (4) மடந்தை, (5) அரிவை, (6) தெரிவை, (7) பேரிளம்பெண் என்ப. இப்பருவங்களுக்குக்கூறும் ஆண்டுகளாவன, முறையே - (1) ஐந்தாண்டுமுதல் ஏழாண்டுவரை, (2) எட்டாண்டுமுதல் பன்னிரண்டுவரை, (3) பதின்மூன்றாமாண்டு; (4) பதினான்காமாண்டுமுதல் பத்தொன்பதாண்டுவரை, (5) இருப

அழகுபோலுமன்றாய் வளரும்பருவ முற்றுப்பெற்ற பின் தளர்ந்துபோகும் அழகுபோலுமன்றாய் வளருந் தன்மை ஒன்றையேயுடைய தென்பதுந் தோன்றவுமாமென்க.

இதனால் சேடியர்களையும் பார்வதியாருடைய பிரதி பிம்பங்களாகச் சொல்லப்படுதலால் இப்பிரதிபிம்பங்கள் என்றும் ஒருபெற்றித்தா யிருக்கின்ற பிம்பலக்ஷணத்தை யுடைத்தாயிருக்குமேயன்றி ஏனைய மங்கையர்க்குக் கூறும் லக்ஷணங்களை யுடைத்தாயிருப்ப தன்றெனக் கூறியதா மென்க.

இனி அச்சேடியர்கள் இன்னார் என்று தெரிவிக்க வேண்டியது அவசியமாகலான் அநிந்திதை கமலினி என்பவர் என்று அவர்களது நாமத்தை விளக்கியும், அவர்கள் தாங்கள் செய்யுந் தொண்டாகக் கொண்ட மலர்கொய்தலில் தேவியாருக்குப் பிரியமுள்ள கொத்தாயுள்ள மலர்களையே கொய்பவராகலான் கொந்துகொண்ட திருமலர் என்று அவர்கள் எடுக்கும் மலர்களின் சிறப்பை விளக்கியும், இருவருள் ஒருவர் தமக்குத் தாய்தந்தையராகச் சொல்லப் படும் இருவராலும் ஏனைய பந்துக்களாலும் தமக்குக்கணவ ராகத் தேடப்படும் அவர்களுக்கெல்லாம் பேரிடரை விளை வித்து வேறொருவரைத் தமக்குக் கணவராகத் தேடுதலை

---

தாண்டுமுதல் இருபத்தாறாண்டுவரை, (6) இருபத்தேழாண்டுமுதல் முப்பத்திரண்டாண்டுவரை, (7) முப்பத்துமூன்றுமுதல் நாற்பதா ண்டுவரை.

யொழிப்பித்து அவர்களுக்கெல்லாம் தமது உண்மை சிறிது தோன்றும்படிச் செய்து * "ஒற்றியூர் வெண்றிவிடையுடையார் எனக்குக் கணவராக ஒருவரை அருள்செய்தார்" அவரன்றி எனக்குக் கணவராக வருவார் வேறில்லை என்று தம் புகழை நாட்டப்போகின்றவராகலின் அநிந்திதை என்று அவரது சீரைவிளக்கியும், மற்றொருவர் † "கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ, பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து, விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ, அற்புதமோசிவனருளோ அறியேன்" என்று தமது கூந்தல் அழகினைக்கண்டு அதிசயிக்கும்படிச் செய்யப்போகின்றவ ராகலின் ஆய்குழல் கந்தமாலைக் கமலினி என்று அவரது பேரழகைவிளக்கியும், தேவர்கள் வாழும் வண்ணமும், அவர்களுக்கு அமிர்தம் கொடுக்கும் வண்ணமும் இறைவன் திருவுளத்தெண்ணி ஸ்ரீ சுந்தரரைக் கடலிற்றோன்றிய ஆலாலத்தைத் திரட்டிக் கொண்டுவர அன்று ஏவியதுபோலும், மாதவஞ்செய்த தென்றிசை வாழ்ந்திடவும், தீதிலாத திருத்தொண்டத்தொகைதரவும், இன்றும் ‡ அவரே போகத்திருவுளத்துத் திருவருளால் எண்ணினாராகலான் அந்தமிலசீருடை அநிந்திதை

* ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணம் † தடுத்தாட்கொண்டபுராணம். ‡ தேவாசுரர்கள் என்றும் இறவாது சீவித்திருக்க அமிர்தத்தை வேண்டிப் பாற்கடலைக்கடைய அமிர்தந்தோன்றாது விடந்தோன்ற அதனால் அவரெல்லாம் அன்றே இறந்துபோம் பெருந்துன்பத்துக்காளாய் மேனியெல்லாங் குலைந்தமீன, அவர்கள்

யாரும், அந்தம் இல் அழகுடைய கமலினியாரும் கொந்து கொண்ட திருமலரைக் கொய்துகொண்டிருக்கும் அச்சம யத்தில் இறைவனுக்கு மலர்கொய்ய வந்தவராகிய அச்சுந்த ரர் ஈசர் அருளனவந்து என்று சுந்தரரது வருகை அரு ளால் ஏவவந்த வருகை என விளக்கியும்,ஈசனருளால் வந்த சுந்தரர் அந்த நந்தனவனத்தின்கண் நெடுங்காலமாய்த் தாம் வருகின்றவராக இருந்தும் அக்காலமெல்லாம் காணப்பெ ருத மேலேசொல்லிய அவ்விருமங்கையரைக் கண்டு இவர் யாவரென்று அதிசயித்திருக்க அவரது மனம் அவர்களது சீரிலும் அழகிலும் சென்றதாகலின் அவர்மேல் போக்கிய அம்மனப்போக்கை அங்கு அவரை வரச்செய்த அருளே போக்கிடச்செய்ததெனச் சுந்தரரது செயலும் அவரதுமனத் தினது செயலுமாக்காது சிவனது அருட்செயலே எனவிள க்கியும், சுந்தரமூர்த்திகளது மனம் தம்பாட்டு வரும்வண் ணம் பேரழகைப் பெற்றுள்ள அவ் விருமங்கையரும் அம் மூர்த்தியைக்கண்டு இவ்வழகர்யாவர்! நாம் இங்குவரத்தொ

---

அங்ஙனம் இறந்து போகாவண்ணம அவ்வாலாத்தைத திரட்டித் தமதுமேனி சிறிதுங்குலைந்துபோகாது அவ்விடததால் முன்னிலுஞ் சிறந்துவந்த ஆலால சுந்தரனுகலான் இவனே தென்திசைக் கண் ணுஞ்சென்று இயமனுல் உயிர்கொண்டு போகாவண்ணம் காக்கும் உயிர்களைக்காக்கும் திராவிடம் என்னும அமிர்ததகைக் கொடுத்து மாதுடைசரீரத்தால் உண்டாகும் மயக்கததைத் தான் எய்தாது தே ஜோரூப சுந்தரனுய் வரும் ஆற்றலுடையவன் என்று எண்ணினுர் என்பு.

டங்கிய அந்நாள்தொட்டு இந்நாள்காறும் இச்சுந்தரமுடை யாரைக் கண்டதில்லையே! இவர் நாள்தோறும் இங்குவந்து பூக்களைக் கொய்துகொண்டு போகின்றவராகவும் காணப்படு கின்றார். அங்ஙனம் வருகின்ற இவர் நாம் இங்குவருவதற்கு முன்னரோ பின்னரோ என்று ஆராய்வோமாயின் நமக்கு முன் வருகின்றவராகக் காணப்படவில்லை. வருகின்றவராக இருப்பின் பின்வருகின்ற நாம் காணப்பெற் றிருப்போம். அதனால் இவர் நமக்குப்பின் வருகின்றவராகவே காணப் படுகின்றார். காண்டற்கரிய இவ்வருஞ்செல்வரும் இன்று தான் நம்மைக் கண்டவராகவும் அவர்நம்மைப் பார்க்கும் பார்வையால் தெரியவருகின்றார். இஃது இங்ஙனமிருக்க, நமதுகண்களைக் கவரவந்த இக்கள்வரும் நாமும் இவ்விடத் திற்கு வருகின்றவராகவே யிருந்தும் ஒருவரை யொருவர் காணாதிருந்தமைக்குக் காரணமயாவரோ! காணாமையாகிய காரணத்திற்குக் காரணம் நாமும் அன்று, அவரும் அன்று, சர்வகாரணராகிய கர்த்தா எவரோ அவரேயாவர். ஏனெ னில், "கணக்கிலாரையுந் தூற்றுவல்லாரையும், வணக்கிலா நெறி கண்டுகொண்டாரையும், தணக்குவார் தணிப்பார் எப்பொருளையும், பிணக்குவார் அவர் பேரெயிலாளரே" என்னும் பிரமாணத்தால் நிச்சயிக்கக் கிடக்கின்றது.

இதுகாறும் காணாமையாகவைத்த இறைவர் இன்று அவர் நம்மையும் நாம் அவரையும் காணும்படி வைத்தமைக் குக் காரணம் யாதோ! அதனை நாம் அறியகில்லேம் என்று

"குறிப்பிற் குறிப்புணரா வாயின் உறுப்பினுள், என்ன பய த்தவோ கண்" என்றபடி † சுந்தரமூர்த்திகளது திருமேனிக் காட்சியைத் தாம் கண்களாற் காணவந்த குறிப்பினாலே சர்வகாரணரது உள்ளக்குறிப்பை ஆராய்ந்தனராகலின் கா தன்மாதரும் காட்சியிற்கண்ணினார் என அம்மங்கையரது அறிவின் விசாலத்தைவிளக்கியும் கூறினாரென்க.

சுந்தரமூர்த்திகளது சுந்தரக்காட்சியிற் பொருந்திய கண்களையுடைய மங்கையரும், அம்மங்கையர்களது உருவ க்காட்சியிற் சென்ற மனமுடைய சுந்தரமூர்த்திகளும், அருட் பிரதிபிம்பங்களும் சிவப்பிரதிபிம்பமும ஆகலானும், அருட் பிரதிபிம்பங்களுடைய கண்கள் சிவப் பிரதிபிம்பக் காட்சியில் பொருந்தலும், சிவப் பிரதிபிம்பத்தினுடைய மனம் அருட் பிரதிபிம்பங்களிற் போதலும பொருந்திய செயலே யாகலானும, சுந்தரமூர்த்திகளது மனம் அருட்பிர திபிம்பங்களாகிய மங்கையர்களது உருவக்காட்சியில் செல் லவே அவ்வுருவக்காட்சி அம்மனதைத் தம்மை யுடையா னாகிய இறைவனது சொரூபக்காட்சியில இலயிக்கச்செய்து ஆனந்தத்தில் மூழ்குவித்துப்பின்னர் முனபோல் அந்தஆன ந்த வடிவமாகவே விளங்கும் தடத்த வுருவக்காட்சியில் நீங் காது நிலைபெறுவித்ததாகலான் அம்மனம சுநதரமூர்த்திகள்

† சுந்தரமூர்த்திகளது அழகில் கண்ணைப் பொருத்தினார் என வும், அதனால் இறைவன் உள்ளக்குறிப்பைக் காணுங் கண்களை யுடையராயினர் எனவும் கொள்க.

பால் வந்து என்னையாட்கொண்ட ஈசனுக்கு இன்று பொருந்துவனவாகிய பலமலர்களைப் பறித்துக்கொண்டு தேவரீர் போகாது இதுகாறுந் தாழ்த்திருப்பது என்னையோ என்று வினவ, சுந்தரமூர்த்திகள் அம்மனத்தைநோக்கி எனது நற்றுணையே இறைவனது நாமமாகிய நமச்சிவாயத்தை நான் மறக்கினும் எனதுநாவானது அத்திருநாமத்தை மறவாது உச்சரித்துக்கொண்டிருந்து மறநதுகிடக்கும் என்னை மீண்டும் அந்தநாமத்தை நினைக்கும்படிச் செய்வதுபோலும், அருட் பிரதிபிம்பங்களாகிய மங்கையர்களை நாம் இன்று காணும்படிச்செய்த காரணம் யாதென்று அதனைக் கருதி தொண்டைமறந்திருக்கும் என்னை நீயும் இன்று நினைப்பித்தனையே என்று நெஞ்சத்தை வாழ்த்தி அத்தொண்டில் தலைப்படுங்காலம் சிறிது நீட்டித்ததைக்கருதி நெஞ்சம் அஞ்சி விரைந்து சென்றன ரென்பர் ஆங்கவர் என்னை யாட்கொண்ட ஈசனுக்கேய்வன பன்மலர்கொண்டு முன்னம்செல்ல எனவும், சுந்தரமூர்த்திகள் செல்லுதலைக் கண்ட மங்கையர்களும் நமது கண்களைக் கவர்ந்த அவ்வழகர் எவ்வழியிற் சென்றாரோ அவ்வழியில் நாமும்செல்வதே கடைப்பாடாமென்று மலர்பறித்துக்கொண்டு சென்றாரென்பார் அன்ன மன்னவரும் பன்மலர்கொண்டு அகன்றனர் எனவுங்கூறினர்.

சுந்தரமூர்த்திகள் மாதர்மேல் மனம்போக்கிட எனவும், காதன்மாதரும் காட்சியிற்கண்ணினர் எனவுங் கூறியதனால் சேடியருடைய மேனியழகு சுந்தரமூர்த்திகளுடைய மன

தைக் கவரும் ஆற்றலுடைத்தெனவும், சுந்தரமூர்த்திகளு டைய திருமேனியழகு சேடியர்களுடைய கண்களைக்கவ ரும் ஆற்றலுடைத்தெனவும் கொள்க. மனதைக்கவரும் ஆற்றலுடைய அவர்கள் அழகு கண்களைக்கவரும் ஆற்றலற் றதோ எனவும், கண்களைக்கவரும் ஆற்றலுடைய இவர் அழகு அவர்கள்மனதைக் கவரும் ஆற்றலற்றதோ எனவும் ஓர்ஐயம் உளதாயின் அவ்வையமபோம்வழிகூறுவாம். உல கில் சிறந்த சிலபொருள் முன் கண்ணைக்கவர்ந்து பின்மனத் தில் நிற்றலும், அஃதேபோல் சிறந்தசிலபொருள் முன் மன த்தைக்கவர்ந்து பின் கண்ணில் நிற்றலும் உடைமையாதல் போல் என்றொழிக.

இதனால் மனதில் நின்றபொருள் கண்ணளவும் வியாபி த்து அவாவை விளைவித்து நிற்குமெனவும், கண்ணில் நின்ற பொருள் மனதளவும் வியாபித்து அவாவை விளைவித்து நிற்குமெனவும் கொள்க.

சுந்தரமூர்த்திகள உண்மையை உள்ளவாறு உணரப் பெறாத பலர் அவர் சேடியர்கள்பால் மனத்தைப் போக்கி மயங்கினரென்றும், சேடியர்கள் சுந்தரமூர்த்திகள்பால் கண் ணைப் பொருத்தி மதிமயங்கினரென்றும் தமது மருள்மதி போன வழியேபோய் மயங்கிக்கூறி மாழாந்து நரகத்துக்கா ளாகின்றனர். இவர் கூறுங் கொள்கையே உண்மையாமெ னின் மாதவஞ்செய்த தென்றிசை வாழ்ந்திட எனவும், நீதி லாத் திருத்தொண்டத் தொகைதர எனவும் கூறிய திருவாக்

குகளுக்கு அவர் கொண்டபொருள் யாதோ அதனாற் போ ந்தபயன் யாதோ யாம் அறியோம். அப்பொருளை அறிந்த அறிவையும் பயனையும் மதியோம்.

சுந்தரரும் சேடியரும் மயங்கினவரே யாமாயின் அவர் கள் மயக்கங்கொண்டு அங்குசெய்த செயலெல்லையோ அது இதுவாமென்று ஒன்றை எடுத்துக் காட்டுவராக.

சுந்தரருடைய மனம் சேடியர்கள்பால் சென்று அவர் அறிவை மயக்காது சிவசொரூபமாகிய சுந்தரசொரூபத் தைக் கண்களாற் காணச்செய்து அச்சொருபத்திலேயே நிலைபெறச்செய்து அச்சிவசொரூபத்தைக் காணச்செய்த அருளுருவாகிய தேவிக்குத் தாம்செய்துவந்த தொண்டை யே மறவாது செய்யச்செய்ததே யன்றி தேவியையும் அவர் க்குரிய தொண்டினையும் மறந்திருக்கச் செய்ததில்லை. இங் ஙனமேபோல் சேடியர்களுடைய கண்கள் சுந்தரமூர்த்திகள் பால் சென்று அவர் அறிவை மயக்காது அருட்செயலை யுய் த்துணரும் மெய்யுணர்ச்சியிலேயே நிலைபெறச்செய்து அந் நிலையில் நிற்கச்செய்த அறிவுருவாகிய சிவத்துக்குத் தாம் செய்துவந்த தொண்டையே முன்னர் செய்யச்செய்ததே யன்றிச் சிவத்தையும் அவர்க்குரிய தொண்டையும் மறந்தி ருக்கச்செய்ததில்லை என்க.

ஆலாலசுந்தரமூர்த்திகளும் சேடியர்களும் இறைவனி டத்தும் இறைவியிடத்தும் மலர்கொண்டு சென்றபின்னர் அங்கு நிகழ்ந்த செயல் யாதெனின்,—இறைவன் போக்கும்

செயலால் தம்மனத்தைப் போக்கிடப் போக்கியும், பின் மீட்பிக்குஞ் செயலால் மீட்பிக்கத் தம்மனத்தை மீட்டும் மீட்டபின்னர் தாம் செய்யுஞ் செயலாய் அமைந்துள்ள அருட்பணியில் வழுவாது மலர்கொய்துவந்து தம் முன் நின்ற சுந்தரமூர்த்திகளது ஞானமயமாகிய அன்பின்திறத்தை மகிழ்ந்து நோக்கினர் என்பார் ஆதிமூர்த்தி அவன் திறம் நோக்கியே எனவும், அங்ஙனம் இறைவன் நோக்கிய நோக்கத்தைச்சுந்தரமூர்த்திகள்உணர்ந்து *"உன்னைவிரித்து உரைக்கில், கூறுநாவே முதலாகக் கூறும் கரணம் எல்லாம் நீ, தேறும் வகை நீ திகைப்புநீ தீமை நன்மை முழுது நீ, வேறோர்பரிசு இங்கு ஒன்றில்லை (இது) மெய்ம்மை (ஆகலான் இனித்)தேறும்வகையென்" என்று தமது உள்ளக்குறிப்பை அவ்விறைவன் நோக்கிய நோக்கத்துக்கு இணங்கக் காட்டி எதிரேநின்று "வேண்டத்தக்கது அறிவோய் நீ வேண்ட முழுதுந் தருவோய் நீ, வேண்டும் அயன்மாற்கு அறியோய் நீ வேண்டி என்னைப்பணிகொண்டாய், வேண்டி நீ யாது அருள்செய்தாய் யானும் அதுவே வேண்டின் அல்லால், வேண்டும்பரிசு ஒன்று உண்டென்னில் அதுவும் உன்றன் விருப்பன்றே" என்று தமது எண்ணத்தையுங்குறிப்பான் விளக்க, எல்லாம் அறியவும் அறிந்தவண்ணம் எல்லாம் செய்யவும் வல்ல இறைவன் சுந்தரமூர்த்திகளை நோக்கி அவர் நோக்கி நிற்கும் அந்நோக்கம்தமது நோக்கமே யாகலான் அந்நோக்கத்திற் கேற்பக் கூறவேண்டியவற்றைக் கூறினர் என்பார்

* இதுபோல் வருவனவெல்லாம பொருளநோக்கி எங்க.

மாதர்மேன்மனம் வைத்தனை தென்புவி, மீதுதோன்றி அம்
மெல்லியலார் உடன், காதல் இன்பங் கலந்து அணைவாய்
எனவுங் கூறினார்.

இதனால் சுந்தரமூர்த்திகள் இறைவனைநோக்கி உனது
சிற்சோதியாகிய திருமேனியை எனதுடம்பாகப் பெற்றுள்
ளேன் ஆகலான் உன்னடிமையாகிய யானும் உன்னுடைமை
யாகிய எனது கருவிகரணங்கள் யாவும நீ அறிவிக்கும் அறி
வின் விடயத்திலும், நீ செய்விக்குஞ் செயலிலும், நீ இச்
சிக்கச் செய்யும் இச்சையிலும நின்று இயங்கும் நிலைமை
யுடையோமன்றி எங்கட்கென்று ஒன்றையறியும அறிவும்,
ஒன்றைச் செய்யுஞ்செயலும் ஒன்றைஇச்சிக்கும் இச்சை
யும் இலலென்னும் உண்மையை விளக்கி, இனிநீ நந்தன
வனத்தின்கண் யான் சேடியர்களைப் பார்க்கவும், என்னைச்
சேடியர்கள பார்க்கவும் செய்தனையாகலான் என்னையும்
அவரையும் அக்காயச் செயலின்கண் இருத்துவையோ!
அல்லதொழித்து நின்னடிக்கீழ்ப்படுத்தும் அருட்செயலில்
வைப்பையோ! யான் இதுவேண்டும் என்பதற்கும் இது
வேண்டாம் என்பதற்கும் எனக்கு என்ன அதிகாரம் இருக்
கின்றது. அவ்வதிகாரம் உன்னுடையதன்றோ என்றெண்ணி
நிற்ப, இறைவன் நம்மைநோக்கி நீமாதர்மேல் மனம்வைத்
தனை எனவும், அதனால் நீதென்திசையில் தோன்றுவாய்
எனவும், தோன்றி நீகண்ட மெல்லியருடன் காதலின்பங்
கலந்து அணைவாய் எனவும் கூறிக் காயச்செயலைச் செய்யக்
கட்டளையிட்டனர் என்று அறியக்கிடக்கின்றதென்க.

இறைவன் காமச்செயலைச் செய்தற்குரிய இடமுந் தியவற்றைக் கூறவே சுந்தரமூர்த்திகள் மனக்கலக்க முற்றனர். ஏனெனின், யாவும் அருட்செயலன்றி இது நம்செயலென்று ஒருசெயலும் அறியாத நம்மை நோக்கி மாதர்மேல் மனம்வைத்தனை என்று நமக்குச்செயலொன்று வகுத்தது என்னை. அவ்வளவேயன்றி கைலாய வாழ்க்கையை விட்டுத் தென்புவிமீது தோன்றுவாய் என்று நமக்குத் தோற்றங்கூறி நம்மைப் போகச்செய்வது என்னை, அதுவேயுமன்றி அங்குப்போய் அம்மெலியலாருடன் (நாம் கூடிக்) காதலின்பங்கலந்து அணைவாய் என்று காதலின்பம் ஒன்று நமக்குணர்த்தி அதனை நாமகலாது அணைவது என்று ஓர் கட்டளையிடுவது என்னை; அந்தோ! இங்ஙனங் கூறிவந்த இவ்வகையில் இறைவன் செயல் இனி நம்மிடத்தில நிகழாதென்பதும், அவ்விறைவன் இனி நம்முடன் வாழாது இங்கு வாழ்ந்திருப்பான் என்பதும், இனி நமக்கு மங்கையருடன் கூடிவாழும் வாழ்க்கையேயன்றி இங்குள்ள அடியாருடன் கூடி வாழும் வாழ்க்கை இல்லை என்பதும், இனி நமக்கு இன்பமாவது மாதரின்பமாகிய சிற்றின்பமன்றி சிவானந்தமாகிய பேரின்பம் இல்லை என்பதும் வெளிப்படுகின்றனவன்றே. இஃதென்! அவனுருவாகவே யிருக்கும் நமக்கும் அவன் அருளுருவாகவே யிருக்கும் அம்மங்கையர்க்கும் அவன் செயலல்லது வேறுசெயல் எங்ஙனங் கூடும்.

அவனுகாத சீவர்களுக்கன்றே அஃதொக்கும். ஆராயின் அஃதும் ஒவ்வா. ஏனெனின்; அவனுகாத சீவர்கள் தங்க

ளுக்கென்று ஓர்செயல் இருப்பதாக நினைப்பினும் அதுநினை வளவேயன்றி வேறில்லை. அவர்களும் தங்கள் செயலென்று எண்ணிச்செய்யும் அச்செயலில் தடுமாற்றம் உண்டாகுங்கா லத்தில் "ஒன்றைநினைக்கில் அதுவொழிந்திட் டொன்றாகும், அன்றி யதுவரினும் வந்தெய்தும்,—அன்றி,நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும், எனையாளும் ஈசன்செயல்" என் கின்றனர். அஃதுண்மை.

ஆகலான் அவனாகாத அவர்களிடத்திலும் அவனான அவன் முக்தர்க ளிடத்திலும் அவன் செயலேயாகும். எவ் வாறெனின், அவர்களிடத்தில அவனது திரோதானசத்தி யும், முத்தர்களிடத்தில் அருட்சத்தியும் நின்று அவரவர் செய்யவேண்டியவற்றைச் செய்வித்து வருகின்றன. ஈது திண்ணம். அங்ஙனமாக, அவர்களில் ஒருவனும் முக்தர்க ளில் ஒருவனும் ஆகாது அவனுருவாகவேயிருக்கும் நம்மை நோக்கி "மாதர்மேல் மனம்வைத்தனை" என்று நமகோர் செயலைக் கற்பித்தனனே என்று மனக்கலக்கமுற்றனர் என் பார் கலங்கினாரெனவும், நாம் இன்று நந்தனவனத்தின் கண் மங்கையரைக்காணவந்த காரணம் யாதென்று ஐயுற்ற ஐயத்திற்கு நம்மைப்போகும்படி சொல்லியதுதானோ கார ணம் என்று இருகையையுங்குவித்துக் கும்பிட்டு எம்மிறை வனே! நீ என்னைநோக்கி மாதர்மேல் மனம்வைத்தனை என் பதுமுதலாகக் கூறிய நிக்கிரகமொழிகள் உன்னைக் கும்பி டாதவர்க்கன்றோ கூறத்தக்கன. உன்னைப்பிரியாது எப்பொ

முதும் உனதுசெய்யசேவடியைக் கும்பிடும் தொழிலையு டைய எனக்குக்கூறுதல் கூடுமோ. எனது இருகையும்பிரிப் பின்றி ஒன்றுபட்டிருத்தல்போலும் உன்னையான் பிரியாம லும என்னை நீபிரியாமலும் இதுகாலம்வரையில் இருக்க இன்று என்னை உன்னைப்பிரிந்துபோம்படி கட்டளையிடுதல் உனது அருட்டிறமாமோ, உன்னைப்பிரியாதிருந்து உனக்கு வேண்டிய மலர்களைக்கொய்ய நந்தனவனத்துக்குப் போக வும், போய் மலர்களைக்கொய்து மாலைதொடுத்து உன்னைக் கூடவும், கூடி அம்மலர்மாலையை உன்திருமேனியிற் சாத்தி உன்னுசை என்னோடுகலந்து இன்புறவுமாயிருந்த என்னை, நந்தனவனத்துக்குப் போவதுபோல் தென்திசைக்குப் போ கவும, மலர்தொடுத்து உன்னைக்கூடுவதுபோல மானிடசரீரி கள்போல் மதிமயங்கி மாதரைக்கூடவும்,கூடி மாலையை உன் திருமேனியிற் சாத்தி உன்னுசை என்னோடுகலந்து இன்பு றுதலபோல் மாதரைக்கூடி என்னிருகையை அவர்கழுத்தில் மாலைபோற்பொருத்தி அணைத்து அவர்களாசை என்னோடு கலந்து இன்புறவும் கற்பித்தனையே நீகற்பித்த இக்கற்பனை ப்படியே அங்கு நான்சென்று அக்கற்பனைக்குள்ளாய் அவ் வழியாய் நான் உலாவும்பொழுது நீயிங்கிருநது என்செய யிருக்கின்றாய். அதனை ஈதென்று அருளாதொழிந்தனையே, இதுவோ உனது இன்னருள் இருநதவாறு. அங்குசெல்வே னாயின் நீ செய்வதொன்றிலையோ, ஐயனே! நீசெய்யவேண் டுவ சிலவுள. அவை யாவை எனின், நீ என்னைத்தடுத்தலும் ஆளலும் அருளலும் ஆம் என்ஐயனே! என்பார் கைகளஞ்

சவிகூப்பி செய்ய சேவடிநீங்கும் சிறுமைபேன் மையன் மாறுடமாய் மயங்கும்வழி, தடுத்தாண்டருள் செய்யென எனவுங்கூறினர்.

தடுத்தாண்டருள் என ஓர்மொழியாகவே கொண்டு தடுத்தாள்வாய் என்று ஒருபொருள்படுத்தாது தடுத்தெனவும், ஆண்டெனவும், அருளெனவும் சொல்வகைசெய்தது யாதுபொருள் கருதி எனின் கூறுதும். இறைவன் ஞானத்தின் கண்ணை மறைத்த கடியதொழிலுடைய ஆணவ இருளில் நின்றும் எண்ணிறந்த ஆன்மாக்களை எடுத்துத் தனுகரண புவன போகங்களைப பலமுறையும் அளவிலலனவாகக் கொடுத்து அவற்றால் ஆணவபாசத்தையும் அதனோடு எண்ணப்பட்ட கன்ம மாயாபாசங்களையும் ஒழிக்கும்பொருட்டு பிராஹ்மணாதி வருணநிலையும், பிரஹ்மசரியாதி ஆஶ்ரம நிலையும் வகுத்து, அவ்வகுப்புகளில எவரெவர் எவ்வெவ் வகுப்பில் நிற்கப்பெற்றனரோ அவ்வவ் வகுப்பினர் அவ்வவற்றில் நின்று அவ்வறங்களைத் தவறாதுசெய்து பொருளைச சமபாதித்து அவ்வறங்களின் வழியே அப்பொருள்களைச் செலவிட்டுத் தேகேந்திரியாதிகளுக்குரிய இன்பங்களைக்குறைவற அனுபவித்துப் புகழையும புண்ணியங்களையும் உலகில் நிலைபெற நாட்டிப் பின்னர் அவைகளில் பற்றியிருந்த மனப்பற்றைக் கல்விகேள்விகளால் நித்தவநித்தங்களை யுணர்ந்து பற்றறவிட்டு, புறப்புறமாதி சமயப்பற்றைப் பற்றி அவ்வச் சமய நிலைகளை ஆராய்ந்து அவ்வவற்றில் பெறுவாறும் பேறும் இன்மையைக்கண்டு ஓய்ந்து, சமயாதீதமாகிய சித்தா

ந்த சைவத்தைச் சார்ந்து அதில் வகுக்கப்பட்டிருக்கும் முத்திசாதனமாகிய சரியை கிரியா யோகங்களில் முயன்று அவைமுற்றுங் கைவரப்பெற்று பாசஞான பசுஞானங்களைக் கடந்த பதிஞானத்தில் நின்று குவளைக்கண்ணி கூறனாய் அவனுந்தானும் உடனாய் பரமானந்தப் பழங்கடலாய்ப் பிரகாசிக்கும் பரசிவமாகிய தன்னுண்மையினைக்கண்டு தான் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் உபகரிக்கும் உபகாரத்தை எண்ணி அன்புடையராய் ஆட்பட்டு, மீளா அடிமைத்தன்மையைக்கைக்கொண்டு தம்மடிகூடுமாறு செய்தனன்.

இதனால் தடுக்கவேண்டியதையும் ஆட்படவேண்டியதையும் அருள்பெறவேண்டியதையும் இறைவன் ஆன்மாக்களுக்கு உணர்த்தினன் என்பதை அறிவுறுத்தியவாறும். எங்ஙனமெனின், "ஆணவ இருளில் நின்றும் ஆன்மாக்களை இறைவன் எடுத்து" என்பதுமுதல் "மனப்பற்றறைக் கல்விகேள்விகளால் பற்றறவிட்டு" என்பதுகாறும் தடுக்கவேண்டியதையும், "சமயப்பற்றைப் பற்றி" என்பதுமுதல் "உபகாரத்தையெண்ணி அன்புடையவராய் ஆட்பட்டு" என்பதுகாறும் ஆட்படவேண்டியதையும், "அடி கூடுமாறு மீளா அடிமைத்தன்மையைக் கைக்கொள்ளல்" என்பதனால் அருள்பெறவேண்டியதையும் அறிவுறுத்தியதாம் என்க.

இங்ஙனம் இறைவன் அறிவுறுத்தியவாறே விடும்பற்றை விடாது பற்றும் பற்றைப்பற்றாது, உபகாரத்தை நினைப்பிக்கும் அன்புடையாததாமேபொருளாகி ஆட்படாதொழிந்

மீளா அடிமையை வேண்டாது இறத்தல் பிறத்தல்களுக்கு மீளா ஆளாகின்றனர். அந்தோ! இக்கருத்துநோக்கியே மை யல்மானிடமாய் மயங்கும் வழிஎன்றார். இங்ஙனமான இவர் கள் கொடுமையை இறைவன் நோக்கி மறக்கருணையை மேற் கொண்டவனாய் மனப்பற்றைத்தடுக்காமலும், ஆளாகக்கொ ள்ளாமலும், அடிமை அருளாமலும் அந்தகனாகிய இயமனு க்கு மீளா ஆளாய் வாழும்வண்ணம் செய்கின்றனன் என்க.

இதனால் தடுத்து ஆண்டு அருள் எனச்சொல்வகை செ ய்தமைக்குப் பொருள் கூறியவாறும்.

உலகின் கண் மீளாஆளாய் ஆட்பட்டொழுகும் ஒழு க்கத்தை யிழந்து வாழும் ஆன்மாக்களுக்கு மேலேசொல்லி யவாறு இறைவன் தண்டனைசெய்யும் உண்மையைச் சுந்தர மூர்த்திகள் உணர்ந்தவராகலின் இறைவனைநோக்கி ஐயனே! தடுக்கவேண்டியதும், ஆளவேண்டியதும் அற்று அருளால் பெறவேண்டிய உனதுசெய்ய சேவடியை யான் இயல்பாக வே பெற்று மீளாஆளாய் வாழும் பெருமையிற் சிறந்திருக் கும் என்னை, அச் செய்ய சேவடி நீங்கும் சிறுமையை நீ இன்று கற்பித்து மானிடமாய் மயங்கும் பூவுலகில் போகச் செய்கின்றபடியால் அங்கு எனக்கு மானிடயாக்கையினால் மயங்கத்தக்க மாயாபாசம் என்பால அணுகாவண்ணம் தடு த்து, இங்கு உனக்குப் பூமாலைசாத்தும ஆளாயிருப்பது போல் அங்கும் உனக்கே மாலைசாத்தும் ஆளாக்கி, எனக் குத் திருவும் மெய்ப்பொருளும் செல்வமுமாயிருக்கும் உன்

திருவடிக்கமலங்களை இங்குவந்து விரைவிற்கூடும் வண்ணம் அருள்செய்வாயாக என்று வேண்டினாரென்று அறியக்கிடக்கின்றது.

இவ்வாறே, "தொலைலா மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோனாகிய" மணிவாசக மூர்த்திகள் தடுத்து ஆட்கொண்டு அருளல் வேண்டுமென்று வேண்டிய திருவாசகத் தேனை ஈண்டு சில எடுத்து தித்திக்கப் பேசுவாம.

"மொய்ப்பால் நரம்பு கயிறாக மூளைஎன்பு தோல் போர்த்த, குப்பாயம்புக்கு இருக்ககில்லேன் கூவிக்கொள்வாய் கோவேயோ,எப்பாலவர்க்கும் அப்பாலாம் என்னார் அமுதேயோ, அபபாகாண ஆசைப்பட்டேன்கணடாய் அம்மானே"

இததிருப்பாசுரம் - நரமபுமுதலிய வற்றால் பிணிக்கப் பட்டு மேலே தோலைப்போர்த்திருக்கும சட்டையாகிய இவ்வுடம்பினுள் நான்புகுந்திருந்து வாழமாட்டேன், ஏனெனில், உனனைக காண ஆசைப்பட்டேன் ஆகலான் இவ்வுடம்பைவிட்டுவரும்படி கூவி அழைத்துக்கொள் என்னும்பொருளுணர்த்திற்று. அழைத்துக கொள்வாயென்றது கூவிக் கொள்வா யெனறது என்னையெனின், நீ எப்பாலவர்க்கும் அப்பாலாம் மேலிடத்துள்ளவன். நான் இப்பாலாம கீழிடத்து இருப்பதுமன்றி ஐம்புலவோசை நிறைந்துள்ள ஓர் கூண்டினுள்ளே யிருக்கின்றவனா யிருத்தலால் அம்மா, என்னைக் கூவிக்கொள்வா யென்றார். இதனால் உடம்பின் வாழ்க்கையைத்தடுத்து என்னை யாட் கொள்வாயென்றதாம்.

"சேவார்ந்த மமொய்த்து அழுக்கொடுதிரியும் சிறுகுடில் இதுசிதைய, கூவாய்" என்றதும், "ஏய்த்தேனுயேன் இனி இங்கிருக்க கில்லேன் இவ்வாழ்க்கை, வைத்தாய் வாங்காய்" என்றதும், "அடியேன் அரசே அவனிதலத்து ஐம்புலனுய, சேற்றில் அழுந்த ஆற்றகில்லேன்" என்றதும் நடுத்தலைக் குறித்தனவாம்.

"பேசப்பட்டேன் நின்னடியாரிற் றிருநீறே, பூசப்பட்டேன் பூதலரால் உன்னடியேனென், றேசப்பட்டேன் இனிப் படுகின்றது அமையாதல், ஆசைப்பட்டேன் ஆட்பட்டேன் உன்னடியேன்" எனவும், "கடவுளே போற்றி யென்னைக் கண்டுகொண் டருளுபோற்றி, விடவுளே உருக்கி என்னை ஆண்டிடவேண்டும் போற்றி, உடலிது களைந்திட்டு ஒல்லை உம்பர்தந்தருளுபோற்றி" எனவும், "மறுத்தனன்யான் உன் அருளறியாமையில் என்மணியே, வெறுத்து எனை விட்டிடு திகண்டாய் வினையின்தொகுதி, ஒறுத்து எனையாண்டு கொள்" எனவும், "தன்மை பிறரால் அறியாததலைவா பொல்லா நாயான, புன்மையேனை யாண்டு ஐயா புறமேபோக விடுவாயோ" எனவும், "போற்றியோ நமச்சிவாயபுயங்கனே மயங்கு கின்றேன், போற்றியோ நமச்சிவாய புறமெனைப் போக்கல் கண்டாய்" எனவும் கூறியனவெல்லாம் ஆட்கொள்ளக் கூறியனவாம்.

"வாருகவென்று என்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி, தருக நின்பாதம்போற்றி" எனவும், "தீர்ந்த அன்

பாய அன்பர்க்கு அவரினும் அன்பபோற்றி, பேர்க்தும்என் பொய்மையாட்கொண்டு அருளிடும் பெருமைபோற்றி, ஆர்ந்த நின்பாதம் நாயேற்கு அருளிடவேண்டும் போற்றி" எனவும், "தினியார்மூங்கில் அனையேன் வினையைப் பொடியாக்கித், தணியார் பாதம் வந்தொல்லை தாராய் பொய்தீர் மெய்யானே" எனவும், "யானேபொய் என்அன்பும்பொய், ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே, மானே அருளாய் அடியேன் உனைவந் துறுமாறே" எனவும் கூறியனவெல்லாம் ஆட்கொண்டு திருவடிப்பேறு அருளவேண்டியதாமென்க.

திருவாசகத்திலும் தேவாரங்களிலும் இவ்வாறேதடுத்து ஆட்கொள்ளவேண்டுமென்னும் முறைமையும், அருளவேண்டுமென்னும் முறைமையுமே ஓதப்பட்டுள்ளன.

இனி, சுந்தரமூர்த்திகள் தடுத்தாண்டருள வேண்டுமென்று வேண்டிய வேண்டுகோளையும், அவையுள்ளிட்டு அவருள்ளத்தின் கண்ணே எண்ணிய எண்ணங்களையும், உணர்ந்தவனாகிய இறைவன், அந்தோ! நம் சுந்தரன் இப்பொழுது கலங்கிய கலக்கத்திற்குக் காரணம் நம் செயலன்றி அவன் செயல் ஒன்றுமில்லையே. அது அவனும் உணர்ந்தவனே யாயினும் நாம் சில எடுத்துரைப்போமாயின் அவனுள்ளங் குளிரும், நாம் அவனைப் பூவுலகிற்கு அனுப்ப எண்ணிய எண்ணமும் முற்றுப்பெறும் என்று திருவுளத்தெண்ணி இரங்கினன் என்பார் அங்கணாளன் என்றார்.

எண்ணியுரைத்தது என்னையெனின்! சுந்தரா! சண்டு வருக. சுராசுரர்களும் அவர்கள் அம்சமாகவும் சம்பந்தமாக வும் உள்ளவரெல்லாம் போகிகளாகலான் அவரவர்களுக்கு ஏற்றவாறு நிக்கிரகா நிக்கிரகஞ் செய்துவருகின்றோம். அம் முறைமை எத்தன்மைத்தெனின்! † சுரர்களுக்கெல்லாம் அனுக்கிரகத்தைக் குறித்த நிக்கிரகத்தைச் செய்து பின்னர் அவர் வேண்டுவனவற்றை அனுக்கிரகித்தும், அசுரர்களுக் கெல்லாம் நிக்கிரகத்தைக் குறித்த அனுக்கிரகத்தைச் செய்து பின்னர் அவர்கள் வேண்டாத நிக்ரகத்தைச் செய்தும் வருகின்றோம். இப்படியே ஏனையபோகிகளுக்கும் அவரவர் களுடைய குணகுணங்களுக்கு ஏற்றபடி செய்து வரு கின்றோம்.

அஃதேபோல், ‡ முத்திசாதனமாகிய யோகஞானங்களை வேண்டுவோர்க்கு அந்த யோகஞானங்களையும், அந்தயோக

---

† "குணநாடிக் குற்றமுநாடி அவற்றுள், மிகைநாடி மிக்கொளல்" என்றபடி குற்றமற்ற குணமுடையாரும் இல்லை. குணமே யிலலாத குற்ற முடையாருமில்லை. என்பது உண்மை. சுரர்கள் - குணத்தில் குற்றமுடையவராதலால் அனுக்கிரகத்தைக் குறித்த நிக் கிரகமெனவும், அசுரர் குற்றத்தில் குணமுடையவராதலால் நிக்கிர கத்தைக்குறித்த அனுக்கிரகம் எனவும் கூறியதென்க.

‡ முத்திசாதனத்தை வேண்டாத போககாமிகளுக்கு வேதங் களில கூறப்பட்டிருக்கும் யோகஞானங்கள் போலன்று ஆகமங் களிற் கூறப்படும் சிவயோகமும் சிவஞானமும் என்பது தோன்ற முத்திசாதனமாகிய யோகஞானங்களை என்றதென்க.

ஞானங்களை அடைந்தபின்னர் கைம்மாறுகருதி விரும்பப் படும் அன்பை வேண்டுவோர்க்கு அன்பையும் நாம் அனுக் கிரகஞ் செய்யவேண்டி நாம் இப்பொழுது உன்பால் நிகழ்த் திய செய்கைகளாகும்.

என்னையெனின், ஆன்மாக்களுக்கு எமது இச்சா ஞா னக் கிரியாசத்திகளால் எண்ணி யறிந்து செய்யக் கருதிய வற்றைத் திரோதானசத்தியினாலும், அருட்சத்தியினாலும் யாம் செய்து வருவதாகும். எவ்வகையாற் செய்வதெனின், மேலேசொல்லிய சுராசுரர் நரர்முதலியோர்க்கு இருவினை யின வழியே திரோதான சத்தியைக்கொண்டு பிரவிர்த்தி பரமாய்ச் செய்வனவற்றைச் செய்வித்து இருவினையொப்பு வருவிப்போம். யோகிகட்கும் ஞானிகட்கும் அத்திரோதான சத்தியைக்கொண்டே நிவிர்த்திபரமாய் குருலிங்கவழியான் செய்வனவற்றைச் செய்வித்து மலபரிபாகத்தை வருவிப் போம். கைம்மாறுகருதிய அன்பர்களுக்கு அருட்சத்தியை க்கொண்டு தீர்த்தவிசேடத்தோடு தலவிசேடங் கொண்டிரு க்கும் க்ஷேத்திரத்தில் மூர்த்திவிசேடங்கொண்டு ஆலயத் தில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்க மூர்த்தியை வழிபடு முறையில் செய்வனவற்றைச் செய்வித்து சத்திநிபாதம் வருவிப்போம். வருவித்தபின்னர் அவ்வழியே அன்பைப் பெருக்கி அன்பராகிய ஜங்கமரோடுகூட்டி வாழ்விப்போம்.

இவருள் இருவினையின் வழியான் செய்வன செய்வோ ர்க்கு பிறப்பிறப்பில் மாறிமாறிவருவதில் விசையை யுண்டா

க்கி விளையொப்பவ வந்திப்போம். மலபரிபாகம் வந்த குரு லிங்கவழியான் செய்வன செய்வோர்க்கு "ஆளுடையான் எந்தரமும் ஆளுடையானேயறியும், தாளுடையான் தொண்டர்தலைக்காவன் - நாளுந், திருவிசைவூராளி சிவயோகிஎன்றன் * வருவினையை மாற்றினான் வந்து" என்ற சித்தாந்த வாக்கியப்படி பிறப்பிறப்பில் வரும் வினையைப் போக்கி, "தூலத்தடுத்த பளிங்கின் துளக்கமெனத், தூலத்தே நின்று துளங்காமல் - காலத்தால, தானைத்தந்து எனபிறவித்தானை யறவிழிதார்க்கு, ஆளன்றி என்மாறு அதற்கு" என்ற சித்தாந்தவாக்கியப்படி இனிப்பிறவாவண்ணம் பிறவித்தானை அறுத்து எறிவோம். கைம்மாறுகருதி சிவலிங்க மூர்த்தியை வழிபடும் முறையில் செய்வன செய்வோர்க்கு "இக்கணமே முத்தியினை எய்திடினும் யான் நினைந்த, அக்கணமே ஆனந்தந் தந்திடினும் - நற்கணத்தார், நாயகர்க்கும் நாயகிக்கும் நான் அடிமை எப்பொழுதும், ஆயிருத்தலன்றி யிலேன் யான்" என்ற சித்தாந்த வாக்கியப்படி அவரைப் பாசவிடுதியையும் சிவப்பேற்றையும் வேண்டச்செய்யாது எனது அடிமையே வேண்டச்செய்து அடியராகிய சங்கமரோடு கூட்டி அடிமைத்திறத்தில் இன்பமுற்றுவாழச் செய்து அவர்செய்வனவாகிய அடிமையை நாம் கைம்மாறாக ஏற்றுக்கொள்வோம்.

* பிறப்பிறப்பைக்கொடுக்கும் வேகமுடைய இருவினையை

இங்ஙனங்கூறிவந்த இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் என்னும் இவற்றை ஆன்மாக்களுக்கு வருவிப்பதற்கு இங்கிருக்கும் நமது சத்திபேதங்களையும், நமது மக்களையும், நமது அருளாளர்களையும் பூவுலகிற்கு அனுப்புவானெண்ணி நாம் லீலையாகச் சிலசிலகுற்றங்களை அவர்கள் செய்ததுபோல செய்வித்துப் பின்னர் அவர்களை நோக்கி நீவிர் இன்ன இன்ன குற்றங்களைச் செய்த படியினால் பூவுலகிற் சென்று இன்ன இன்ன காரியங்களைச் செய்து வருவீர்களாக என்று கட்டளையிட்டனுப்பி நாமும் அவர்களுடனுய்நின்று இவ்விடத்தில் குற்றங்களைச் செய்வித்தது போல் அவ்விடத்தில் செய்யவேண்டுவனவற்றைச் செய்வித்துப் பின்னர் அவர்களே யாவும் செய்ததாக யாவரும் அறியும் வண்ணம்செய்து அவர்களைப்போற்றிப் புகழ்ந்து வழிபடுவோர்க்கு மேலேசொல்லிய இருவினையொப்பு முதலியன அவர்கள் பொருந்துமாறு செய்வோம்.

இங்ஙனம் செய்வது எமது தருமமாகலின் இப்பொழுதும் உன்பால்செய்தோம். அது என்னையெனின்! இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் என்னும் இவற்றை அடைய வேண்டிய வர்கள் பலபலசாதனங்களாலன்றி ஓர்சாதனத்திலேயே (அஃதாவது-திருத்தொண்டத் தொகை என்னும் ஒன்றையுய்த்து உணர்வதிலேயே) அடைவானெண்ணிச் செய்தோம். ஆகலின் நீ பல பலவாக எண்ணிக்கொண்ட கலக்கத்தை யொழிவாயாக. இங்ஙனங்கூறியருளினால் நீ பூவுலகிற்சென்று செய்யும் செயலெல்

லாம் எம்முடைய செயலே. உன்னால் அனுபவிக்கப்படும் அனுபவம் எவ்வகைத்தாயினும் அவையெல்லாம் என்னுடையதே. உன்னுடைய செயலையும் உன்னுடைய அனுபவத்தையும் எம்முடையனவாகவே கொண்டு அவ்விரண்டினாலும்வரும்பயனை திருத்தொண்டத்தொகையை உய்த்துணர்வோர்க்கு நாம் ஆக்குவோம்.

பூவுலகிற்சென்று செய்யவேண்டியவற்றை இக்கயிலாயத்திற்றானே செய்வித்தால் ஆகாதோ அதனால்வருங்குற்றம் என்னையோ எனின், எவ்வெவர்க்கும் எவ்வெப்பயன்களும் இடவேற்றுமையாலும் காலவேற்றுமையாலும் அடையப்படுமேயன்றி அவ்வேற்றுமையன்றி ஒருசிறிதும் அடையப்படுமாறில்லை. ஒருழவன் பயிரிடவேண்டுவானாயின் தானிருக்கும் இடத்திலேயே இருவனே, அந்நிதேபோல் நினைத்த அக்காலத்தையே பயிரிடுங்காலமாக எண்ணிப் பயிரிடத்தொடங்குவனே, பயிரிடுதற்குரிய உழுதல் விதைத்தல் களைகட்டல் அறுத்தல் முதலிய செயல்களே அந்தத்தானியத்தைப் பொருளாக்கிக் கைக்கொள்வதற்குச் செய்யுஞ்செயலாகத் துணிவனோ துணியான் என்பது நிச்சயம்.

ஆகவே, ஆன்மாக்களாகிய பயிர்களை நாம் உண்டாக்கும் இடம் பூலோகமேயாம். ஆகலான் உயிர்களாகிய ஆன்மாக்கள் உய்யும்வண்ணம் காலத்தை நோக்குவதும், அக்கால வேற்றுமை நோக்கிச் செய்வனவற்றைச் செய்யவேண்டுவதும் அன்னமேயாம். அவ்வச்செய்கைக்குத் தக்க பலனை

நியமித்துக் கொடுக்குமிடம் இக்கயிலாயமாம். பந்தப் பிர விர்த்திக்கும் பந்தநிவர்த்திக்கும் முத்திசாதனத்திற்கும் முத்திப் பிரயோஜனத்துக்கும் செய்யும் செய்கைகளுக்கெல்லாம் இடமாயிருக்கும் பூலோகத்தைவிட்டு அவ்வவற்றிற் குரிய பலனை நியமிக்கும் இவ்விடத்திற் செய்வது குற்றமாய். எனவே கயிலாயத்தில் செய்ய முடியாதென்பதாம்.

இனி, * இறைவன் திருத்தொண்டத்தொகையென்றை உய்த்துணர்வதனாலேயே இருவினையொப்பு முதலிய மூன்றும் அடைவான் முன்னெண்ணியமுறை எவ்வாறெனின், திருத்தொண்டத் தொகையால் போற்றப்பட்ட நம்பெருந்தகையடிகளெல்லாம எனதெனப்படும் உடலோடு எல்லாப்பொருளையும் தம்மைஉடையானாகிய இறைவன் உடைமையாகக் கருதிக் கருதிய அவ்வெண்ணத்தில் கரவாடுதலின்றி முற்றும் இறைவனுக்கும் இறைவனையே உடைமையாக உடையாராகிய அடியார்களுக்கும் ஒருங்கே வேண்டிய வேண்டிய அவ்வப்பொருளில் பற்றும்பற்றின்றிக் கொடுத்து இருவினையொப்பு வேண்டுவோர்க்கு அதுவரும் உபாயம் இதுவாமென்றுகாட்டவும், நானெனப்படும தங்களை அவர்களுக்கு அடிமையாகக்கருதி "நன்றேசெய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே,, எனச் சுதந்தரமற்றிருக்குந் தன்மையைக்காட்டி மலபரிபாகம் வேண்டுவோர்க்கு அதுவரும்

* இறைவன் முன் எண்ணியது ஆன்மாக்களுக்கு சுந்தரமூர்த்திகளைக்கொண்டு செய்ய என்பதாம்.

உபாயம் இதுவாமென்று உணர்த்தவும், எனதென்பதும் அற்று, நான் என்பதும் அற்று, தம்மையும் பொருளையுங் கைக்கொண்ட திருவருள்வசத்தராய் அத்திருவருள் அதுகாறும் திளைத்துணையும் நீங்காது செய்துவந்த உபகாரத்தைக் கருதிக்கருதி அங்ஙனங் கருதுந்தோறும "இடர்களையாரேனும் எமக்கு இரங்காரேனும், படருநெறி பணியாரேனும் - சுடருருவில், என்பறாக் கோலத்து எரியாடும் எமமானார்க்கு, அன்பறாது என்னெஞ்சகத்து,, என்ற அம்மையார் மொழிப்படியே அறாத அன்பினையே வேண்டி கசிந்த தொண்டிலநின்று சத்திநிபாதம் வேண்டுவோர்க்கு அதுவரும் உபாயம இதுவாமெனறு அறிவுறுததவும் செய்தஅருட்செயல்களே யாம். ஆகலான் அவ்வருட்செயல்களை அஞ்ஞான சந்தேக விபரீதங்கட்கு இடங்கொடாது நன்குயுணர்ந்து அவர்கள்காட்டிய அவ்வவ்வழியிலே சென்று இருவினையொப்பு வாய்க்கப்பெற்றும், அவர்கள் உணர்த்திய உணர்விலே நின்று மலபரிபாகம் வரபெற்றும், அவர்கள் அறிவுறுத்திய அறிவிலே அறிவை நிலைநாட்டித் தொண்டைக் கைக்கொண்டும் உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் அத்தொகையுள் அமைந்து கிடக்கின்றன வாகலான் திருத்தொண்டத்தொகை யொன்றைக்கொண்டே உயிர்கள் வினையொப்புமுதலிய மூன்றையும் அடைவா னெண்ணியதா மென்க.

இங்ஙனமான அரும்பொருள் வாய்ந்த திருத்தொண்டத்தொகையை வெளியாக்கவே உன்னைப் பூவுலகிற் போ

கும் வண்ணம் நந்தனவனத்தில் மங்கையரை நீ காணச்செய்தோம். என்றார் இறையவனார்.

திருத்தொண்டத் தொகையை வெளியாக்க மங்கையரைக் காணச்செய்தது என்னையெனின், மங்கையர்களின் வழி மயங்கி நிற்கப்பெற்றவரே இருவினையின்வழி நிற்கும் பெத்தான்மாக்களாவர். மங்கையர்களின்வழி மயங்கி நில்லாது தாம்செல்லும் வழியை நாடி அவ்வழிச் செல்பவரே முத்தான்மாக்களாவர். ஆகலான் பெத்தநிலையும் முத்திநிலையும் நீ அறிந்தாலன்றி பெத்தான்மாக்களை முத்தான்மாக்களாக்கல் கூடாதாகலான் அவரைக் காணச்செய்தோம். யாம்காணச்செய்தும் காணச்செய்த அச்செயலில் அவ்விருநிலையும் நீகண்டாயில்லை. என்னையெனின், நீ மாதர்மேல் மனம்போக்கியதும் அம்மாதர் உன்காட்சியில் தங்கள்கண்களை வைத்ததும் பெத்தநிலையாம். நீயும் அவர்களும் அப்பெத்தநிலையில் மயங்கிநில்லாது நீ எனக்குரியமலர்களைப் பறித்துக்கொண்டு என்முன் வந்ததும், உன்னைப்போலவே * அன்னம் அன்னராகிய மங்கையர் தேவிக்குரிய பன்மலர் கொய்துகொண்டு அவள்பால் போனதும் முத்திநிலையாம். நாம் இங்ஙனம் கூறியவாறு அவர்களைக்கண்டு நீஎம்மிடம் வந்துநின்ற அந்நி

* அன்னப் பட்சியானது பால் - நீரொடு கலந்திருப்பினும் அந்நீரைக் கொள்ளாது அதனைப்பிரித்துப் பாலையே கொள்வது போல், திருமேனியின் காட்சியைக்கண்ட கண்வசப்பட்ட தங்களறிவை அக்கண்வழியில் மயங்கிநிற்கச் செய்யாது வேறுபிரித்து அருட்பணியைக்கொண்டதென்க.

லைவரையில் பெத்தம் முத்தி என்னும் அவ்விருநிலையும் இன்று இறைவன் நமக்குணர்த்தினான் என்று நீ அறிந்தனையோ இல்லை அதனை உனக்கு உணர்த்தவே நாம் உன்னைப்பார்த்து மாதர்மேல் மனம்வைத்தனை தென்புலி, மீது தோன்றி, அம்மெல்லியலாருடன், காதல் இன்பங் கலந்து அணைவாய் என்றோம்.

மானிடருக்குள்ள மருளும் மனத்தைப்போல் என்பால் உள்ள உன்னறிவை மனம் என்றது என்னையெனின், மும்மலவாசிகளாகிய சகலருக்குத் தனுகரண புவனபோகங்கள் என்றுளஎப்படிகூறப்பட்டிருக்கின்றனவோ, அப்படியே இருமலவாசிகளுக்கும், ஒருமலவாசிகளுக்கும் கூறப்படினும் ஒருமலவாசிகளாகிய விஞ்ஞானகலர்க்கு இருப்பதுபோல் இருமலவாசிகளாகிய பிரளயாகலருக்கு இருக்குமென்பதும், பிரளயாகலருக்கு இருப்பதுபோல் மும்மலவாசிகளாகிய சகலருக்கு இருக்குமென்பதும் எப்படியில்லையோ (அஃதாவது - மும்மலருக்கு - சுத்தாசுத்த தனுகரணங்களாயும், இருமலருக்கு அசுத்த தனுகரணங்களாயும், ஒருமலருக்குச் சுத்த தனுகரணங்களாயும் இருக்குமேயன்றி மும்மலவாசிகளுக்கு இருப்பதுபோலவே ஏனைய இருவருக்கும் இருக்குமென்பது எப்படியில்லையோ) அப்படியே ஒருமலமுமில்லாத உனக்கு, மலவாசிகளுக்குள்ள மனத்தைப்போல் உனது கரணத்தையும் மனமென்று நான்சொன்னால் உன்மனம் அவர்கள் மனம்போ லென்று எண்ணிச் சொன்னதாக நீகொள்ளுதல்

கூடுமோகூடாதென்க. அல்லதேபோல்—மாதர்மேல் மனம் வைத்தனை என்பதும், தென்புலி மீது தோன்றினையென்பதும், மெல்லியலாருடன் காதலின்பங் கலந்தநுபவா வென்பதும் ஆன்மாக்களுடைய அநுபவத்துக்கு ஒப்பாக உனது அநுபவமாம என்று எண்ணிச்சொன்னேம்என்பது மன்று.

இவ்வுண்மையால் - அவர்கள் மாதருமன்று, நீ மானிடனுமல்லன், நீதென்புலியில் தோன்றுகின்றவர்களைப்போல் தோன்றுகின்றவனு மல்லன், உன்மனம் தென்புலியில் தோன்றுகின்றவர்களுக்குள்ள மனம்போல இந்திரியவிஷயங்களின்வழியாய் மயங்கும் மனமுமன்று. மாதரோடு கலந்து அநுபவிக்கும்இன்பம காதலினபமாகிய சிற்றின்பமுமன்று.

ஆகலான் யாம் தடுக்கவேண்டிய பாசச்செயல் உன்னிடத்திலில்லை யாம ஆன்மாககளிடத்துள்ள பாசச்செயலைத் தடுப்பதற்கான பாசச்செயல் எதுவோ அச்செயலே உன்பால்நிகழும், அங்ஙனம் நிகழும் அச்செயலை யாம் ஆன்மாக்களிடத்து எப்படி அதனைத்தடுக்க முயல்வோமோ அதுபோல் அங்ஙனம் தடுக்கமுயல்வோம், யாம தடுக்கவேண்டிய பாசச்செயல் உன்னிடத்தில் இல்லாமைபோல் உன்னை ஆட்கொள்ளவேண்டிய செயல் என்னிடத்தில் இல்லை. ஏனெனில் நீ எம்மைத் திருநீற்றாலும் பூமாலையாலும் ஆள்கின்றவனாயிருக்கின்றாய். ஆகலான் என்னை ஆள்கின்ற உன்பால் ஏனைய ஆன்மாக்களை யாம் ஆட்கொள்ளும் முறைமையைக் காட்டுவோம். யாம் ஆன்மாக்களை ஆண்டு அருள்செய்யவேண்டிய முறைமையைக் காட்டுவதற்கு நீ ஆளாயிருத்த

லால் உனக்கு யாம் செய்யவேண்டிய அருள் வேறொன்றி ல்லை. ஆகலான் உன்வழியாய் ஆன்மாக்களுக்குச் செய்யவே ண்டிய எமது அருட்செயலில் நீ யாது செய்யக் கருதுகின் றோமோ அதனையே நாம் உன்பால் அருள்செய்கின்றோம்.

ஆகவே, உன்னால் செய்யவேண்டியவற்றை யாம் வேண் டியபடியே உன்பாலே செய்யவேண்டுமென்று (அஃதாவது- ஆன்மாக்களிடத்தில் தடுக்கவேண்டியசெயலையும், அவர்களை ஆட்கொள்ளும் முறைமையும், அவர்களுக்கு அருள்செய் யும் திறத்தையும், உன்பாலே செய்யவேண்டுமென்று) நீ வேண்டினை யாகலான் அவ்வேண்டுகோளைத் தடைசெய்ய வல்லனோ அங்ஙனமே செய்கின்றேனென்பார் அதற்கருள் தபின் என்றார்.

"தடுத்தாண்டருள்செய்ய" வேண்டுமென்று எண்ணிய எண்ணம் இறைவன் முன்னும் சுந்தரமூர்த்திகள் பின்னும் ஆதலால் அதற்கருள்செய்தலும் என்னாது அதற்கருள் செ ய்தபின் என்றார். அநிந்திதை கமலினி என்பவர் மங்கையர் போலுமன்று, நீயும் மானிடரைப்போலுமன்று, அம்மங்கை யரைக் கூடுவதனாலுண்டாகும் காதலின்பமும் சிற்றின்பமன் று என்று முன்னே கூறியதனால் அவர்கள் சத்திசொரூபங்க ளென்றும், நாம் அவனது ரூபமென்றும் உணர்த்தியதாயி ற்று. ஆகவே - இறைவன் ஆன்மாக்களைத்தடுத்தாண்டருளச் செய்யக் கருதியசெயலை மங்கையரையும் நம்மையுங்கூட்டிச் செய்யக்கருதி யிருக்கின்றான் போலும்; ஆகலின் அச்செய

வில் நமக்குத் துன்பம் எவ்வாற்றான் உண்டாகும். உண்டா வது இன்பமேயாம் என்று தென்திசைக்குவரச் சுந்தரமூர்த்திகள் துணிந்தனர் என்பார் நங்கைமாருடன் நம்பிமற்றத் திசை, தங்குதோற்றத்தில் இன்புற்றுச்சாரும் என்றார்.

முன்கலந்து அணைவாயென்றதில் அணைவாய் என்றதையும், ஈண்டுஇன்புற்றுச் சாரும் என்பதில் சாரும் என்றதனையுங் கொண்டுகூட்டி இறைவன் சுந்தரா நீ தென்திசையில் மங்கையருடன் கூடிஇன்பத்தை அனுபவித்துப் பின் நமதுகயிலாயத்தை வந்து அணைவா (சேருவா)ப் என்று கட்டளையிட, அக்கட்டளைப்படியே தென்திசையில் மங்கைமாருடன் கூடி யின்புற்று இப்பொழுது இக்கயிலைக்கு வருகின்றார் என்று பொருள்கொள்க.

"உள்ளவண்ணம் முநிவன் உரைசெய்தான்" என்றது முதல் "தங்குதோற்றத்தில் இன்புற்றுச்சாரும்" என்றது காறும் மாதவஞ்செய்த தென்திசைவாழ்ந்திட, சுந்தரமூர்த்திகள் அத் தென்திசைக்கண்வந்து "நீதிலாத் திருத்தொண்டத்தொகை தரும்வண்ணம் இறைவன் செய்தசெயலன்றிச்" சுந்தரமூர்த்திகள் செய்தசெயல் ஒன்றுமில்லை என்பது துணியப்படும் என்பார் அங்கு அவன்செயல் எல்லாம் அறைந்தனன் என்றார்.

பொதுவகையான் மாதவஞ்செய்த மாநிலம் வாழ்ந்திட என்னாது நிலத்திலும் திசையினும் வேறுபிரித்துச் சிறப்புவகையான் தென்திசையொன்றை எடுத்து தென்றிசைவாழ்ந்

டென்றுகூறினாராகலின் இந்தவான் திசை எட்டினும் மேம்பட வந்த புண்ணியம் யாதெனவும், "அந்தணர் என்போர் அறவோர்மற்று எவ்வுயிர்க்கும்,செந்தண்மை பூண்டொழுகலான்" என்றபடி எல்லாவுயிர்களிடத்தும் கருணைபாராட்டும் * சைவதருமத்தையும் மேற்கொண் டிருக்கின்றவ ராகலின் அந்தணாளர் எனவும், சிவன் செயலாகியசுந்தரமூர்த்திகளது செயலெல்லாம் காணும்படி யிருந்த தென்திசையில் வாழப் பெறாது சிவனது அருட்செயலற்றிருக்கும் இவ்வடதிசையி லிருந்து வாழ்நாளைக் கழித்தோமே அந்தோ! அத்திசைக்கு வந்த புண்ணியம் நமக்கு வந்ததில்லையே அப்புண்ணியத்தின் சிறப்பையேனும் நாமறிவோம் என்று எண்ணினாராகலின் அவர் ஆங்கதுகேட்டு எனவும், அத்தென்திசைக்கண் வாழ்வோரும் பாசபந்தமுடைய மானிடராகவே யிருக்க அவர்கள்பால் திருத்தொண்டத்தொகையால் ₀ அருட் பந்

* உலகக்ஷேமத்தைக் குறித்து வேதத்தில் விதிக்கப்பட்டிருக்கும் யாகாதிகள் வைதிகதருமமாகலான் அதனையும், யாகாதிகளில் அறமாகக்கூறப்படும் சிறுகொலையும் அற்று எல்லாவுயிர்களிடத்தும் கருணைபூண்டொழுகல் சைவதருமமாகலான் அதனையும் இம் முனிவர்கள் உடையவர் என்றுணர அந்தணர் என்றதாம்.

₀ வேதசிவாகமங்களில் ஆன்மாக்களைத்தடுத்து ஆட்கொண்டருளும்முறைமை சொல்லப்பட்டிருப்பினும் அவை இலை மறைய் போல் ஆங்காங்கு மறைந்திருப்பனவே யன்றித் தெற்றென றிதற்கின்மையால் அவற்றை நன்கு அறியுமாறு தமிழ்வேதம் ரியதென்க. அஃதாவது பிரமத்தைப்பதியாகிய பரசிவமெனப்

தம் வந்தவாறு எவ்வாறென்று கேட்க விரும்பினராகலின் மானிடப்பாற்படும் பந்தம் யாது என்ன எனவுங் கூறினர்.

அன்றியும், யோகிகளுடைய இருதயகமலமாகிய புலியூரென்னும் சிதம்பரக்ஷேத்திரமும், பூமிதேவியினுடைய இருதயகமலமாகிய திருவாரூர் என்னும் கமலாலயக்ஷேத்திரமும், காமாக்ஷி தேவியினுடைய ஆன்மார்த்த பூஜாஸ்தானமாகிய முத்திபுரி என்னும் காஞ்சி க்ஷேத்திரமும், நந்திதேவருடைய கலியாணக்ஷேத்திரமும், ஞானசம்பந்தப் பெருமானுடைய அவதாரக்ஷேத்திரமாகிய தோணிபுரம் என்னும் சீகாழிக்ஷேத்திரமும், ஆகிய மஹாபுண்ணியக்ஷேத்திரங்களெல்லாம் தம்மிடத்தில் பிரகாசிக்கப் பெற்றுள்ளதாக

---

பிரகாசப்படுத்திப் பாசத்தைத் தடுக்குமுறைமை இவ்வழியாமெனவும், அவனருளை வழங்கச்செய்து அவ்விறைவனுக்கு ஆன்மாக்கள் ஆட்படும் முறைமைஇவ்வழியாமெனவும், ஆட்பட்டோருக்கும் அவ்வழியில் அருளுண்டாகும் முறைமை இவ்வழியாமெனவும் கூறியருளியதென்க. அவ்வரிய வழியைத் திருத்தொண்டத்தொகை என்னும் ஓர்திருப்பதிகம்வெளிப்பட்டு ஆன்மாக்களுக்கெல்லாம் அருள்பெறுமாறு ஆசையை விளைவித்து அதிற்பந்தம் படுத்தி அறுதியாயுள்ள ஆணவ பாசபந்தத்தைப் பாழ்படுத்திப் பாசபந்தமுடைய மானிடர்க்கு அருட்பந்தம் உண்டாக்கலின் தென்திசைக்கு இவ்வழியால் புண்ணியம்வந்ததென்க. இவ்வரும் பொருளின் விரிவைத் தடுத்தாட்கொண்ட புராணத்துள் இத்திருப்பதிகம் வருமிடத்துக் காணலாகும்.

வின் புண்ணியம்வருதற்கு வாயிலாயிற்றென்பார் ‡ தென்றிசைமேம்பட வந்தபுண்ணியம் இதுவென்றார். * பந்தசாதன

‡ எண்வகைப்பட்ட திசையுள் கீழ்த்திசையும் மேற்றிசையும் சூரியனால் காலத்தையறிவதற்குள்ள இடங்களாகவும், வடதிசை அக் காலத்தைக் கொண்டு ஆன்மாக்கள் செய்யும் கருமங்களுக்கு ஏற்ற வினைகளை வகுக்கும இறைவனுக்குள்ள இடமாகவும், தென்திசை - இறைவனால் வகுக்கப்படும் வினைகளை, ஆன்மாக்கள் செய்தற்குள்ள இடமாகவும் காணப்படலால், சுந்தரமூர்த்திகளால் செய்யக்கருதிய செயலுக்கும் அதுவே யிடமெனக்கொண்டு தென்றிசையைக் குறித்ததென்க. ஏனைய அக்னிமுதலிய நான்கு திக்குகள் இந்திராதியர் பதங்களைப்போல அவரவர் செய்யும் வினைக்கீடாக அடையப்படும் பதங்களாக வுள்ளனவென்க.

ஈண்டுத் தென்றிசைஎன்றது- பரதகண்டமாக வகுக்கப்பட்ட எல்லைக்குள் தென்றிசைஎன்க. அதன் எல்லையாவது கீழ்க்கடல், மேற்கடல், வடக்கு ஹிமாசலம், தெற்கு சேது. இவ் வெல்லைக்குட்பட்ட நிலமே பரதகண்டம் எனப்படும். இவற்றுள் தமிழுக்கு வகுக்கப்பட்ட எல்லை-குணகடல், குமரி, குடகம், வேங்கடம் எனவே கீழ்க்கடல் கிழக்கெல்லை, கன்னியாகுமரி - தெற்கெல்லை. குடகு-மேற்கெல்லை. திருவேங்கடம்-வடகெல்லை. இவ்வெல்லைக்குட்பட்ட நிலமே தமிழ்வழங்கும் நிலமாதலாலும் இறைவன் உலகில் பரவச்செய்ய வெண்ணிய திருத்தொண்டத்தொகை தமிழ்ப்பாவாதலினாலும் அந்நிலத்தை நோக்கியே சுந்தரமூர்த்திகளைப் போகச்செய்தனராகலானும் எட்டுத்திசையினும் தென்றிசை மேம்பட்டதாயிற்று.

* சராசரரும் ஏனையோரும் வேண்டியவேண்டியாங்கு போகங்களைக் கொடுத்தலே பந்தசாதனம். அசுரர்களுக்குப் போகத்

த்துக்கும் பந்தநிவிர்த்திக்கும் உரியராகிய பெத்தான்மாக்க ளும், முத்திசாதனத்துக்கும முத்திப்பேற்றிற்கும் உரியராகிய முத்தான்மாக்களும் ஸ்ரீகயிலையின்கண் மாதாளும்பாக

---

ணைதக் கொடுத்து அவர்களால் தேவர்களுடைய போகானுபவங்களுக்கு இடையூற்றைவிளைவித்தலே பந்தநிவிர்த்தி. சுராசுரர்கள் செய்தவத்துக்கீடாய் வேற்றுமையின்றி அவ்வவர்வேண்டிய வேண்டியாங்குக்கொடுத்தலே அனுக்கிரகம். அசுரர்களைச்சங்கரித்தலும், தேவர்களுக்கு இடையூற்றைவிளைவித்தலும் நிக்கிரகம். நித்தியாநித்திய வஸ்துவிவேகம். இகமுத்திரார்த்த பலபோகவிராகம், சமாதிஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்வம் என்னும்சாதனங்களும் வரப்பெற்று, பந்தப்பற்றற்று, முத்திப்பற்றுக்குப் பற்றவேண்டியபற்றற்றான் பற்றினைப்பற்றுவதற்கான சரியைகிரியாயோகம் என்னும் மூன்றுமே முத்திசாதனம். சரியையாதி மூன்றால் எய்தப்பெறும், ஞானமும் அதுவன்றி அவாந்தரப்பயனாகிய சாலோகாதி பதங்களும், ஞானத்தால் எய்தம்பாலதாகிய சிவானுபவமுமே சிவப்பேறும். சரியை கிரியாயோக மூன்றும் கைகூடுவதற்கு மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூவடிவாயிருந்து வழிபாடுகளை யேற்று அவ்வழிபாட்டான் பந்தநிவிர்த்தி செய்வதே நிக்கிரகம். பதமுத்தியைக்கடந்த பரமுத்தியாகிய சிவானுபவம் வருவதற்கான குருலிங்க சங்கமவடிவமாயிருந்து வழிபாடேற்று அவ்வழிபாட்டான் சிவானுபவத்தில் சிவானந்தத்தை விளைவிப்பதே அனுக்கிரகம்.

முத்தான் மாக்களால் விரும்பப்படும் ஞானத்திற்குச் சாதனமாய் நிற்கும் மூர்த்திதலம் தீர்த்தம் என்னுமூன்றும் பெத்தான்மாக்களால் விரும்பப்படும் போகத்துக்கும் இன்றியமையாத சாதனமாகும். ஞானத்துக்குச் சாதனமாயுள்ளதே போகத்துக்கும் சாதன

த்தனுய் வீற்றிருக்கும் இறைவன் மேலேசொல்லியவாறு பந்தசாதனத்தையும் பந்தநிவிர்த்தியையும், முத்திசாதனத்தையும் முத்திப்பேற்றையும் அடையுமாறநுக்கிரகானுக்கிர

மாதல் எங்ஙனங்கூடுமெனின்! போகமோக்ஷப் பிரதாயகனுயுள்ளவன் "எல்லாரும் சிவன் என்ன நின்றுய் போற்றி" என்றபடி சிவனொருவனேயாய் நிற்றலால் சாதனமும் இரண்டற்கும் ஒன்றுயிற்று

கடவுளர் பலர் இருக்க, சிவனொருவனே போகமோக்ஷப் பிரதாயகனுதல் யாங்ஙனமெனின் "போகியாயிருந்துயிர்க்குப் போகத்தைப்புரிதல் ஓரார், யோகியா யோகமுத்தி உதவுதல் அதுவும் ஓரார், வேகியானுற் போற்செய்த வினையினை வீட்டல் ஓரார், ஞூமியாமூடர் எல்லாம் உம்பரில் ஒருவன் என்பா" இந்தப்பிரமாணத்தால் சிவனொருவனே என்றல் அமையும். வேறு சில கடவுளரைக் கூறுவது அறிவின் விசாலமற்றவர்கள் கூற்றுமெனவொழிக.

இவ்வுண்மையைக் காட்சிப்பிரமாணத்தானும் அறியவே மூர்த்திதலம் தீர்த்தம் என்னும் மூன்றும் இந்திரன் பிரமன் திருமால் முதலிய போககாமிகளாலும் மோக்ஷகாமிகளாலும் வழிபடப்பட்டு அவ்வவர் பெயரான் வழங்கிவருகின்றன. இதனுல் அறியக்கிடப்பதொன்று. அது கருத்து செயல் என இருவகை. பெத்தான்மாக்கள் போகத்தைக்கருதி மூர்த்திமுதலிய மூன்றிடத்தும் செய்யும் வழிபாட்டைக் காமியமாகச் செய்கின்றபடியால் அதுபோகசாதனமாயிற்று. முத்தான்மாக்கள் மோக்ஷத்தைக்கருதி அம்மூவிடத்தும் செய்யும் வழிபாட்டை நிஷ்காமியமாகச் செய்கின்றபடியால் அது மோக்ஷசாதனமாயிற்று. ஆகவே செயல் ஒருவகைஎன்றும், கருத்து இரண்வகையென்றும் வெளியாயிற்று.

ங்களைச் செய்யத் தென்திசையின்கண் ஆங்காங்கும் திருக்கோயில்கொண்டெழுந்தருளியிருந்து அவ்விருவகையான்

---

முத்திசாதனத்துக்கு மூர்த்திதலம் தீர்த்தங்களைக் கூறியதேயன்றி குருலிங்க சங்கமவழிபாட்டையும் கூறியதனால் அம்மூன்றற்கும் உள்ள ஒற்றுமை யாதெனின், குரு என்பது உபதேசகர்த்தா. இலிங்கம் என்பது தாவரரூபமாயிருக்கும் சிவலிங்கவடிவம். சங்கமரென்பது இவ்விரண்டிடத்தும் வழிபடும் வழிபாட்டை மேற்கொண்டுள்ள அன்பர்கள். தாவரரூபமாயிருக்கும் இலிங்கவடிவத்தில் சிவம் இருப்பதுபோல் சங்கம ரூபமாயிருக்கும் வடிவத்திலும் தயிரில் நெய்போல் சிவம் இருப்பதால் இதுசரமூர்த்தி எனவும், தாவரலிங்கம் அசரமூர்த்தியெனவும் சொல்லப்படுதலால் மூர்த்திஒற்றுமையும், சங்கமரும்சரமூர்த்தி எனப்படுதலால் தாவரமூர்த்தி இருக்கும் இடத்திற்குத் தலவிசேடம் உண்டாயிருத்தல்போல் சங்கமமூர்த்திகள் இருக்கும் இடங்கட்கும் தலவிசேடம் உண்டாயிருக்கும் என்பதில் ஐயமின்றாதலால் தலவிசேட ஒற்றுமையும், அத்தலத்தில் உள்ள தீர்த்தம் தம்மையடைவோருடைய அசுத்தமாகியபாவத்தைச்சுத்தி செய்வதுபோல சரமூர்த்தியாகிய குருமூர்த்தி தம்மை அடைவோருடைய ஆணவ அழுக்கை ஞானதீர்த்தத்தால் சுத்திசெய்தலால் தீர்த்த ஒற்றுமையும் உடைத்தாயிருத்தல் காண்க. இவ்வகையான் இரண்டற்கும் ஒற்றுமையுண்மையால் மூர்த்தி தலம் தீர்த்தத்தோடு குருலிங்க சங்கமவழிபாட்டையுங் கூறியதென்க.

மூர்த்திதலம் தீர்த்தம் என்பதும், குருலிங்க சங்கமம் என்பதும், தனித்தனி விசேடமுடைத்தோ ஒன்றினால் ஒன்று விசேடமுடைத்தோ எனின் மூர்த்தியினாலேயே தலத்திற்கும் தீர்த்தத்திற்கும் விசேடம். அஃதேபோல் இலிங்க மூர்த்தியினாலேயே குருவுக்கும் சங்கமத்துக்கும் விசேடம் என்ப.

மாக்களாலும் செய்யப்படும் பூசனையாகிய வழிபாட்டை ஏற்றுக்கொள்கின்றான் என்பார் பூசனைக்குப் பொருந்தும் இடம்பலஎன்றார். பூசனையாகிய வழிபாட்டிற்கு இத்தென் திசைபோலும் ஏனைத்திசைகள் உரித்தானது அன்றென்பது பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் துணியப்படும் துணிபென் பார் பேசில் அத்திசை ஒவ்வாபிறதிசை என்றார்.

"இறைவன் அடிசேர்ந்தார் பிறவிப்பெருங்கடல் நீந்து வர், அடிசேராதார் பிறவிப்பெருங்கடல் நீந்தார்" என்ற வேதமொழிப்படி பிறவிப் பெருங்கடலிற் றள்ளும் கடுந் தொழிலுடைய இயமன்வாழும் தென்திசையில் வாழ்ப்பெ ற்ற நாம் அந்த இயமனது கடுந்தொழிலுக் கஞ்சாமலும், பிறவிப் பெருங்கடலில் வீழாமலும், பிறந்ததனாற் பெறத் தகும் பயனைப்பெற்றுப் பேரின்பவீட்டில் நாம் என்றும் இறைவன் அடியிணையில் இன்புற்றிருக்கவும், இறைவனரு ளால் திருத்தொண்டத்தொகை என்னும் தோணியைத்தந்த பெருமானார் நம்ஆளுடை நம்பிகளாகிய சுந்தரமூர்த்திகளே யாகலான் அச்சுந்தரமூர்த்திகளுடைய புராண இருதயத் தைச் சைவசமயிகளென வாழவந்த நாம் நம்முடைய இரு தயமாகிய உள்ளத்தில் கொள்வோமாயின் பிறவிப்பெரும் கடலை நீந்துவோம். அங்ஙனம் கொள்ளாதொழிவோமாயின் அக்கடலை நீந்தாது அதில் ஆழ்வோம் இது திண்ணம்

ஆகலான் அங்ஙனம்ஆழாது திண்ணமாகத ண்டத்தொகையின் இருதயமாகிய தோணியில் ஏறி அது

செல்லும் வழியேசென்று இறைவன் அடியென்னும் கரையைக்கண்டு பேரின்ப வீட்டிற்புக்கு இன்புடன் அருளோடு வாழ்வோமாக.

இங்ஙனம் கூறிவந்தன வெல்லாம் திருமலைச் சிறப்பில் கூறப்பட்டுள்ளனவாயிருக்க அவற்றை ஈண்டு பாயிரமென எடுத்தாண்டது என்னையெனின் "ஆக்கியோன் பெயரேவழியே எல்லை, நூற்பொருள் யாப்பே நுதலியபொருளே, கேட்போர் பயனோ டாயெண்பொருளும், வாய்ப்பக் காட்டல் பாயிரத்தியல்பே" என்றுசொல்லப்படும் எண்வகையும் அதனுள்ளே அடங்கியிருத்தலின் அதுநோக்கி என்க.

திருமலைச்சிறப்பினுள் கூறப்பட்டுள்ள (சo) செய்யுளில் ஈண்டெடுத்துக்கொண்ட செய்யுள் (௩௬) ஏனையவை சேக்கிழார் பெருமான் தாம் எடுத்துக்கொண்ட புராணத்துக்கு ஏற்பவைகளா மென்க

பாயிரம் முற்றிற்று.



திருச்சிற்றம்பலம்.

சுந்தரேசாயநமஃ

# தடுத்தாட்கொண்ட புராணம்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவதாரச் சிறப்பு.



(செய்யுள் - க-உ-ரு) கங்காதரராயும் சந்திரசேகரராயும் சர்ப்பாபரண பூஷிதராயும் கொன்றை என்னும் புஷ்பமாலா லங்கிருதராயும் பிரகாசிக்கின்ற இறைவனார் ஆள் ஓலையைக் காட்டி ஆட்கொண்ட நம்பியாரூரர், கண்களாகிய கயல்கள் முகமாகிய சந்திரனுடைய இருபக்கத்திலும் ஓடி குழையணி அணிந்திருக்கும் செவிகளைத்தாவும் அழகிய மங்கையராலும், காவிரியின் பெருக்கத்தால் பெருகிய வளங்களாலும் சிறந்திருக்கும் திருமுனைப்பாடி என்னும் நாட்டில், வைதிகசைவமாகிய மெய்நெறியினின்றும் தவறாத வைதிகசைவர்களாகிய வேதியர்கள் மிகுதியாக வாழ்ந்திருக்கப்பெற்றதும் அவர்களால் செய்யப்படும் வேதநெறிகளாலும் மேன்மேல் முறுகி வளர்வனவாய சரியைமுதலிய தவங்களாலும வளர்ந்தோங்கிய செழுமையில் மிக்கதுமான திருநாவலூரில், அரிய வைதிகசைவம் உலகெங்கும் பரவி மேன்மேல் ஓங்க உமைபங்கனாகிய சிவபெருமானுக்கு வழிவழியாய் அகத்தடிமைசெய்யும் ஆதிசைவகுலத்தில், மேம்

பட்ட சடையனருக்கு மனைவியாராகிய இல்லறவொழுக்கத்தைத் தமது கற்பினால் குறைவின்றி நடத்தவல்ல இசை ஞானியார்பால் ஆன்மாக்களெல்லாம் தீமையொழிந்து உய்யும் வழியறிந்துவாழ அவதாரஞ் செய்தருளினர்.

தவத்தின் மிக்காராகிய சடையனர் தம்பிரானராகிய சிவபெருமான் திருவருளினல் ஆலாலசுந்தரர் தமக்கு மகனய் வந்த அக்காரணத்துக்கேற்ப அச்சுந்தரருக்கு நம்பியாரூரர் என்று நாமகரணஞ்செய்து திருமாலுக்குரிய சங்குசக்கர கதா கட்க கோதண்டம் என்னும் பஞ்சாயுதங்களை மார்பிலும் சிறுசதங்கைகளைக் காலிலும் இரத்தினச் சுட்டியை நெற்றியிற்றெங்கச் சிரசிலும், பொன்னரைஞாண் அரையிலும் அணிந்து எபபொழுதும் அழகுடனிருந்து உலாவும் வண்ணம் அலங்கரித்திருந்தனர்.

(செ - ள்-ச-ரு) அவ்வலங்காரத்தோடு இருக்கும் நம்பியாரூரர் வீதியில் சிறுதேருருட்டி விளையாடும் நாளில் ஓர் நாள் அந்நாட்டுக்கு அரசராகிய நரசிங்க முனையரையர் என்பவர் அக்குழந்தையைப் பார்த்து அவர்பால் எடுத்துச் சொல்லக்கூடாத மிகுந்த ஆசையுடையவராய் அவர் தந்தையாகிய சடையனரிடத்திற்சென்று முன்னம் தமக்கும் அவருக்கும் உண்டாயிருக்கும் சிநேகமிகுதியினல் தாம் விரும்பியபடியே நம்பியாரூரரை அவர்பால் பெற்றுத்தமது இளமையாகிய புத்திரனோடு ஒப்பாக அபிமான புத்திரராகக் கொண்டனர்.

## உபநயனத்துக் குரியராய்க் கலைபயின்ற சிறப்பு.

(செ-ள்-சு.) நம்பியாரூரர் அரசனுக்கு அபிமான புத்திரரான பின்னரும் தமது ஆதிசைவ ஒழுக்கத்தையே கைக்கொண்டு வளர்ந்து வருங்காளில் மங்கலமாகிய உபநயனஞ் செய்யும் பருவம்வர; அப்பருவங்கண்டு அரியவேத விதிப்படி பூணூல்தரித்து மஙகலங் கொண்டாடினர். அதன்பின்னர் அறுதிநூலான வேதம் வேதாங்கம் வேதாந்த முதலிய கலைகளனைத்துங் கற்றுணர்ந்து அக்கல்விச் செல்வத்தோடு அரசச் செல்வத்தினுல் உண்டாகிய மேன்மையினையும் உடையராய் வளர்ந்தோங்கிச் சிறப்புப் பொருந்திய கலியாணஞ்செய்தற்குரிய மணப்பருவத்தையும் அடைந்தனர்.

## திருமணத் திறம்பேசும் சிறப்பு.

(செ-ள்-எ.) தந்தையாராகிய சடையனுர் அவரது மணப்பருவத்தைக்கண்டு தங்கள் ஆதிசைவகுலத்தில் தங்கள் அரிய பெரிய கோத்திரத்திற்குப் பொருந்தவும் தமது ஆதிசைவ ஒழுக்கத்திற் சிறந்தும் வந்தவராகிய புத்தூரில் வாழ்கின்ற சடங்கவியென்னும் சிவாசாரியரதுபுத்திரியை ஒப்பற்ற தமது திருமகனுருக்குத் திருமணஞ்செய்யப் பேசிவரும் பொருட்டுக் குலமுதலியவற்றைப் பாரம்பரியமாப்க் கேட்டுணரவல்ல அறிவின்குட்சியிலே மிகுந்தவரும் அஃதேபோல் கோத்திரங்களுடைய வரலாற்றை ஆராய்ந்துணரவல்லவரும்

முதுமைப் பருவம் உடையவருமாகிய நன்மையிற் சிறந்த தமது குலத்திலுள்ள பெரியோர்களை அனுப்பினார்

(செ-ள்-அ-கூ) அப்பெரியோர்களும் புத்தூரில் சடங்கவி சிவாசாரிய ரிடத்திற்போக அவரும் இவர்களது வரவேற்று உண்டிமுதலியவற்றால் உபசரித்துப் பின்னர் வந்த சமாசாரத்தைக் கேட்டனர் வந்தபெரியோர்கள் கலியாணச்செய்தியைக் கூறினார்கள். அதனைக்கேட்ட சடங்கவியார் குலநலம் கோத்திர முறைநலம் அதற்கேற்ற ஒழுக்கநலம் கல்விநலம் அறிவினது நலம் முதலிய எல்லா நலங்களையும் ஐயந்திரக்கேட்டு அவையெல்லாம் ஒத்திருக்குந் தன்மையினால் மனந்திருப்தியடைந்தவராய் அப்பெரியோர்கள் விரும்பியபடியே இலக்ஷுமிக் கொப்பாயிருக்கின்ற தமது புத்திரியைக்கொடுப்பதற்கு அன்புடையராய் மலர்ந்த முகத்தோடு யான் அந்த நம்பியாரூரருக்கு எனது புத்திரியைக் கொடுக்கின்றேன் என்று ஆவலோடு கூறினார்.

ஆசையோடு அன்புகலந்த அவ்வார்த்தையைக் கேட்ட பெரியோர்கள் அவரிடத்தில் விடைபெற்று வள்ளலாராகிய நம்பியாரூரரை மகனாகப்பெற்ற பாக்கியமுடைய சடையனாரிடத்தில் வந்து ஐயா! உமது கலியாணச்செய்தியால் அச்சடங்கவியார்க்கு உண்டாகிய மனமகிழ்ச்சியும் மணக்கிளர்ச்சியும் என்ன அளவினவென்று சொல்லுவோம் என்று சொன்னார்கள். சடையனார் முன்னமே சடங்கவியார்பால் சித்தங்களிகூர்ந் திருப்பவராதலால் பின்னும் அடங்காத

பெரியதோர் மகிழ்ச்சி யுடையவராய் அக்கலியாணச்செய்தி யைத் தம்முடைய பந்துசனங்களுக்கெல்லாம் சந்தோஷத் துடன் சொல்லி முகூர்த்தநாளைப் பெரியோருடன் கலந்து நிச்சயஞ்செய்து தமது வைதிகசெல்வத்தோடு தமது மகளு ருக்கு வாய்த்திருக்கும் அரசச்செல்வத்துக்கும் பொருந்த முகூர்த்தநாளையும் அந்நாளில் நடத்தப்படும் விசேடங்களை யும் ஓலையிற்குறித்து அவ்வோலையை மஞ்சள் புஷ்பம் முத லிய மங்கலவஸ்துக்களால் அலங்கரித்து ஓர் பொற்றட்டில் வைத்து எடுத்துக்கொண்டு மங்கலவாத்தியங்கள் ஒலிக்க அலங்காரத்துடன் மகளிரும் ஆடவரும் பெருங்கூட்டத்தி னராய் ஒருங்கு கூடிவர நறுமணங்கமழும் சோலைசூழ்ந்த புத்தூரை வந்தடைந்தனர்.

## திருமணவோலையைக் கொண்டாடி மங்கலஞ்செய்யும் சிறப்பு.

(செ-ள்-க0-முதல்-கச.) இவர்களது வருகையைத் தெ ரிந்துகொண்ட சடங்கவியாரும் அவரது பந்துக்களாகிய தாமரை மலர்போன்ற முகமுடைய பெண்களும் புருஷரும் எதிர்சென்று வணங்குவோரை வணங்கியும், ஆசிபுகல்வோ ரை ஆசிபுகன்றும், பின்னர் மணவோலையைப்பணிந்து வாங் கிக்கொண்டு மனமகிழ்ச்சி யுடையவராய் அந்த விவாகபத் திரிகையை யாவரும் அறியும்படி எடுத்துச் சொல்லிப் பின் னர் யாவரும் கலியாணத்துக்குச் செய்யவேண்டிய மங்கலச் செயல்களெல்லாம் ஒருவாற்றானும் ஒருவரானும் இகழ்ச்சி

செய்வதற்கிடனின்றிப் புகழ்ச்சியோடு பிரகாசித்துத் தோ ன்றவேண்டுமென்னும் ஆசையுடன் செய்பவர்களாய்ப் பூமா லைகளால் அலங்கரித்திருக்கும் கலியாணப் பந்தரின்கண் வந்து மனக்கிளர்ச்சியோடு மறையவர்களெல்லாம் ஒருங்கு கூடி மந்திரகோஷஞ்செய்து முளைகளுண்டாகும்படி அங்கு ரார்ப்பணஞ்செய்து மற்றுங் கலியாணத்துக்குச் செய்ய வேண்டிய சடங்குகளைச் சடங்கவி சிவாசாரியரும் அவர் சுற்றத்தாரும் செய்ய, திருநாவலூரில் நம்பியாரூரருக்குரிய சடையனார் முதலாயினார் கலியாணஞ் செய்யும் நாளுக்கு முன்னாளில் வண்டுகள் மொய்க்கும் பூங்கொத்துக்களால் தொடுக்கப்பட்ட மாலையை நம்பியாரூரருக்குச்சூட்டி பேரி கைமுதலியவாத்தியங்களெல்லாம் ஓசையுடனொலிக்க வேத மந்திரங்களால் வாழ்த்தி பசும்பொன்னாற் செய்யப்பட்ட கங்கணத்தைக் கையிற்கட்டி அதன்பின்னர் செய்யவேண் டிய ஏனைச்சடங்குகளையும் வேதவிதி வழாமற்செய்து வேத வொலி மீங்காதொலிக்கும் பெருமையிற்சிறந்த அந்த நாவ லூரில் அன்று இரவெல்லாம் ஆடல்பாடலோடு அநேகவித மான மங்கலவாத்தியங்கள் நெருங்கிப் பேரொலி செய்து கொண்டிருக்க மங்கலங் கொண்டாடினர்.

## திருமணக்கோலச் சிறப்பு.

இச்சுந்தரமூர்த்திகள் திருமணக்கோலத்தைக் கண்டு களிக்க வேண்டுமென்னும் அவாவுடன் முற்பட்டு வருவனத போல் சூரியன் உதயமாய்வந்தனன். முற்பட்டு வந்தவனு

கிய சூரியமூர்த்தியை, வணங்கிய கேள்வியிற்சிறந்த சுந்தரப் பெருமான் உபசரிப்பதுபோல் தாம் செய்யவேண்டிய நித்தியகடன்களை அம்மூர்த்திக்கு முன்னுகச் செய்து, அதன் பின்னர் சோதிட நூலாரால் நியமித்திருக்கும் முகூர்த்த காலம் சமீபித்து விட்டபடியால் அக்காலம் வருவதற்குமுன் கலியாணமாகிய மங்கலவிதிக்குரிய திருமணக்கோலங்கொள்ளும்பொருட்டு மணிமாலையும் மலர்மாலையும் திருமார்பிற் பிரகாசிக்க மங்கலஸ்நானம் செய்வான் திருமஞ்சனச்சாலையுள்ளே போயினர்.

(செ-ள-கரு-முதல் கஅ) போகவும், சுற்றத்தார்கள் வாசனைத் திரவியங்களாலும் நறுமணங்கமழு மலர்களாலும வாசனை யூட்டபபட்ட நீர்நிறைந்துள்ள மஞ்சனபாத்திரத்துக்கருகில அமைக்கப்பட்டுள்ள இரத்தின சிங்காதனத்தில் அம்மூர்த்தியை வீற்றிருக்கச்செய்து அன்பால் ஈசனுக்கினியராகிய அவரது திருமேனியை திருமஞ்சன நீரால் ஆட்டி ஒற்றுடையால் நீரையொற்றி மஞ்சட்கதம்பப்பொடியைத்தூவி திருமேனி மணம்வீசிப் பிரகாசிக்கச் செய்தனர்.

அலங்கரிப்பதில் வல்லானுகிய ஒருவன் அகிற்புகைமூதவியவற்றுல் வாசனையூட்டிய அழகிய பீதாம்பரத்தை யணிந்து மேகத்துள் நுழையும் சந்திரன்போல் தனது முன்னங்கையில் சூழ்ந்திருக்கும் வெள்ளை வஸ்திரத்தைக்கொண்டு குடுமையிலுள்ள ஈரத்தைப் போக்கிச் செங்கையிலுள்ள

களங்களாற் சிக்கறுத்து கரியஒளிவீசும் அக்கரிய கேசத்தை முடித்தனன்.

"பால்போலும் வெண்ணிறமுடைய பூணூல் மார்பிலும், பவித்திரம் அணுமிகை விரலிலும் பிரகாசிக்கப்பெற்ற சுந்தர மூர்த்திகள் பரிசுத்தமாகிய நல்ல பசியகர்ப்பூரப் பொடியும், நல்ல மலர்களினின்றும் உண்டாகிய பனிநீரும் கூடிய சந்தனக்குழம்பால் பூசப்பட்டும், மிருகமதமும் கஸ்தூரியும் தோய்ந்த கலவைச்சாந்தால் சாத்தப்பட்டும, பிணையல் கண்ணி கோதை தாமம் என்று சொல்லப்பட்ட பலவகை மலர் மாலைகைகளால் அணியப்பட்டும்; இருளையோட்டும் ஒளி மிக்க பல இரத்தினமாலைகளால் அலங்கரிக்கப்பட்டும காண்டற்கரிய நல்ல மணக்கோலத்தைக் கொண்டனர்.

## உலாவரும் சிறப்பு.

(செ-ள்-கசு-முதல் உச.) இவ்வாறு அணிசெய்வோரால் அலங்கரிக்கப்பெற்ற சுந்தரப்பெருமானுர் தமது பெருமானுகிய இறைவனடியைத் தமதுள்ளத்துட்கொண்டு மந்திர நீற்றை நெற்றியிற்பூசியிட்டு மங்கலசொரூபராய் சகலபோக போக சொரூபமாய்ப் பிரகாசிக்கும் குதிரைமேல ஆரோகணித்து அரசச்செல்வமாகிய யானை குதிரை காலாள் கொடி கொடை வாத்தியவிசேட முதலிய எண்ணிறந்த சின்னங்களெல்லாம்முன்னே அணியணியாய்ப்பூரணகும்பங்களும் ருக் யஜுர் சாமங்களாகிய வேதங்கள் முன்னும்பின்னும் அணி

பணியாய்ப் பெருங்கட லொலிபோல் ஒலித்துக்கொண்டு போகவும் நகரமுற்றும் மணவிழாவாய்க் காணச்சென்றனர்.

செல்லும் அம்மூர்த்திகளைச் சூழ்ந்து நரசிங்கமுனைய ரைச் சேர்ந்த ராஜவர்க்கத்தினரும் ஏனைய அரசர்களும் தங் களுக்குரிய செல்வச்சிறப்போடு யானைகுதிரைமுதலிய வாக னங்களின்மேலும் சிவிகைகளின்மேலும் ஊர்ந்துவரவும், மங் கையரிற் சிறந்தாரெல்லாம் சில்லாண்டொழிந்து பல்லாண்டு பல்லாண்டாய்வாழப் பல்லாண்டுகளைப் பாடிக்கொண்டு வர வும், அஷ்டலக்ஷ்மிகளும் பல பெண்ணுருக்கொண்டு வரு வதுபோல் சூதாடுகருவியையும் தாமரையரும்பையும் பழி த்து குங்குமக்குழம்பு பூசப்பெற்றுப்பொன்மலைபோலும்பிர காசிக்கின்ற தனங்களையுடைய சுமங்கலிகள் மங்கலம்பொலி யச்சூழ்ந்துவரவும், இம்மங்கலப் பொலிவைக்கண்டு கலியா ணமங்கலம் எப்பொழுதென்று வினவுவோர்க்கு இப்பொழு தென்றுகூறி மகிழ்பவரெல்லாம் அம்மகிழ்ச்சியோடுவரவும், கலியாணம் என்னும் ஓர்விழா மிக்கசிறப்புடன் அம்மூர்த் திக்குமுன் புறப்பட்டது.

அவ்விழாவில் சங்கநாதம்செய்வோர் வாயின்கண் ஒலி த்துக்கொண்டிருக்கும் பல சங்கங்கள் சங்கினங்களாகவும், அவரவர்காதுகளில் பூண்டிருக்கும் குண்டலங்கள் மகரமீன் களாகவும், அவரவர் அணிந்திருக்கும் இரத்தினாபரணங்கள் இரத்தினக் குவையல்களாகவும், சோலைபோல் அடர்ந்து வரும் மயிற்பிஞ்சங்கள் அலைகளாகவும் காணப் படலால்

பெருங்கடலே ஓர்கலியாணகோலங்கொண்டு வருவதுபோலும் காணப்பட்டது.

சுந்தரப்பெருமானுரது அவ்வோர் மணம் ஓர் மணமா யல்லாமல் ஒப்பற்ற பெருமணமாய் அரசரது வாழ்வாகிய செல்வமணமாய் அந்தணரது செல்வமாகிய வைதிகமண மாய், சிவனுரது செல்வமாகிய சைவமணமாய் மணந்து சடங்கவியாரது ஊராகிய புத்தூரின்கண் அன்றுபுகுந்து என்றும் குடியிருக்கப்பெற்றமையான் அப்புத்தூர் மணம் வந்த புத்தூரெனப் பெயர்பெற்றது.

சடங்கவியார் தமதுபெண்மணத்தில் வைதிகமணமும் சைவமணமும் அவ்விருமணத்தையுங் காக்கவல்ல அரசம ணமும் தமதுபுத்தூரிற்புகுந்து இவ்வூரை என்றும் மணம் வந்தபுத்தூர் என்று எவ்வூரினும் சொல்மணக்கும்படிச் செ ய்த இச்சுந்தரப்பெருமானது திருமணத்துக்கு நாம என் னமங்கலம் செய்வதென்று பேரானந்தங்கொண்டு தம்மைச் சேர்ந்த பிராமணகோஷ்டிகளும் சுமங்கலிகளாகிய ஸ்திரீஜ னங்களும் தம்மைச்சூழ்ந்து பூரணகும்பங்களையும் தூபதீ பங்களையும் முளைநெருங்கிய பாலிகைகளையும் கைகளில்ஏந் திக்கொண்டும், மலர்கள் அறுகு சுகந்தப்பொடி நெற்பொரி முதலிய பலபொருள்களாகிய இவைகளை வீசிக்கொண்டும், தலைவைச்சந்தனத்திற் றெளிந்தநீரை வீதியிற் றெளித்துக் கொண்டும் வரச்சென்றனர்.

## மணக்கோலங்கண்டமேங்கையர்வியத்தல்.

(செ-ள் - உ௫ - உசு - உஎ) எதிர்கொண்டு செல்லும் இவர்களுக்கெல்லாம் எதிர்காட்சி கொடுத்துவரும் நிறைந்த காட்சி யுடையாராகிய சுந்தரமூர்த்திகளைக் கண்ட சில மங்கையர் "கண்கள் எண்ணிலாதவேண்டும் காளையைக் காண என்பார்" ஏனெனில் - இக்காளையார் மானிடசரீரியரக் காணப்படின் நமக்குள்ள இரண்டுகண்களும் போதும். இச்சுந்தரர் கடம்பவனசுந்தரர் கர்ப்பூரசுந்தரர் கலியாணசுந்தரர் மீனாக்ஷிசுந்தரர் அட்டாலசுந்தரர் ஆலாலசுந்தரர்என்று சொல்லப்படும் மஹாதேவனாகிய சுந்தரேசப் பெருமானாரது திருமேனியாகக் காணப்படுதலின் போதா என்பார்.

சிலர் "பெண்களில் உயரநோற்றாள் சடங்கவிபேதை யென்பார்" ஏனெனில்—கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புல இன்பமாகிய செல்வத்தை ஒருங்கே யனுபவிக்க உரியவர்-கண்கள் எண்ணிலாதவேண்டுமென்று வேண்டப்படும் சுந்தரமெல்லாந்திரண்டு ஒருருக்கொண்டு வந்த சுந்தரராவார். இவரால் அனுபவிக்கப்படுவாள் சடங்கவியாருடைய பெண்ணேயாகலான் அப்பேதையே மேன்மையான நல்லதவத்தைச்செய்தவள் என்பர்.

சிலர் "மண்களிகூரவந்த மணங்கண்டு வாழ்ந்தோமென்பார்" ஏனெனில்—சடங்கவிபேதை மீது ஏனிப்படிபொருமைப்படுகின்றீர்கள். பொருமையை யொழியுங்கள், இட்

டார்க்கு இட்டபலன் என்பதுபோல நாம் காண்டற்குரிய தவத்தைச்செய்தோம் கண்டோம். கூடுந்தவத்தைச் செய்தோமில்லை கூடப்பெற்றேமில்லை. இதற்கு இனிநாம் என் செய்யக்கடவோம். ஆயினும் மண்களிகூரவந்ததாகிய இவரது மணக்கோலத்தை நாம் இன்று காணப்பெற்றேமாகையால் அக்கோலத்தை மறப்போமா மறக்கோம். ஆகவே அச் சடங்கவி பேதையைப்போலவே தவமுடையராய் இவரோ டென்றும் வாழ்ந்திருக்கப் பெற்றவர்களேயாயினேம் என்பர்.

சிலர்சிலர் "பண்களில் நிறைந்தகீதம் பாடுவார் ஆடுவார்கள்"—இக்காளையாரது கண்காட்சியைக் கண்களாரக்கண்டு களிப்புடையராய் ஆடுவதையும் பாடுவதையும் விட்டு இப் பேதைமார்கள் தங்கள்பேதமையால் எண்ணுதஎண்ணமெல்லாம் எண்ணியெண்ணி ஏழைநெஞ்சத்தைப் புண்ணாக்கிக் கொள்ளுகின்றனரே இஃதென்னமடமை என்று அவர்களைப்பழித்து அவரது பேரழகைப் பாடிப்பாடி ஆனந்தநடனஞ்செய்து இன்புறுவார்கள்.

சிலர் - நமரங்காள் காளையைக்காணககண்கள் எண்ணிலாத வேண்டுமென்றும், சடங்கவிபேதை பெண்களில் உயரதோற்றாள் என்றும், நாமும் மண்களிகூரவந்த மணங்கண்டு வாழ்ந்தோம் என்றும் கூறுகின்றீர்களே, நீவிர் இக்காளையினுடைய நோக்கி (கண்களி)ன் செயலை நன்றாய் அறிகின்றிலீர்போலும், அறிந்திருப்பிராயின் இவ்வாறு கூறத்துணியீர், அன்றியும் நீவிர் அவரைப் பார்த்தீர்களேயன்றி அவர்

நுங்களைப்பார்த்தனரா, பார்த்திருப்பாராயின் நீவிர் மேலே சொல்லிய வார்த்தைகளைச் சொல்லமாட்டீர்கள். நாங்கள் தான் அப்பேரழகரைப் பார்த்தோம். அவ்வாண்டகையா ரும் எங்களைப்பார்த்தனர். பார்த்தபடியினால்தான் அவரது பார்வையாகிய வெள்ளத்துள் ஆழ்ந்துகரைகாணுது அலை கின்றோம் என்பர்.

இவர்கள்கூறியதைக் கேட்டசிலர் - அம்மம்ம இவரது பார்வை அருளில் பார்வையன்றோ. இந்த நோக்கமுடையா ரை நீவிர் எண்ணிலாதகண்கள் பெற்றுக்காணுமாறென்! ஐம் புலச்சுவையை நுகருமாறென்! மணங்கண்டு வாழுமாறென்! நீவிரேகூறும், சடங்கவிபேதையும் இவரது அருளில் காட் சியை எவ்வாறுகாண்பளோ! இவரது இன்பநுகர்ச்சியை எவ் வாறு அனுபவிக்கப்பெறுவாளோ! இவரோடுகூடி எவ்வாறு வாழ்வாளோ! இவையெல்லாம் எங்கட்கு ஐயமே. இவரது பார்வை அருட்பார்வையாயின் நமதுகண்களும் பயன்படும். ஏனையபுலன்களும் அதனதன் இன்பங்களை நுகரப்பெறும். இவரோடுகூடி வாழும்வாழ்க்கையும் கூடும் என்பர்.

இன்பத்தைக்கொடாமல்-அவரது நோக்கம் காமத்தை விளைவித்துத் துன்பத்தைச் செய்தலால் அருளில் நோக்க மென்றார்.

சிலர்—இவரதுநோக்கம் நம்மைநோக்குவதற்கு நமக்கு வாய்த்துள்ள சுந்தரம் போதுமோ, இவரது சுந்தரத்துக்கு

சந்தப்பரவையாகிய சுந்தரக்கடலாள் வருவளோ. இவரது சுந்தரத்தைத்தன்னுள் அடக்கிஆள எந்தச்சங்கிலியாள் வருவளோ நாமறியோம். அத்தன்மையார் வரப்பெற்றால் இவர் அருள்நோக்குடையவராகவே யிருப்பர்போலும் என்பர்.

சிலர்—ஓமங்கையர்களே! நீங்களெல்லாம் இவருடைய அழகுமுதலிய வற்றைக் கண்டும் மயங்கியும் புகழ்ந்தும் பாடியும் ஆடியும் வருகின்றீர்கள். நாங்களோ அவர் ஊர்ந்து வரும் குதிரையைப் பார்த்துவருகின்றோம். ஏனெனில் இது போகப்புரவியாகலின் விரைந்து செல்லாது நாம் அவர்பால் கொண்டிருக்கும் அவாவுக்குத்தக்கபடி ஆங்காங்கும் நின்றுநின்று பையப்பையச் செல்லாநின்றது. இப்பரியின் நடைகடையால் அப்பரியின்மேல் வரும் நம்பியாரது நோக்கும் சிறிது அருள்நோக்குடையதுபோலும காணப்படுகின்றது என்பர்.

சிலர் "பூண்தயங்கு இவனே காணும் புண்ணியமூர்த்தி என்பர்" ஏனெனில் ஆபரணவிசேடத்தால் காட்சிப்படும் இக்காட்சி புண்ணியவிசேடக்காட்சியாய்க காணப்படுகின்றபடியால் இம்மூர்த்தி நம்மனோரால் கண்டுவியக்கத்தகும் புண்ணியமூர்த்தியே யாவர் என்பர்.

## கலியாணச்சடங்கினைச் செய்யத்தொடங்கல்.

(௬௪-௬௭) இவ்வாறு திருவோலக்கக் காட்சியிற் கூடிய மங்கையர் தத்தம் ஆசைக்கும் அன்புக்கும் ஏற்றவாறு கூறி

க்கொண்டுவர மணக்கோலத்தோடும்வரும் எங்கள் வள்ளலாராகிய நம்பியாரூரர் நறுமணங்கமழும் திருமணப்பந்தருக்கு முன்னே சென்று வெள்ளிய்சங்கங்கள் மேகக்கூட்டங்கள் முழக்குவதுபோல் ஒலிமேலிட்டு முழங்க யோகப்புரவியினின்றும் இழிந்து பின்னர் அங்குநடத்தப்போகும் ஒப்பற்ற கலியாணவைபவச் சடங்கை மிக்கஆவலோடு விரும்பி அப் பந்தரின்கண்ணே வீற்றிருக்க, அதுகண்டு கலியாணச்சடங்கினை யியற்றுவோராகிய சைவாசாரியர்கள் அருகிருந்து முகூர்த்தம நடத்தத் தொடங்கினர். அச்சமயத்தில் அப் பந்தரின்கண்ணே நடந்ததாகிய அற்புத அருட்செயலைச் சொல்லத் தொடங்குகின்றேன். சொல்லததொடங்கிய அவ் வொருசெயலாலேயே யான் கடத்தற்கரிய பிறவிக்கடலைக் கடந்து இறைவனருளாகிய அடியென்னும் கரையைப்பற்றிப் பிழைத்தவனாயினேன்.

தடுத்தாட்கொண்ட புராணம் என்பது - ஆதிசைவராகிய சடையனார் பிரமசரியநிலையைக் கடந்து கிருகஸ்த நிலைக்குரியராய்வந்த தமது மகனாராகிய நம்பியாரூரருக்குத் திருமணச்சடங்கினைச் செய்யத்தொடங்கிய அக்காலத்தில் அனாதிசைவராகிய சடைமுடியார் அச்சடங்கினைத்தடுத்து அந்த நம்பியாரூரரைத் தமதுமகனாராகக் கொண்ட அநாதி முறைமையானபழமை எனப்படும்.

எனவே, இறைவனுக்கு - சுந்தரமூர்த்திகள் மகனார் என்பது கயிலாயத்தின்கண் முன்னமேயுள்ள பழமையான முறைமையாம். சடையனார் மகனைப்பெற்றது இறைவனருளால் என்க இதனை "தம்பிரான் அருளினாலே தவத்தினால் மிக்கார்பெற்று" என்றதனாலறிக. முன்னமே * மகனாயுள்ளார்க்கு ஓலைகாட்டி யாள்வான் ஏனெனனில் அம்முறைமை உலகினர் அறியாராகலான அவர் அறியும்பொருட்டுக் காட்டிய பிரமாணஓலையாம் எனவே - கடத்தற்கரியஆஞ்ஞாரூபமாயுள்ள வேதவுரையாம்.

இனி இறைவன்சுந்தரமூர்த்திகளுக்கு உன்பால்மாறாப் பெருங்கருணை வெள்ளம் உடையேம யாம என்பதுதோன்ற கங்கையினையும், தமது உண்மையாகிய நிலைமையெல்லாம்மதிக்கலைபோல் உன்அறிவாகியமதியில் தோன்றச்செய்யும் திருவுள்ளம் உடையேமென்பதுதோன்ற மதியினையும், மந்தரகிரியிற பூட்டிய பாமபினினறும் வெளிபபட்ட விடத்தைஅதன் கொடுமையைப்போக்கி யாம் உண்ணும் உணவாகக்கொடுத்து எம்மைவாழ்வித்ததுபோல உயிர்களைமயக்கிக் கொல்லும் அரவகல்அல்குலையுடைய மாதர் சிற்றின்பத்தினு

* தந்தையினது உடல் பொருள் ஆவியை ஆளுதற்குரியவன் தன்னுடலினின்றுந் தோன்றிய மகனே யாதல்போல் இறைவன் தனது திருமேனியிற் றோன்றினவர் சுந்தரமூர்த்திகள் ஆகலான் அவரைத் தனது திருமேனிமுதலியனவற்றை ஆளும்பொருட்டு ஆட்கொண்டன ரென்க.

ள்ள விடத்தை எம்அருளாற் போக்கி எமதுதோழனாக இவ்வுலகில் நீ வாழக்கருதினேம் என்பதுதோன்றப் பாம்பினையும், கயிலையில் பிரணவசொரூபமாகிய கொன்றைப்பூமாலையைச்சூட்டி மகிழ்வித்ததுபோல் இங்கு அப்பிரணவார்த்தசொரூபமாகிய பாமாலையைச்சூட்டி எம்மை மகிழ்விக்கவேண்டுமென்னும் ஆசையுடையேம் என்பதுதோன்றக் கொன்றையினையும் முடிமேல உடையனாய் திருவெண்ணெய் நல்லூரில் காட்சிகொடுத்த கோலம் என்பதுதோன்ற கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் முடிமேல்வைத்த அங்கணன் என்றார்.

அல்லதூஉம், சுந்தரமூர்த்திகள் யாதுசெய்ய வேண்டினும் அதுசெய்யும கருணைவெள்ளத்தையும், தமது உண்மைநிலைமையெல்லாம் அவருள்ளத்தில மதிக்கொழுகலைபோல் தோன்றும்வண்ணம் ஞானப்பிரகாசத்தையும், அம்மூர்த்திகள் செய்யும் செயலெல்லாம் தமதுசெயலாகவேகொண்டு களித்தற்கு அவர்க்குத் தோழமைத்தன்மையும், கொன்றைப்பூமாலையைச் சூட்டி அவ்வடையாளத்தால் தாமேஇறைவனென்று பிரமனாதியரை அறியச்செய்ததுபோல் எல்லாவுயிர்களும் தமது இறைமைத்தன்மையைப் பாமாலையாலுணரத் தேவாரப் பாமாலையைச்சூட்டும் பணியையும் அப்பெருமானார்க்கு ஆக்கவந்த கருணைவள்ளல் என்பதுதோன்ற அவ்வாறுகூறினார் என்றலுமாம்.

இனி அச்சுந்தரமூர்த்திகள் தோன்றுதற்கு இடமாயிருந்த நாடு திருமுனைப்பாடிநாடு எனவே-திருவருளை நாடிப் பாடும் பாட்டுடைய நம்பியாரூரர் அவதாரஞ்செய்வதற்கு எல்லாநாடும்பிற்பட இந்நாடு முற்பட்டுமுனைத்து முன்நின்றதனால் என்க. பெரியோரையெல்லாம் பாடவந்த பெரியோர்க்கு இது நாடானசிறப்பால் "பெருந்திருநாடு" என்று சொல்லவுமாயிற்று. அதுவேயுமன்றி - எல்லா வளப்பங்களையும் இயல்பாகவே பெற்றவனாகிய இந்திரன் அவ்வளப்பங்களெல்லாம் சூரனால் இழந்துவறியனாய் ஏங்கியகாலத்து அவ்வளப்பங்களெல்லாம் மீண்டும்பெற விநாயகமூர்த்தியினால் தவிழ்க்கப்பட்ட காவிரிநதியை என்றும் தன்னிடத்துடைத்தாய் அதனாற்பெருகிய பலவளப்பங்களை யுடைத்தானதால் பெருகியவளத்தான் மிக்க பெருந்திருநாடு மாயிற்றென்க.

இந்தநாட்டில் சுந்தரமூர்த்திகள் அவதாரஞ்செய்தவூர் திருநாவலூர். இவ்வூர் "மருவியதவத்தான்மிக்க வளம்பதி" என்றதனால்-அழியுந் தன்மையினையுடைய பசுத்தவத்தால் விளைந்தவளப்பம் போலாது, செய்வோராகிய ஆன்மாக்களை விடாது அவர்களோடு என்றும் மருவியிருக்கும் பதித்தவத்தால் என்றும் நிலைபெற்ற பெரிய சிவச்செல்வத்தை யுடைத்து எனவும், "வாய்மைகுன்றாத் திருமறையவர்கள் நீடும்" தன்மையினையும் உடைத்து - எனவேஇறைவனால் உயிர்க்குறுதியெனக் கண்டுகொள்ளவேண்டிய விதிகளையும், உயிர்க்கு இறுதிஎனக் கண்டுகழிக்கவேண்டிய நிஷேதங்களையும்

கொள்ளவுங் கழிக்கவும் வேதங்களில் எந்த எந்த விதமாகக் கூறப்பட்டிருக்கின்றனவோ அந்தந்த விதமாகக் கொள்ள வேண்டிய விதிகளைக்கொண்டும், தள்ளவேண்டிய நிஷேதங் களைத் தள்ளியும் உணரவேண்டிய உண்மைநிலையில் குறை வுபடாத வேதவித்துக்களால நிறம்பப்பெற்றும் உள்ளது எனவுங்கொள்க.

இங்ஙனமான வேதவொழுக்கம் குன்றாத நீடுந்தன் மையை யுடைத்தாய் அந்நாவலூர் இருத்தலால் அவ்வேத சாரமாகிய சைவவொழுக்கமும அவ்வூரின்கண் பிரகாசித்து மலையினுச்சியில் எரியும் தீபம்போல் எங்கும் யாவருங்காண வோங்கும் என்னுங் கருணைகொண்டு அவ்வூரில அவதாரஞ் செய்தனரென்க.

இதனால் வேதவொழுக்கத்தால் அடையப்படும் பய னைக்கொடுப்பது சைவவொழுக்கமே யாகலான் அப்பயனைக் கொடுக்க அவ்வூரில் சுந்தரமூர்த்திகள் அவதாரஞ்செய்தனர் என்றதாம்

அருமறைச் சைவமோங்க அருளினால் அவதரிக்கவந் தவ ராகலான் அச்சுந்தரமூர்த்திகள் அச்சைவம் ஓங்குதற்கு ரிய சைவ வேதியர்குலத்துள்ளேயே தோன்றினர். அஃதா வது-"மாதொருபாகனுர்க்கு வழிவழி அடிமைசெய்யும்,வே தியர்குலத்துள்ளே" எனவே - ஆதிசைவர்குலத்துள் என்க. இவர்கள் பூவுலகில் தோன்றியநாள்தொட்டு சைவத் (சைவ

வொழுக்கத்)தை மறவாதவர் என்றதாம். எப்படி மறவாதவர் என்றால் இவர்கள் சந்ததியில் வரும் ஒவ்வொருவரும் ஆன்மார்த்த பரார்த்தங்களைச் சைவமாகிய சிவாகமத்திற் கூறப்படும் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கினும் முறையானே ஒவ்வொன்றையும் தமக்குரியபோகப் பிரயோஜனங்களைக் கருதிச்செய்யாது நாம் இறைவனுக்கு அடிமையாதலால் அடிமைகளாகிய நாம் அவ்வடிமைத்திறத்தை எண்ணி அச்சரியையாதி நான்கினையும் நாம் செய்யத்தகும் பணியெனக்கருதி புறமேயுள்ள உடம்பாலும், ஐம்பொறிகளாலும் உடம்பினுள்ளேயுள்ள மனத்தகத்தாலும் அறிவகத்தாலும் நீங்காது செய்யத்தகும் கடமைப்பாடுடையோமா யிருக்கின்றோம் என்று "இடரினும் தளரினும் எனதுறுநோய் தொடரினும் உனகழல் தொழுது எழுவேன்" என்றபடி எப்பொழுதும் விடாமற்செய்வதில் மறவாதவர் என்க.

இந்நெறியை மேற்கொண்டுள்ளவரே சைவகுலத்தவராகிய ஆதிசைவர் என்க. மாதொருபாகனுர்க்கு வழிவழியடிமைசெய்யும் என்றதனால் சிவபெருமானுர்க்கன்றி வேறொருதெய்வங்களுக்கு மறந்தும் வழிபாடுசெய்யாதவர் என்று அவர்களது குலவொழுக்கத்தை விதந்து கூறியதென்க. இவ்வொழுக்கம் இவர்களுக்கு வந்தவாறு எவ்வாறெனில் சிவமுகோத்பவ ராதலால் சிவபெருமானுக்குத் தாழ்ந்த தெய்வங்களைத் தொழுதல் இவர்களுக்குக் கூடா

தாயிற்று. இவ்வுண்மைதோன்றவே மூர்த்திகளது தந்தையாரை மேம்படசடையனார் என்றார் பிறராற்பழிக்கப்படாத சிறப்பினையுடையது இல்லறமேயாகலான் ஏதமில் எனவும், அந்தநல்லறமாகிய இல்லறத்தைநடத்த இன்றியமையாத் துணையாவாள் தன்மனையாட்டியன்றி வேறொருவர் அன்றாகலான் வாழ்க்கை யிசைமனைஎனவும், அவ்வாழ்க்கைத்துணையாகிய அவளுக்கு இன்றியமையாத்துணை நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நிறையேயாகலான் கற்பின் எனவும், இந்நலமெல்லாம் ஒருங்கே யிசைந்துள்ள ஞானசீலையாகலான் சடையனாரது மனையாட்டியாராகிய ஞானியாரை ஏதமில் கற்பின் வாழ்க்கை மனை யிசைஞானி என்றார்.

அல்லதூஉம் சடையனார் என்றதனால் சிவனார்போல இவர் எனவும், இசைஞானியார் என்றதனால் அச்சிவனாருக் கிசைந்த சத்தியாகிய ஞானசத்தியைப்போல் இவ்வம்மையார் எனவும் கொள்ளல் ஓர்சிறப்புடைத்தென்க.

"மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன் - நன்கலன் நன்மக்கட் பேறு" என்று தந்தையைவிலக்கித் தாயிக்கே மக்கட்பேற்றை நன்கலமாகக் கூறியிருத்தலான் சடையனார் பால் என்னாது இசைஞானியார்பால் திருவவதாரஞ் செய்தார் எனவும், ஞானநூல் உணர்ச்சியுடைய உயர்ந்தோர்கள் தாம்சிவமாய் நிற்றலே அடையத்தகும்பேறெனக்கருதி அடிமையாதலைமறந்து அச்சிவப்பேற்றை யிழக்கும் அத்தீமையினின்றும் நீங்கத் திருத்தொண்டத்தொகையை வெளியாக்

கவந்த அருளாளராதலால் த்தகன்று உலகம உய்யத் திருவவ தாரஞ்செய்தார் எனவுங்கூறினர்.

யாவர்க்கும் கிடைத்தற்கரிய திருத்தொண்டத்தொகை என்னும் பெருஞ்செல்வத்தை மிகஎளிமையாய் வழங்கிய அருள்வள்ளலாகிய சுந்தரமூர்த்திகளைச் சடையனார் மகனு ராகத் தவத்தின் மிகுதியினாலே பெற்றார் எனபதன்று அரு ளினால் என்பது தோன்ற தவத்தினால் மிக்கார் தம்பிரானருளி னாலேபெற்று எனவும், அருளுடையராகிய சடையனார்பால் அவ்வருள் உணாத்தியவழியேநம்பியாரூரர் என்றே நாமமும் சாற்றினார் எனவும் கூறினர் அஃதாவது - முன் நிஷ்கள சொரூபமாகவே இருந்த இறைவன் பின் அருளினால் கொ ண்ட சகளத்திருமேனியினின்றுந் தோன்றிய சுந்தரமூர்த்தி ஆகலான் அதுதோன்ற ‡ நம்பிஎனவும், இம்மூர்த்தி என் றும் சுந்தரகோலத்துடன் என்றுந்தமகருத்தோழராயிருக்க அருள்செய்வோர் ஆரூரராகிய தியாகேசராகலான் அது தோன்ற நம்பி என்றதேயன்றி நமபியாரூரரெனவும் திரு நாமம் சாற்றியதென்க.

திருமால கதைமுதலிய பஞ்சாயுதங்களால் அரக்க ரைப் போர்நிலையில் நின்று உருட்டுவதுபோல் இவர் சித்தா ந்தநிலையில்நின்று புறச்சமய அரக்கரை உருட்டவல்ல சைவ ஞானக்குரிசில் என்பதுதோன்ற ஐம்படைமின்னத் தேருவிற் றேற்றுட்டு நாளில் என்றார்.

---

‡ ஆண்களிற் சிறந்தவரையும் பின்வந்தவரையும் நம்பியென்பர்.

ஞானக்குரிசிலாய்ப்பிரகாசிக்கும் இம்மூர்த்திகளின்பேர
ழகை நரசிங்கமுனையரென்னும் நாடுவாழ் அரசர்கண்டு பரவரும்
காதல்கூர-அரசிளங் குமரற்கேற்ப அன்பினால் மகன்மைகொண்
டார் என்றார். எனவே - அத்திருமுனைப்பாடி நாடாளும்
நரசிங்கமுனையரையர் ஓர்நாள் தெருவில் தேருருட்டும் இளங்
குரிசிலாகிய சுந்தரமூர்த்திகளது சுந்தரத்தைக்கண்டு இது
சிவசுந்தரமோ, சிவனருட்சுந்தரமோ, சிவயோக சுந்தரமோ,
சிவபோக சுந்தரமோ, சிவஞான சுந்தரமோ, சிவானந்த சுந்
தரமோ, சிவானந்தம்பெற்ற சிவனடியார் சுந்தரமோ, இவ்
வடியர் சுந்தரப்பெருமானை "பெறுமவற்றுள் யாம் அறிவது
அறிவறிந்த மக்கட்பேறு, பிறபேறு நாம் அறிவதாகிய
பேறல்ல" என்றபடி பெறுதற்கரிய மக்கட்பேறாகக் கொள்
ளாதொழிவோமாயின் நாம பெற்றிருக்கும் ஏனைப்பேறுகள்
நமக்கு என்னபயன்செய்யும் அவையெல்லாம் நாம் அறியும்
பேறுமோ என்று * "சீலம் இலரேயெனினும் திருநீறு சாதர்

* "ஈசனுக்கு அன்பிலலார் அடியவர்க்கு அன்பு இல்லார்"
என்னும் இச்சுருதி - ஈசனிடதது அன்பின்மையைக் காட்டுவது
அடியவரிடத்து அன்பின்மையே என்று உணர்த்துகின்ற படியால்
யாவராயினும் திருவேடமுடையாரைக் காணப்பெறின் அவர்பால்
ஈசன் திறமேபேணி நம்மிடத்துண்டாகவேண்டிய அன்பினை அவர்
வழியாய் உண்டாக்கிக்கொண்டு ஈசனிடத்து என்றும் நீங்காத அன்
பினை யுடையராக் தன்மையை யுடையராதல் வேண்டும் என்னும்
உண்மையை இவ்வரசர் உணர்ந்தோரிவனாகலின் அஃதாவது -
"சிவோகம்பாவிக்கும் அத்தா நிசிவனுமாவர்" என்றபடியும், "குறிய

ந்தாரை - ஞாலம் இகழ்ந்து அருநரகம் நண்ணுயல் எண்ணு வார் - பாலணைந்தார் தமக்களித்த படியிரட்டிப் பொன் தனால் இதயத்தே அதனைக்கூடுமே கொள்கையினால் அவனாவர்" என்றபடியும், குறியொடுதாம் அழியும் நெறியதனால் சிவமேயாய் நின்றிடுவர்" என்றபடியும், உள்ளத்தின் கண்ணே சிவானுபவம் அமையப்பெறும் சீலமிலராய்த் தூர்த்தகுணமும் தூர்த்தவேடமும் உடையராய் - புறம்பே அறிவரியானாகிய சிவனை அறிவதற்கு அவன் உருவமாய்ப் பிரகாசிக்கும் திருவேடமாகிய திருநீறொன்றைச் சார்ந்த தம்மாட்டுவரின் அவரைக்கண்டு சிவனுருவமாகிய திருநீறு இத்தூர்த்தனையும் தன்வச மாக்கிக்கொண்டதே என்று அத்திருநீற்றின் மகிமையையே கருதி அங்ஙனங்கருதிய அக்கருத்தால் திருநீற்றுக்குள்ளாயிருக்கும் அவனைச் சிவமாகவே பாவித்துப் பின் அவனுக்கும் அத்திருநீற்றில் அன்புண்டாய் அதனை என்றும் விடாதுகொள்ளப் பொன்னைச் சிவனடியார்களுக்குக் கொடுப்பது போல் அல்லாமல் இரண்டுபங்காகக் கொடுத்தது தொழுது திருநீற்றொளியால் உமதுமேனி ஒளிவிடும் பிரகாசத்தை யான் என்னென்று சொல்லுவேன் அதனைக்காணும் எனக்கு அதனருமை தெரியுமேயன்றி அணிந்திருக்கும்நீர் அதனை எப்படி யறியவல்லீர். உம்மைக்கவர்ந்து உமதுமேனியில் பிரகாசிக்கும் திருநீறு என்னுள்ளத்தைக் கவர்வதுபோல் மெய்யடியார்பால் பிரகாசிக்குந் திருநீறு என்னுள்ளத்தைக் கவர்ந்ததில்லை. அதனையான் எதனாற்கண்டேன் என்னில், இன்று நீரும் இவ்வடியரும் ஒக்கவிருக்கக் கண்டதனால் அதனைக்கூறவலாயினேன். அஃதாவது - இவ்வடியார்கள் நீறணிந்து சிவனைத்தம்முள்ளத்தே கவர்வதற்கு. நீர்நீறணிந்தது-என்னுள்ளத்தைக் கவர்வதற்கே என்று உணரப்பெற்றேன் என்று சொல்லிச் செல்லவிடும் தன்மையுடையவர்.

கொடுத்து, மேலவரைத் தொழுது இனியமொழி விளம்பி விடைகொடுத்த" பேரன்பாளராகலான் இவ்வாறென்னினார். எண்ணியபடியே, "பயந்தவர் தம்மாற்சென்று" (சடையனார்பாற்போய்) "விரவியநண்பினாலே" அஃதாவது - சடையனார் சிவனடிமைத்திறத்தில் ஆசிரியராதலால் அவர்பால்தமக்குள்ள அன்பினாலும், தாம் சிவனடியார் அடிமைத்திறத்தில் மீளா ஆளாதலால் தம்பால் அவருக்குள்ள அன்பினாலும் புறநட்பேயன்றி அகநட்பும் உடையவராதலால் "வேண்டினார் பெற்று" எனவே - சடையனாரைநோக்கி நீர்சுந்தரமூர்த்திகளை மகனாராகப்பெற்று வாழ்ந்து களிப்பதுபோல் அடியேனும் அம்மூர்த்திகளைப் பெற்று பேரானந்த முறுவான் நம்மை வேண்டுகின்றேனென்றுவேண்ட, அவர் - இவர்பால் அருளும் அன்பும் உடையவராதலால் மறுப்பதற்கெண்ணாது அவர் வேண்டியபடியே அருள்செய்ய அம்மூர்த்திகளைப் பெற்றுத் தமது வம்சோத்தாரணமாகவந்த தமது பிள்ளைக்குத் தமது குலமரபுக்கும் தமது செல்வத்துக்கும ஏற்றபடி மகச்சடங்கினைச்செய்து மகனைக்கொண்டாடியதுபோல் அம்மூர்த்திகளுக்கும் சைவஒழுக்கம் குன்றுவண்ணம் வைதிக கருமங்களைச்செய்து மகனுந்தன்மையைக்கொண்டு யாவரும்கேட்ப இம்மைச்செல்வம் எனக்குமேன்மேலுண்டாக சிவனார் அருளால் அன்று ஓர் இராஜசிகாமணியையும், மறுமைச்செல்வம் அம்மையில் என்பதில்லாமல் அப்பேரின்பமும் எனக்கு இம்மையே மேன்மேல் உண்டாக சடையனார் அருளால்

இன்று ஓர்சைவராஜமணியையும் மகனைப்பெற்றேன் பெற்றேனென்று கொண்டாடினர் என்க.

சுந்தரமூர்த்திகள் தம்மை அரசன் பிள்ளையாகக்கொண்டு தம்பால் அப்பிள்ளை யாசையையே கொண்டாடி நிற்கும் பெருமைவாய்ந்த அவராசை தம்மிடத்தில் குன்றாது என்றும் வளரத் தாமும் அவரைத் தந்தையாகவே கொண்டு அவ்வாசையையே மேன்மேலும காட்டிவந்தனர் என்பது தோன்ற பெருமைசால் அரசற் காதற்பிள்ளையாய் எனவும, தாம் தந்தையாகக் கொண்டாடும் ஆசையை அரசருக்குக்காட்டிடப்பதுபோல் சடையனுர் தம்மை மகனகக்கொண்டாடும் அம்மகவாசை அவருக்குங் குன்றாது என்றும் வளர அவரது ஆதிசைவ குலாசார வொழுக்கத்தை விடாது அவர் கண்டுமகிழுமாறு செய்து அரசன்பாலே வளர்ந்துவந்தனர் என்பதுதோன்ற பின்னும் தங்கள் வருமுறை மரபின்வைகி வளர்ந்து எனவும், அங்ஙனம் வளர்ந்துவந்த அச்சுந்தரமூர்த்திகளது கோலம் நரசிங்கமுனையரையருக்கும், சடையனுருக்கும் மகிழ்ச்சிஎன்னும் நன்மங்கலத்தைச் செய்துவரும் தன்மைதோன்ற மங்கலம் செய்கோலம் எனவும், சுமங்கலி என்னும் ஓர்தன்மை அம்மங்கலத் தன்மையை யுடைதற் அந்த ஸ்திரீயையும், அந்தஸ்திரீ அம்மங்கலத்தையும் விடாது ஒன்றியிருக்கக் காணப்படுமாறுபோல, சைவம்என்னும் ஓர்மங்கலத்தன்மை - அந்தமங்கலத்தன்மை யடைதற் வைதிகத்தையும், அவ்வைதிகம் அச்சைவ மங்கலத்

தையும் விடாதுநிற்குங் கொள்கையைக்காட்டுவது மூன்றும் என்னும் உபவீதம் என்பதுதோன்ற அருமறைமுந்நூல்சாத்தி எனவும், சிவப் பிரதிபிம்பமூர்த்தி யாகையால் உபநயனச் சடங்கு முடிந்தபின்னர் குருமுகமாய் ஓதியுணரவேண்டிய வேதசிவாகமங்களை அங்ஙனம் ஓதியுணராது ஓதியுணர்ந்தவர்கள் ஓர்காலவிசேடத்தில் ஆராய்ச்சி செய்வதுபோல உபவீதச்சடங்குக்கியல அவ்வேதசிவாகமங்களையுங் கண்ணுற்றனர் என்பதுதோன்ற அளவில் தொல்கலைகள் ஆய்ந்து எனவும், பெருமைசால் அரசர் காதற்பிள்ளையான சிறப்பும், பின்னும் தங்கள் வருமுறைமரபின் வைகிய சிறப்பும், மங்கலஞ்செய்கோலத்து அருமறை முந்நூல் சாத்தியசிறப்பும், அளவில் தொல்கலைகள் ஆய்ந்த சிறப்பும் ஆகிய ஒவ்வொரு சிறப்பும் ஒன்றுக்கொன்று வியக்கத்தகும் அதிசயமுடையனவாய் மேலோங்கிக் காட்டியதென்பது தோன்ற திருமலி சிறப்பினோங்கி எனவும், இவ்வகைச் சிறப்பினால் ஓங்கியிருக்கும் இம்மூர்த்தியை இனி இறைவனால் தடுத்தாண்டருளும் சிறப்பும் வருவதற்கான ஓர்நல்லபருவமும் உடனே வந்தடுத்தது என்பதுதோன்ற சீர்மணப்பருவம் சேர்ந்தார் எனவும் கூறினர்.

சுந்தரமூர்த்திகளுக்குச் சேர்ந்த மணப்பருவம் வேதசிவாகமங்களில் முடிந்தபயனாய் விளங்கும் அருள்நெறியை நடத்தற்கு இறைவன் தடுத்தாட்கொண்டருளும் அருட்செயலுக்குரிய அரியபருவம் வந்து அடுத்ததென்றுணர்தல்

இருவருக்குங் கூடாதாகலான், சடையனார் பொதுவொழுக்கமாக வேதநெறியிற்கூறப்படும் இல்லறநெறியை நடத்தற்குரிய கலியாணப்பருவம் வந்தடுத்ததென் றுணர்ந்து அக மகிழ்ந்து சைவ அந்தணர் குலத்துள் தங்கள் அரும்பெறு மதலைக்கு ஏற்புடைய வந்தோர்சிறப்பில் புத்தூர்ச் சடங்கவி மறையோன் தன்பால், சென்றிருவரிய கன்னி (கையைத் தங்கள் மகனாருக்குக் கொடுக்கப் பேசுந் திறமாகிய கலியாணத்திறங்களெல்லாம் தமக்குரிய பெரியோரிடமுதுச்) செப்பி * விட்டார் என்றார்.

* விட்டார் என்றஇலேசானே - சடையனார் தமக்குச் சுந்தர மூர்த்திகள் புத்திரராய்வந்தது கர்ப்பவாசமாய் அம்முறைப்படியே வந்திருப்பராயின் தாமே அவர்க்குரிய பிதாவாய் மேலேசொல்லிய வாறு அம்மூர்த்திக்கேற்ற கன்னிகையைப் பேசி கலியாணஞ் செய்யக் கட்டமைப்பட்டு முயல்வது ஆசியமே. சுந்தரமூர்த்திகள் - கர்ப்பவாசமற்று அருளால் வந்தனர் என்பதைச் சடையனார் மறந்துவிட்டார் என்பதும், அஃதேபோல் அருளால் தமக்குமகனாக வந்த அவருக்கு அருளாளனாகிய கன்னிகையைதரித்த சடைப்பெருமானே அவரது தன்மைக்கேற்றவாறு கன்னிகையை நமக்கு உணர்த்தவேண்டியவ ரன்றி நாம் இவரது தன்மையை என்னென்றுணர்ந்து எந்தக்கன்னிகையை உரியாளென்று நிச்சயித்துக் கலியாணஞ்செய்பவல்லோம் என்று எண்ணுவதையும் மறந்துவிட்டார் என்பதும். அஃதேபோல் சடங்கவியாரையும் அவர்வாழும் புத்தூரையும் நினைத்து கனகாதரனாகிய சடையனாரையும் அவர்வாழும் நாவலூரையும்சென்றும் பழையனூரையும் மறந்துவிட்டார் என்பதும் செவ்வனேவிடத்தின்றமைகாண்க.

"அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்—என் உடையரேனும் இலர்" என்ற அறிவாளர் மொழியை அறிந்த பெரியோரைக்குறித்தே சடையனார் பெண்பேச விடுத்தாராகவின் அப்பெரியோரும் அவர் குறிப்பின்படியேசடங்கவியார்பாற்சென்று "குலத்தளவே யாகும்குணம்" என்றபடி செல்வமுதலியவற்றை முன்னர்விசாரிக்கும் ஓர்பொருளாக மதியாது இல்லறத்தை நடத்தற்குரிய அறிவாகிய குணத்துக்கு முதலாயிருக்கும் குலகோத்திரங்களை முன்னர் விசாரித்தனர் என்று அப்பெரியோரது அறிவின் விசாலம் இத்துணைத்தாம் என்பதுதோன்ற அறிவின்மிக்கார் குலமுதல் கோத்திரமுறையுந் தேர்ந்தார் எனவும், கலமிகும் அப்பெரியோர் அறிவுகுன்றுதற் கிடனில்லாத குலகோத்திரங்களை அறிந்தபின்னரே தாம்வந்த கலியாணச் செய்தியைச் சடங்கவியாருக்குச் சொல்லத்துணிந்து அவருள்ளம் மகிழ் கூறும்வண்ணம் நம்பியாரூரது திருமேனியின் சுந்தரமும் அச்சுந்தரத்துக்கேற்பக் கல்வி யறிவொழுக்கங்களின் சிறப்பும், அதற்கினமாய்வாய்த்துள்ள அரசச்செல்வத்தின் சிறப்புங்கூற அவையனைத்துங்கேட்ட அக்கவியார்மகிழ்ந்து நாம் மகளைப்பெறாது மகனைப்பெற்றதனால் என்ன குறையுடையோமாயினும் எத்தாலும் குறையொன்றும் இலமாயினும் இதுவன்றி நாம் பெறத்தகும்பேறு வேறென்னையுள 'என்று மனத்தில் அங்கீகரித்தனர் என்று அவருள்ளத்திசைவு இத்

தன்மைத்தாம் என்பதுதோன்ற 0 நலமிகுமுதியோர் சொல்ல சடங்கவி நன்மையேற்று எனவும், உள்ளத்திசைவு கொண்ட பின்னர் சடையனார் வேண்டியபடியே திருவந்த செல்வி யைக்கொடுக்கும் உண்மையாகிய நிச்சயார்த்த மொழியை "அகன் அமர்ந்து ஈதலின் நன்றே முகன் அமர்ந்து - இன் சொ[illegible]கப் பெறின்" என்றபடி மலர்ந்தமுகத்தராய் அமர்ந்த அகத்தராய் இனியமொழியுடன் கூறிப் பின்னர் கலியாணஞ்செய்தற்குறிய செயல்களைப்பற்றிப் பேசவேண்டிய வார்த்தைகளெல்லாம் பேசி அவ்வார்த்தைகளில் யாவும் ஒத்திசைந்த தன்மையினால் அக்கலியாணச் செய்கையில் உண்டாகவேண்டிய ஆசையெல்லாம் ஒருங்கே உண்டாக "அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்" என்றபடி அடக்கும் வகைபறியாது வந்த அவ்வாசையைப்பெரியோர் அறியுமாறு சடையனார் என்மகளைக் கொள்ள எவ்வளவு அன்புடையவராக விருக்கின்றனரோ அவ்வளவு அன்புடையவனாக யானும் அவர் மகனாரைக் கொள்ளக் காதலுடையவனாக விருக்கின்றேன் என்று அவரன்பின்மிகுதி இவ்வியல்பிற்றும் என்பதுதோன்ற மலர்தருமுகத்தனாகி மணம்புரிசெயலின் வாய்மை பலவுடன்பேசி ஒத்தபண்பினால் அன்புநேர்ந்தார் எனவும் [illegible].

---

[illegible] தனிக தணிந்தபின் - என்னும் என்பது [illegible] என்னைத்தில் ஓர்வகையான [illegible] என்னும் கலத்திற்பிறர்தவர்.

சடங்கவியார்க்குத்தாம்சொல்லியமணத்திறத்தில் அவருக்குண்டாகிய மனநலம் உணர்ந்து அது வுணர்ந்தவாறே காதலத்தோடு அவர்சொல்லிய சொன்னலத்தையும் கேட்டு முதியோர் "உவப்பத்தலைக்கூடி உள்ளம்பிரிதல்" என்றபடி அவர்பால் விடைபெற்றுப் பிரிந்து சென்றவர் நம்மால்யாது கூறவருவரோ என்று தம்வரவை நோக்கிநிற்கும் சடையனார்பாற்சென்று எங்கள் ஐயரே! ஐயம் ஒழிமின். எப்படிப் புத்திரபாக்கியம் பெற்றீரோ அப்படியே புத்திரிபாக்கியமும் பெற்றவராயினீர் இனி மணவோலையைக் கொற்றவனு (நரசிங்கமுனையரைய)ரது செல்வத்துக்கேற்ப யாவருக்கும் எழுதுவீராக என்று அவர் தாம்கொண்ட சந்தேகத்தினின்றும் நீங்கி உள்ளங் களிக்குமாறு முன்னே கூறிப் பின்னர் சடங்கவியாருக்கும் தங்கட்கும் நடந்த சொற்றிறமெல்லாம் விடாதுகூறி அதன்பின்னர் அச்சடங்கவியார்கூறிய வாய்மையென்னும் நிச்சயமொழியையும் கூறி, சடையனார் பந்துமித்திரர்களும் அரசரும் அவரது பந்துமித்திரரும் மனக்களிப்புடையராய் மணத்துக்குரிய மங்கலச்செயலில் செல்லும்படி ஏவினர். அவர் ஏவியபடியே வைதிகசைவ ஒழுக்கப்படி செய்யப்படும் சடங்குகளெல்லாம் செய்து சுந்தரமூர்த்திகளை மணக்கோலங் கொள்ளச்செய்து போகப்புரவியின்மேல் ஏற்றி மங்கலகோஷத்துடன் புத்தூருக்குச்சென்று அப்புத்தூரை என்றும் மணம்வந்த புத்தூராக்கிச் சடங்கவியார் முதலாயினோர் பூரணகும்ப முதலியன ஏந்தி மகலகீத நாத வேதங்களைப்பாடி மலர்களைத்தூவிப் பல்லா

கேள்கூறி எதிரேவர் அவர்களுடன் மணப்பந்தரைச் சேர்ந்தவெண்சங்கங்கள் மழைபோல்கோஷிக்கக்குதிரையினின்றும் இறங்கி அப்பக்தரின்கண்ணே மணவாளராய் வீற்றிருந்தனர் என்று தொண்டர்சீர்பரவுவராகிய சேக்கிழார் பெருமானுர் திருவாய்மலர்ந்தருளினுர். அங்ஙனந் திருவாய் மலர்ந்தருளியதேயன்றி வீற்றிருந்தாரென்ற அம்முடிவிற்றானே "ஒருமணத்திறத்தில் அங்குநிகழ்ந்தது மொழிவேன் உய்ந்தேன் என்று தாம் உய்ந்ததை விரைந்து கூறினுர். இங்ஙனம்விரைந்துகூறிய இவ்வருள்மொழியை அன்பர்காள் நாமும் உய்ந்தனர்வோமாயின் இப்பொழுதே நாமும் உய்யப்பெற்றவர்களாவேம என்பது திண்ணம்.

அஃது என்னையெனின், "ஆலுமறை சூழ்கயிலையின்கண் அருள்செய்த, சாலுமொழியால் வழிதடுத்து அடிமைகொள்வான், மேலுற எழுந்து மிகு கீழுறஅகழ்ந்து, மாலும் இருவர்க்கும் அரியார் ஒருவர் வந்தார், என்றற்றொடக்கத்தனவேயாம்.

எனவே—மேலுற எழுந்து மிகுகீழுற அகழ்ந்து மாலும் (மயங்கும்) இருவர்க்கும் அறியார் * ஒருவர் - மறை

* உய்வேன்என்று எதிர்காலத்தோன்றக் கூறுது - உய்ந்தேன் என்று மலர்மிசை எகினன் என்றவிடத்து வந்தபொருள் நோக்கியதென்க. சிவனுர் வந்தார் என்னுது ஒருவர்வந்தார் என்றது என்னையெனின் ஒருவரென்றே எம்பிராளுமே எண்ணி லின்றி (தமையின்றமல்) மண்மேல் தேவரென்றே யிறுமாந்து திரி

கும் ஆனும் (கோஷிக்கும்) கயிலையின்கண் அருள்செய்த சாரும் (பெரிய-அஃதாவது - பிரமாணவுரையாகிய) மொழி வழி தடுத்து அடிமைகொள்வான் வந்தார் என்பதாம்.

---

பின் மண்ணுலகவாசிகளை சிவன் ஒருவன்தான் உலகிற்கு முதற் கடவுள் அயன் அரியென்னும் இருவரில் அரனும் ஓர்கடவுள் என்று கூறும் வண்ணஞ்செய்து பாவத்துக்கு ஆளாக்குகின்றனர். அங்ஙனம் அவர்களை அப்பாவத்துக்கு ஆளாகும் காரணம்—அரன்உருவென்பது "உலகினை யிறந்துநின்றது என்பது ஓராத காரணத்தாலும், உலகு அவன் உருவிற்றோன்றி ஒடுங்கிடும் என்றும் ஓராதகாரணத்தாலும், உலகினுக்கு உயிருமாகி உலகுமாய்நின்றது ஓராதகாரணத்தாலும், நல்லரும் உருவினை யுணராதவர்களாய் உலகினில் ஒருவர் எனபர்." ஆகலான் அப்பாவமகலப் புத்தரின்கண்ணே வந்தவர் இருவரோடு ஒருவராகாத ஒருவர் வந்தார் என்று அவர் உண்மையை உணரக்கூறினர். அஃதாவது - மேலுற எழுந்து கீழுற அகழ்ந்து மாலும் இருவர்க்கும் அரியார் வந்தார் என்றதேயாம்.

என்னையெனின், அயன் அரி என்னும் அவ்விருவரோடும் இவரும் ஒருவராகவே யிருந்திருப்பராயின் இவரது உருவம் எத்திறப்பட்டிருப்பினும் அவர்கள் அறிந்திருத்தல் வேண்டும். அறிந்திருப்பராயின் முடியும் அடியும் மேலுங்கீழுமாக எழுந்தும் அகழ்ந்தும் காணப்பெறாது மயங்கவேண்டியதின்று; மயங்கியபடியால் அவ்விருவரும் இவரது உருவத்தை எவ்விதத்தும் என்றும் கண்டறியாதவரென்பது திண்ணமாயிற்று.

இனி அவ்விருவருக்கும் அரியராகிய அவ்வொருவருக்கு இரிடமும் உண்டென்பதுதோன்ற கயிலையென்றார். இடத்தைக்கூறவே கண்ணில் காணும்படி உருவங்கொண்டும் அறியக்கூடாதவரேயாயினும்போல இரிடங்கொண்டிருந்தும் அறியக்கூடாதவரேயாம்

இனிச்சேக்கிழார்பெருமானர் - தாம் சொல்லத்தொடங்கிய இப்புராணத்தில் ஒவ்வொரு புராணத்திறுதியில் இனிச் சொல்லப்போகிற நாயன்மாரது செயலை "எம்பிரான்தமர் திருத்தொண்டு ஏத்தலுறுகின்றேன்" என்றும், "திகழும் அன்புடைய தொண்டர்செய் தவங்கூறலுன்றேன்" என்றும், "செயலியற்பகையார் செய்த திருத்தொண்டு செப்பலுற்றேன்" என்றும், "மன்புகழ் இளசைமாறன் வளத்தினை

னர் என்பதுதோன்ற என்க. அக்நிஸ்தம்பமாது செக்நிறத்தோடும் அகண்டாகாரம் பேரொளியாய் மேலும் கீழும் காண்டற்கரிதாய் பெருருக்கொண்டிருந்தும் இவ்வுருவுடையான் இவனென்று கண்டனர். அஃதேபோல் இவ்வெண்ணிறத்தோடும் பெரிய இடமாய்க் கயிலையென்னும் மலையாக இருந்தும் அறியாதொழிந்தனர்.

பேரிடத்தாலும் பேருருவத்தாலும் காணுதவராயினர் என்பதுமாத்திரமே யன்று அவர்கள் அறியும்வண்ணம் வேதங்கள் அக்கயிலையைச்சூழ்ந்து ஓ பிரஹ்மவிஷ்ணுக்களே! நீங்கள் முன்னே தேடியும் இப்பொழுது தேடிக்கொண்டும் இருக்கின்ற ஒருவனுகிய இறைவன் இவ்விடத்தில்தான் இருக்கின்றான் என்றுணரப் பெருங்கூச்சலிட்டுக் கொண்டிருந்தும் அக்கூச்சலைக் கேட்டாவது அறிந்தனரோ என்றால் அதனாலும் அறிந்தாரில்லை. இதனால் தங்களறிவாலும் அறிந்தாரில்லை, பிரமாணங்களாலும் அறிந்தாரில்லை. இவ்வாறு இவ்விதத்தாலும் காணுதிருத்தற்குக் காரணம் அவ்வொருவனைத் தங்களோடு ஒன்ருக எண்ணியிருக்கும் ஆணவமேயாம்.

இருவராலும் காண்டற்கரிய ஒருவர் இங்கு வந்தகாரணம் இறைவர்மன்பு தோன்ற வழிதடுத்து அடிமைகொள்வான் என்று கூறிய சரஸ்மொழியால் என்றார். அம்மொழியின் விசேடத்தைப் புரத்திற் கூறியிருக்கின்றபடியால் ஆண்டறிக.

வழுத்தலுற்றேன்" என்றும், "சென்னிவைத்து அவர்முன் செய்த திருத்தொண்டு செப்பலுற்றேன்" என்றும், "ஆறணி காமர் தில்லையர் திருத்தொண் டறைகுவாம்" என்றும், இவ்வாறு சருக்கங்கடோறும் கூறிவருகின்றனரே யன்றி, "மொழிவேன் உய்ந்தேன்" என்று ஈண்டுக் கூறியது போல் யாண்டுங் கூறியதில்லை. இவ்வருமை யாதெனின்,—

ஒவ்வொரு புராணத்தை எடுத்துக்கூறுவதனால் உண்டாகும் அன்புக்கும், அவவன்பெல்லாம் திரண்டு அவர்களை யெல்லாம ஆட்கொண்ட இறைவனிடத் துண்டாகும் அன்புக்கும் காரணம் சுந்தரமூர்த்திகளைத் தடுத்தாண்டலே காரணமாகலின் அச்செயலைச் சொல்லவந்த அப்புண்ணியத்தை அப்போதேஎண்ணி அதனைவியந்துஉய்ந்தேன்என்றதுமாம்.

உய்விப்போன் இறைவனும், அவன் உய்விப்பதற்குக் காரணம் அவனிடத் துண்டாகும் அன்பும், அவ்வன்பு விளையுமிடம் அடியார்களுமாம். அவ்வடியார்கள் இவரென்று காண்டல் நம்தரமோ. அடியார்கள் இன்னாரென்று அறிதலன்றி அவர்களிடத்துள்ள அன்பை நாம்பெறக்கூடுமோ அது பெற்ற பின்னரன்றோ இறைவன்பால் நமக்கு அன்புண்டாகும். அதன் பின்னரன்றோ இறைவன் நம்மை உய்விப்பான். நாமும் உய்வோம். உய்யும்முறை இம்முறையாயிருப்பதால் * அன்புக்கு உறைவிடமாயிருக்கும் அடியார்களை

* அன்புக்குஉறைவிடம் அன்பர்களாதலால் "செம்மலர்மேலான்முன்சேரலொட்டா, அம்மலமகழீஇ அன்பரொடுமரீஇ" என்றருளிச்செய்தார்நம்.

இன்னார் இன்னார் என்று தொகுத்துத் திருத்தொண்ட த்தொகை என ஓதி, நாமெல்லாம் மிகஎளிதில் உய் ந்துபோம் வண்ணம் அருளிய பெருமானார் சுந்தரமூர்த்திக ளே யாகலானும், அம்மூர்த்திகளை இறைவன் தடுத்து ஆளா னுயின் திருத்தொண்டத்தொகை வெளிவரா தாகலானும், உய்விக்கும் கடப்பாடுடைய அத் திருத்தொண்டத்தொகை வெளிவருவதற்கே அம்மூர்த்திகளை இறைவன் அடிமையெ ன்று கூறி வழக்கிடவரும் அரிய அருளிச்செயலைச் சொல் லும்சொல்லே ஈண்டு அடுத்திருக்கின்றபடியாலும் இவருள் ளத்தில் நெடுநாளாய் ஊறிக்கிடந்த அன்பு அப்பொழுது முற்பட்டு அச்சொல்லையெடுத்து அதன்இறுதியில் நின்று நாம் உய்ந்தோம் என்று எண்ணச்செய்து அச்சொல்லையும் சொல்லச்செய்தது என்றலுமாம்.

"உய்ந்தேன்" என்றதனால் யான் பிறவிப்பெருங்கடலி னின்றும் தப்பிப் பிழைத்தேன் என்றபடியாம். எனவே:— அடிமை என்னும் சொல்லின் திறமும், அதன் பொருளின் திறமும், அவ்விரண்டினும் இறைவனுக்குள்ள ஊக்கப்பாட் டின் திறமும் ஆகிய அம்முத்திற உண்மையையும் முறையே உடலாலும் பொருளாலும் உயிராலும் இயற்றி யாவருக்கும் காட்டி விளக்கிய பெரியோர்களது உண்மைச்சரித்திரங்களை இனி யான்முறையே சொல்லி முடித்துப் பிறவிப் பெருங்க டலில் நின்றும் பிழைத்து உய்வதற்கான (திருத்தொண்டத்தொ கையை) எனக் களிக்கவந்த வள்ளலாகிய சுந்தரமூர்த்திக

ளது தடுத்தாட்கொண்டசரித்திரம் வந்துவிட்டபடியால் அவ்வருகையை நோக்கிக் களிப்பு மிகுதிகொண்டு உய்ந்தேன் என்றதுமாம்.

தில்லைவாழ்அந்தணர் புராணமுதல இசைஞானியார் புராணம் வரையிலுள்ள புராணங்களெல்லாம் திருத்தொண்டத்தொகையின் பாலதேயன்றி இதனின் வேறன்றாகலான் யாவும் * சுந்தரமூர்த்திகள் புராணமென்றே ஆயிற்று. ஆகவே சுந்தரமூர்த்திகள் புராணஆரம்பமாகிய தடுத்தாட்கொண்டதைச் சொல்ல ஆரம்பித்தபொழுது "உய்ந்தேன்" என்னும் மங்கலச்சொல்லை முன்னர்வைத்து இப்புராணத்துள்

* தில்லைவாழந்தணர் சருக்கம, இலைமலிந்த சருக்கம் என ஒவ்வோர் அடியை முதலாகக்கொண்டு சருக்கமெனவகுத்து முடித்து வெள்ளானைச சருக்கத்தை யிறுதியிற் கூறி திருத்தொண்டத்தொகையுள்ளிட்ட தடுத்தாட்கொண்ட புராணத்தை முடித்தமையானும் ஒவ்வோர்சருக்கமுடிவில் சுந்தரமூர்த்திகளைத் துதிதிருக்கின்ற முறைமையானும் யாவும் சுந்தரமூர்த்திகள் புராணத்துள் அடங்கியதென்பது அறியக்கிடக்கின்றது. இவ்வுண்மை யறியக்கூறியதுமன்றி "மற்றொருமுறையும் அறியக்கூறினரென்க. அஃதாவது ஒவ்வொரு திருப்பாசுரமுடிவில் -"ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே" என்று தாம்தம்மிறைவனுக் காளாயிருக்கும் சிறப்பைக்கூறி இத்தகைசசிறப்புடைய யான் அடியாருக்கடியேன் என்று அவரன்பை வெளிப்படுத்தியதனால் சேக்கிழாரும் சிவனுக்காட்பட்டு அடியாருக்கடியாராகிய அம்மூர்த்திகளுக்கே மீளா ஆளா யுள்ளேன் யான் என்னும் தமது அன்பை வெளிப்படுத்தியதுமா மென்க.

உள்ளிடாகக் கூறும் ஒவ்வொரு சரித்திர முடிவில் இவரது சரித்திரத்தைக்கூறினேன். இனி இவரது சரித்திரங் கூறுகி ன்றேனென்று கூறிமுடித்தனர்.

இதனால் ஞானச் சரியையாதி நான்கும் உய்யவந்தவர்களுடைய சரித்திரங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனி ஒவ்வோர்புராணமாகச் சொல்ல ஆரம்பித்திருப்பாராயின் உய்ந்தேன் உய்ந்தேன் என்று ஆங்காங்கும சொல்லிச் சித்தங்களிகூர்வர். அவையெல்லாம் ஞானச் சரியையாதிகளைத் தம்பால் படைத்துள்ள சைவசமயத்தோடு உலகம் உய்யவந்த சுந்தரமூர்த்திகளுடைய தடுத்தாட்கொண்ட புராணத்துள் அடங்கியிருத்தலின் அபபுராணத்தின் பொருளை விளக்க வந்த அச்செயலைச் சொல்ல ஆரம்பித்தபொழுதே உய்ந்தேன்என்று கூறிய அம்மங்கலச்சொலலை யாவருடைய சரித்திர ஆரம்பித்திலும் சொன்னதே ஆயிற்றென்று கொள்ளுதலே சீர்மையுடைத்தாமென்க.

ஆயின் சுந்தரமூர்த்திகளது புராணஆரம்பம் "கங்கையு மதியும் பாம்புங் கடுக்கையு முடிமேல்வைத்த—அங்கணர் ஓலைகாட்டி யாண்டவர், தமக்கு" என்ற திருப்பாசுரமாகவிருக்க அப்பாசுரத்தில் "உய்ந்தேன்" என்னும் சொல்லை வைத்து ஓதாது ஈண்டுவைத்தது என்னையெனின், "கங்கை" என்னும் திருப்பாசுரந் தொடங்கி "வருமனைக்கோலத்து [illegible] வள்ளலார்" என்னுந் திருப்பாசுரம் ஈறாகக் கூறிய வெல்லாம் "மாதவஞ்செய்த் தென்றிசைவாழ்ந்திடத், தீதி

லாத் திருத்தொண்டத்தொகைதரப் போதுவார்" என்றபடி அத்தொகை தரவரும் செயலகளன்றாகலானும் அது இனி வரும் திருப்பாசரமுதலாகவே யாகலானும் உய்ந்தேன் என்னும் பயனிலையாகிய சொல்லை ஈண்டுக் கூறுவாராயினர்.

"கங்கையும்" என்னும் திருப்பாசுரமுதல் கலியாண கோலம் கொண்டுவந்ததுகாறுங் கூறியிருக்கும் அவை யெல்லாம் சுந்தரமூர்த்திகளது செயலாகாதோவெனின் ஆகா. என்னையெனின், ‡ மூர்த்திகள் மானிடர்கள் பிறப்பது போற் பிறந்து, வளர்வதுபோல் வளர்ந்து கலியாணஞ் செய்துகொள்ளுப்வர்போல் செய்துகொண்டு வாழவந்தவரா

‡ சுந்தரமூர்ததிகள் அவதாரஞ்செய்ததுமுதல் கலியாணகோலங் கொண்டதுவரையிலான செயல்கள் மேலே சொல்லிய அவ்விருவருக்கன்றி உலகினர்க்கு ஓர் உண்மை யுணர்த்தவுமாம். அஃதாவது - பிறப்பதனாலும் ளர்வதனாலும் கல்வி பயின்றதனாலும் சிற்றின்பததுககுரிய பருவத்தை யடைந்ததனாலும் அடையத்தகும் பயன் நாம் இறைவனுக்கு அடிமையாமென்றுணர்தலும், உணர்ந்த வழி நிற்றலும், அதற்கேற்ப அடிமைததிறஞ் செய்தலும், செய்து மீளா ஆளாயிருப்பதுமேயாம். அஙஙனம் இருக்கப்பெறின் அவரை அவ்வழியே இறைவன் வாழ்விப்பன் என்பதும், அடிமை என்பதை மறந்து இவ்வுலகசுகததை அனுபவிக்க முயல்வாராயின் அவர்களை அச்சுகத்தைத் அனுபவிக்க வொட்டாமல் இறைவன்தானே முன்னின்று தடுப்பனென்பதுமாம். இக்குறிப்புணரவே-"மையல்மானிடமாய் மயஙகும்வழி" என்றுமானிடர் மயக்கங்கூறி அதனைத்தடுக்க வேண்டினர் என்க.

பின் அச்செயலெல்லாம் அம்மூர்த்திகளைக் குறித்ததேயா கும். அங்ஙனமாயின் இறைவன்வந்து அம்மணக்கோலத் தைத் தடுக்கமாட்டான். தடுத்ததனால் அதுகாறும் நடந்த செயலெல்லாம அவ்விறைவனால் தடுக்கப்பட்டனவேயாயின.

ஆயின சடையனாரும அரையனாரும் இறைவனால கொள ளப்படாதவ ராவரன்றோ வெனின் அற்றன்று. அவ்விரு வரும் கொள்ளப்பட்டவரேயாவர். ஏனெனில் அவ்விருவர் தவமும் முற்றுப்பெறுதற் பொருட்டே சுந்தரமூர்த்திக ளைச் சடையனார் மகனாராகவும் நரசிஙகமுனையரையர் மகண் மையாகவும கொண்டு களிக்கச் செய்தனன். சுந்தரமூர்த்தி கள் மேற்கூறியவாறு உலகெலாமுய்யத் திருத்தொண்டத் தொகை தருதற்குவந்தவராகலான் அதற்குரிய செயல்கள் எவையோ அவைதாம் இவரது செயல்களாம். இவ்வுண் மைநாடிக் கலியாண கோலமளவும் சடையனாரையும, அரச ரையும் குறித்த செயலகளாகவும், இறைவன் வந்ததுமுதல் நிகழுவரும் செயல்கள் அருட்செயலைக் குறிததெனவும் கொள்க.

## தடுத்தாட்கொள்ள இறைவன் வருதல்.

(உஅ - கூக.) இருவருக்கும் அறியராய் கயிலைவாழ் நாதன் ஒருவராய்த தடுத்தாண்டருளவந்த கோலம் எத் திறத்ததெனின், நெற்றிக்கண் தோன்றாதிருக்க ஓர் வெள்ளை வஸ்திரத்தினால் மறைத்திருப்பதுபோல் நெற்றியில் திருநீறு பிரகாசிக்கவும், வெண்மதிபோன்ற சடைமுடி இடையள

வும் வீழ்ந்து தொங்கவும், உருத்திராக்க குண்டலம் காதுகளில் தாழ்ந்துதொங்கவும், உருத்திராக்ஷமாலை யணிந்திருக்கும மார்பில் உபவீதத்தோடும் வெள்ளாடையாகிய உத்திரீயம் அசைந்தசைந்தாடவும், சூரியனது வெப்பத்தை மறைக்கத்தக்க வெண்குடை கரததில் விளங்கவும, வயிற்றின்கீழ் அரையின்கண் கோவணமாக வுடுத்திருக்கின்ற மிகவும பழமையாகிய உடையானது சரிந்து நழுகி அழகுசெய்யவும்; வெண்மையாகிய ஆடையோடு தர்ப்பை முடிந்துவிட்ட மூங்கிற்றண்டை ஓர்கையிலேகொண்டு கால்கள் ஒன்றோடொன்று தள்ளாடும் நடையைக் கொள்ளவுமாகிய தன்மையோடு கூடிவந்தனர்.

(௩௨ - ௩௩.) இவரது வடிவத்தைக் கண்டவர்கள் - மூத்தவடிவத்தோடுவந்த இவரதுவடிவம் மூத்ததன்று, இவரது வடிவத்தின்கண் நெருங்கி வளர்கின்ற பேரழகானது இளமைப் பருவத்தினின்றும் வளர்ந்து வந்து இப்போது முதுமைப் பருவத்தை யடைந்துவந்த ஓர் முதிர்ந்தவடிவமோ, இது வடிவத்தில் நின்றும் வந்த அழகன்று, அழகு என்பதொன்று ஒருருக்கொண்டு அதுவளர்ந்து முதிர்ந்து வந்த ஓர்முதிர்ந்த வடிவமோ, உண்மையாகிய வைதிகநெறியைக் காட்டுகின்றபடியால் அதுவுமன்று - அவ்வைதிகநெறியை உண்டாக்கிய முதன்மையாகிய வேதவடிவமோ என்று யாவரும் சந்தேகங்கொள்ளுமாறு ஓர் விருத்தப் பிராமண வடிவங்கொண்டு கலியாணபந்தரின்கண் நம்பியாரூராருக்கு முன்னே வந்தனர்.

வந்தவராகிய இறைவர் - அங்கு சூழ்ந்திருக்கும் சபை யாரெல்லாம் தம்மைப் பார்க்கும்படி எதிரேநின்று ஓ சபை யோர்களோ! நீங்கள் யாவரும் இப்பொழுது யான் சொல் லப்போகிற இந்த வொருவார்த்தையைக் கேட்பீர்களாகவெ ன்று ஆயிரம்வேதங்களைக் கூறிய அவ்வாக்கினாற் கூறினன்.

(௩௪) என்றிவ்வாறு கூறிய பெருங்கிழப் பிராஹ்மணரை அச்சபையின்கண் கூடியிருந்த அளவில்லனவாகிய வே தியர்களும், கலியாணச் சடங்குக்குரியராய் அதனைச் செய் துகொண்டிருக்கும் ஆண் சிங்கம்போன்ற நம்பியாரூரரும் பார்த்து பெருமையிற்சிறந்த ஓ அந்தண சிரேஷ்டரே! நீர் இப்போது இபபந்தரின்கண்ணே வந்துநின்றது - கிடைத் தற்கரிய நல்வரவென்றும், நாங்களெல்லாம ஒருங்கேசெய்த நல்லதவமே வந்துநின்றதென்றும், எங்கள்மனத்தில் நின் றது. ஆகலின் நீர் இங்கே சொல்லவேண்டுவதாக எந்த ஆசீர்வசனத்தை நினைத்திரோ அதனை யாவருங்கேட்டுமகிழ யாதொரு சந்தேகமுங்கொள்ளாமல் சொல்லுவீராக என்று சொன்னார்கள்.

(௩௫) பின்னுஞ்சொனகிய பெருங்கிழவன் சபையார்களை நோக்காது நாவலர் பெருமாளுகிய நம்பியாரூரரை நோக்கி என்னிடத்தும் உன்னிடத்தும் முன்னமே நிலைபெற்றுள்ள ஓர் சம்பந்தத்தால் யான் முன்னமே உன்னிடத்தில் ஓர் பெரி யவழக்கினை யுடையவனு யிருக்கின்றேன். அதனை நீ இப்

பொழுது முடிவுசெய்து பின் உனது கலியாணத்தை முடித்துக்கொள்ளும்விஷயத்தில் முயல்வாயாக என்று கூறினார்.

(௩௬) பந்தரின்கண்ணே நின்ற நெற்றிக்கண்ணராகிய வேதியர் இவ்வண்ணங்கூற, ஆண்சிங்கம்போலும் சிறந்தவராயிருக்கின்ற நம்பியாரூரர் வழக்காளியாய் வந்த வேதியரைப்பார்த்து, ஓ வைதிகசிரேஷ்டரே! நீர் இச்சமையத்தில் இம்மஹாசபையின்கண் நின்று எனக்கும் உமக்கும் ஓர் சம்பந்தம் உள்ளதென்றும், அந்தச்சம்பந்தங் காரணமாக நேர்ந்துள்ள ஓர் வழக்குள்ளது என்றுங் கூறினீரே, அது உண்மையில் உள்ளவழக்காக யிருக்குமாயின் அந்தவழக்கினை முடித்தல்லாமல் நான் இந்தக்கலியாணத்தைச் செய்துகொள்ளமாட்டேன் இதுவுண்மை. ஆகலின் நீர் இப்பொழுது உண்டென்றுகூறிய வழக்கினை ஒளிக்காது இப்பொழுதே முடிவு செய்துகொள்ளும் வகையாக எண்ணிச்சொல்லுவீர் என்றார்.

(௩௭) முடியும் அளவினை யில்லாதவனாகிய இறைவன், நம்பியாரூரரை நோக்காது சபையார்களைப்பார்த்து ஓ மறையோர்களே! இந்த ஆரூரன் நாவல்நகரான் ஆகலின் "அதுமுடித்தலது நான் யதுவைசெய்யேன்" என்றும், "முற்ற இதுசொல்லுக" என்றும் கூறினான். இதனுனே இவன்வல்லாளன் என்பதை அறிமின்கள். (இது நிற்க.) இந்தஆரூரன் சொன்னபடியே இப்போது ஆயதாகவே என் வழக்கைக் கூறுகின்றேன். அதனைக் கேண்மின்கள். அவ்

தாவது—இந்தநாவல் நகரூரன் "என்அடியான்" இது ஒன்று தான் நான்சொல்வது. ஐயா! நான் முடித்துச்சொல்லிவிட்டேன். நான் முடித்துச்சொன்னதுபோல் இவன் வழக்கினை முடித்துச்செய்யும வகைப்படியே செய்துமுடிப்பனு! என்று கூறினர். வழக்காடி அடிமைகொள்ளவந்த இவர் வேறொரு அடிமையாட்களை யில்லாதவரோ உடையவரோ எனின்! அந்தோ! இவ்வேதியர் திருமால் பிரமன் இந்திரன் முதலாகச் சொல்லப்பட்ட செலவததின் மிக்கோராகிய யாவரையும் புறத்தடிமையாக வுடைய பெருந்தலைவனூர்.

(௩அ) இத்தகைய பெருந்தகையாளர், "இந்நாவல் நகரூரன் என்னடியான்" என்று சொல்லியமொழியை அக் கலியாணப்பந்தரின்கண் எப்பக்கத்தும் நின்றவர், இருந்தவர், எல்லாருங்கேட்டு இவ் விருத்தவேதியன் இந்த நம்பியாரூரரையும், இச் சபையின்கண்ணுள்ள நட்மனைவரையும் இப்போதிருக்கும் சமயத்தையும் என்னவென்று நினைந்தானோ நாம் அறியகில்லோம் ஆ! ஹா!! இவ் விருததவேதியனை நாம் கண்டகாலத்தில் இவ்வளவு முதிர்ந்தவயதுடைய பிராஹ்ம ணசிரேஷ்டரை நாம் எங்கே காணப்போகிறோம் என்றும், இவர் இங்கு இச்சமயத்தில் வரம்பெற்றது சடையனாரும் நம்பியாரூரரும் நாமும் சென்மாந்தரங்களில் செய்த தவப்பயனென்றும் இதுபோலும் புண்களுளன்பால் எண்ணுதனவெல்லாம் எண்ணி

அதன்மேலும் - இந்த நரைத்தகிழவன் "யாவர்களும் இந்தமொழிகேண்மின்" என்றபோது சர்க்கரைப்பந்தலில் தேன்மாரி பொழிந்தது என்பதுபோல் இவர் ஏதோ நாமெல்லாரும் அறியாததாகிய பெரியதோர் ஆசியை வேதமந்திர மூலமாகச் சொல்லப்போகின்றார் என்று மிக்கஆவலோடு இவர்வாயையே (ஆ! என்று) பார்த்திருந்தோம். நம்முடைய வாயில் மண்ணைப் போட்டதுபோலும், நம்முடைய செவியில் நாராசங் காய்ச்சிவிட்டதுபோலும், இந்நாவல் நகர் ஊரான் என்னடியான் என்றனே, அடியான் என்னும் வழக்கு உண்மையா யிருக்குமாயின் இன்று நடக்கும் இக்கலியாணச் செய்தி யறியாதவரும் உலகில் இருப்பாரா. இவ்வழக்காளியும் அறிந்திருப்பானே இப்போது கூறவந்த இவ்வழக்கை முன்னரே வந்து முடித்துக்கொள்ள லாகாதா பின்னராவது வந்து இப்போது வழக்கிடத் துணிந்ததுபோல் துணிந்து செய்யலாகாதா முன்னும் பின்னும் வராமல் இந் நடுக்காலமாகிய இம்மங்கள காலத்தில் இந்த வல்வழக்காட வந்தானே! இந்த அறிவிலியைப்போலும் இவ்வுலகில் எவரிருப்பார். அறிவின்மையில் முதிர்ந்திருக்கின்ற இக்கிழவன் றான் இப்படி கூறினாலும், இந்த நம்பியாரூரரும் "உற்றதோர் வழக்கு" என்றபோதே தாம்யோசனைசெய்து சொல்லவேண்டியதா யிருக்க அதுவுஞ் செய்யாமல் நம்மில் யாரிடத்திலாவது கலந்தும் யோசியாமல் அவ்வழக்கை முடித்தல்லது நான் வதுவைசெய்யேன் என்றாரே, இந்தப்பிராமணன் தொடுத்தவழக்கு முடியும் வழக்கா! இவர் அடிமையாவதென்

றால் இலேசா! ஆதலான் இவ்வழக்கு முடியப்போகிறதில்லை கலியாணமும் நடக்கப்போகிறதில்லை என்று பலபலவாக அவரவரும் தங்கள் மனம்போனவா றெல்லாம் எண்ணியும் சொல்லியும் அப்பந்தரைவிட்டுப் போயினர். சிலர் இந் நரைத்தகிழவனை இழுத்துக்கொண்டுபோய் வெளியேவிட்டு வருவோமா என்றும் அல்லது எதிரேபோய்நின்று நன்றாக வையலாமா வென்றும் எண்ணிக் கோபங்கொண்டனர். சிலர் அந்தோ! அந்தோ!! இக்கிழவன் மயிரும் வெளுத்தது உடுத்திருக்கும் கோவணஆடையும் வெளுத்தது மார்பிலணி ந்திருக்கும் பூணூலும் வெளுத்தது கையில்கொண்டிருக் கும் குடையும் வெளுத்தது. இப்படி எல்லாம வெளுத்தது போலும் இவனறிவும் வெளுத்ததே என்று சிரித்தனர். இவ் வாறு கல்யாணத்திற்கு வந்திருந்தவரெல்லாரும் சென்று ரும் சிரிப்பாருமாகப் போக, நாவலூரர் இவ்வேதியன் மொ ழிந்தமொழி நன்றுநன்று என்று எதிரே ஓர்நிலையில் நிற்ப தற்றின்றி தள்ளாடிக்கொண்டு நிற்கும் பெருங்கிழவனைப் பா ர்த்துச்சிரித்தனர்.

(௩௧) மேலோர்க்கு மேலோர்க்கு மேலோனாகிய நமது இறைவன் தம்மைப்பார்த்துச் சிரித்த ஆரூரது முகத்தைப் பார்த்துக் கோபங்கொண்டு நடுங்கி நுடங்கி அங்கடுக்கத்தா லும் நடுக்கத்தாலும் சரிந்துவிழுகின்ற உத்தரீயத்தை அடி க்கடி எடுத்தெடுத்து தோளின்மீது தாங்கிக்கொண்டு அவர் சாய்ந்து சாய்ந்து சமீபத்திற்போய்

டா! உன் தந்தைக்குத் தந்தைஇருந்த அக்காலத்தில் எழுதிக்கொடுத்த ஆளோலையாகிய படியோலை என்னிடத்திருக்கின்றது என்று ஓலையெடுத்துக் காட்டி இப்பெருங்கலியாணத்தில் இவ்வளவு பெருங்காரியத்தை இன்று முடித்துக்கொள்ளலாமென்று நான் எண்ணிவர நீ இக்காரியத்தைக் கேட்டுச் சிரித்தது என்னநினைந்து என்றார்.

(௪௦) அடா! என்று ஒருவராலும் ஒருகாலத்துங் கேட்டறியாத பெருந்தகைமை வாய்ந்தவரும் என்றும் குற்றமென்பதறியாத ஆதிசைவகுலத்தில் வந்த வள்ளலாருமாகிய ஆரூரர் சிரிப்பினைவிட்டுச் சிரித்தது என்னோடு என்ற கிழவரைநோக்கி நான்சிரித்தது சிரிப்பா அன்று. அது இனிமேற் காட்டுவேனாக நீர் இப்போது என்ன சொன்னீர் நான் உனக்கு அடிமை என்று சொன்னீர்? ஆசில் அந்தணர்களென்று சொல்லப்பட்ட ஆதிசைவர்களை உலகின்கண் குருக்கள் என்று சொல்லுகின்றார்களன்றோ அதனை நீர்கேட்டதில்லைபோலும். அங்ஙனம் அனாதியாகவே ஆசிரியத்தன்மை வாய்க்கப்பெற்றுள்ள நாங்கள் எங்களுக்கு வேறாயுள்ள அந்தணர்கட்கு அடிமையாவோமா! அம்முறைமை அங்ஙனமிருக்க. ஆதிசைவர்கள் ஆதிசைவராகாத அந்தணர்கட்கு அடிமை ஆவார் என்கிற முறைமை நீர் ஒருவர்தான் இன்று சொல்ல நானும் சபையாரும் கேட்டோம் ஓமறையோனே! நீ பித்தனோ என்றார்.

(௪௧) பித்தன் என்கிற பெரும்பட்டத்தைப் பெற்றுக்கொண்ட பெரும்பித்தர் ஆரூரரைநோக்கி ஏநம்பி! உன்னை

முதிர்ந்தபருவமுடைய நான் ஏட என்றழைத்த மரியாதைக்கு நீ என்னைப் பித்தன் என்றழைத்தாய். இனி உன்னிடத்தில் நான் ஆடப்போகிற வழக்குக்குப் பேயனென்று அழைத்தாலும் அழைப்பாய். இதுபோலும் நீ இன்னும் எத்தனை தீங்கான வார்த்தைகளைச் சொன்னாலும் நான் அவ்வார்த்தைகளால் சிறிதும் நாணங்கொள்ளேன். ஏனெனில், அப்படி என்னை நீசொன்னதற்குக் காரணம் ஏனென்று இன்னென்று நீசிறிதும் இதுவரையிலும் அறிந்து கொள்ளாததே யாம். தெரியாது சொன்னதைப்பற்றி எனக்கென்ன நாணம். நானிப்போது இடுமேவழக்கால் நான் பித்தனாகேன், நீதான் பித்தனாகப்போகின்றாய். அது நிச்சயம். இங்கு அதனைப் பேசுவதனால் என்னபயன் (நிற்க) உன்னை நான் அடிமை என்றதற்கு நீ என்னைப் பித்தா! பேயா! என்று விசித்திரம்பேசற்க. உன்னை நான் அடிமை என்றதற்கேற்பச் செய்யத்தகும்பணியைச் செய்வாயாக என்றுகூறினார்.

(சஉ) என்றும் பணிசெய்வாராகத்தானே யுள்ள ஆரூரர் - இவ்வந்தணன் சொல்லுங் கொடுஞ்சொல்லுக்கு நாம் செய்யவேண்டிய தண்டமோ பெரிது. அதனைச் செய்வதற்கில்லை. ஏனெனில், இப்பொழுது கண்டதாகிய இவனது வடிவத்தால் நமது உள்ளம் ஆசைக்குள்ளாய் உருகாநின்றது. இவனது பித்துக்கொண்ட வார்த்தையோ கோபத்தையும் உடனே உண்டாக்காநின்றது. ஆகவே இவனதுசொல்லால் உண்டாகும் கோபம் இவனது உடம்புமாற்றுகின்றது.

அதனால் இவனைத் தண்டிப்பதற்குக் கூடவில்லை. ஆனால் "உன்தந்தை தன்தந்தை ஆளோலை உண்டு அது ஈதாமென்று ஒன்று காட்டுகின்றபடியால் அதனுண்மை இனிஅறிவேனென்று தனக்குத் தோன்றாத்துணைவராய் வந்துள்ளாரை ஐயரே! ஓலை உளதென்றீரே உளதேல் அதனைக் காட்டுவீராக" என்றனர்.

(சங) ஓலையை யுடையார் - ஓலைகாட்டென்று சொல்லிய நம்பியைப்பார்த்து ஓ ஆரூரா! அடிமையாளா யிருக்குந் தகுதியை யுடையநீ ஓலையைப் பார்க்கு தகுதியும உடையனாயினையோ! ஓலையைப் பார்க்கவேண்டியவர் சபையாரே யன்றி நீயன்று நீ பணிசெய்யுங் கடமையொன்றே யுடையவன் என்று ஆரூரரை அடிமையாக வுடையார் சொல்லும் பொழுது நாவலூரர் தன்னுள் அடங்காக் கோபங்கொண்டவராய் இவனைக் கிழவன் என்றெண்ணி இரக்கங்கொள்ளல் பெரும்பாவம். இவனைப் பிடித்தும தக்கதண்டஞ் செய்யவேண்டு மென்றெண்ணி மேலேவிழுந்து அவரைப் பற்றுவதற்கு விரைந்து சென்றார். இவரது குறிப்புணர்ந்த விருத்தவேதியர் இவர்கையில் அகப்படாவண்ணம் தள்ளாடும் நடையொழிந்து விரைந்துவோடத் தலைப்பட்டனர். திருமாலாலும் பிரமனாலுந் தொடர்தற்கரிய அவரை விடாது பற்றுதற்குச் சுந்தரமூர்த்திகள் தொடர்ந்துபோயினர்.

(சச) தொடர்ந்துவருவதைக் கண்ட அவ்விறைவர் தமது கையிலுள்ள ஆளோலையைப் பறிக்கவருகின்றான் இவன்

என்று ஓட, தமது கூட்டத்தாருடைய பற்றுக்களேயும்விட்டு வேறொருவர்பற்றையும் வேண்டாது அடிமை ஓலையைப் பற்றிக்கொண்டு செல்லும் அவரைமாத்திரம் பற்றுதற்கு இவரோட,இவ்வகையாய் இவர்முன் செல்லவேண்டிய அவர்முன்னேதானே செல்ல, அவர்பின் செல்லவேண்டிய இவர் பின்னேதானே செல்ல, அமரருக்கரியனும் அடியவர்க்கெளியனும் உள்ள அளவினையுடைய அந்தணனாகிய இறைவன் ஓட்டமாயோடினர். இவரோட்டத்தைக்கண்ட நம்பியாரூரர் நமதுகலியாணப்பந்தலாகிய காவணத்தில் நடுங்கிய தளர்நடையோடுங்கூடி தள்ளாடிக்கொண்டு நின்ற இவ்விருத்தவேதியன் இப்பொழுது காளைப் பருவத்தினன்போல் நமது கடக்கைக்கும் கைக்கும் அகப்படாமல் ஓடவும், நாம் விருத்தபருவத்தினன்போல் எட்டிபபிடிப்பதற்குங் கூடாமல் பின்னே யோடவும் ஆயிற்றே இதுவும் ஓர் ஆச்சரியந்தான். இதனை யெண்ணியாவது, இவன் ஓடுகின்றபடியால் இவன் கையிலுள்ள வோலை ஆளோலையன்று ஏதோ ஓர் ஓலையை வைத்துக்கொண்டு இது ஆளோலைஎன்று நம்மை மிரட்ட வந்தானென்று எண்ணியாவது நாம் திரும்புவோமாயின் "வழக்கு என்னிடை நீ உடையது உண்டேல், மற்று அது முடித்தலது நான் வதுவைசெய்யேன்"என்று சொல்லிய நமது மெய்யுரை பொய்யுரையாய்ப் போமன்றோ. ஆகலின் அவனது உரை பொய்யோ மெய்யோஎன்பது நாம் தெரிந்து யாவரும் அறியச்செய்தல்லது திரும்புதல் கூடாது. என்று மிக்க

மனமெழுச்சிகொண்டு வேதியரே! நீர் எவ்வளவு வேகங்கொண்டு ஓடியபோதிலும் உம்மை நான் விடேன். இந்தவோட்டத்தை நீர் யாவரிடத்தே கற்றுவந்தீர். "பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிர் ஆகவர்கோன், மாமன்னுசோதி மணிமார்பன், நாமன்னும் வேதம் வேதாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன், நாதம் நாதாந்தம் நடுவேதம், போதத்தால் ஆமளவும்தேட அளவிறந்த அப்பாலை" என்று சொன்னபடி தேடத்தேட அப்புறம்செல்கின்ற அப்பரமனிடத்துக் கற்று வந்தீரோ, இந்தவோட்டத்தை அவரிடத்தே நீர் கற்றுவந்தவரா யிருப்பினும் நான் உம்மைப்பிடிக்காமல் விடுவேனு! என்று முன்னையினும் அதிகவேகங்கொண்டு பூவண்ணம் பூவின்மணம போல சச்சிதானந்த சொரூப முடையவரை நெருங்கிப் பிடித்தனர்.

பிடித்த இந்த நம்பிஆரூரர் ஒருவரன்றி பொன்மலையை வில்லாகவளைத்துத் திருக்கரத்தில வைத்துக்கொண்டு முப்புரங்களை யெரித்தருளிய ஆற்றலுடையவரைப் பின்பற்றிப் பிடித்த வல்லாளர் மற்றொருவருண்டோ இல்லையென்றபடி.

(சுரு) யாவரானும் தொடர்ந்து எட்டற்கரியானைப் பின்றொடர்ந்து பற்றிய நம்பியாரூர் "உன்றந்தை தன்தந்தை எழுதும் ஆளோலை" என்ற ஓலையைக் கிழவர் கையினின்றும் பிடுங்கி அக்கிழவரைநோக்கி, வேதநூபுரம்ஒலிக்கும் திருப்பாதமுடைய எங்கள்தெய்வமாகிய சிவபிரானுக்கு ஆளாயிருக்கும் ஆதிசைவர்களாகிய நாங்கள் எல்லாத்தெய்வங்களுக்

கும் ஆளாயிருக்கும் மறையவர்குலத்தில் பிறந்துழலும் உம க்கு ஆளோலை எழுதக்கொடுத்தது ஆளாவது எந்தநூலிலே கூறியுள்ள முறை! ஆதிசைவகுலமுறை யுணரப்பெறாத முதி யோரே! என்று அதிககோபத்தோடிக்கிழித்தது முறித்தெறி ந்தனர்.

(சகூ) எறியவும், முதுமைப் பருவத்துக்கு முடிவில் லாத மூத்தவடிவு கொண்ட முதல்வன் என் கையிலுள்ள ஆளோலையைப் பிடித்திழுத்துக்கிழித்தது எறிந்தானே! எறிந தானே! என்று ஓவென்றலறி யலறி இதைக்கேட்பார் ஒரு வருமில்லையோ என்று முறையிட்டனர். முறையிட்டதே யன்றி நம்பியாருரைப பிடித்துக்கொண்டு என்கையிலுள்ள வோலையை நீ எவ்வாறு பறறிக் கிழித்தெறியலாம என்று அவரைக் கைவிடாது பற்றியிழுக்க, நம்பியாரூர் என்கை யைப் பற்றியிழுப்பதறகு நீர் யார்! என்று தன் கையை அவர் கையினின்றும இழுக்க இவ்வாறு ஒருவரோடொரு வர் மன்றூடிக்கொண் டிருந்தனர்.

அரிய வேதங்கள் இதுகாறும உன்னுண்மை நானறியா திருபபது முறையோ என்று பலமுறை முறையிட்டும் இது காலபரியந்தம் அறிவதற் கரியனு யிருக்கின்ற இறைவன் நம்பியாரூர் கையைப்பற்றிகொண்டு ஒருமுறை இதுமுறை யோவென்று முறையிட்ட மாத்திரத்தில் அம்முறையை அங்கு நின்றூரெல்லாங்கேட்டு அவரது செய்கையானன்றி அவரிட்ட வோசையினு லுண்டாகிய இரக்கத்தினுல் பரி

பயப்பட்டு ஒருவர்கையை, ஒருவர் பிடித்துக்கொண் டிருப்பதை விலக்கிப் பெரியோரெல்லாங் கூடி ஓ விருத்தரே! சற்று நிதானியும். உம்முடைய சரீரத்தில் இயற்கையாயுள்ள வயோதிகத்தினு லுண்டாகிய நடுக்கமேயன்றி இப்போது வழக்கினுலுண்டாகிய கோபத்தினால அடங்காத நடுக்கம் உண்டாயிருக்கின்றது. சற்று கோபத்தையடக்கும் முனிவரே! நீரோ மிகவும் வயதுமுதிர்ந்தவராக இருக்கின்றீர் அவ்வாறிருந்தும் இவ்வுலகிலில்லாத ஓா நெறியை நீரே எண்ணிக்கொண்டு முறையோ என்று இச்சிறுவரோடு பிணங்குகின்றீர். இது முறையாமோ. நீரே சொலலும். உம்மைப் போலும் முதிர்ந்தாரைக் கண்டதில்லை. இவ்வளவு பெரியோரா யிருக்கின்ற உமக்குச் சிறியபருவத்தை யுடைய இவர் அடிமையா யிருக்கவேண்டுமென்பது மாத்திரம் பெரியமுறையே. நீர் இந் நம்பியாரூரரோடுமாத்திரம் போகாமல வழிவழியாயுள்ள அடிமைகள்தான் நீங்களென்று இவரது மூதாதைகளையுங் கூறவந்தது முறையேயன்று. இதற்காக எத்தனைதரம் நீர் முறையோ முறையோ எனறாலும் அது நாங்கள் ஒத்துக்கொள்ளுமு முறையன்று எங்களுரில இல்லாத முறையைக் கூறவந்தநீர் எங்குள்ளவர் சொல்லும் என்றனர்.

(சஎ) முறையோவென்று பெருங்கூச்சலிட்டு, போன யாவரையும் ஒருங்கேகூட்டிய ஐயர் அவர்களைப்பார்த்து யான் முறையோ என்றதற்கு உத்தரஞ்சொல்ல அறியாத நீவிர் என்னைப்பரிகாசஞ் செய்வதைப்போலும் நீர் எங்கு

வீர் என்றீரே அதன்கருத் தென்னே? என்னை உத்தரதிசை யானென்று எண்ணினீர்போலும். உத்தர திசையானுக்கு அறிவுவிசாலங் கிடையாதென்பதோ! நீங்கள் எப்படி எண்ணினும் கூறினும் சரி. நான் இவ்வூரில் உள்ளவன்றான். அவ் வூரும் தூரத்திலுள்ளதன்று இதோ இங்கு காணப்படும் திருவெண்ணெய் நல்லூரே. இப்போது ஊரும் பேரும் கேட்டாவதென்! அதிற்க. இந்நாவலூரன் ஓடிவந்து என்னை மறித்துத் தடுத்துநின்று என் கையிலுள்ள ஆவணத்தை நான் கொடுக்கவாங்கும தருமநெறியை விட்டு என்னை ஆட்டிப்படைத்துப் பிடிததிழுத்து வலியவாங்கிக் கிழித்தானே இப்படியுஞ் செய்யலாமா! இப்படி அவன் செய்தது மாத்திரம் தருமமா? தருமமென்று உங்களுக்குத் தோன்றுகின்றதா? ஆனல் என்னுடைய சபதமாததிரம் முடிந்துவிட்டது அதில் ஐயமில்லை எப்படியென்று கேட்பீரேல் நான் ஆளோலை என்பதை எப்பொழுது வாங்கிக் கிழித்தானே அப்பொழுதே இவன் தானேஅடிமை என்பதை யாவரும் அறியச் செய்தான் என்றார்.

(சஅ) யாதொருநீங்குமறியாத நம்பியாரூரர் வேதகுண்டலமணிந்த திருச்செவிகளையுடைய இறைவனை நோக்கி இக்கிழப்பிராமணனை நாம் இதுகாறும் அறியாதொழியினும் இவன் நமக்குப் பூர்வீகமாகவே ஏர்ப்பட்ட பழையவழக்காளிபோலும் என்றெண்ணினார். அவ் வெண்ணத்தோடு தம் மையறியாமலே மனத்தின்கண் அவ்விறைவன்பால் தமக்கு

மையுள்ள ஒத்தபணம்லை லாவகையான ஆசையும் அன்பும் மேன்மே லுண்டாயிற்று. உண்டாகவே, அவர்பால் உண்டாயிருந்த கோபந்தணிந்து ஐயரே! நீர் திருவெண்ணெய் நல்லூரின்கண் உள்ளவரா! சந்தோஷம். நீர் அவ்வூரேயாயின் உலகநெறிக்கு மாறுகக் கூறும் உமதுவழக்கினை அவ்விடத்திலேயே பேசி இருவரும் சமாதானத்தையடைவோம. அவ்வூருக்கு நீர் முன்னேபோம் என்றார்.

(சகூ) வேதியர் நம்பியாரூரர் சொல்லியதைக்கேட்டு நீ வெண்ணெய் நல்லூரிலே வந்தபோதினும் மிகவும் நல்லதே. ஏனெனில் - அவ்வூரில் அறிவொழுக்கங்களிற் சிறந்த அந்தணர்கள் இருக்கின்றனர். உன்னுடைய குலத்தில்வந்த முன்னோர்கள் ஆதியிலெழுதிக்கொடுத்த மூலவோலையும் என்னிடத்தில் இருக்கின்றது. உன்வழக்கு நீ கிழித்தவோலையோடு போனதாக எண்ணவேண்டாம. வெண்ணெய்நல்லூரிலே உள்ள அந்த அநதணாகள முன்னே அந்தவோலையைக் காட்டி நீ எனக்கு அடிமைதா னென்பதைச் சாதித்துக் கொள்வேன். நீ இப்போது கிழித்தெறிந்த வோலைபோல் இதனைக் கிழிதெறிந்து என்வழக்கை மாற்றி நீ வெற்றிகொள்ளலாமென்று ஒருசிறிதும் எண்ணவேண்டாம் என்று சொல்லி மிகுந்த ஊக்கத்தோடும் ஊன்றுகோலாகிய தண்டினை ஊன்றிக்கொண்டு முன்னே நடந்தனர்.

(ருo ருக) காந்தத்துக்கு முன்னே எதிர்ப்பட்ட இரும்பானது அக்காந்தத்தையே அணைய நேராகச் செல்வது

போல் தன்னோடு செல்லும் வேதியரை விடாது அவரை நோக்கி அவர்பின்னே ஆரூரர் விரைந்து சென்றனர். வழக்கிலே இருவரும் மனவூக்கங்கொண்டு போவதாகிய வேகத்தை எண்ணிறந்தசுற்றத்தார்கண்டு விடாவழக்காய்த் தொடர்ந்துபோகும் இவர்கள் வழக்கு என்னுமோ! அதனைக்காணவேண்டுமென்று அவர்களைவிட்டுப்போகாது பின்தொடர்ந்து போயினர். விருத்தவேதியர் - திருவெண்ணெய் நல்லூருக்குட்சென்று அந்தணருட்சிறந்த பெரியோர்கள்வாழும் மஹாசபையின்கண் நின்று வேதநாயகராகிய முதியோர் வேதபாரகராகிய பெரியோர்களைப்பார்த்து சபையோர்களே! என்னருகே நிற்கின்றஇவன் திருநாவலூரிலுள்ளவன், இவன்பெயர் நம்பியாரூரன், எனக் கடிமையாயுள்ளவன் இவனொருவன்றான். இது வாய்ச்சொல்லன்று, ஓலையுளது. அந்தஆளோலையை இவனுக்குக் காட்டினேன். இவன் எனக்கடியானென்பதை மறந்து என்னைப் 'பித்தா பேயா' என்றும் நானு 'உனக்கடிமையாவேன்' என்றும் அந்தவோலையைக் கிழித்தெறிந்து நல்லொழுக்க முடையவன்போல் உங்கள் முன்னேவந்து இப்போது நிற்கின்றான். இதுதான் நான் முறையிடும் முறைப்பாடென்று கூறினார்.

(உ) அச்சபையின்கண் கல்விகேள்விகளில் மிக்காராகிய அநதணருட் சில முதியோர் முறையிடும் முறைப்பாட்டைக்கேட்டு ஓ பெரியோரே! மறையவர் அடிமையாதல் இவ்வுலகில் வழங்காதது. ஐயரே! நீர் சொன்னது என்ன

வென்று கேட்டார்கள். வழக்காளியாகிய ஐயர் இந்தமாநிலத்தில் இல்லை என்பதை நீங்கள் சொல்லக் கேட்டேனே யல்லது நான்சொல்லியது வழங்கிவராத தன்று. அங்ஙனம் வழங்கிவந்ததை நான் எழுத்து முன்னிலையாகக் காட்டுவேனாயின் அப்போது அது உங்கட்கு உடன்பாடுதானன்றே அவ்வெழுத்தைக் காட்டுகின்றேன். இந்நாவலூரனும கலியாணப்பந்தரில நீங்கள் சொல்லியதுபோலவே சொன்னான், அப்பொழுது ஒருவோலையைக் காட்டினேன். அதனை இவன் பறித்துக் கிழித்தெறிந்தான் அது போனபோதிலும் இவன் தந்தை தன்தந்தை எழுதிக்கொடுத்த மூலவோலை என்னிடத்தில் இருககின்றது என்று தானிடும் வழக்குக்குச் சாக்ஷியாயுள்ளார் ஒருவருமின்றி தனியாய்நின்று கூறினார்.

(நிரு) அதுகேட்ட அநதணர்கள் உலகில் வழககமில்லா தொழிலினும் மனம் உடனபட்டு ஒருவர் எழுதிக்கொடுத்தால் அதனை அல்லவெனறு மறுப்பது நீதியாகுமா! அங்ஙனமிருகக, இநத நாவலூரருக்கு ஓலைகாட்டினே னென்று இவர் சொல்லுகிறபடி இன்றுகாட்டி யிருப்பாராயின் அதனைக் கோபாவேசத்தோடுங் கிழித்தெறிதல் வெற்றியாகுமா? இவ்வேதியர் தசையெல்லாம் ஒடுங்கப்பெற்ற முதியோராயினும சொல்லவேண்டிய வழக்கில் தளர்வுற்று மறந்து சொன்னாரில்லை. ஒன்றேனும் விடாமலும் மறுப்பதற் கிடமில்லாமலும் பொருந்தக் கூறினார். அசைந்தாடும் சரீரத்தையுடைய இவ்வேதியர்போலன்றி அசைவில்லாத சரீரத்தையும் இவர்

சொல்லும் சொல்லுக்கு அஞ்சாது நிற்கும் சாலையராகிய இந்நாவலூரரது எண்ணம் எவ்வண்ணமோ அதனை யறிய வேண்டுமென்றோ என்று நாவலரே! உம்முடைய எண்ணம் என்னவென்றார்கள்.

(ருச) நாவலாரூரர் அவ்வேதியர்களைப் பார்த்து நீவிர் சுருதி ஸ்மிருதி புராணமுதலிய எல்லா நூல்களையும் அறிந்தவர்கள். நீவிர் அறியாத தருமம ஒன்றுமில்லை. ஆகலின் என்னை ஆதிசைவனென்று நீஙகள் நன்றாயறிவீர்களன்றோ? ஒருவருக்கும் அடிமையாகக்கூடாத என்னை இவ்வந்தணனர் சாமானியமாயுள்ள புறத்தடிமையாளைச் சொலலுவதுபோல் ஓர் மரியாதையுமின்றி இந்நாவலூரன் என்னடியான் என்று சொல்லுவதுமல்லாமல் அதனைச் சாதிக்கின்றாரே இவர் இப்படிச் சாதிப்பாரே யானல் நான் என்செய்யக் கடவேன், எனது குலத்தவர்கள் இப்படியும் எழுதிக் கொடுப்பரா! இதுபனத்தினல் நினைத்தற்கும் எட்டாத மாயையாயிருக்கின்றது. இந்த மாயையை என்னென்று சொல்லுகேன். இந்த வல்வழக்கினுடைய உண்மையை யான் தெளிந்து சொல்லமுடியாது என்று எல்லாவற்றையும் எண்ணித்தெளிந்து சொல்லவல்ல எண்ணத்திலே மிக்கோராகிய நம்பியாரூரர் கூறினர்.

(ருகூ-ருசு) நம்பியாரூரர் வெண்ணெய்நல்லூரார் முன்னின்று செங்கல் நல்லறிவும் நல்லிரக்கமுமுடைய சபையோர்கள் வழக்காடுவதற்கு முற்பட்டு நிற்கின்ற முநிவரைப்பார்த்து

முனிவரே! நாவலூரரை இவ்வூரில்வந்து இன்று உமதடிமை என்கின்றீரே அக்கொடிய சொல்லை எங்கள் சபையின்முன்னர் நீர் நிலை நாட்டவேண்டும்,என்னசொல்லுகின்றீர் என்று கேட்டு மறுபடியும் ஐயரே! உலகின்கண் ஒன்றைவழக்கிட்டு சாதிக்கவேண்டுமானால் ஆட்சி, காட்சி, ஆவணம், என மூன்றுண்டு. ஆட்சியாவது - தொன்று தொட்டு பெரியோரால் ஆண்டுவருவது. காட்சியாவது-இதை நாங்கள் கண்டதுண்டு இது பொய்யல்ல வென்று உண்மையாகக் கண்டவர்கள் சொல்லுவது ஆவணமாவது - எழுத்து மூலமாய் ஓலையில் எழுதிவைப்பது. இம்மூன்று வகையில் ஒன்று நீர் காட்டுவீரா என்றனர். வேதியர் - அந்தணர்காள்! நான் முன்னே இந்த நம்பியாரூரனுக்கு நீங்கள் கூறிய மூன்றனுள் ஒன்றாகிய ஆவணங் காட்டினே னென்றதை மறந்தீர்களோ அல்லது பொய்யென்று எண்ணினீர்களோ அது எப்படியானாலும் ஆகுக. நான் முன்னே இவன் கிழித்தானென்று சொல்லிய வோலை மூலவோலையைப்பார்த்து எழுதிய படியோலை. இப்போதிருப்ப தென்று சொன்னவோலை மூலவோலை அதனை நீங்களெல்லாம் அறிந்துணரவே வைத்திருக்கின்றேன். காண வேண்டுமானால் காட்டவும் வல்லேன் என்று மாயாசத்தியை எண்ணியவாறெல்லாம் ஆளவல்ல வல்லாளன் கூறினன்.

(௩௯) வேதியரே! எங்கள்முன்னர் நீர் ஆவணங்காட்ட வல்லீராயின் இப்பொழுதே காட்டும் என்று சொல்லவும், ஆவணத்தைக் கொள்ளைகொடுத்த வேதியர் இந்த நம்பியை

ரூரன் முன்போல் புற்றியிழுத்துக் கிழித்து என்சொல்லைப் பொய்யாக்க என்பால வலிந்துவருவான். அப்படி இப்பொழுது செய்யக்கூடாதென்று அவனுக்குச் சொல்ல வல்லீராயின் நான் அந்த ஆவணத்தைக் காட்டுவதற்கு ஓரையமுமில்லை யென்று சொன்னார். அந்தணர்கள் ஐயா வேதியரே! நாங்கள் அவ்வாறான இங்கு நிகழும்படிச் செய்யமாட்டோம் என்றார்கள். உடனே ஆரூரரது அல்லலைத்தீர்த்து ஆள நின்றவராகிய இறைவனார் மூலவோலையை எடுத்துக்கொண்டு சபையாருக் கருகே சென்றார்.

(௫அ) கரியவிடத்தைக் கண்டத்தில் மறைத்துவைத்தமைபோல் கையில் ஓலையை மறைத்துக்கொண்டு வருவதைச் சபையோர்கள் கண்டு அங்குள்ள ஓர் கர்ணீகனைபபார்த்து அப்பெரியோர் கொடுக்கும் ஓலையைவாங்கி யாவருங்கேட்கும்படி வாசிப்பாயாக என்றார் அவனும அவ்வோலையை வாங்கி வாசிக்கத்தகும் அருள்பெற்றுடையானாகலான் சபையோர்கள் சொல்லியவுடன் அப்பெரியோரைத் தொழுது மிக்க வணக்கத்துடன் அத்திருவோலையை வாங்கி சுருளை நீக்கி விரித்து அவ்வோலை அவரைப்போல பழமையாயிருத்தலைக்கண்டு சபையாரைப்பார்த்து ஐயன்மீர்! இவ்வோலை இப்பொழுது புதிதாய் எழுதிக்கொண்டுவந்ததாகக் காணப்படவில்லை. மிகவும் பழமையானதுதான் என்றுசொல்லி மிகவுந் தெளிந்த மனத்தையுடைய சபையோர்கள் கேட்கப் பெரியவோலையைக்கொண்டு வாசிக்கத் தொடங்கினான்.

(ருகூ) "அருமறைநாவல் ஆதிசைவன் ஆரூரன் செய்கை,
பெருமறை வெண்ணெய் நல்லூர் பித்தனுக்கு யானும் என்பால்,
வருமுறை மரபுளோரும் வழித்தொண்டு செய்தற்கு ஓலை, இரு
மையால் எழுதிநேர்ந்தேன் இதற்கு இவை என்னெழுத்து."

(சூ0) என்று அவ்வோலையிலுள்ள எழுத்தை வாசித்தனன். சபையோர்கள் அந்த வோலையிலுள்ள வாசகத்தைக் கேட்டபின்னர் அதில் சாக்ஷிகள் உண்டோ என்றனர். காரணீகன் ஐயன்மீர்! சாக்ஷிகளு மிருக்கின்றன, என்று அவர்கள் நாமங்களையுஞ் சொல்லிக்காட்டினன். சபையோர்கள் அப்பெயருடையாரைக் கூப்பிட்டு, ஐயா! இது உங்களுடைய கையெழுத்துத்தானோவென்றுப்பார்த்துச்சொல்லுங்கள் என்றார்கள். அந்தக் கையொப்பக்காரர்கள் தங்கள் கையெழுத்தைப்பார்த்து வேறொன்றுஞ் சொலலுவதற்குக் கூடாமல் இது எங்கள் கையெழுததுத்தான் இதில் ஐயமில்லையென்றார்கள்.

கையொப்பக் காரரெலலாம் ஒப்புக்கொண்ட பின்னர் சபையார்கள் சிறிதுஞ் சந்தேகமிலலாதவர்களாய் நாவலூரரைப்பார்த்து நம்பியாரூரரே! இப்பொழுது வாசித்த வாசகததைக் கேட்டீரா? கையெழுத்தும பார்த்தீரா? இது உம்முடைய பாட்டனுருடைய கையெழுத்தாகவே காணப்படுகின்றதா? வேறொருவருடைய கையெழுத்தாகக் காணப்படுகிறதா? அதை உம்முடைய மனதிற்குச் சந்தேகமிலலாமல் நன்றாயும் தெளிவாயும் பார்த்துச்சொல்லும் என்றார்கள்.

(கக) அப்பொழுது வலிய ஆட்கொள்ளவந்த வள்ள லாகிய விருத்தர் சபையோர்களே! சாக்ஷியோடு கூடிய ஓலையைக் கர்ணிகனைக்கொண்டு வாசிக்கச் சொன்னதும்; அதனை இங்குள்ளோர்களாகிய நீங்களெல்லாம் கேட்டதும் போதாதோ! இன்னமும் இவன் பார்த்துச் சொல்லவேண்டுமா! ஆஹா! இது நன்று நன்று!! ஆயினும் இவனை இவனது பாட்டன் கையெழுத்தாயுள்ள இதனைப் பார்க்கச் சொல்லுகின்றீர்களே! இவன் சிறுவனன்றோ! இவனுக்கு அவ்வளவு அநுபவம் உண்டா! ஆகலான் இவன் கண்டறிய வல்லனல்லன். நீங்களே இவனது பாட்டன் கைச்சாத்தாயுள்ள வேறொதையேனும் கொண்டுவரச்சொல்லி அதையும் யான்கொடுத்த ஓலையையும் ஒத்துப்பார்த்து எது உங்களுக்கு உதிக்கின்றதோ அதனை மறைக்காமல் சொல்லுங்களென்றார்.

(கஉ) சபையோர்கள், சாக்ஷியோடுகூடிய எழுத்தோலையைக் காணவும், இனி என்னுமோ இவ்வதிசயத்தைப் பார்க்கவேண்டுமென்று எண்ணி அங்குமிங்குமா யிருந்த யாவரையும் கூப்பிட்டு ஓ மஹாஜனங்களே! நீங்களெல்லாம் ஓலைவாசித்தபோது கேட்டீர்களல்லவா! அதில் சாக்ஷியும் இருக்கக் கண்டீர்களல்லவா! அந்தச்சாக்ஷிக்காரருள் இறந்தவர்கள்போக இருக்கின்றவர்கள் எங்கள் கையெழுத்துத்தானென்று ஒப்புக்கொண்டதையும் அறிந்தீர்களலலவா! இனி நாம் ஒப்புப்பார்க்கவேண்டிய வகை யொன்றுமில்லை. ஆகலான் இந்த நாவலூரர் நாமெப்படி இவருக்கு ஆளாவது,

இப்படியும் எழுத்திருக்குமா என்று மனமருண்டனரே அம்மருட்சி இப்போது என்னுயிற்று. இன்னமும் நன்று ய்த் தெளியும்வண்ணம் அவர்பாட்டனுர் எழுதியுள்ள கைச் சாத்துகள் மிக்க காப்புடன் பெட்டியில் வைத்திருப்பா ரல் லவா! அப்படிப்பட்டவற்றுள் ஒன்றைக் கொண்டுவரச்சொ ல்லி இதனேடு இன்னம் ஒருதரம் ஒப்புப்பார்த்து பின் எது வுண்மையோ அதைச் சொல்லுவோ மென்று ஆலோசித்த வர்களாய் அதுபோல் கைச்சாத் தொன்றை வரவழைத்து ஒப்புப்பார்த்து ஒத்திருந்ததைக் கண்டு அந்தண சிரேஷ்டர் களே! இனி நம்முடைய செயலென்னே! சிவன் செயல் தான் செயல். இனி நாமாவது நம்பியாரூரராவது யோசித்து ஆவது என்! பயனில்லை என்றூர்கள்.

(சுாரு) இவ்வகையான உண்மைத் தீர்மானம் யாவருள் ளத்தும ஏற்பட்டபின்னர் நாவலூரரை நோக்கி இப்பெரி யோராகிய திருவெண்ணெய் நல்லூர் வேதியர் உமது பாட் டனுர் எழுதிக்கொடுத்ததிருக்கும்ஆளோலையை இச்சபையின் கண் வாசிக்க நீர் கேட்டிருந்தீ ரல்லவா! சாக்ஷிகளும் ஒப்புக் கொண்டார்க ளல்லவா! நீரும் ஒப்புக்கொள்ளும்படியாக வேறு கைச்சாத்துகளும் கண்டீரல்லவா! ஆகையால் உம்மு டைய அந்த ஆளோலையில் என்ன எழுதியிருக்கின்றது அதைக்கவனித்தீரா! நாங்களே அதனை இன்னம் ஒருமுறை சொல்லுகிறோம் நன்றுய்க்கேளும்.

"திருநாவலூரி லிருக்கின்ற வேதாதிகாரனும் ஆதிசைவ னும் ஆரூரனுமாகிய நான் திருவெண்ணெய் நல்லூரில் இரு

க்கின்ற பெரியமுநிவோராகிய பித்தனுக்கு யானும் வழிவழி யாய் வரும் என் சந்ததியாரும் வழித்தொண்டு செய்வதற்கு எனதுள்ளும் புறம்பும் ஒப்ப, ஆகாயவாணியும் பூமிதேவி யும் ஒப்ப, சிவனும் அடியார்களும ஒப்ப, என்மனமும் வா க்கும் ஒப்ப உடன்பட் டெழுதிக்கொடுத்தேன். இப்படிக்கு ஆரூரன் எழுதிக்கொடுத்த ஆளோலை''

இப்பொழுது சொல்லிவந்ததைக் கேட்டீரா! நாவலூரா ரே! இனி யோசிததுப் பேசுவ தொன்றுமிலலே. இநத அந் தணர்பெரியோருக்கு நீர் தோற்றவராயினீா அவருக்கு நீர் ஏவல்செய்வதே கடன் என்று நடுவுநிலைமையினின்றும மா றுபடுதலையறியாத அறிவினையுடைய மேன்மையராகிய சபை யோர்கள் கூறினர் நமபியாரூரர் ஆதிசைவகுலத்திற சிறந் தவராகிய சடையனருக்கு சாக்ஷாத புததிரனும், இந்த நா ட்டையாளும் நரசிங்கமுனையர் என்னும அரசனுக்கு அபி மான புத்திரனுமாக நானிருக்கப்பெற்றும் பித்தனைபபோல் பேசுந்திறமுமில்லாத இவ்வேழையநதணருக்கு நான் ஆளாக என்விதி இப்படி யிருக்குமானல் நானிபபோது அடிமை யாதற்கு இசையேனென்று சொல்லுவதற்கு இசையுமோ என்று நின்றனர்.

(கூச) இப்பால் தோற்றீர் நீர் என்ற சபையார் ஆரூர ரை ஆட்கொள்ளவநத வேதியரைப்பார்த்து வழக்காடுவ தில் வல்லராகிய முநிவரே! நீர் முன்னே காட்டிய ஆளோலை யில் பெருமையின்மிக்க எங்கள்பதியாகிய இந்தவெண்

ணெய் நல்லூரே உம்முடைய வூராக எழுதியிருந்ததே உம க்கு இந்தவூரில்பரம்பரையா யிருக்கின்ற வீடும் இல்வாழ்க் கைக் குரியாளும் இருந்திருக்கவேண்டுமே நாங்கள் இதுகா றும் அதனைக் கண்டறியோம வீடெங்கே வாழ்க்கைக் குரி யாளெங்கே காட்டுமென்றனர்.

(கூரு) உலகவழக்கினைகண் என்றும் வாராத வழக்கினை என்றும் உள்ள வழக்காக சாதனங்காட்டி வழக்கினால் வெ ன்ற புண்ணியமூர்த்தியாகிய முனிவர் அந்தணர்காள்! நீங்கள் ஒருவரேனும் என்னையறியீரோ! நீங்கள் தானு இந்தவெண் ணெய் நல்லூரில் வாழ்கின்றவர். தயிரில் வெண்ணெய் எடுப் பதுபோலும் இந்தநல்லூரில் என்னைச் சுலபமாய்க் கண்டெ டுக்கலாமே, அந்த வுண்மைதோன்றவன்றோ அப்பெயர்பெற் றுளது இதுகண்கூடாக இருத்தலை யறிவதற்கின்றி என்னை வீடெங்கே யென்றுகேட்கின்றீர்களே வீட்டை விசாரித்து ணராமல் நீங்கள் கற்றகலவியில எதனை விசாரித்துணர்ந்தீர் கள். அந்தோ! இவ்வளவு கற்கவந்தும் என்வீட்டை யறி யும்முயற்சி யில்லாதிருந்தீரே என்று சிலேடைப் பொருளா கப் பேசி நீங்கள் அறியீராயின் என்பின்னே வாருங்களெ ன்று வீடுகாட்டுவார் முன்னேசென்றனர். அவர் பின்னே பெரிய அந்தணர் கூட்டமும், நம்பியாரூரரும் சூழ்ந்து செ ன்றனா. முன்னேசென்றஆளுடை அருளுடையார் அருட்டு றையாகிய ஆலயத்துள்ளே சென்றதனைக் கண்டனர். வேதி யரைக் கண்டாரில்லை. இல்லையாகவே அவர் எங்குற்றார்! ஏத

தேகினர். அவர் மனே இதுதானே இதுகோயிலாயிற்றே என்று அக்கோயிலின்கண்ணே திகைத்து நின்றனர்.

(சுகூ) நம்பியாரூரர் அங்ஙனம் நில்லாது என்னே யடிமை யாளாய் ஆட்கொள்ள அந்தணர்கள் முன்னேவந்த ஐயர் நமது சிவபெருமான் கோயிலுக்குள்ளே புகுந்தது என்ன காரணம், இதுவோ அவ்வையர்வீடு, என்று தம்மையறியாதெழும் பெரியவிருப்பத்தோடு சுற்றத்தார் முதலிய யாவரையும் விட்டுத் தனியே உள்ளேசென்று என்னே யடிமைகொள்ளவந்த பெருந்தகையே! கருணைவெள்ளமே! என்னன்பின்பெருக்கே! என்னைவிட்டு எங்கொளித்தாய்! என்தெய்வமே! வெளிவருவாய்! நீ என்னையாட்கொள்ளவநத பெருங்கருணையை எண்ணுது உன்னையிழநதேனே! வருவாய்! உன்னருளுருவை நான் இனிக்காணப்பெறுவேனே! வருவாய் என்றழுதழுது சுற்றுமுற்றும் பார்த்து எங்குங் காணுதொழியவே ஆகாய வெளியைப்பார்த்து என்னே யடிமைகொள்ளவந்த ஐயரே! ஐயரே! என்றழைத்தனர் அழைக்கவும், மேலேபார்க்கும் நாவலர்பெருமானது கண்களுக்குப் புலப்படுமாறு இறைவனர் உமாதேவியாரோடு விடைமேற்றோன்றி தமமேல் ஆசைகொண்டு விடாதழைக்கும் நாவலூரர் பெருமானுக்கு உண்மையுணர்த்தத் தொடங்கினர்

(சுஎ) ஏ அன்ப! முன்பு திருக்கயிலாயத்தின்கண் நீ நமக்குத் தொண்டனுயுள்ளவன், அங்கு நமது அருளால் தேவியார் இருமாதர் உன்னைப்பார்த்து காதல் அதிகரித்

தனர். நாம் அதனையுணர்ந்து உன்னை மண்ணுலகில் வரும் படியாய்க் கட்டளையிட்டோம். நீ அப்போது இவ்வுலக வாழ்க்கைக்கு அஞ்சி ஐயனே! துன்புறும் வாழ்க்கைக்கு நாளுளாகாவண்ணம் என்னைத் தடுத்தாண்டருள்செய்யென்று வேண்டினாய் நாம அவ்வண்ணமே ஆகுகவென்றோம். அவ்வுடன்பாட்டை எமமிடம் பெற்று எமதுகட்டளைப்படி இம் மண்ணின்மீது வநதுதோன்றினை, தோன்றிய நீ துன்பம் வந்து வந்து தாக்கும் வாழ்க்கைக்கு ஆளாவதற்கான மணக் கோலத்தை உன்தநதைகொள்ளச் செய்தனன். அப்போது நாம் சயிலையில் சொல்லியபடி அத்துன்பவாழ்க்கை அடியோடு உன்னைவிட்டுப்போக அம் மணத்தைத்தடுத்து உன்னையடிமையாளாய் ஆட்கொள்ள விருததப்பிராஹ்மண வேடங்கொண்டு வந்தோம் வந்த நமமோடு நீ ஆளாகேனென்று வழக்காடினாய். நாமும் விடாது நீ ஆளாகவேண்டுமென்று தொடர்ந்து மன்றாடினோம். நீயும் உண்மையுணராமல் என்னைப்பார்த்து இவன் பழையமன்றாடிபோலும என்று எண்ணினாய் எம்மிடத்தில் உனக்கு வம்பேயல்லாமல் இடை இடையே அன்புந்தோன்றிற்று. இவ்வாறான தொடர்பால் இத்திருவெண்ணெய்நல்லூரின்கண் அந்தணர்முன்னேவந்து நீ அடிமைஎன்பதை நிலைநாட்டி ஆளாகேன்என்பதைத் தடுத்து ஆண்டோம் என்று ஆகாயவாக்கால் கூறியருளினார்.

(கூஅ) நம்பியாரூரர்,சிறசுகோதயவிலாசனாய்த்தோன்றி ஆகாயவாக்காற் கூறியதைக்கேட்டு பசுவினது குரலைக்கேட்ட

கன்றைப்போல் கதறி தந்நிலைமைமறந்து தேகாதி பாதபரி யந்தமான அங்கம் புளகமாகவும், தொழுதகை தலைமேலே றவும், என்னைவந்து வலிய ஆட்கொண்டது மனறத்துள் ளே நின்று பஞ்சகிருத்திய நடனஞ்செய்யும் உம்முடைய செயலோ வென்றுகூறினர்

(௬௯) அப்பொழுது ஆகாயத்தின்கண் தோற்கருவி துளைக்கருவி நரம்புககருவி முதலிய பஞ்சவாத்தியங்களும் நிறைந்து முழங்க, தேவர்கள்விடாது பொழியும் பூமாரி பூமி எங்கும் நிறைந்து ததும்ப, மண்ணுலகில் உள்ளாரெல்லாம் மகிழ்ச்சியில் மீதூர, மறைகள் மேகமுழக்கம்போல் முழங் கிப் பேரோசையிட, நமது பெருந்தகையாராகிய நம்பியா ரூரரை ஓலைகாட்டி ஆண்ட இறைவர் அருளிச்செய்கின்றார்.

(௭0) நாவலூரனே! நீ கயிலையில் ஆலாலசுந்தரன் என் னுநாமத்தோ டிருந்தனை, இங்கு என்பால் வன்மைச்சொ ல்லை வழங்கினையாகலின் "வன்றொண்டன்" என்னும் நா மத்தை இப்போது பெற்றவனாயினாய், நீ எனக்கு அடிமை செய்யக்கடவாய் என்று வழக்காடினேனாதலால் அவ்வடி மைச்செயலைச் செய்யக்கடவாய். அச்செயலாவது - எம்மை அன்பினாற் பெருகிய சிறபபின்மிக்க அர்ச்சனையினால் அர்ச் சிப்பதே யாகும். அவ்வர்ச்சனையாவது - நாமைப் பாடுத லேயாகும். அப்பாட்டும் அன்பினாலே பெருகியதும் பண் ணிசையிலே மிகச்சிறப்பினை யுடையதுமா யிருத்தல்வேண் டும். அது அன்பும் பண்ணும் ஒருங்கேயமையப்பெற்றுள்ள

தமிழே யாகலான் சுவைமிகுதியும் இலக்கணமும் நிறைந்த அத்தமிழ்ச் சொல்லாலேயே பாடக்கடவாய் என்று சுத்த மாகிய வேதமோதிய திருவாக்குடையார் கூறியருளினார்.

(எக - எஉ) யஜுர்வேதாந் தர்ககதமாய் விளங்கும் பஞ்சாக்கரத்தாற் சொல்லபபடும் பொருளாயுள்ளவனும, அங்ஙனமிருநதும அவ்வேதத்துள்ளே ஓதநதக்கவர்களா யுள்ள பிரஹ்ம விஷ்ணுக்கள் அவ்வுண்மை யுணரும் உணர் வற்றுத் தேடுநதன்மை வாய்ககப்பெற்றுள்ள அரியவனும் ஆகிய இறைவன் நம்மைப் பாடுவாயென்ற அளவில் நம்மை அடிமை என்று கொண்டபொழுதே நமது ஞானமும் கிரி யையும் அவன்பாலதாய் நாம் சுதந்தரமிலியாய்ப் போயி னோம் இப்பொழுது பாடுதற்குரிய பொருள்தேடும் ஞான மும், அப்பொருளை யமைததற்குரிய செய்யுளைத்தேடும் கிரி யையும நம்பால் எங்ஙனது ஞானமும் கிரியையுமில்லாமல் எப்படிப்பாடுவது என்று சிற்சபையினுள்ளே நடனஞ்செய் தருளும் இறைவனது ஞானக்கிரியா ரூபமாயுள்ள சிவந்த திருவடிகளை நாடும் மனமுடையராய் இருகரங்களையுங குவி த்துநின்று,—எம்பெருமானே! நீ வேதியர் திருக்கோலங் கொண்டுவந்து என்னை ஞானபோதததால தற்போதத்தை யொழித்து அடிமைஎன்று கொள்ளாமல வழக்கினால் என் போதத்தை யொழித்து என்னை யடிமையென்று கொள்ள வந்த இலாபத்தை யறிதற்கில்லாத அறிவினையுடைய அடி யேனுக்கு நான் இன்னவனென்றும நீ இன்னவனென்றும்

இருவருக்கும் முன்னுள்ள சம்பந்தம் இன்னதென்றும் வரும் இம்மண்ணுலகத்தில் வந்தகாரணம் இன்னதென்றும் நீயுணர்த்த யானுணரும் உணர்வைத்தந்து, நானுய்யும் வண்ணம் அடிமை என்று ஆட்கொண்டவனே, அதுவேயுமன்றி விடத்தைவிடமாகக் கொள்ளாது அமிர்தமாகக்கொண்டது போல் யான் செய்தகுற்றங்களைக் குற்றங்களாகக் கொள்ளாது குணமாகக்கொண்ட கோதிலாவமுதமே, இன்று உனது குணப்பெருங்கடலை இப்பொழுது என்பாலவைத்த உனது கருணைக்குணமாகிய தடங்கடலை நாயேன் யாதினையறிந்துஎன்சொல்லிபபாடுகேன. நான்சுதந்தரமிலியாகலின் நீ எதனை யறிவிக்கின்றனையோ எதனைச் சொல்லுவிக்கின்றனையோ அதனையறிநது அதனைச்சொல்லி அப்படிப்பாடத் தக்கவனாவேன் என்று கூறினார்.

(எ௩) கூறவே, அந்த அன்பரை அஃதாவது அறிவித்தால் அறியத்தக்கவன், சொல்லுவித்தால் சொல்லத்தக்கவன், பாடுவித்தால் பாடத்தக்கவன் என்னும் அடிமைத்திறமுணர்ந்து அவ்வழியேநிற்கும் தன்மை வாய்க்கப்பெற்ற அன்பரை அங்கணர் அருளிச்செய்வார்—ஆரூரர் சொல்லியவாறு அறியவும் சொல்லவும பாடவுமான கிருபாநோக்கத்தை இறைவர் வைத்தனர் வைக்கவும் பாடென்று சொல்லுவதற்கு முன்னரே பாடும் வகையை இறைவர் எண்ணியுள்ளவாறு சொல்லத் தொடங்கினார். அஃதென்னையெனின் முன்னர் உனது கலியாணப்பந்தரில் என்வார்த்தையும்

என்செயலையும் என்னறிவையுங் கண்டு "பித்தனே மறை யோய்" என்று என்னைக் கூறினையே அது என்னைப் பாடிய பாட்டன்றோ ஆகலான் நீ சொல்லிய அப்பெயர் தான் என்பெயர். ஒன்றினைக்செய்கை செய்யாதொழிகை வேறொன்றுசெயகை எதுவோ அதுதான் பித்துக்குணம். அக்குண முடையோர் யானன்றி மற்றொருவரு மில்லை. அப்பெயரையே நீயும் அழைத்துள்ளாய் நான் காட்டிய அடிமையோலையினும் கண்டிருக்கின்றது, ஆகலான் என் பெயர் பித்தனென்பதே நிச்சயம். என்பெயரை முன் னே நினைத்தால் பின் எதுதான் வாராதது; எல்லாம்வரும். ஆகவே முன் பித்தனென்றே வைத்துப் பாடத்தொடங்கு வாய் என்று கூறியருளினர். அருளாலும் அவ்விறைவரது ஆணைவழியே நிற்கும் வன்மைவாய்ந்த பெரியதொண்டரு ரும் ஆணையென்னும் பரியாயப்பெயருடைய சிற்சத்தியாகிய அவ்வருளாலேயே தம்மை ஆளவந்த வள்ளலை - அஃதாவது- (அடிமையானபின்னர் நீசெய்யுஞ் செயலெல்லாம் என்செய லே என்று தன்னையே கொடுத்தருளும் பெருங்கொடையா ளியாகிய இறைவனை) அவனது வளாற்றன்மை யாவரும் உணரப் பாடத்தொடங்கினர்.

(எச) பாடத்தொடங்கிய அவ்வியலுலவர் பெருமான் அஃதாவது - கல்விகேள்விகளில் உணரவேண்டியவற்றைக் கசடறவுணர்ந்த விசாலித்த அறிவினையுடைய அறிவாளர்க் கெல்லாம் பேரறிவாளராகிய வன்றொண்டப் பெருமானுர்

இந்நிலவுலகேயன்றி எல்லாவுலகும் உய்ந்துபோம் வண்ணம் பேசிதாம் திருப்பதிகம் - அஃதாவது - சொல்லாலும் பொருளாலும் அருளாலும் அன்பாலுமேயன்றி இசையாலும் மேம்பட்டதாகிய பதிகத்தை எடுத்தார் - அஃதாவது - பித்தனென்றே பாடுவாய் என்றெடுத்துக் கொடுத்தபடியே அப்பதத்தையே முதற்பதமாக எடுத்துக்கொண்டு அவனருட்டிறமும் தன் அடிமைத்திறமும் முறைமுறையாய் விளங்க "பிறைசூடி" என்றற் றொடக்கத்தனவாகிய பதங்களைக் கூட்டி, கொத்தாகமலர்ந்த மலர்களையணிந்த கூந்தலையுடைய பிராட்டியாரை இடப்பாகத்தி லுடையவனாய்த் தம்மைச் சரண்புகுந்த அடியார்களிடத்துத் தாயினும் இனியனாய் உள்ள இறைவனை இந்நிலவுலகமுதலிய எல்லாவுலகமும் உய்யும்வண்ணம் மேன்மையாகப் பாடத்தொடங்கினர்.

(எ-ு.) பாடத்தொடங்கிய நிகரில்லார் - அஃதாவது - தொண்டில் ஒப்பில்லாத வன்றொண்டர் எனப் பெயர்பெற்றதேயன்றி இசையிலும் நிகரில்லார், எனப் பெயர்பெறுமாறு * "பித்தாபிறைசூடி பெருமானே யருளாளா" என இறைவனது நிலையும், மனத்துன்னை நினைப்பின்றி நாயேன் பலநாளும் பேயாய்த்திரிந் தெய்த்தேன்" எனத் தனது நிலையையும் கூறி, இனியுன்னை மனத்துன்னை மறவாதே நினைக்கின்றேன் அஃதாவது முன்னுண்டாகிய எய்ப்புநீங்கச் செய்யும் பணியையும். மற

* பித்தாபிறைசூடி என்னும் இப்பதிகத்தில் பொருள்நோக்கி ஆண்டாங்கு எடுத்து ஆண்டிருக்கின்றமை உய்த்துணர்க.

வாது நினைக்கும் பணியையும செயப்பெற்ற நான் இனிப் பிற வேன் பெறின்முவேன் பிறக்கப்பெறினும் (மூப்படையேன்,) முடியேன் (சாவேன்) என்னைக் குறிக்கோள் எனப் பணியான் எய்தப்பெறும் இம்மையி லெய்தும் பயனையும், "யாதன் போருளானேன் அறிவில்லே" ளுயினேன் யான் "பாதம்பணி வார்கள் பெறும்பண்டம்" எதுவோ "அதுபணியாய் என அம் மையில் எய்தும் பயனையும, "தழல்போலுந் திருமேனி" யில் எங்ஙனம் "தண்ணூர் மதிசூட"ப் பெறும், நகையின் எண்ணூர் புரமூன்றும்" எவ்வாறு "எரியுண்ண" ப் பெறும், இவ்விரண் டுஞ் செய்யக்கூடாமை யாயினும் வேறொன்று செய்கை என்று உனக்குக் கூறியிருக்கும் செயலவகையான் அவற் றைச் செய்தமைபோல், சென்று சென் றணுவாய்த் தேய் ந்து தேய்ந் தொன்றும் அம்முத்திககாலத்து அருவம் உரு வம் அருவுருவ மென்னும உருவங்களைக் கடநது அகண்டா காரப் பேரொளிப் பிழம்பாய்ப் பிரகாசிக்கும் அந்த ஞானக் கினி சொரூபத்தில் நாமெழிநது போகாமல் "தண்ணூர்மதி" தோன்றி வாழ்வதுபோல் நான் உன்னோடு அநநியமாய்க் கலந்து தோன்றி வாழவும், அஙஙனம் நான் தோன்றுங்கா லத்து நான் குடிபுக்கிருந்த பாசமும் "புரமூன்றும்" உனது நகையெரியால் உண்ணப்பட்டு அவ்வெரியேயாய் நின்றமை போல் நினது அருளொளியாகவே நிற்கவுமான அத்வைதப் பயனையும், தாதான்மிய சத்தியால் "ஊனுனாய் உயிரானாய் உடலானாய் உலகானாய்" வானும் நிலனும் ஆயினாய் கடலும் மலையும் ஆயினாய்" அல்லதேபோல் "அரக்கொடு சேர்த்தி

பிணைந்த அக்கற்போல் - உருக்கி யுடங்கியைந்து நின்று - பிரிப்பின்றித்-தானேயுலகாம் தமியே னுளம்புகுதல்-யானே யுலகென்பன் இன்று" என்றபடி இவ்வருட்டுறையுள் நான் நீயாகுய் ஆயினும் "உனக்காளாய் இனியல்லேன் என்னலாமே"என அம்முத்திக்காலத்தும் அடிமைகுலையா (செய்நன்றி மறவா) மல் அன்பின் திறத்தையும், "நேய மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" என்றபடி தொழுந் திறத்தையுஞ் சொல்லித் திரிவதற்கு "தேற்றுதன" வாகிய ஏற்றார் புரமூன்றும் எரியுண்ணச் சிலைதொட்ட" விக்கிரகத் திருமேனியே யல்லாமல், தொழுவாரவர் துயர்தீர்த்த" (னாகிய) "உனதொழிலு" க்கு ஏற்றவாறு கொள்ளும், "மழுவாள் வலனேந்தி மறையோதீ மங்கை பங்க" ளுய் வரும் அனுக்கிரகத் திருமேனியும் வேண்டுமென்னும் அருத்தத்தைக் கொண்டு முறையாய்வரும் திருப்பாசுரங்களோடு, முதலிலே எடுத்துப் பாடுகின்ற இந்தளமென்னும் பண்ணையுடைய அத்திருப் பதிகத்தை நலிதல் படுத்தல் எடுத்தல் என்னும் இசைவேறுபாடு குறையாமல் பொருந்தும் முறைமையினுலும், நிறைந்த தாளத்தில் இசையின்பகுதி புணர்ந்து மிக அமையும் வகையானும் சிவபிரான் மகிழ்தற்குக் காரணமான இசையோடு பாடினர்.

(எக) பாடவும், திருவெண்ணெய் நல்லூரில் திருவருட்டுறையில் எழுந்தருளியிருக்கும் திரிபுர தகனனுகிய சிவபெருமான் சொற்றுணைவேதியனுய்ச் சொல்லியருளிய சொல்

லால் நிறைந்த தமிழ்ப்பதிகத்தை இசையோடுபாடிய வன் றொண்டப் பெருமானாரை மிகுந்த கருணைநோக்கால்நோக்கி இப்பொழுது என்னைப்பாடியதே யல்லாமல் இவ்வுலகின் கண் இன்னும் பலவகையாக நமதுபுகழைப் பாடுவாயாக என்று எல்லாவுலகமும் உய்ய அருள்செய்தனர்.

(எஎ) நம்பியாரூரது அருளிப்பாடு இங்ஙனநிற்க. மணம் வந்த புத்தூரில் அன்று இந்த நம்பியாரூரர் மணக்கோலங் கொண்டபொழுது இவருக்குத் தருமபத்தினியாய் வந்த சடங்கவியாருடைய புத்திரியார் தமக்குச்செய்தமணம் முற் றுப்பெறவில்லைஎன்னும் கவலையொழிந்து நாயகனைக்கொண் டதை யொழிக்காமலும் கற்பிலக்கணம் இதுவென வுணர் ந்த அவ்வுண்மைவழியினின்றும் வேறுபடாமலும் சிவலோ கம் அடைதற்கரிய தென்பதுபோய் எளிதாகும் வகையாகப் பெற்றாள்.

(எஅ - எகூ) ஆரூரரைத் திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறையின்கண் எழுந்தருளியிருக்கும் வேதியர் ஆட் கொண்டபின்னர் அந்நாவலர்பெருமான் தமதுபதியாகிய நாவலூரில் கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் இறை வனைக் காணும் ஆசையால் அவ்வூருக்குட்போய் அவ்விறை வனைத் தரிசித்து, என்னிறைவனே! ("நான்முகனும் வான வர்கோனும் குற்றேவல்செய்யக்கொண்ட கோவலனாகிய நீ க்ஷாமின்வன்மையால் வெண்ணெய் நல்லூரில் வழக்கில்) வை த்து ஆளாகக்கொண்டனையே, என்னை ஆட்கொண்ட இடம்

வெண்ணெய் நல்லூரேயாயினும் "நாவலனூர்க் கிடமாவது நந் திரு நாவலூரே" உனக்கிடம் என்னூராகிய நாவலூரேயாகும் என்னும் கருத்துடன் "கோவலனான்முகன்" என்னும் பதிகத்தைப் பாடியருளினார்.

திருத்துறையூரில் தவம்வேண்டல்.

(எகூ) பின்னர் திருத்துறையூருக்குச்சென்று, சமதுபெருமான்முன்னே நின்று எம்சிவனே! தீவினையால அவமாகிய உலக நெறியின்கண்ணே யான் செல்லாவண்ணம கயிலையில வேண்டியபடியே தடுததாண்டாய் இனிஅடியேனுக்குப்பவ நெறிக்கு விலக்காகும் ஞானயோகச் சரியைகிரியை என்னும் தவநெறியை எனக்குக கொடுத தருள்வாயென்னும் வேண்டுகோளை உளளிட்ட * திருபபதிகததைப் பாடியருளினார.

(அ0) நறுமணமு சமழும் பூக்களைக் கொண்டுள்ள சோலைசூழ்ந்த அத்திருத்துறையூரின்கண் சநதிரசேகரனாய் கங்காதரனாய், சடாதரனாய், வீற்றிருக்கின்ற சிவபெருமான் வன்தொண்டப்பெருமான் வேண்டியபடியே ஞானக்கிரியையில் சத்தமுதலிய ஐம்புலன்களும வேறுபடாது பொருநதி இருக்கும்படிச் செய்யப் பூவாகியமலர்கொண்டு ஆகமமுறையே பூஜித்துச் சொல்லாகிய மலர்களைக்கொண்டு பாடி

* மலையார் அல்குல் கன்னியராடுந் துறையூர்த் - தலைவா வுனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. என்னுந் தொடக்கத்தன.

(அக) வணங்கிய பின்னர் அதுபோலும் சிவபெருமான் தமது திருவுள்ளத்துக்குப் பாங்காக விரும்பித் துடனிருக்கும் பலதிருத்தளிகளிலும் சென்று வழிபட்டுப் போற்றி வணங்கிப் பின்னர் அழகிற்சிறந்த புலியூரென்னும் சிதம்பர க்ஷேத்திரத்தில நடனஞ்செய்தருளும் நடராஜப் பெருமானது திருக்கூத்தைக் கண்டுகளித்துப் பேரானந்தத்தில் மூழ்கவெண்ணினர். எண்ணியபடியே அக்கணமேசாலப் பதற்குச் சமீபமாக இல்லாதபடியினுல் காணப்பெறுவது எப்போது எப்போது என்று எழுந்த ஆசைமிகுதியினுல் உண்டாகிய வருத்தமேற்கொண்டு விரைவாகச்செல்லவேண்டுமென்னும நினைவுடன் நடக்கத்தொடங்கினர்.

(அஉ) அதுபோலும போகும் பொழுது, மலையின்கண் வளரப்பெற்றுள்ள சந்தனம் அகில்முதலிய மரங்களும் மலர்களும் மயிற்பீலிகளுமொன்றின்மே லொன்று புரண்டுபுரண்டு பரவிவரும்படி வெள்ளங்கொண்டு கரையின் கண்ணே முத்துக்களை ஒதுக்கிவரும குளிர்ந்த நீரையுடைய பெண்ணையாற்றைக்கடந்து கரையேறி பச்சைக்குதிரைபூட்டிய பெரியதேரின்கண்வரும் சூரியன் மேற்குக்கடலிற்செல்லுங்காலமாகிய அந்திக்காலம்வர திருவதிகை வீரட்டானமென்னும் திருத்தலத்தைச் சமீபித்தனர்.

(அங.) சமீபத்தில் வரும்போது இத் திருவதிகை உலகமெல்லாம் உழவாரப்படையால் கிரியை யோகம் ஞானம் என்னும் முப்போகங்களையும் கொடுக்கவல்ல சரியை

என்னும் நிலத்தை உழுதலைச்செய்யும் வலிய ஆண்மையையுடைய உழவாரப்படையாளியென்று புகழ்பெற்ற திருநாவுக்கரசுகள், சிவபெருமானுடைய திருவருள் நாங்கள்கிடைக்கப் பெறுமாறு எவ்வாறென்று சத்திநிபாதர்கள் வினவும்வினாவுக்கு, சரியையாதி நான்குபாதங்கள்தான் என்று விடை கொடுக்கும் விடையின்மேல் வரும் உமைபங்கருக்குச்செய்யத்தகவனவான மெய்த்தொண்டாகிய கைத்தொண்டு மனத்தொண்டுபோதத்தொண்டு அறிவின்றொண்டு என்னும நால வகைத்தொண்டில் முதற்றொண்டாகிய கைத்தொண்டை விரும்பும்வண்ணஞ்செய்து அத்தொண்டைச் செய்யப்பெற்ற பெரும்பதியாகலின் அப்பதியை ஒருவகைத்தொண்டுக்கும் ஆளாகாத யான் எவ்வண்ணம் காலால்மிதித்து உள்ளே செல்லத்துணிவேன், அஞ்சுகின்றேன் என்று திருவதிகைக்குள்ளே போகாமல் நீர்மடைகளை மிகுதியாகவுடைய குளிர்ந்த மருதநிலத்திலுள்ள சித்தவடம் என்னும் பெயருடைய மடத்துள்ளே போயினார்.

(அச) கைத்தொண்டுமுதலிய நால்வகைத்தொண்டும் விடாது செய்யவல்லவர்க்கு அருள்செய வல்லராகிய இறைவன் நீ என்னடியான்என்று சொல்லிய அச்சொற்றொண்டுக்கும் உடன்படாதிருந்த தம்மை விடாது வலிய ஆட்கொள்ளும் வண்ணம் செய்த வன்றொண்டப்பெருமான், வண்டுகள் மிக்கொலிக்கும் பூஞ்சோலைசூழ்ந்த சித்தவடமடத்தினுள்ளே புகுந்தபோது விரிந்த அலைகளையுடைய சீர்

மிக்க கெடிலநதிக்கு வடக்கிலிருக்கும் வீரட்டானத்துள் வாழும் இறைவருடைய திருத்தாளை நாம்காணும் வகை எவ்வகையென்று அத்திருவடியையே பலமுறையும் விரும்பும் மனமுடையவராய் அம்மடத்தில் எப்பக்கத்தும் பரிசனங்கள் நெருங்கிக்கிடந்து துயில்கொள்வதைப் பார்த்துத் தாமும் ஓர்புறத்தில் சயனித்து நித்திரைசெய்தனர்.

(அ௫) வன்றொண்டர் தமது திருவடியை மனத்துட்கொண்டு யாவர்க்கும்பொதுவாகிய மடத்தின்கண் நித்திரை செய்வதை வீரட்டத்தின்கண் அமர்ந்தருளும் இறைவனார் உணர்ந்து முதிர்ந்தவடிவுடைய வேதியராய் அம்மடத்தின் முன்னே யிருப்பவர் ஒருவரும் அறியாதவண்ணம் உள்ளே நுழைந்து தமக்குப்பூமாலையணியும் திருப்பணியை முன்னேயுடைய சுந்தரரது திருமுடியின்மேல் தமது தாமரைமலரை யொத்த திருவடிகளை வைத்துத தாமும் நித்திரைசெய்கின்றவரைப்போல் பள்ளிகொண்டிருந்தனர்.

வீரட்டானத்தீசர் திருவடிசூட்டல்.

(அசு-அஎ.) வீரட்டானத்திறைவர் கிழப்பிராஹ்மணராய்வந்து தமதுகாலகளைத் தலைமேல்வைத்து உறங்கும்பொழுது ஆரூரர், யாவர் நம்தலைமேல் காலைக் கூசாதுவைத்து உறங்குகின்றவர் என்று விழித்துப் பார்க்கும்பொழுது கிழவராயிருக்கக் கண்டு இவர் பெரிய மறையவர் வேறொருவருமல்லர் என்றறிந்து ஐயா வேதியரே! நீரென்ன உம்முடைய கால்களை என்தலைமேல் சரியாகவைத்து உறங்குகின்றீரே இது இன்னதிசையென்றுந் தெரியவில்லையோ ஒரு

வன் சயனிக்கவேண்டுமே யானால் ஒருவன் தலை எங்கிருக்கின்றதோ அதனையே படுக்குந் திசையாகவெண்ணிப் பள்ளிகொள்வது வழக்காமோ என்றுகேட்க, அப்பா! நான் என்னசெய்வேன் திசையையுந் தலையையும் எனக்குத் தெரியாவகை செய்தது என்னுடைய மூப்புப்பருவமாகும். நீ கோபித்துக் கொள்ளவேண்டாம் என்று சொல்ல, தமிழ்நாதராகிய நமபியாரூரர் இவர் சொல்லியது உண்மைதானென்று தம்முடைய முடியை வேறுதிக்கில்வைத்து நித்திரை செய்தனர். செவ்விதாகிய கயலமீன்கள் குதித்து விளையாடும் தடாகங்கள் சூழ்ந்துள்ள திருநாவலூரார் முன் தலைவைத்திருந்த இடத்தைவிட்டு வேறோரிடத்தில் வைத்தும் அம்மறையவர் அவ்விடத்தும் கால்களைநீட்டினர் இது வென்ன அம்மறையவர் கால்கள் நம்தலையில் இருக்கும்படிகின்றதே, நாம் ஒதுங்கிப் படுக்கவில்லை போலுமென றெண்ணி அவ்விடத்தைவிட்டு அப்புறம ஒதுங்கினர்; அங்கும் அப்படியே செய்தனா. இப்படியே இவர் தலைவைப்பதும அத்தலைமேல் அவர் காலைவைபபதுமாக விருக்க, சிறிது கோபங்கொண்டு உறஙகும் இவவிடத்தில் என்தலையை வேறுவேறிடத்தில் நான் வைத்தும் அதுபோல் நீ வேறிடத்தில் உன் காலை வைககாமல் என்தலைமேலேயே வைப்பதுமனறி நான் உறக்கங் கொள்ளாவண்ணம் மிதித்தும் வருகின்றனையே நீ முன் திசையறியாவகை செய்தது என்னுடைய மூப்புக்காண் என்றமறையவனே அன்றோ நீயாரென்றார், அப்பொழுது

சடையில் கங்காதேவியை ஒளித்துவைத்திருக்கும் வீரட்டானத்திறைவர் நான் உன்னை முன்னம்வந்து தடுத்தாட்கொண்ட விருத்தவேதியன்றான் எனனுங்குறிப்புத்தோன்ற அறிந்திலேயோ என்று மறைந்தருளினார்

(அஅ) மறையவும் எம்மான் தன் அடிக்கொண்டு தம் முடிமேல் வைததிடும் என்னும் ஆசையால் வாழ்கின்ற நம தடிகளாகிய சுநதரமூர்த்திகள், இறைவன் "அறிந்திலேயோ" என்று மறைந்துபோகவும் என்செய்தேன் என்செய்தேன் என்று ஏஙகி விழித்தெழுந்து இவ்விடத்தில் யான் இறுமாப்படைநது என்முடியில் அடிசூட்டவந்த எம்பெருமானைச் "சடைமேற்கொள் பிறையானென்றும், விடைமேற்கொள் விகிர்த னென்றும், கைம்மானி னுரியா னென்றும், கரிகாட்டில் ஆடலுடையா னென்றும், விடையா னென்றும், கறைகொண்ட கண்டத் தெம்மானெனறும் அறியும் அறிவிலாநாயேன்" ஆயினன் அந்தோ! என்னைப்போலும் அறியாதசாதியார் இங்கு எவருள்ளார் என்றழுதழுது அப்பொழுது மணக்கோலத்தில் அடிமையாம் பெருமையுணராது நான் அடிமையாவனு என்று பலகாலும் வழக்கிட்டு அடிமையை வெறுத்தேன். நீ வெறுக்காது அடிமைகொண்டாய். அதுபோல் இப்பொழுதும் அந்தவிருத்த வேதியனுகவே வந்து பலமுறையும் உன்னடியைச் சூட்டினுய் யான் உன்னடியைச் சூடுற்குரிய தவகோலமாகிய இவ்வடிமைக் கோலத்திலும் அடியின்பெருமையுணராது வெறுத்து விலகி

விலகிச்சென்றேன். நீசெல்லாது என்முடியில் அடிவைத்துக் கொண்டே வந்தனை! என்று அடிக்கு முடிகொடாதிருந்த தன்சிறுமையையும், அம்முடியையே தன்னடிக்கு இடமாக விடாதுகொண்ட அவன் பெருமையையும் எண்ணியெண்ணி ஏக்கமுற்று எம்மானே! ஆளுடை அரசுகளுடைய கைத் தொண்டேறிய பதியில் நாம் எப்படியேறுவது என்றஞ்சி இடையேறியாகிய உன்னுடைய அடியை என்னுள்ளத்தே ற்றி உறங்க, என்னுள்ளத் துள்ளாளுகிய நீ நா னுள்ளிய அடியை என்னுள்ளத்தேயன்றி என்முடியினும் ஏற்றினை யே! பெருமையிற் சிறந்தவனே! வீரட்டானத் தமர்ந்தரு ளிய இறைவனே! யானைத்தோலைப் போர்வையாகப் போர்த் தவனே! என்று அம்மடத்திலிருந்த வண்ணம் திருவீரட் டானேசரை வணங்கி "தம்மானையறியாத சாதியாருளரே" என் னும் திருப்பதிகத்தை ஓதியருளினர்.

(அகூ - கூ௰) ஓதியபின்னர் திருவதிகையில் எழுந் தருளியிருக்கும் தமதிறைவரைக் கெடிலநதியானது பொற் கட்டிகளையும் மணித்திரள்களையும் யானையின் கொம்பு களையும் மின்னுகின்ற வெள்ளிய முத்தங்களையும் நறுமண ங்கமழும் மலர்களையும் சந்தனக்கட்டைகளையும் வன்மை யான அலைகளாகிய கைகளால் வாரிக்கொண்டுவந்து பூசனை செய்வாரைப்போல் வழிபடுதலால் அவ்வழிப்பாட்டைநோக் கியும், வடதிசைக்கங்கைபோலும் இது தென்திசைக்கங்கை என்று சொல்லத்தகும் அச்சிறப்புநோக்கியும், அக்கெடில

நதியில் ஸ்நானஞ்செய்து, வீரட்டானேஸ்வரர் திருவடிகளை வணங்கி அவ்விடத்தினின்றும் நீங்கி, மேன்மேல் பெருகிவரும் பெருக்கினையுடைய கெடிலநதியின் தென்கரை வழியேபோய் பூர்வத்தில் போர்விரும்பும் வலிய தோளையுடைய மாவலிச் சக்கிரவர்த்திசெய்த மங்களகரமான யாகத்தில் வாமனராய்வந்து மூன்றடிமண்வேண்டிய திருமால் வழிபட்ட திருமாணிகுழி எனும் திருப்பதிக்கு வந்தனர்.

(௬௧ - ௬௩) வந்து, அத்திருமாணிகுழிக்கு நாதராகிய மாணிக்கவரதரைப் பணிந்து பாடி, அங்குநின்றும் தம்மைவணங்கினோர்க்கு வேண்டும்வண்ணங் கொடுக்கும் கருணாசாலியாகிய சிவபெருமான் வீற்றிருக்கும் திருத்தினை நகரத்திற்குப்போய் தமது நெஞ்சத்தைப்பார்த்து "மனமே நீ "நீறுதாங்கிய திருநுதலானும நெற்றிக்கண்ணனும் நிறைவளைமடந்தை கூறுதாங்கியகொள்கையனும் குற்றமில்லியும் கற்றையஞ்சடைமேல் ஆறுதாங்கியஅழகனும் அமரர்க்கரிய சோதியனுமாகிய சிவக்கொழுந்து, வரிவரானுகளும் சேறுதாங்கிய (இத்) திருத்தினை நகருள் (எழுந்தருளியிருத்தலால் அச்) சிவக்கொழுந்தினைச் சென்றடைவாயென்று அறிவுறுத்தி அப்படியே திருப்பதிகம்பாடி வணங்கி அப்பதியைவிட்டுப் புறப்பட்டு, நரம்பினையுடைய யாழொலியும் மத்தளத்தின் நாதவொலியும் வேதத்தின் பேரொலியும் அரம்பையர்தங் கீதவொலியும் அனவரத தாண்டவத்தோடு நீங்கா தொலித்துக்கொண்டிருக்கும் ஆகாயத்தலமா

கிய சிதம்பர க்ஷேத்திரத்திற்குச் சமீபமாக வந்தனர். தேன் சிந்தும் மலர் மாலையும் ஒளிசிந்தும் மணிமாலையும் உடைய வராகிய நம்பியாரூரர், ஒலிக்கும் பறையையும் வெண்சங்குகளை யும் உடைத்தாகிய தடாகத்தின்கண் செந்தாமரை மலர்கள் அசையும்படி அழகிய கயல்மீன்கள் பாயும வண்ணம் மலங் கென்னும் மீன்கள் சூழ்ந்திருக்கின்ற விசாலமாகிய வயல்க ளைப் பக்கங்களில் படைத்துள்ள அவ்வெல்லையின் பக்கத்து, வந்திப்பவருடைய ஆணவாதி பெரிய பாசங்கள் நீங்க முத்தி நெறியைக்கொடுக்கும் வளப்பத்தினையுடைய சிதம்பரமென் னும் திருப்பதியின் எல்லையைக்கண்டு நமஸ்காரஞ்செய்து பின்னை மா மகிழம் சரளம் தென்னை இலவங்கம் நாரத்தம கமுகு குங்குமம் குளிர்ந்தவாழை இலுப்பை வஞ்சி என்று சொல் லப்படும் மரவகைகள் எவ்விடத்தும நெருங்கி யுள்ளதாய் மேகக்கூட்டங்கள் மிகுந்திருக்கு சோலைகள் சூழ்ந்துள்ள தாய் அச்சோலைகண்மீது குயிற்கூட்டங்கள் கூடிக்கூவும் ஓசையுள்ளதாய்ப் போகபூமியிலும் சிறந்த பொலிவினை யுடைத்தாய்விளங்கும் மருதநிலத்தைக்கடந்து அப்புறம் போயினர்.

(கூச) நறுமணங்கமழும நல்ல மலர்மாலையை யுடைய நம்பியாரூரர் மருதநிலத்தைக் கடந்துபோய், வன்னி கொன் றை சுரப்புன்னை சண்பகம் சந்தனம் பூக்களையுடைய பலா செருந்தி மந்தாரம் கோங்கு குரா மணங்கமழும் புன்னை பாதிரி வில்வம் ஆகிய இம்மரங்கள ஓங்கியுயர்ந்தும், நறு

மணமுடைய முல்லை மல்லிகை இதழ்நெருங்கிய நந்தியாவர்த்தம் நெருங்கிய சிறுசண்பகம் அலரி ஆகிய கொடிகளும் செடிகளும் நெருங்கி அடர்ந்தும அவைகளுடைய மலர்கள் மலர்ந்து நிறைந்துமுள்ள நந்தவனத்தைக் கண்டு ஆராவன்புகொண்டு வணங்கி அப்புறம்போயினர்.

(கூரு-கூசா) சிவகாமியாகிய ஒப்பற்ற நாயகியார் இடப்பாகத்தில் நின்று கண்டுகளிககவும், பெரிதாகிய ஏழுலகத்தவரும உய்யவும், அருட்பாதமெடுத்து பஞ்சகிருத்திய நடனஞ்செய்யும் குஞ்சிதபாதததில ஒலிககுமசிலம்போசையை நான்குவேதங்களும நாற்புறததுஞ் சூழ்நது போற்றுகின்ற திருத்தில்லையைப் பெரும்புறக் கடலானது தான் நாள்தோறும் வலம்வநது வணஙக நாறபுறத்தும் சூழ்ந்திருக்குங்காட்சியைப்போலும் குளிர்நத நீரையுடைய அகழியானது மிகவும்மேலே நெடுநதூரம் உயாநது மேகங்கள் தனக்கிடமாகக் கொண்டு வளரும் சிறப்பினையுடைய மதிலைச்சூழ்நதிருக்கும் அவ்வற்புதம் தமக்கு முன்னே தோன்ற அதனைப்பார்த்து மகிழ்ச்சியடைநதனர். அதன்பின்னர், பொன்னம்பலத்துள் ஆனந்த நடனஞ்செய்யும் குஞ்சிதபாதமாகிய தாமரைமலரிலுள்ள சிவானந்ததேனை வேதங்கள் தாம் உண்ணவேண்டுமென்னும் ஆசையினால் வண்டுருக்கொண்டு தில்லைஎல்லையைச்சூழ்நது முழுங்காநிற்கும். அதுபோல் பூஞ்சோலைகளில் உலாவும் வண்டுகள் பரிசுத்தமாகிய விபூதியையணிநத அடியார்கள்போல அத்தில்லை எல்லையின்பக்கத்தில் மலைபோலுய

ர்ந்து அழகு செய்யாநின்ற பெரியமதிலைச் சூழ்ந்திருக்கும் ஆழ்ந்த அகழியின் அருகில் மலர்ந்திருக்கும் தாழமப்பூவில் நிறைந்திருக்கும் வெண்ணிறமுடைய மகரந்தப் பொடியில் வீழ்ந்து வெளுத்த உடம்பினை யுடையனவாய் அவ்வழியி லுள்ள தாமரைமலர்களில் போய்ப்போய் சத்தித்துக்கொ ண்டிருக்கும் ஹம்ஸங்கள் எதிரேதோன்ற அதனையுங்கண்டு தமது சிந்தையில் நடராஜப்பெருமானுடைய திருவடித் தாமரையில் அன்புமேலிடப் பரவசராய்ப் போயினார்.

(௬௭-௬௮) அன்புருவாய்ப் போன நம்பியாரூரர் தில் லைப்பதியானது வெள்ளைக்கொடிகள் அசைந்தாடும் சிறப் புடன் விளங்கும் நான்குதிசைகள் எதிரே புலப்படுதலா லும், உலகத்தார் அறிவினையுடையராய் விளங்க வளர்கின்ற நான்குவேதங்களில் தமக்கு ஓதுமுறைகள் முறையாய் அதி கரிக்க அந்தணச்சிறுவர்கள் நாவினாற்பழகும் நாவின் ஓசை மிகுதியினாலும், கண்டாமணியினின்றும் எழும் பெரிய நாத வோசையாலும், பூமாலைகளால் விளங்கும் மலைபோலும் மார் பினையுடைய பிரமனது அழகிய நான்குமுகங்களென்று சொல்லுந் தன்மையையுடையவாயிற்று. இவ்வண்ணம் விள ங்கும் தில்லைப்பதியின்கண் காணப்படும் நான்குவாயில்களுள் வடதிசையிலுள்ள வாயிலின் முன்னேசென்று தம்மைக் காணும் ஆசை அதிகரித்த அன்பினால் எதிர்கொண் டழை க்கவரும் மெய்யடியார்களைக் கண்டு மகிழ்ந்து வீழ்ந்து வணங்கினார். வணங்கிய இருவருள் அடியார்களோ முன்

வணங்கினவர், நம்பியாரூரரோ முன் வணங்கினவர் என்று அறியக்கூடாததாயிற்று. அங்ஙனம் முன் பின் அறியக்கூடாத முறைமையோடு இருவரும் எதிரெதிர் வணங்கி மகிழ்ச்சியடைந்து, அடியார் வணக்கம் முடிந்தபின் திருநாவலூருக்குப் பெருமானாராகிய சுந்தரர் - ஸ்ரீ நடராசப் பெருமானைக் கும்பிட வேண்டுமென்னும் அவா தமதுள்ளம் நிறையப் பெற்று அவ்வன்பு உள்ளத்தளவேயன்றி அன்பின் செயலெல்லாம் வெளியேயும் பெருகப் பெற்றவராய்ப் பொன்போல் பிரகாசிக்கும் அழகிய மாளிகைகள் நிறைந்திருக்கும் சிறந்த வீதியினுள்ளே சென்றார்.

(கூகூ-க00) இளம்பிறைவாழும் திருச்சடையில் முழங்கிக்கொண்டிருக்கும் கங்கையைத்தரித்த தேவதேவனாகிய நடராஜபெருமான் விரும்பித திருவிழாக்கொண்டருளும் அத்திருவீதியின் எப்பக்கத்தும் வேதங்களுடைய முழக்கமும், ஆங்காங்குள்ள நாடகசபைகளில் நடனஞ்செய்கின்ற முழக்கமும், மேகங்களுலாவும் ஆகாயததில் தேவ வாத்தியங்களாகிய பஞ்சவாத்தியங்களுடைய முழக்கமும், நறுமணங்கமழும் பூமாலைகளில் வண்டுகளாமுழங்கும் முழக்கமும், அன்பின்மிகுதியால் நீர் அரும்புங் கண்களையுடைய அடியார்கள் பாடும் பாட்டின் முழக்கமும் எக்காலத்தும் முழங்கிக்கொண்டேயிருக்கும்.

யோகசிந்தையிற் சிறந்த வேதியர்கள் வீடுகள்தோறும் வளர்க்கும் ஓமப்புகையானது ஆகாயத்தில் மேகம்போல்

யரவி மூடிக்கொண்டிருப்பதை நோக்குமிடத்து மேகமண்டலத்திலுள்ள மேகங்கள்சென்று நீரை உண்பதற்குமுன் அந்தநீரைத் தாம் உண்ணக்கருதிச் செல்றதுபோலும் காணப்படும். அந்தவோமப்புகையின் இடைஇடையே செல்வத்தில் மிகுந்த குபேரன்வாழும் அந்தப்புரத்தைப்போன்ற மாளிகைகளில் எண்ணிறந்தனவாய்க் கட்டியிருக்கும் நீண்ட கொடிகள் அசைந்தாடிக் கொண்டிருப்ப அதனை நோக்குமிடத்து மேகவரிசைகளின் இடைஇடையே காணப்படும் மின்னலைப்போல் விளங்கும்.

(௧௦௧ - ௧௦௨ - ௧௦௩) திருக்கோபுரநாசியின் பக்கங்களிலெல்லாம் ஆடுகின்ற மயில்களும், யாகசாலைகளி லெல்லாம் தீக்ஷைக்கோலினால் உண்டாகிய அக்கினிகளும், அழகிய வாயில்களிலெல்லாம் மாலைகளும், வேதிகைகளி லெல்லாம் மங்கலகரமான கும்பங்களும், தேர்களுடைய வரிசைகளிலெல்லாம் ஒளிகளும், அன்னச்சத்திரங்களிலெல்லாம் சென்னெல் அரிசியாலாகிய அன்னமலைகளும், தண்ணீர்ப்பந்தல்களிலெல்லாம் குளிர்ச்சிமிக்க நீர்களும், நீண்ட வீதிகளிலெல்லாம் தேவகணங்களும் நிறைந்துள்ளனவாய்ப் பிரகாசிக்கும்.

இவ்வளவென்று அளவுபடுத்தற்குக்கூடாத எல்லாவுலகங்களிலும் உள்ளனவாகச் சொல்லப்பட்டிருக்கும் அழகெல்லாம் மண்ணுலகிலுள்ள இத்தில்லையம்பதியில் வந்தனவென்று சொல்லும்படி எல்லா மங்கலங்களும் நிறைந்திருக்

கும் வளங்களை யுடையனவாகியும், புண்ணிய சீலர்களாகிய அன்பர்கள் விரும்பிப் புகழ்ந்து பாடிய சிறப்பினால் விளங்குவதாகியும் உள்ள நடராஜவள்ளல் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும பொன்னம்பலத்தைச் சூழ்ந்த திருவீதியை வணங்கி,—திருமால் பிரமன் இந்திரன் முதலிய தேவர்களும், ஏனைய கருடகாந்தர்வ கின்னரர்கள் முதலியோரும் நெருங்கி, அவர்களுக்கு முன் சீலத்திற் சிறந்த பெரிய முனிவர்களும் நெருங்கி நந்திதேவரது பிரமபடியை ஏற்றுக் கொண்டு அதனால்வருத்தமுற்று உள்ளேபோவதற்கில்லாமல் தரிசனஞ் செய்வதற்குரிய காலம் எப்பொழுது கிடைக்குமென்று அச்சமயத்தைநோக்கி அருகேநிற்ப, அன்பின்கண் ஆசைமிக்க அடியார்களும் சிவகணநாதர்களும் தடையின்றி உள்ளேபோகும் அழகுமிகுந்த கோபுரவாயிலை வணங்கி இரண்டு கரங்களையும் சிரசின்மேல் அஞ்சலியாகக் கூப்பிக் கொண்டு ஆலயத்துள்ளே போயினர்.

(கoச - கoரு - கoசு - கoஎ) ஆலயத்தினுள்ளே புகுந்து செம்பொன்னாலாகிய திருமாளிகைப்பத்தியுள் (நடுவேகாணப்படும்) மின்னலிடும் பேரம்பலமாகிய மேருவை வலம்வரும் விதிப்படியே வலம்வந்து, தண்டாகாரமாக வீழ்ந்துவணங்கி மகிழ்ச்சியோடும் உள்ளேசென்று அதன்பின்னர் அரிய வேதங்களின் முதலிடை கடைகளினும் அன்பர் இதயத்தினும் பிரகாசித் தொளிரும் திருவளரும் திருச்சிற்றம் பலத்தின்முன்னுள்ள திருவணுக்கன் திருவாயில் வழியேசென்று

நடராஜப்பெருமானாகியஐயர் தம்மைத்திருமாலும் பிரமனும் கீழும் மேலுந் தேடிக்கொண்டிருக்கத் தாம் இம்மண்ணுலகம் எல்லாவுலகினும் மேம்பட்டு விளங்கவும், வேதங்கள் சிலம்புருவாய்த் திருவடியில் ஒலிக்கவும், சிதாகாசமாகிய வெளியிலே கூத்தாடுகின்றவரை ஆரூரர் தரிசனஞ்செய்வதற்குமுன் அவருள்ளத்துள்ளே கலந்திருக்கும் அன்பானது கைகளிலும் கண்களிலும் அந்தக்கரணங்களிலும் கலந்து அவைகளைத் தத்தம் தொழில்களைச் செய்யும்படி உந்திற்று; உந்தவே-கைகளோ அஞ்சலியாகக் குவிந்தன கண்களோ ... ன. அந்தக்கரணமோ அன்புருவேயாய்க்கண்டகாட்சியளவேயாய் நின்றன. இவ்வாறு கைகள் குவிக்கவும், கண்கள் நினைக்கவும், அந்தக்கரணங்கள் அன்புருவாகவும் செய்யவல்ல பேரன்பைபபெறும். *பெருந்தவத்தைச்செய்த அப்பெரியோரையும் அவ்வன்பானது திருக்களிற்றுப்படி யென்னும் பஞ்சாக்கரப்படியின் சமீபத்திற்சென்று வணங்கி எழுந்திருக்கச்செய்ய வணங்கி எழுந்தனர்.

நம்பியாரூரர் தம் செயலற்று அன்பின் செயலுட்பட்டு தாழ்ந்தெழுந்து பஞ்சாக்கரசொரூபராய் பஞ்சகிருத்தியாதிகாரியாய்ப் பந்தமென்னும் துன்பத்தைத் தலைபெடாவண்ணம் மிதித்து முத்தி என்னும் பேரின்பத்தை எடுத்தளிக்குந் தாதாவாய் ஆனந்தத் தாண்டவஞ்செய்யும் தாண்டவேச

* கயிலையில் இறைவனுகிய தன்னையுடையானுக்கு பூமாலைசாத்தியதும், திருத்தொணித்ததுமேயாம்.

ளைக் காணும்பொழுது அவ்வீசன் பரமானந்த எல்லையின்க ணின்று தம்மையே காணும் காட்சிவசப்பட்ட முத்தர்க ளது பொறிபுலன் கரணாதிகளெல்லாம் அக்காட்சியின் வய மாகவேநின்று திளைத்து சிவானந்தத்தில் மூழ்கும்வண்ணம் செய்தருளும் பெருங்கூத்தினின்றும் பெருகிவராநின்ற பே ரின்பவெள்ளத்துள் மூழ்கினார். மூழ்கவும் அவ்வினைபவசப் பட்ட கண்களாலாகிய காட்சியுணர் வொன்றே சத்த பரிச ரூப ரச கந்தமெனப் பெயர்பெற்ற ஐவகை யுணர்வையுங் கொள்ளை கொண்டது. அஃதேபோல மனம் புத்திசித்தம் அகங்காரம் என்னும் கரணங்கள் நான்கும் அக்காட்சியுணர் வழியே சென்று திருவுருவைச் சிந்திதத சித்தமொன்றே யாயிற்று. அஃதேபோல் அவ்வந்தக்கரணங்களைத் தொழிற் படுத்தும் சாத்விகம் ராஜசம் தாமசம் என்னும் முக்குணங் களும் திருவுருவைச் சிந்தித்த சித்தத்தின் வழியாய் நின்ற சாத்விககுணமாகவே யாயிற்று. ஆகவே புலன்களாலும் கரணங்களாலும் குணங்களாலும் மாறுபடுதலில்லாத சிவா னந்தக் களிப்பினால் திருவுள்ளம் மலர்ந்திருக்கப் பெற்றனர்.

மலர்ந்த வுள்ளத்தோடும் கூடி தன்னுள்ளக் கமலத்தை மலரச்செய்த நடராசமூர்த்தியாகிய சிவசூரியனை நோக்கித் தெள்ளிய நிலவானது மலர்போலும் மலர்ந்திருக்கப்பெற்ற சடையுடையானே எனக்கு இம்மண்ணுலகத்திலே வுர வந்த இந்த மானிடப் பிறவியானது துன்பத்தைத்தரும் என்று எண்ணிக் கலங்கினேன். அந்தோ! மானிடப்பிறவி யுடை

யார்க்குத் துன்பத்தையேசெய்யவல்லபொறிபுலனுதிகளெல் லாம் என்மாட்டு அவையொன்றும் செய்யப்பெறுது "என் போடிணைக்க தொடர்பு அன்பேரடியைந்த வழக்கென்ப" என்றபடி, அவையெல்லாம் அன்போ டியைந்தனவாய் மே லான இன்பத்தையேசெய்து அக்கலக்கத்தினின்றும் என் னைத் தெளிவித்தன. ஆகலான் எனக்கு இப்பிறவியே வாவி தாம் (மேலான) இன்பமாம். ஆகவே இப்பிறவி எனக்கு இன்பத்தையே செய்யும் வண்ணம் செய்வாய் என்று வேண்டி கண்களினின்றும் ஆனந்தநீர்பொழிய, கைகளைச் சிரமேற்குவித்துப் பண்ணிசையின்மிருந்து அறிதற்கரிய பொருளும அப்பொருளுக்கமைந்த கருத்தும் அமைந் துள்ள "மடித்து ஆடும் அடிமைக்களன்றி" என்னும் திருப்பதி கம்பாடிப் போற்றிப் பணிந்தனா.

(கO அ) நம்பியாரூரர் திருப்பதிகம்பாடிப் பணிந்த போது ஆன்மாககட்கு சிற்றின்பம பேரின்பம் என்னும இர ண்டனுள் ஒன்றன்றி இரண்டையும் ஒருங்கே யளிக்கும் தமது கருணைதோன்ற அவ்விரண்டையும் அளிக்கவல்ல ஸ்ரீ பஞ்சாக்கரத்தையே திருமேனியாகக்கொண்டு ஒப்பற்றதா கிய பஞ்சகிருத்தியமென்னும் பெரியதாண்டவத்தை அன வரதமுஞ்செய்ய ஓரடியையூன்றி ஓரடியை எடுத்தவராகிய நடராஜப்பெருமான் முன்னேதடுத்து ஆட்கொள்ளப்பட்ட வராகிய சுந்தரமூர்த்திகள் கேட்கும்படியாக ஆகாயத்தினின் றும் ஓர் திருவுரக்கருளினர். அஃதாவது - மேன்மேல் மதித்

தும றித்து வருவதாகிய அலைகளென்னுங் கைகளால் முத்து களைக் கரையின்கண் எறியும் காவிரிநதிபாய்கின்ற அழகிய வயல்சூழ்ந்த திருவாரூரில் நீ நம்மிடத்து வரக்கடவா யென்று சொல்லியதாகும். இவ்வாறு ஆகாயத்தினின்றும் எழுந்ததாகிய ஓர்நாதத்தை சுந்தரமூர்த்திகள் கேட்டு அது போல் திருவாரூருக்குப்போகப் புறப்பட்டனர்.

(கoகூ - ககo) புறப்பட்ட நம்பியாரூரர் ஸ்ரீநடராஜப் பெருமான் திருவருள் மேற்கொண்டு சொல்லிய அவ்வாணை யைத் தலைமேற்கொண்டு முன் தலைமேல் குவித்திருந்த கை களை எடுத்து மார்பின்கண் அஞ்சலியாக வைத்துக்கொண்டு திருக்களிற்றுப்படியை விட்டு வெளியே வருவதற்குப் பிரி யா அன்பால் பலமுறையும் வணங்குவார். வணங்குந்தோ றும எம்பெருமானே! உன்காட்சியை நான் எங்ஙனங் காணு தொழிவேன். உனது ஆணையைக்கடந்து எங்ஙனம் நிற்கப் பெறுவேன். எனக்கு விடைதருவாய் விடைதருவாய் என்று பன்முறையும் வேண்டிக்கொண்டு வெளியேவந்து எப்பக்க மும் பொன்னொளிபரப்பும் பொன்னம்பலத்தை வலமாகப் பிரதக்ஷிணம் வந்து எதிரேநின்று வணங்கி வெளியேவந்து மேகமண்டலமும் தாழும்படி உயர்ந்த பொன்மலைபோலும் ஓங்கியிருக்கும் ஏழுநிலைகளையுடைய தெற்குக் கோபுரத் தைக்கடந்து சென்று அங்குநின்று அத் திருக்கோபுரத் தைச் சாஷ்டாங்கமாக வணங்கி அதுகடந்து தேரோடும் பெரியவீதியின்கண் வந்து அவ்வீதியையும் வணங்கி, அத்

லையுந் தாண்டி பலவகை வாசனைத்திரவியங்களும் நிறையப் பெற்று நறுமணங்கமழும் கடைவழியே சென்று எக்காலத்தும் அழிவின்றி விளங்கும் அந்தத் தில்லைப்பதியின்கண் உள்ள தெற்குவாயிலைக் கடந்து அப்புறம் நெடுந்தூரஞ் சென்று அங்குநின்று தில்லைஎல்லையை வணங்கி, கொன்றை மாலைசூடிய நீண்டசடையினை யுடைய நடராஜப்பெருமான் "ஆடும் ஆனந்த எல்லையில் தனிப்பெருங்கூத்தில் வந்த பேரின்பவெள்ளத்துள் திளைத்து, ஐந்துபேரறிவும் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையேயாக, குணம் ஒருமூன்றும் திருந்துசாத்துவிதமே யாகச்" செய்த திருவருளை மறவாமல் நினைப்பவராய்க் கொள்ளிடமென்னும் திருநதியைக்கடந்து அப்புறம்வந்தனர்

(கககக-ககஉ) அப்போது ஆரா அன்பால அடியாரெல்லாம் விடைபெற்றுச்செல்ல அறியாது போற்றிபோற்றி என்று போற்றி நிற்க, சுந்தரமூர்த்திகள் சீகாழிப்பதியை நோக்கி வரும்பொழுது இப்பதி பசுதருமம பதிதருமமாகிய எல்லாத்தருமங்களையும் தளராது வளர்த்த மாதாவாகியஉமாதேவியார் கொடுத்தருளிய ஞானமிருதமாகிய திருமுலைப் பாலைஉண்டுவளர்ந்த எம்பிரான்சம்பந்தன் அவதரித்தருளும் பெரும்பாக்கியத்தை பெற்றுள்ள கழுமல வளநகரமன்றோ இதனை மிதித்துச்செல்லேன் என்று அப்பதியின் புறவெல்லையின் கண்ணே நின்று வணங்கிப்பின் அப்பதியைப் பிரதக்ஷிணஞ் செய்து வரும்போது உமாதேவியை இடப்பாகத்

யில் வைத்தவனும் மால்விடையை யூர்தியாகக் கொண்டவனுமாகிய இறைவன் எதிரே காட்சிகொடுத்தனன்.

(கக௩) தெள்ளிய அலைகளையுடைய கடலில் ஊழிக்காலத்தில் மூழ்கிப்போகாது தோணிபோல் மிதக்கும் தன்மைவாய்ந்த சீகாழியாகிய தோணிபுரத்தில் வீற்றிருக்கும் பெருமானார் விருஷபாரூடராய் உமாசஹாயராய்க் காட்சி கொடுத்தமாத்திரத்தில் வன்றொண்டப் பெருமானார் உள்ளமெல்லாம் நிறைந்த பேரன்பினால நிறையப்பெற்றவராய் நின்றுவணங்கி என்னைத் தடுத்தாண்டுகொண்ட இறைவனே! உன்னை நான் கைலையில் அந்நாளிற் கண்டபடியே இந்நாளிலும் இத்தோணிபுரத்திலும் உமாதேவியுடன் நீ பேருருக்கொண்டிருக்கக் கண்டுகொண்டேன் என்னும் திருவுளப்பாங்கை அடியாரெல்லாம் அறியும்வண்ணம் கயிலைநாதனே! என்னை உலகததார் பிறந்தான் இறநதானென்று சொல்லாவண்ணம் வருத்து உனது அருளைத்தநத என்தலைவனே! அங்கு மாதினைமதித்து ஓர்பாகததில் கொண்டுவிளங்குவதுபோல் இங்கும் விளங்குகின்ற மணியே! வருபுனல் சடையிடைவைத்த எம்மானே! ஏதிலேன் மனத்துக்கு ஓர் இரும்புண்ட நீரானே! எண்வகைப்பட்ட வடிவினையுடைய ஒருவனே எங்கள்பிரானே! காதில்வெண்குழையனே (உன்னைக்) கடல்கொளமிதந்த கழுமலவளநகர் கண்டுகொண்டேனே என்று பண்ணிசைபயிலும் திருபபதிகத்தைப் பாடியருளினர்.

(ககசு - ககஅ) வேதங்களெல்லாம்" நாங்கள் உன்னைக்கண்டு போற்றுமீ எதிரேநிற்குங்காலம் எக்காலமென்று ஓலமிடும் இறைவன் தாம் வேண்டுங் காலந்தோறும் எதிரேநின்று தம்மால் ஓதப்படும் ஓத்துக்களைக் கேட்டருளும் கருணையாளன் மறைந்தனன், மறையவும் அந்தோ! காணுதொழிந்தேனே, என்செய்வினை யறுத்திடும் செம்பொனை, அம்பொனொருததனை, அழும்மலர்க்கண்ணினை அடியவர்க்கல்லால் அறிவரிது, அவன் திருவடியிணையிரண்டும் கழுமலவளநகர் கண்டுகொண்டேனே. அவன் எங்குற்றான் என்று சிறிதுநேரம் வெருட்சிகொண்டு அந்நேரத்திற்றானே அவ்வெருட்சியினின்றும் நீங்கி நமமை நடராசப்பெருமான் "திருவாரூருக்கு நம்பால்வருக" என்று கட்டளையிட்டனனாகலான் அதுபோலும் நாம் அங்குவருவதறகாகவே இத்தோணியப்பனும அங்குஎழுந்தருளியிருப்பான்போலும் என்று தெளிநது திருவாரூருக்குப்போக விருப்பங்கொண்டு பெருக்கினையுடைய கடல்சூழ்ந்த சீகாழிப்பதியை வணங்கி அப்பாற்சென்று திருக்கோலக்காவென்னுந் திருப்பதியை வணங்கி அங்கு திருப்பதிகம்பாடி, அதனைக்கடந்து வண்டுகள் ஒலிக்கும் மலர்கள்நிறைந்த சோலைகள்சூழ்ந்த திருப்புன்கூருக்குச்சென்று அங்கெழுந் தருளியிருக்கும் சிவலோகநாதனைக்கண்டு அடங்காத பேரன்புமீதூர்நது திருவடிகளில் வீழ்ந்துவணங்கி திருப்பதிகம்பாடி, அப்பதியைவிட்டு மாணிக்கும் காதலத்தையுடைய இறைவனார் மகிழ்ந்து எழுந்தருளியிருக்கும் திருநீடூர்முதலிய பலதிருத்தலங்களை

யும் கண்டுவணங்கி, நறுமணங்கமழும் மலர்கள்நிறைந்துள்ள தடாகங்கள்சூழ்ந்த காவிரியின் கரை வந்தணைந்தனர்.

நறுமணங்கமழும் மலர்கள் அலைந்துசெல்ல, முத்து முதலிய மணிகளையும் பசியபொற்கட்டிகளையும் கரையில் கொழித்துக்கொண்டு பரய்தலையுடைத்தாகிய பெரியகாவிரிக்கரையை வந்தணைந்த நம்பியாரூரர் அந்தக்காவிரித்தீர்த்தத்தில் திருமேனிபடிய மூழ்கித் திருநீறுபூசி தமது பெருமானுராகிய மயூரநாதர் வீற்றிருக்குந திருமயிலாடுதுறையை வணங்கி, கேடுதலில்லாத சிறப்பினையுடைய திருவம்பர் மாகாளத்துக்குச்சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் காள கண்டேசரை வணங்கி அப்பதியைவிட்டு, மின்போலும் ஒளிவிடும சிவந்த சடையினையுடைய சிவபெருமானுக் கினிய திருப்புகலூருக்குப் போய் சந்நிதானத்தின்முன்னே நின்று பணிந்து போற்றினர். போற்றியபின்னர் நடராஜப்பெருமான் அருளிய திருவாக்கைநினைந்து திருவாரூருக்குப் போயினர்.

திருவாரூரக் கெழுந்தருளல்.

பீதாம்பர வுத்தரீயத்தோடு முப்புரிநூல் அணிந்த மார்பினையுடைய நாவலூரர் திருவாரூரைநோக்கிப் போன போது, கங்கைவாழும் திருமுடிமேல் சந்திரனைத் தரித்தவராகிய தியாகேசன்—தேரோடும் பெரிய வீதியின்கண்ணே வாழ்கின்ற அடியார்கள் கனவின்கண்ணே சென்று அன்பர்காள்! நம் ஆரூரன் தில்லையின்கண் வந்தபோது நாம் நீ நம்

முடைய திருவாரூருக்கு வருவாயென்று அழைக்க, அவன் அடங்காத ஆசையோடு இப்பொழுது நம்மிடம் வருகின்றான். ஆகையினால் நீங்களனைவரும் மிக்ககளிப்புடன் அவனை எதிர்கொள்வீர்கள் என்று அருள்செய்தனர்.

தியாகேசன் அழைக்கச்சொல்ல அடியார்கள் எதிர்கொள்ளல்.

(கககூ) தமக்கு மேலொரு பிரானை யறியாத இறைவன் ஆரூரரதுவருகையைச்சொல்ல திருவாரூரிலவாழும் அடியார்களெல்லாம் மற்றையாவரையுங் கூட்டி நமரங்காள்! நமது தியாகேசன் எங்கள் கனவின்கண்ணே வந்து நம்மாரூரன் நாமழைக்க நம்மூருக்கு ஆராதகாதலுடன் வருகின்றான் நீவிரெல்லாம் மகிழ்ந்து எதிர்கொள்வீரென்று கட்டளையிட்டனன் என்றுகூறி அன்பர்காள்! நமது பெருமானாருடைய அருள் இருந்தபடி இவ்வாறாயின் இனி நமக்குப் பிரானாயுள்ளவர் அவரேயன்றி வேறுயாவர் என்று எண்ணத்தக்கவராயினேமன்றே. ஆதலே நமது தியாகராஜப் பெருமானுக்கு உகந்தவராகிய அப்பெருந்தகையை நாம பிரானாராகக் கொள்ளப்பெற்ற நன்மைக்கு நாம்செய்யும் கைம்மாறு யாதுளது ஒன்றும் இல்லையாயினும் தியாகேசன் கட்டளையிட்டபடி நாமனைவரும் பூரணகும்பமுதலிய சகலவுபசாரத்தோடு தியாகேசனுக்குரிய சகலவாத்தியங்களுமுழங்க தேவலோகம் இங்குவந்ததோ என்று அவரெண்ணும்படி எதிர்கொள்ளப் போவோமென்று அப்பொழுதே புறப்பட்டனர்.

(கஉ0) புறப்பட்ட அவர்கள் மாளிகைகளிலும் மண்டபங்களிலும் பெரிய துவசங்கள் நெருங்கியிருக்கவும், ஸ்தம்பங்கள்தோறும் பெரியதோரணங்களும் தழைந்துள்ள கமுகமரங்களும் மாவிலைகளும நீண்ட இலைகளையுடைய வாழைமரங்களும வரிசைவரிசையாய்த் தழைந்து சூழ்ந்திருக்கவும் கட்டினார்கள். உயர்ந்திருக்கும் நுழைவாயில்கடோறும நீர்நிறைந்துள்ள பூரணகும்பங்களும் ஒழுங்காக நீண்டிருக்கும் இரத்தினவிளக்குகளும் வரிசையாகவைத்தார்கள் ஒளிவீசும மணிகளா லிழைககப்பட்ட திண்ணைகளில் பரிசுத்தமாகிய நல்ல சந்தனக் குழம்பை அப்பி (அதன்மேல்) மாசற்ற பொரிகளும் பொற்சுண்ணமும் குளிர்ந்தமுத்தஙகளும ஆகிய இவைகளைப்பரப்பி (அதன் பின்னர்) மகரந்தங்களைச் சிந்தும மலர்ந்த மலர் மாலைகளால் குளிர்ந்திருக்கும்படி பூப்பந்தல்களைச் செய்து, வீதிகளில் நுட்பமாக மேலெழுந்துபரவும் தூசுக ளடங்கும்படி நறுமணங்கமழும் பந்நீரை நன்றாகத்தெளித்தார்கள்.

(இவையெல்லாம் செய்தபின்னர்) மங்களகரமான கீதங்கள் அங்கங்கும பாடிக்கொண்டிருக்கவும், பேரிகைமுதலிய வாத்தியங்கள் மேகமுழக்கம்போல் முழங்கிக்கொண்டிருக்கவும், நாட்டியஞ்செய்தற்குரிய மேடைகள்தோறும் சிவந்த கயன்மீன்போலுங் கண்களையும் நல்லஆபரணங்களால்அலங்கரிக்கப்பெற்றஅழகினையுமுடைய நாடகப்பெண்கள் நடனஞ் செய்துகொண் டிருக்கவும் (அமைத்து அதன்

பின்) நங்கள் பிரான் திருவாரூரில் வாழும் அடியவர் திருக்கூட்டத்தாரெல்லாம் (அத்திருவாரூரை ஆசையோடு நோக்கிவரும்) நம்பியாரூரரை முன்னே எதிர்கொண் டழைக்க நகர்ப்புறத்திலிருக்கும் பொலிவினையுடைத்தாகிய பெரிய மதிலின்புறத்தே வந்தார்கள்.

ஆரூரர் அடியார்களை இறைவனை வினவ ஏவுதல்.

(௧௨௨) (வந்த அடியார்குழாங்கள் நம்பியாரூரரைக் கண்டு) எதிர்கொண்டுவந்து வணங்கினார்கள். வணங்கிய அவர்களுக்கு எதிரே வன்றொண்டபெருமானார் இருகரங்களையும் * அஞ்சலியாகக் குவித்துக்கொண்டே வந்து வீதியினுள்ளே சென்றனர். சென்றபோது அங்குசெய்திருக்கும் அலங்காரங்களையும் நிருத்த கீத வாத்திய வோசைகளையுங் கண்டுகேட்டு திருவுள்ளமகிழ்ந்து திருத்தொண்டர்களைக் களிப்புடன்பார்த்து அன்பர்காள் இவ்வாரூர்தான் எந்தையிருக்கும ஊராக அறிகின்றேன், ஆகலின் நீவிரும் அவர் ஏவிய கட்டளையை மேற்கொண்டு வந்தவர்களாகக் காணப்படுகின்றீர்கள். ஆகவே, எம்பெருமான் என்னை

* தம்மைக்கண்டுவணங்கிய அடியார்களைத்தாமும் அவர்களுக்கு முன்னே வணங்கும் ஆரா அன்புடைமையுடையராயினும் அங்ஙனம் வணங்காதொழிந்தது அவர்களைக்கண்டபொழுதே அவர்கள் எதிரில் வணங்கினோம் வணங்கவில்லை என்கின்ற எண்ணத்தை யெண்ணுதற்கில்லாதொழிந்தது. எனவே அவர்கள் காட்சியியப்பு [illegible]த்தைச் சிறப்புடைத்தென்று குறித்ததாயிற்று.

அழைக்கச்சொன்னபோது நம்பியாரூரனை நாம் இங்கு ஆளவேண்டி யிருக்கிறதென்றும் கட்டளையிட் டிருப்பா ரன்றோ. அதனையேன்சொல்லாம லிருக்கின்றீர்கள். சொல் லாதிருப்பதால் அவன் சொல்லவில்லைபோலும் இனியே னும் நீங்கள்முன்சென்று கேளுங்கள் என்னும் திருவுள் ளப்பாங் கமைந்த சந்தஇசையோடு கூடிய பதிகங்களைப் பாடிக்கொண்டே தமது பெருமானாகிய தியாகேசன் திருக் கோயிலின் வாயிலைவந்து சார்ந்தார்.

(கஉ௯) நம்பியாரூரர் அப்போது அருளிய பதி கத்தில் அமைந்துள்ள திருவுள்ளக்கிடையாவது—அன்பர் காள்! எநதையாகிய இறைவன் இருப்பதாகிய ஊர் இத்திரு வாரூர் என்பதில் எமக்கையமில்லை அவ்விறைவர் இங்கு எம்மையாள்வரோ என்பதில மாத்திரம் ஐயமுளது - ஆக லின் அவ்வையம் அகல நாம் சந்நிதானத்தைவந்து அணுகுவ தற்குமுன் நீவிர் முன்சென்றுகேளீர் கேட்டு எம்மை எதிர் கொள்ளச்சொன்ன கட்டளையை நாம்வருவதற் குமுன் வந்து சொன்னதுபோல் எதிரேவந்து சொலலுங்கள் என்ப தைப்பற்றிய திருவாக்குகளேயாம். அவையாவன,—

(அடியவர்காள்!) எம்மை எதிர்கொள்ளச்சொன்ன இறைவன், காலையும் மாலையும் மற்றெப்பொழுதும் கரை யுங்கட்டுலும் மலையும் * உரையில் விரவிவருவான், (அவனே) உருத்திரலோகத்தொருவன், வரையின் மடமகள்கேள்வன்,

* சொல்லுவதற்குமுன் விரைந்துவருவான்.

வானவர் தானவர்க் கெல்லாம் அரையன், (இங்ஙனமான பெருஞ்சிறப்பினை யுடையனாயினும், இருப்பது இந்தஆரூர், ஆகலின் நீவிர்சென்று ஆரூரரே! தேவரீர் நம்பியாரூரனை ஆள்வீரா! என்று கேளுங்கள்.

(நீங்கள் அவ்வண்ணம கேட்கும்போது ஆரூரன், நம்பியாரூரன் தன்மையை நீங்கள் அறிந்துசொன்னாலன்றோ ஆள்வோமென்ற செய்தியை உங்களுக்குச் சொலவோம் என்று ஓர்கால் கேட்பாராயின் அன்பர்காள்) எமது தன்மை உங்களுக்குத் தெரிந்திருகக வேண்டுமென்றோ. அதனைக் ...ளுங்கள்.

(எம்மையன்) தனியனென்று எள்கியறியேன், தமமைப் பெரிதும உகப்பன், (எம்மால் உகக்கப்பட்ட அவ்வெம்பெருமானை) முனிபவர் தம்மை முனிவன், (எம்மைப்போனும் அவ்வெம்பெருமானை யுகப்பவரை) முகம்பலம்பேசி மொழிவேன், நீதியில் ஒன்றும வழுவேன், வழுவுவாரை நிற்கண்டகஞ் செய்து வாழ்வேன், வேதியர்தமமை வெகுளேன், வெகுண்டவர்க்குத் துணையாகேன். மிண்டர்க்கு மிண்டலாற் பேசேன், மெய்ப்பொருளன்றி யுணரேன், இங்ஙனமான தன்மையனென்று கூறுங்கள். அங்ஙனங் கூறும் பொழுது அவ்விறைவன் முற்றுமுணர்ந்த பெருமானாகலின் அவ்வாரூரனிடத்து வேறு தன்மைகள் இலவோவென்று வினவுவர். அவையும் நீங்கள் அறிந்திருக்கவேண்டுமன்றோ அவைபல, அவற்றைக்கேளுங்கள்.

சொல்லிற் குலாவன்றிச் சொல்லேன் (என்னைத்) தொடர்ந்தவர்க்குந் துணையல்லேன், கல்லின் வலியமனத்தேன்,—நெறியும அறிவும் செறிவும் நீதியும் இவைகளில் நான் மிகப்போலலேன், மிறையும் தறியும் உகப்பன் வேண்டிற்றுச் செய்துதிரிவன், அருத்தம் பெரிதும் உகப்பன், அல்லலையேன் அலந்தார்கள் ஒருத்தற்குதவியே னல்லேன், உற்றவர்க்குந் துணையல்லேன், பொருத்தம் மேலொன்றும் இலாதேன்,—சந்தம் பலவறுக்கிலலேன், சார்ந்தவர் தம்மடிச்சாரேன், நெண்டிக் கொண்டேயுங் கிலாய்ப்பன்,— நமர் பிறர் என்பதறியேன், நான்கண்டதே கண்டுவாழ்வேன், தமரம் பெரிதும் உகப்பன், தக்கவாறொன்றும் இலாதேன், ஆசை பலவறுக்கில்லேன், ஆரையும் அன்றியுரைப்பேன், பேசிற் சழக்கலாற் பேசேன், மனந்தன்னால் பிழைப்புடையேன் நிச்சயமே யிதுதிண்ணம். இவ்வாறான தீங்கையும் உள்ளானென்று கூறுங்கள்.

நமரங்காள்! யாம் இவ்வாறான தீக்குணங்களையும் உடையோமாயிருத்தலினாலன்றோ "எம்மையும் ஆள்வரோ" என்றோம். சிவநேசச்செல்வர்காள்! எம்மை வாவென்றழைத்த எம்பெருமான்பால் நீங்கள் எமது குணங்களையும் குற்றங்களையும் யாம்சொல்லியவாறு சொல்லும்பொழுது எமக்குள்ள குற்றத்தைக்கொள்ளாது குணத்தையே கொள்வாராயின் எம்மையாள்வது அவர் சொல்லாமேயமையும். குற்றத்தையே கொள்வாராயின் அப்பொழுது யாம் இபபோது சொல்லுவதைச் சொல்லுங்கள் கருணைசெய்வான்.

அவையாவன,—தேவரீரால வரவழைக்கபபட்ட ஆரூரர்;—'கனிகள் பல வுடைச்சோலைக் காய்க்குலை யீன்றகமுகின், இனியன் இருப்பதும் ஆரூர் அவரெம்மையும ஆள்வரோ கேளீர்' என்றும், கற்றபெரும்புலவாணர்—அல்லல்பெரிதும் அருமறை யாறங்கமோதும், எல்லையிருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோகேளீர், என்றும், பிறையும் அரவும் புனலும் பிறங்கிய செஞ்சடைவைத்த, அறையனிருபபதும் ஆரூர் அவரெம்மையும் ஆள்வரோ கேளீர், என்றும், சோதியிற் சோதியெம்மானைச் சுண்ணவெண்ணீறணிந்திட்ட, ஆதியிருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர், என்றும், புற்றெடுத்த திட்டிடங்கொண்ட அருத்தனிருப்பதும் ஆரூர் அவரெம்மையும் ஆள்வரோ கேளீர் என்றும், முந்திப் பெருவிடையேறி மூவுலகுந் திரிவானே, கந்தங் கமழ்கொன்றை மாலைக் கண்ணியன் விண்ணவரேத்தும், எந்தையிருப்பதும் ஆரூர் அவரெம்மையும் ஆள்வரோ கேளீர் என்றும், பண்டங் கிலங்கையர் கோனைப் பருவரைக் கீழடர்த்திட்ட, அண்டனிருப்பதும் ஆரூர் அவரெம்மையும் ஆள்வரோகேளீர் என்றும், குமரன் திருமால் பிரமன் கூடிய தேவர்வணங்கும், அமரனிருப்பதும் ஆரூர் அவரெம்மையும் ஆள்வரோ கேளீர், என்றும், ஓசைபெரிதும் உகப்பன் ஒலிகடல் நஞ்சமுதுண்ட, ஈசனிருப்பதும ஆரூர் அவரெம்மையும் ஆள்வரோ கேளீர் என்றும் கூறுவனவேயாம்.

அன்பர்காள்! இவ்வாறான எமது விண்ணப்பத்தைச்
ன்னர் தியாகேசா! தேவரீரும் அவரை வாவெ

ன்றீர், எங்களையும் எதிர்கொண்டழைமின்கள் என்றுங் கட்டளையிட்டவர் - அதுபோல உனதடியோங்களாகிய நாங்களும் எதிர்கொண்டழைக்க அந்தவன்றொண்டன் திருவாரூக்கன் திருவாயிலை வந்தணுகினான் ஆகலின் தியாகேசனென்னும் பேருடையீரே அவன்வேண்டும்படியே ஆள்வோமென்று அருள் செய்வீராக. எங்கள் வேண்டுகோளுமஃதே என்மின்கள் அதனைக் கேட்பீராயின் நம இருவர் வேண்டுகோளையும மறுக்கான். நம்மீசன் தியாகேசன,—அன்பர் வேண்டிய வேண்டியாங்கு வேண்டிகொடுக்கும் அருளாளன' என்றருளி அவர்களை ஏவினார்.

(கஉச) பின்னர விண்ணுலகளவும நீண்டிருக்கும திருவாயிலைத் தெரிசித்துப் பூமியில திருமேனிபொருந்த பஞ்சாங்கத்தால வணங்கி உளளேசென்று தேனையுடைய கற்பகமலர்மாலைகளைத் தூக்கியிருக்கும் தேவாசிரிய மண்டபத்தைக்கண்டு வணங்கி எழுந்து ஊனையும் உயிரையும் ஒருங்கேயுருக்கவல்ல அன்பு மீதூர்ந்து வர இருகரங்களையும சிரமேற்குவித்துக்கொண்டு நறுமணங்கமழும கொன்றைமாலையணிந்த புற்றிடங்கொண்ட பெருமான் கோயில்கொண்டிருக்கும மூலட்டானத்தைச்சூழ்ந்த திருமாளிகையின் வாயிலையடைந்தருளினார்.

(கஉ௫-கஉசா) அடைந்து புற்றை இடமாகக்கொண்டகாலம் இன்னகற்பம் என்று அளவிடக்கூடாத * புராணனை

*ஒருவனு யுலகேகத்தநின்ற நாளோ வோருருவேமூவுருவமான நாளோ, கருவனுய்க் காலனைமுன் காய்ந்தநாளோ காமனையுங்கண்

சராசரமாயிருக்கின்ற எல்லாவுயிர்களும் எல்லாச்சமயிகளும் வந்து பற்றுதற் கிடமாயுள்ள பரம்பொருளை, உமாதேவியார்க்கு ஓர்பங்குடையவனை, தாமரைமலரைக் குடிபுகும் இடமாகக்கொண்டு செல்வமளிக்கும் இலக்குமிதேவி தனது திருவடித்தாமரையைச் சரண்புகும் இடமாகக்கொண்டு அன்பினால் அருச்சனைசெய்ய அத்திருமகட்கு அருட்செல்வ மளிக்கு முதலவனைப் பூமியில் சாஷ்டாங்கமாக வீழ்ந்துவணங்கி உடம்பெடுத்ததனால அடையவேண்டிய அன்பின் பயனாயுள்ள அன்பின் விளைபயனை மெய்ம்மையாகப் பெற்றவராகலின் தம்முடைய உள்ளத்தினுள்ளே ஆசையானது பெருக, திரியாங்கமாகிய மனவாக்குக் காயங்கள் உருகி, புற்றிடங்கொண்ட புராணனுக்கு நாம் என்செய்யக்கடவோமென்று அலைந்து, முன் சாஷ்டாங்கமாக வணங்கியதே யல்லாமல் மீண்டும் அஷ்டாங்க பஞ்சாங்கமாகவணங்கி அப்பெருமானிடத் துண்டாகிய ஆசையானது முற்றுப் பெறுதலை யடையாமல் மேன்மேல் வளர்ந்து அந்தஆசை வெள்ளத்துள் ஐம்பொறிவழியே செல்லும் ஐம்புலன்களும் ஒன்றாகக்கூடி பூங்கோயில மேயபிரானது திருவடியை

---

ழலால் விழ்ததகாளோ, மருவனும்மண்ணும்விண்ணும் தெரித்த காளோ மான்மறிக்கை யோகியோர் மாதோர்பாகர், திருவினன் சேர்வதற்கு முன்னே பின்னே திருவாரூர் கோயிலாக்கொண்டகாளே. இதனால் காலங்கடந்த தென்பதும் அனாதியாயுள்ள க்ஷேத்திரங்களுள் சிறப்புடைத்தாகிய இது அனாதியென்பதும் அறியக்கிடக்கின்றன

அடையப் பெற்றதனால் உண்டாகிய பேரின்பவெள்ளத்துள் மூழ்கிநின்று இனிய இசையின் வளமையோடுகூடிய பதிகத்தை ஓதியருளினார்.

(கஉ௭) நம்பியாரூரர் அன்புமேலிட்டுத் திருப்பதிகத்தை இசையுடன் ஓதிவரும்போது புற்றிடங்கொள் மன்னவனாராகிய இறைவனார் அப்பதிகத்தை யிடங்கொண்டு பாட்டுடைத் தலைவராய் அருள்மேலிட்டு ஆகாயமாகிய வெளியிடத்தையே தமது திருவாக்காகக் கொண்டு தமக்குண்டாகிய திருவருட்பெருக்கை வெளியிடத் தொடங்கினார். அஃதாவது ஆரூர! என்னன்ப! என்சுந்தர உனக்கு நம்மைத் தோழமையாகத்தந்தனம் ஆகலின் நாம் முன்பு வேள்வியில் தோண்டுகோண்ட அன்று நீ கொண்டகோலம் என்றும் புனைந்து கடல்சூழ்ந்த இம்மண்ணுலகில் நின் வேட்கைதீர வாழ்மண் மேல்விளையாடுவோய் என்று ஆரூரர்கேட்கும்படியாக அசரீரி வாக்காய் வெளியிட்ட அருள்வாக்கேயாம

(கஉ௮) வன்றொண்டப்பெருமான் அசரீரிவாக்கைக் கேட்டவுடன் அநாதி நித்தியனாகிய இறைவனை நோக்கி அன்று ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட்டு என்னை அடிமையாளாகக் கொண்டநீ இன்று என்றுந் திருமணக்கோலத்துடன் நான்உனக்கு என்றுந்தோழனாய் உல்லாசத்துடனிருக்க விரும்பிய விருப்பம் என்னையோ! இது என்னகருணைப்பெருக்கோ! என்று ஆராக்காதலோடு வீழ்ந்து வணங்கி அன்று நாவலூரில என்னை யாட்கொண்ட

வந்தவிருந்தவேதியனே! எனக்குக்கிடைத்தற்கரிய சிவமணி யே! ஒளியுடைய கயல்போலுங் கண்களைக்கொண்ட உமா தேவிபங்கனே! என்றுபோற்றி, மீண்டும் என்னுரூர் அமர்ந்த அருமணியே! அன்று என்னையும் எனதுகலியாணத்தையும் ஓர்பொருளாக மதிக்காதவனும் வழக்காடியநீ இன்று என்னையும் என்னுடையகலியாணத்தையும் பெரும்பொருளாகமதித்து நீ அன்றுபோல் என்றும மணக்கோலத்துடன் இருப்பாயென்று சொன்னதுமன்றி நீ உன்னுசைதீர இம் மண்ணுலகில் விளையாடுவாய் என்றும் அருள்செய்தனையே, * அது உன்பெரியகருணையன்றே என்று அடங்காக்கருணையை நாடிநாடி அடங்கா இரக்கத்துடன் கூறியருளினர்.

(௧௨௯) (இவ்வாறு மனங்கரைந்து கூறிய பின்னர்) அடங்காத ஆசைகொண்டு ஏகாங்கத திரியாங்க பஞ்சாங்க அஷ்டாங்கமென்றுசொலலபபடுமஅம்முறையினுலெல்லாம் பன்முறையும் வணங்கி தமமுளளதது நிறைந்த பெருமகிழ்ச்சியோடும் (அடியார்பால் இறைவனுக கிருக்கும் கருணைத திறம் இத்தன்மைத்தாமென்று இனி யடியராமவிருப்பினையுடையா ரெல்லாம் காண வெற்றிமிகுநத சிறநத ஏறுபோல பெருமையுடன்நடநது மூலட்டானத்தைக்கடநது வீதிவிட

* என்செயலை அன்பர்கள் கண்டு அசசெயலெல்லாம் உனது கருணைப்பெருக்கு இருந்தவா றென்னே என்று உன்கருணையையே நினைத்து என்செயலென்று ஒன்றையும் நினையா திருத்தற்கோ என்று அருளியதாமென்க.

ஙகப் பெருமானாகிய தியாகேசன் சந்நிதானத்துக் கெதிரே சென்று வீழ்ந்துவணங்கிப் போற்றிப் பெருவாழ்வடையப் பெற்றவராய், சூழ்ந்திருக்கும் திருமாளிகைப்பத்தியை வலமாகவந்து வெளியேவநதனர். (வந்தமாத்திரத்தில தியாகேசப்பெருமான் ஆரூரருக்குக் கொடுத்ததாகிய பெரும் பட்டப்பெயர் உலகமெல்லாம் அறிய அடியாரெல்லாம் கட்டியம் கூறுவாரைப்போல பெரியவோசையுடன் தம்பிரான்தோழனார் வருகின்றார் என்று ஆனநதக்களிப்புடன் கூறினார்.

(கஅ0) ஆனநதககளிப்புடன் பாடும் வண்டமிழ் நாவலர் தம் பெருமானாராகிய ஆரூரர் நீலகண்டனாகிய இறைவனுடைய திருவருளா (ஆணையினா)ல் திருமேனியில் கொள்ளவேண்டிய மணககோலமெல்லாம பொலிவுபெற்றிருக்க ஆதிசைவப் பிராமணாகளுக் குரித்தாகிய சுந்தர்வேடத்தைத் தாஙகினவராய் அதனோடு நறுமணங்கமழும் சந்தனப்பூச்சும மலர்மாலை மாணிககமாலை முதலிய மாலைகளும் அலங்காரமாய் மிகச்சிறப்புடன் விளங்க இவர் தவவேநதரென்று யாவரும் சொல்லும்படி தெய்வமணியாகிய தியாகேசமணியைப் பாடிக்கொண்டு மகிழ்ச்சியில் மூழ்கித் திளைத்துக் கோயிலைவிட்டுப போவாராயினார். சுந்தரமூர்த்திகள் செய்தியிங்ஙனமிருக்க. அத்திருவாரூரின்கண் அவதரித்திருக்கும் பரவையாரது வரலாற்றைக் கூறுவாம்.

(கஅக.) சுந்தரவேடங்கொண்ட சுந்தரமூர்த்திகள் திருவாரூருக்கு வருவதற்குமுன்னரே, தலைமைபெற்றுள்ள பே

ரியகயிலேயின்கண் வீற்றிருந்தருளும் முதல்வர்க்கெல்லாம் ஆதிமுதல்வராகிய இறைவரது இடப்பாகத்தை யுடைய உமாதேவியாருக்கு அகத்தொண்டுசெய்யும் பூக்களைமுடித்த கூந்தலையுடைய அனிந்திதை கமலினியென்னும் இரண்டு சேடியர்களுள் ஒளிமிக்க ஆபரணங்களைத் தாங்கிய தனங்களையுடைய கமலினியார் அங்கு அவதாரஞ் செய்தனர்.

(கஙஉ - கஙங) யாவரிடத்து அவதாரஞ் செய்தனரால், தனக்கொரு நாயகனில்லாத உருத்திரனைப்போல் இவ்வுலகில் தமக்கு நாயகனைக்கொள்ளாமல் உருத்திரநாயனை நாயகமாகக் கொண்டிருக்கும் உருத்திரகணிகைமாதர்களுடையகுலத்தில் பிரகாசிக்கும் முத்துத்தோன்றினாற்போல அவதாரஞ்செய்தனர். அவதரித்தபின்னர் மேன்மைமிக்சிறந்த பெரியோர்கள் கூடி இளம்பிறையணிந்த சிவபிரானுக் குரிமையாகிய திருவாதிரை நக்ஷத்திரங்கூடிய நல்ல நாளில் சகலமங்கலங்களுடன் பரவையாரென்று நாமகரணஞ்செய்து அப்பருவத்தில் காக்கப்படும் தெய்வங்களைக் காக்கும்படி அப்பரவையார் இனத்தவர்கள் வேண்டிக்கொண்டு அதன் பின்னர் தாலப்பருவம், செங்கீரைப்பருவம், சப்பாணிப்பருவம் முதலாகச்சொல்லப்பட்ட பருவந்தோறும் செய்யப்படும மங்கலவிழாக்களும் செய்துவந்தனர். (அதுபோலும்முறையே) மேலோர்களெல்லாம் செங்கமலவாசினியாகிய இலக்குமிதேவியே இங்குவந்தாளென்று தங்களுள்ளத்தில உதிக்கும் உதிப்பினால் மகிழ்ச்சி யதிகரிக்கத் தக்கமங்கைப்பருவத்தை யடைந்தனர்.

(அத்தளர்நடைப்பருவத்தில்) கண்டோரெல்லாம் இப்பரவை இளம்பருவத்தையுடைய ஓர்பெண்மானே, அன்றி தெய்வலோகத்தில் கற்பகமரத்தில் அரும்பும் இளமையான ஓரரும்போ, அதுவன்றி அக்கற்பக மலரிலுள்ள வாசனை பொருந்திய தேனினது இளம்பதமோ, அதுவுமன்றி அலை வீசுகின்ற கடலின்கண்ணுள்ள பவளக்காட்டுள் காணப்படும் ஓர் இளங்கொடியோ! அதுவேயுமன்றி, ஒளியினையுடையசந்திரனது ஓரிளங்கலையோ! இவையாவுமன்றி மன்மதன்தான் இளம்பருவத்திற் கற்றற்கிருந்தமிகவும் இளமையாகிய ஓர் கருப்புவில்லோ! என்று ஐயங்கொள்ளற்குரிய பருவத்தையுடையளாயினள்.

இவ்வாறு யாவராலும் நாடத்தகும் இனிய அழகானது நாளுக்குநாள் வளர்ந்தோங்கவும், மென்மையாகிய கழற்காயும், பந்தும், அம்மனைக்காயும், ஊஞ்சலும், இதுமுதலியவற்றை ஆடும்வகையும், இந்த ஆட்டங்களில் அவ்வாட்டங்களுக்குரிய இன்னிசைப் பாடல்களைப்பாடும் வகையும் இவையெல்லாமல்லாமல் தங்கள் முதல்வியாகிய உமாதேவியாரது திருவடிகளைக் கூடுதற்குக் காரணமாகிய பாடல்களை அத்தேவியார் மனமுருகும்படி அன்புடன்பாடும் ஓர்கொள்கைக்குறிப்பும் அப்பரவையார்பால் தோன்றின.

(கஉசு) அப்பரவையார்க்கு ஐந்துவயதுடைய குழந்தைப்பருவம் இதுவாகும். அதற்குமேல் வரக்கடவதாகிய பேதைப்பருவம் வரலாயிற்று. அதுபோகவே, கோங்கின்

அரும்புகள் தோல்வியடையும்படி தனங்கள் உயர்ந்தன. (அவ்வுயர்வு எதுபோல் இருந்ததெனின்) மன்மதனுடைய திரவியக்குவையல் உயர்ந்திருப்பனபோன்றிருந்தன. (அவை ஏன் உயர்ந்திருந்தனவெனின்! மன்மதன் தனமாகக்கொள்ளும் தனங்களிலுள்ள அழகை வேண்டியமட்டும்) அள்ளிக் கொள்வதற்கு மிகவும் உயர்ந்திருந்தனபோலுமாம். (இதுவுமன்றி) பரவைநாச்சியார் முன் பார்வதி தேவியாருக்குத் தோழியாயிருந்த அக்காலத்தில் தமக்குள்ள பருவத்தன்மையினுண்மையும் இக்குறிப்பான் உணரக் குறிப்பிப்பது போலுமாம்.

(கஅஎ) மன்மதன் தனக்கு வைப்பென எண்ணுமாறு தனங்களைப் பெற்றுள்ளாராகிய பரவையார், செல்வமெல்லாம் ஓங்கியுள்ள திருப்பூங்கோயிலுள் வீற்றிருக்கும் * ஒருவரது பூங்கழலே மிகக அன்போடும் வணங்குவதற்கு நாள் தோறும போகும நியமம உடையவராகலான் அதுபோலும் ஓர்நாள் தமக்குரிய தோழியர்கள் தமது உடம்புநிழல்போல் தம்மைவிட்டு நீங்காது சூழ்ந்துவரவும், தமது தேக காந்தியானது வீதிமுற்றும சூழ்ந்துவரவும், கூந்தலிலுள்ள வாசனையானது எண்திக்குகளிலும் சூழ்ந்துவரவும், புற்றிடங்கொண்ட பெருமானைத தாம் சூழக் கோயிலுட் சென்றனர்.

---

* வேதத்துள் தலைவராகக் கூறப்பட்டிருக்கும் தலைவர்களுக்கெல்லாம் தலைவராகலினும், வேதமோதிய தலைவராகலினும், வேதத்தாற்கூறப்படும் நமஸ்காரங்களுக்கெல்லாம் தாமேதலைவராயிருத்தலினும் ஒருவர் என்றார்.

இவ்வற்புதத்தோடும் போகும் பரவையாரது பாதங்களில் அணிந்திருக்கின்ற சிலம்புகள்—பரவையாருடையதேககாந்தியானது, சுற்றுமுற்றும் சூழ்ந்து நிரைந்திருக்கும் பொலிவினைக்கண்டு அதிசயித்து அந்தோ! இப்பூவுலகில் இவருக்கு நிகராக எந்தமங்கையர் இருக்கின்றனர் என்று களிப்படைந்து ஓர் இறுமாப்புங்கொண்டு பூலோக மங்கையரைநோக்கி ஓமங்கையர்களே! இனி நீவிர் அழகுடையோமென்று எண்ணிமகிழ்தலை ஒழிமின்கள். எங்கள் தலைவியினுடைய ஒளியானது இவ்வுலகிலுள்ளாரையெல்லாம் வெற்றிகொள்ளவே சூழ்ந்தது அதனைப்பாரமின்! பார்மின்! அந்தவொளியே உங்களமேல் காணப்படுகின்றதே யல்லாமல் உங்களுடைய ஒளி இதுவென்று காணப்படுவதற்கில்லை. ஆகலான் இனி நீவிர் இவரடிக்கு ஆட்படுமின்கள் இச்செய்தியைச் சொல்லுவதற்கே நாங்கள் அவரடியாகிய இவ்வடியில் தங்கி ஒலித்துக்கொண்டிருக்கின்றோம். இனி உய்மின்கள். பூலோக மங்கையரை வென்றுவிட்டோம் என்று ஆரவாரிப்பதுபோலும் ஒலித்தன. இடையிலணிந்திருக்கும் இரத்தினமயமாகிய இருகோவையுள்ள காஞ்சியென்னும் ஆபரணமானது—பாதாளலோகமாகிய நாகலோகத்தில் வாழும் நாகங்களைக் கூவி ஓநாகங்காள்! மங்கையரது அல்குலுக்கு உங்கள் படத்தை ஒப்பாகக்கவிகள்கூறுகின்றபடியால் அதுகொண்டு நீங்கள் கர்வமடைந்திருக்கின்றீர்கள். அதனைவிடுமின்கள். உங்கள் வாய்ப்பட்டவர்களும மீளார். உங்களுக்கு உபமேயமாகச்சொல்லப்பட்ட அல்குல்வாய்ப்பட்ட உலகில்

ரும் மீண்டாரில்லை இப்பரவையா ரல்குல் அருளாளரை வாழுமவண்ணம்செய்யும் சீர்மையுடைத்தாகலான் பணி என்னும் பேருடையீர் நீங்கள்வந்து இப்பரவையாரைப் பணிந்து பரவிச்செல்மின்கள். இனி உஙகள்படத்தை எடுப் பீராயின் உங்கள்தலையிலுள்ள மாணிக்கத்தைப் பறித்து விடுவோம் ஆகலான் நீவிர் பாதலததேகிடமின்கள். வெற்றி எங்களுடையதே என்று பிரகாசிப்பதுபோலும் பிரகாசித் தது. பூலோக மங்கையரை வென்றேமென்று அடியிலு ள்ள சிலம்பும், நாகலோக அரவுகளை வென்றேமென்று இடையிலுள்ள காஞ்சியும், கூறிப் பிரகாசிப்பதைக் கண்ட கூந்தலிலுள்ள வண்டுகள் - நாம கடையிடைகளுக்கு மேற் பட்ட தலையிடயாகிய கூநதலிலிருநதும வெற்றிகூறு திருப் பது அழகாமோவெனறு எண்ணி விண்ணுலக மங்கையரை நோக்கி நீவிர் பொன்னுலகை யுடையோம என்றும், நவம ணிகளா லாகிய அணிகளை யுடையோமென்றும் பொன்னு டையும் பொன்மேனியும உடையோ மென்றும் இறுமாந்தி ருக்கின்றீர். அவ்விறுமாபபை விடுமின். இபபொன்னும் மணியும் என்னசெய்யும. மங்கையர்க்குக் கூந்த லில்லாதொ ழியின் அவர்க்கு மங்கலம் உண்டோ, யாராயினும் மங்கலமு டையார் என்று கூறுவரோ, அக்கூந்தலுக்கு மங்கலஞ்செய் வது கருநிறமோ' வேறு பொன்னிறமோ! மணிநிறமோ! கூறு மின். அக்கருநிறத்துக்கு எங்கு செல்வீர். உங்கள் உலகத் துக்கும் எங்கள் உலகத்துக்கும் நடுவே வசிப்பதாகிய மேகம் எங்கள் உலகத்தை அடுத்துப் பரவைஎன்னும் பெயரு

டைய கடல்நீரையுண்டு கறுத்து மேகேபரவி எங்கள்பர வையாரது கூந்தலைக்கண்டு நாணமுற்று அங்ஙனே நின்று விட்டது. ஆகலின் உங்கள கூந்தலுக்குக் கருமைவேண்டுமா யின் வந்துபணியுங்கள் என்று எழுந்தெழுந்து சொல்வது போலும் பரந்தலாவின.

இவ்வாறு சிலம்புகள - பூலோகத்தை வென்றனமெ ன்று ஒலிக்கவும, காஞ்சி - நாகலோகத்தை வென்றனமென் றுபிரகாசிக்கவும், வண்டுகள - தேவலோகத்தை வென்றன மென்று ஆரவாரஞ்செய்யவும், சிரிப்பெல்லாம் தன்னுள் அ டங்கியிருத்தலைக் காட்டல்போல புன்னகையரும்பும வாயி னையும், விற்போன்ற நெற்றியினையும், வேல்போன்ற கண்க ளையும, பிரகாசிக்கின்ற ஆபரணங்களையும உடையவராய்ச் செல்கின்றவராகிய பரவையாரை, தமபிரான் தோழமை யும் மணக்கோலத்தையும் பெற்று அடியார்கள் புடைசூழ் ந்துவர சுந்தரமூர்த்திகள் வருமபோது அம்மூர்த்திகளு க்கு இறைவன் தாம் கொடுத்த தோழமையும் மணக்கோல மும் பயன்படுமாறு திருவுளத்தெண்ணி தமது இச்சாசத்தி யைப்பிரேரேபிக்க அச்சத்தி அவ்வண்ணமே முற்பட்டு அவ ர்முன் வந்து காட்டிற்று காட்டவே அவரும் கணடனர்.

(கசO - கசக.) சுந்தரமூர்த்திகள் சிவனது இச்சாசத்தி பரவையாரைக் காட்டக் கண்டபோது அவரைமங்கையாகக் காணாது இது என்ன கற்பகத்தருவினது பொலிவினையு டைய ஓர் பூங்கொம்போ, அல்லது மன்மதனது பெரிய

பத்தோ, அல்லது பொலிவினையுடைய புண்ணியத்தினின்
றுந் தோன்றிய புண்ணியசொரூபமோ, அல்லது மேகத்
தைச் சுமந்து வில்லினையும் நீலோற்பல மலரையும் பவளத்
தையும் பிறமலர்களையும் சந்திரனையும் தன்னிடத்தில் காண
னும்படியாக வாசனைவீசுகின்ற ஓர்கொடியோ, இவையெல்
லாம் அல்லாத உலகத்தில் அற்புதமற்புதம் என்று சொல்
லப்படுவதொன்றோ, அல்லது எம்பெருமானுடைய திருவ
ருளோ, இவற்றுள் இன்னதென்று நான் அறியகில்லேன்
என்று ஆச்சரியத்தினையடைந்தனர்.

அஃதாவது—இவ்வுலகினிற் காணப்படும் மங்கைய
ரது உருவைப்போலும் பூமிதேவியைப்போலும் காணப்ப
டாமையால் கற்பகத்தின் பூங்கொம்போ எனவும், இவ்வுல
கபோகத்தினும் சிறந்த தேவபோகத்தை விளைவிக்கும் அவ
ரது திருமேனியின் பொலிவு சம்பத்சொரூபமாகக் காணப்
படுகையால் காமன்றன் பெருவாழ்வோ எனவும், அவரது
திருமேனி தேவபோகப் பொலிவையே யல்லாமல் சிவபோ
கப் பொலிவையுங் காட்டலால் பொற்புடைய புண்ணியத்
தின் புண்ணியமோ எனவும், இவ்வாறு புண்ணியசொரூப
மாகவும், சம்பத் சொரூபமாகவும், புண்ணியத்தையும் போ
கத்தையும் வேண்டுவோர்க்கு வேண்டியபடியே கொடுக்கும்
கற்பகத்தருவாகவும் முன்னே காணப்பட்ட அவ்வுருவம்,
பின்னர் உற்றுநோக்கியவழி மேகமுதலிய சில வுபமானப்
பொருள்களோடு பொருந்தி ஓர் கொழுகொம்பைப் பற்றித்

தாவ நல்லவாசனையை வீசிக்கொண்டு (ஓர்பூங்கொடி படர்வதுபோல்) பரங்கியர் நடுவில் மெல்லென அசைந்து படர்ந்து வருவதாகக் காணப்பட்டதால் புயலசுமந்து விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ எனவும், அவ்வொருதிருமேனியே இவையாவுமாய்க் காணப்படுதல் வியக்கத்தகும் அருமையுடைத்தாதலால் அற்புதமோ எனவும், இவ்வற்புதம் அமையப்பெறுதல் சிவனருளானன்றியமையாதாகலான் சிவனருளோ எனவும், சிவனருளால் இவ்வாறு அமையப்பெற்ற அற்புதத்தை இதுகாறும் தாம் அறியாதவராதலால் அறியேன் எனவும், நாம் இங்கு தம்பிரான் தோழமையும் என்றுமீங்கா மணக்கோலத்தையும் பெற்றது அதிசயமன்று யாவரானும் பெறுதற்கரிய இவ்வகைத்தான பேற்றைத்தந்த அருளேயும் ஒருருவமாகக் காணப்பெற்றதே பெருவியப்பாதலால் அதிசயித்தார் எனவும் கூறினர்.

அருள் ஒருருவமாகக் காணப்பெற்றதே பெருவியப் பெனநாடியபோது அந்நாட்டத்தால் முன்னே அவ்வருளாற் கூறிய திருவாக்கு உணர்ச்சிக்கு வந்தது - அஃதாவது,— "உனக்கு நந்தம்மைத் தோழமையாகத் தந்தனம்" என்றும், "முன்பு வேள்வியில் தொண்டுகொண்ட அன்று நீகொண்ட கோலம் என்றும்புனைந்து நின்வேட்கைதீர மண்மேல் விளையாடுவாய்" என்றும் அருளியதேயாம். இவ்வருள்வாக்கு உணர்ச்சிக்குவரவே, அவ்வருட்டிறத்தை நாடி அதிசயித்து அறியேன் என்றதுமாம்.

எனவே - மண்மேல் வேட்கைதீர நாம் விளையாடுவ தற்கு இறைவன் காட்டிய இடமோ இக்கற்பகத்தின் பூங் கொம்பு எனவும், இம்மண்ணுலகத்தார்க்குப் பெண்ணாசை யை விளைவிக்கும் காமனை இறைவனே வல்வழி நமக்குக்காட் டிய வாழ்வோ இப்பெருவாழ்வு எனவும், இப் பெருவாழ் வோடு கூடி வாழுங்காலத்து இறைவனை மறக்கும்பாவ த்தை விளைவிக்காது அவ்வாழ்வில் அவனை மறவாது நினை ப்பிக்கக் காட்டிய புண்ணியமோ இப்புண்ணியம என வும், இப் புண்ணிய விசேடததால அடையப்படுவதாகிய அருள்மணததை நமக்கு விளைவிககக்காட்டிய கொடியோ புயல்சுமந்து விற்குவளை பவளமலர் மதிபூதத விரைக்கொடி எனவும், நமமை மீளா அடிமையாளாக ஆளவேண்டிய றைவனை இன்று தோழனாக நாம் ஆளவும், திருவெண் ணெய் நல்லூரில் ஆட்பட்டஅன்றே மணக்கோலத்தை யொழித்து க் கீளார்கோவணமும் திருநீறு மெய்பூசிவாழும் தவகோலத்தைக் கொண்டநாம் இன்று அக்கோலத்தை விட்டு என்றும் மணக்கோலத்துட னிருக்கவும், இம் மண் ணுலகில் அவாவை யொழிக்கவேண்டிய நாம் அவ்வவாவின் வழியே விளையாடவும் நமக்கு 'அருளிய இவ்வற்புதம் என வும், இவ்வற்புதத்தை நாம் காண்பதற்குத்தான் அன்று பொன்னம்பலத்தின்கண் "தெண்ணிலாமலர்ந்த வேணி யாயுன்றன் திருநடங் கும்பிடம்பெற்று மண்ணிலேவந்த பிறவியே எனக்குவாலிதாம் இன்பமாம் என்று, கண்ணி லானந்த அருவிநீர்சொரியக் கைம்மலர் உச்சிமேற் குவித்

தும், பண்ணினுல் நீடியபதிகத்தை, நாம் பாடிப்போது "மடுத்தநீள் வண்ணப் பண்ணையாரூரில் வருகநம்பால்" என்று நமக்குக்கூறிய மன்றத்தாடியி னருளோ இவ்வருள் எனவும், அன்றி - மன்றுடியின் அருள்வழியே இத்திருவாரூரைநோக்கி நாம் வரும்போது,—"நீராருநெடுவீதித் திருவாரூர் வாழ்வாருக்கு, ஆராதகாதலின் நம் ஆரூரன் நாம் அழைக்க, வாராநின்றுன் அவனைமகிழ்ந்து எதிர்கொள்வீர்" என்ற "நீராரும் சடைமுடிமேல் நிலவணிந்தா" ராகிய இத்தியாகேசன் நமது அருளுருவைப் பார்ப்பாயாக வென்று நமக்குக்காட்டிய அருளோ இவ்வருள் அறியோம் எனவும் கூறியதாமென்க.

(கஅக) நாவலர்களுக்குத் தலைவராகிய சுந்தரமூர்த்திகள் - பரவையாரைச் சிவனருளாகக் கண்டு கூறியவகையானே, "கற்பகத்தின் பூங்கொம்போ" என்றற்றொடக்கத்தனவாய்! ஐயுற்று, பின்னர் அவயவம் இயங்கக்கண்டு மக்களுள்ளாள் எனத்தெளிந்தனர் இவள்மக்களுள் ஒருவளாயினும் பிரமனுல் படைக்கப்பட்டவளாகாள். படைக்கப்பட்டவளாயின் இவ்வுருவத்தைப் போலும் பலவுருவங்களை அவன்படைத்திருக்கலாம். படைத்திருப்பானுயின் நாமும் கண்டிருக்கலாம். இதனுல் இல்லையென்பது நிச்சயம். ஆகவே - இவள் பிரமன்பொருட்டுச் சிவனுல் படைக்கப்பட்ட அச்சத்தியேயாவள், அஃதாவது-பூர்வத்தில் பிரபிருட்டியின்பொருட்டு வேண்டியவேண்டுகோளால்

ருமான் ஓர்சத்தியைப் படைத்தனன். அச்சத்தியைப் பிர மன் தான்வழிபடும்பொருட்டு அச்சத்தியை ஓர்படத்தில் எழுதத் தொடங்கினன். எழுத முடியாமற்போயிற்று. போகவே மிகவும் மனவருத்தமுற்று தன்னுள்ளத்தில் ஓர் இரத்தின தீபம்போல் அச்சத்தியின் திருவுருவத்தைத் தியானரூபமாய் அமைத்துப் பிரகாசித்துக் கொண்டிருக் கச்செய்து கொண்டனன். ஆகலான் இவள்பிரமனுள்ளத் தில் இரத்தின தீபமாய் நின்று அவனுக்குவேண்டிய பயனை யளிப்பதுபோல, மண்ணுலகிற்கும் விண்ணுலகிற்கும்மோக்ஷ வுலகிற்கும் பயன்களாயுள்ள புகழ்புண்ணிய ஞானங்களை வேண்டுவோர்க்கு அம்மூவகைப்பயனையும் கொடுத்தற்கு இங்கு முற்பட்டுநிற்பதாகிய அனுக்கிரகரூபமோ என்று எண்ணி நின்றனர். அங்ஙனம்நிற்கும் அத்தலைவருள்ளத்தில் காமப்போரில் வல்லவனாகிய மன்மதன் நின்றனன்

எனவே, மக்களுள்ளாளபோல நமக்குக்காணப்படும் இவள் மக்களல்லள் எனவும், இவள் சிவசத்தியின் சம்பந்த மாயுள்ள ஒருத்தியாவள் எனவும், சத்திசம்பந்த முடை யவளாகவே தெய்வமாயினள் எனவும், யாரால் தொழப் படும் தெய்வமெனின் பிரமனால் தொழப்படும் தெய்வமென வும், அவனுக்குமாத்திரம் தெய்வமாயிருக்குந் தன்மையளோ ஏனையோர்க்கன்றெனின் அற்றன்று. மூவுலகினருக் கும் தெய்வமேயாவள். அங்ஙனமிருக்கும் இவளால் மூவுல கினரும் அடையப்படும் பிரயோஜனம் யாதெனின் புகழ்

புண்ணியம் ஞானங்களெனவும், இம்மூவகைப் பயனையும் அளிக்கவல்ல இவள் முன்வந்துநிற்கும் காரணம் என்னை யெனின் அம்மூவகைப்பயனும் வேண்டுவோர் வாழ்த்தி நினைந்து வணங்கினாலன்றி கூடாதாகலான் அம்மூன்றுஞ் செய்தற்பொருட்டெனவும், இவ்வாறு தமக்குக் காட்சிப்பட்ட திருவுருவத்தின் சிறப்பையும் அவ்வுருவத்தால் அடையப் படும் பிரயோஜனத்தையும் எண்ணுவாராகிய சுந்தரமூர்த்திகளுடைய நடுவி(உள்ளத்தி)ல் மன்மதன் நின்று தான் சிலவற்றை எண்ணினன் எனவும் அறியச்செய்தவாறும் என்க.

நாவலர் காவலர் உள்ளத்தை யிடமாகக்கொண்டு மன்மதன் எண்ணவந்த எண்ணம் யாதெனின்,—அதிவிசித்திர வுருவத்தோடும் கூடிய பரவையாரைச் சுந்தரமூர்த்திகளாகிய இவர் கண்டபோது-"கற்பகத்தின் பூங்கொம்போ" எனவும், "புயல்சுமந்து விற்குவளை பவளமலர் மதிபூத்தவிரைக் கொடியோ அற்புதமோ" எனவுங்கூறிய அவ்வளவிலொழியாது"பொற்புடையபுண்ணியத்தின்புண்ணியமோ"எனவும், "சிவனருளோ"எனவும் கூறினரே இவரிடத்தில் காமஞ்செய்யத்தகும் செயலை எவ்வாறு செய்வதுஎனவும், இவர்தாள் காமஞ்செய்யுஞ் செயலுக்கு இடங்கொடுப்பதுபோற் கூறிப் பின் யாம் செய்யுஞ் செயலைச் செய்வதற்கின்றி காமவிழித்துத் திகைத்து மயங்கிநிற்கும்படிச் சிலகூறினரே இவர்செய்தி பின்னையிருக்க, இனி அப்பரவை இவரைக் காமுறும் படியான சமயமாகக் காணப்படுகின்றமையால் அவளும்

இவரைபபோல் நம்மை நிற்கச்செய்வளோ? நமக்குரிய வேலையைச் செய்யச் செய்வளோ அதனையும் அறிவோம். அறிவதாயின் இவரை விட்டுப் போய் அறிவது உசிதமோ, இவரிடத்திருந்து அறிவது உசிதமோ எனின், இவரிடத்திருந்து அறிவதுதான் உசிதம. ஏனெனின், — பரவையாரே இவரை இனிக்காணவேண்டியவராயிருததலின் அவரதுகண்களும அவரது அறிவும இவர்பால் வரவேண்டுமன்றோ, கண் அறிவு என்னும் இரண்டனுள் கண்மாததிரம் வருமோ, அததுடன் அறிவும்வருமோ அதனையும், அவை நாணமுதலியவைகடநது வருமோ, கடவாதுவருமோ அதனையும் அறிவதற்கு இவரிடததில தான் நிற்கவேண்டும. ஏனெனில் வரும் கண்ணும் அறிவும் இவரைத தமவசப்படுததி இவர்பால்நிற்குமாயின நமக்குவெற்றியாம. இல்லாவிடின் தோல்வியாம்.

அன்றியும் பரவையார்பால்சென்று அவருள்ளத்திலே நின்று சுந்தரமூர்த்திகளது நிலைமையைக் காண்போமென்று இருப்போமாயின் கண்களும அறிவும் அவர்பால் நில்லாது பரவையார்பாலே வந்துவிடுமாயின் அவர்பால் அவ்விரண்டையும் கொண்டுமீள்வதற்கு நம்தரமாமோ அன்றே. ஆகலான் சுந்தரர்பாலே நாம் இருப்போமாயின் அவ்விரண்டும் அவர்பால் நின்றும் மீளாவண்ணம் தடுத்து நிறுத்தி இருவரையுங்கூட்டி நாம் வெற்றியைப் பெறுவது மிக

எளிது எனக்கருதி சுந்தரமூர்த்திகளுடைய * நவெள்ளே நின்றனனென்க. இவன்செய்தியிங்ஙனமிருக்க.

* இறைவனமான வுண்மையை விளக்காது— "பஞ்சபாணங்களையுடைய மன்மதனும் பரவைநாச்சியாருக்கும் நம்பியாரூரருக்கும் விகாரம் விளைக்கும் ஏதுவாக இடையே நின்றார். இம்மட்டில் ஒழியாது - நடுநிற்றல் இருவர்க்கும் ஒருவர்மாட்டொருவர் சிறப்பு வகையால் விகாரமுண்டாதற கேதுவாய்ப் பொதுவாய் நிற்றல் என அரும்பொருள்விளக்கினர் ஓர் உரைகாரர் இது சிவனருள் விரவாக்கல்வியறிவின் பயனென்று அறியக்கிடக்கின்றது.

"சிறப்புவகையால் விகாரமுண்டாதற்கு தானே" சிதம்பரத்தில் "இருவாழ்சடையான் ஆடும் ஆனந்தஎல்லையில் தனிப்பெருங் கூத்தில் வந்தபேரின்பவெள்ளத்துள் திளைத்து மாறிலாமகிழ்ச்சியில்' இருந்தவரை நடராஜமூர்த்தி "பண்ணையாரூரில் வருகநம்பியென்றும, இததிருவாரூரில தியாகேசன் "ஆரூரன் நாமழைக்க வருகின்றா னென்றும், அவனை மகிழ்ந்து எதிர்கொள்வீரென்றும், வந்தபின்னா நின்வேட்கைதீர வாழிமண்மேல் விளையாடுவாய் என்றும, வெண்ணெய்நல்லூரில் அனறு ஆட்கொண்டு விடபாரூடராயக் காட்சிகொடுத்த போது "துன்புறவாழ்க்கை நின்னைத் தொடர்வரத தொடர்ந்துவந்து, நன்புலமறையோர் முன்னம் நாம்தடுத தாண்டோமென்றும் இறைவன் அருளியது.

சைவராகிய இவ்வுரைக்காரருக்கு சைவாசாரிய சிகாமணியாகிய சுந்தரமூர்த்திஸ்வாமிகள் ஆசிரியரோ அன்றே. இறைவன் தீவிழியால், எரிபட்டுப்போன மன்மதனே இவரைக்காமவிகாரத்துள் தலைப்படுத்தவல்லாளனுவன். இறைவன் தம்அருள்வசப்பட்டாரை மன்மதனைக்கொண்டு காமவிகாரத்துட்படுதநி மண்மேல் அழவிடுவது தானே அவர்களுக்குச செய்யும்பரிசு. மிக நன்றாயிருந்தது.

(௪௫௨) திருக் கயிலாயத்தின்கண் பூர்வத்தில் நந்தன வனத்தின்கண் இப் பரவையாராகிய கமலினியாரும் இந்த நம்பியாரூர ராகிய ஆலாலசுந்தரருமாகிய இருவரும் ஒருவரையொருவர் காணும்படிச்செய்த எந்த தேவதேவனாகிய இறைவனுடைய திருவருளோ, அவ்வருளே - இத்திருவாரூரின்கண் அங்ஙனங் காணும்படிச் செய்ததனால் ஆகவேண்டிய பயனைக் கூட்டக் கருதிற்று ஆகலான்,—"கற்பகத்தின் பூங்கொம்போ, காமன்றன் பெருவாழ்வோ, பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ, புயல்சுமந்து விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ, அற்புதமோ, சிவனருளோ எனவும், ஒவிய நான்முகன் எழுத ஒண்ணுமை யுள்ளத்தாள் மேவிய தன் வருத்தமுற விதித்ததொரு மணி விளக்கோ" எனவும் நினைந்துநிற்கின்ற ஒளிமிக்க ஆபரணங்களால் பிரகாசிக்கின்ற தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்திகளைப் பரவையார் காணுமபடிச் செய்தது. எவ்வண்ணங் காணும்படிச் செய்ததெனின்; அயல் அறியா மணமாகிய களவுப்புணர்ச்சியை விரும்பும்வண்ணம் தண்ணிய முத்துக்களினாலும் மணிகளினாலும் இழைக்கப்பட்டகாதணிகளையும் மோதித்துச்செல்லும் பிறழுஞ் செயலையுடைய கயல்போன்ற கண்கள் பிறழுஞ்செயலற்று வியந்து அதிசயித்துக் காணும்படிச்செய்தது. எனவே, பிறழ்ந்து பிறழ்ந்து செல்லும் செயலை [illegible]யாகவுடைய கண்களைப் பரவையார் பிறருருவத்[illegible] செல்லும் அச்செயலைத் தடுக்கும் இயல்புடை[illegible] அங்ஙனம் தடுக்கும் அச்செயலை "[illegible]

கின் அணிபுனைந்து, சாந்தமும் மாலையும் தாருமாகி, மெய் வளர் கோலமெலலாம் பொலிய மிக்கவிழுத்தவ வேந்தராய்” நின்ற சுந்தரமூர்த்திகள்பால் சென்றபோது செய்தற் கரிய ராயினர். ஏனெனில்,-ஏனையர்பால் கண்கள் சென்றபோது அவற்றோடு அவரறிவு சென்றநின்று ஆகவே அக்கண்களை மீட்பிக்கும் செயலில் நின்றனர். சுந்தரமூர்த்திகளைக் கண்ட போது கண்கள் செல்வதற்குமுன் அவரறிவு அக்கண்க ளுக்கு முன்சென்றதாகலின் அச்செயலைச் செய்யத்தெரியா ராய் * அயலறியாமணம் விரும்பினரென்க.

(க௫௩.) பரவை யாரது கண்கள் - சுந்தர மூர்த்திக ளுடைய சுந்தரததைக் கொள்வதற்குமுன் அவரறிவு முன் சென்று, அச்சுந்தரத்தைக் கொள்ளை கொண்ட தாகலின் அக்கண்கள் தமக்குள் கொள்வதற் கில்லாதொழிந்தன.

---

* தலைமகனும் தலைமகளும் தெய்வம் இடைநிற்பப்பான்மை வழியேயோடி ஓர் ஆவிற்கு இருகோடுதோன்றினாற்போலத் தம் முள் ஒத்தஅன்பினராய் அவ்விருவர் ஒத்தார் தம்முள்தாமே கூடும் கூட்டம். இதன்விரிவே - திருச்சிற்றம்பலக் கோவைப்பொருளாக லான் அன்புடையார் அதனிற்காண்க, ஏனையகோவைத்துறை கள் சிற்றின்பமுடையார்க்கு. திருவாதவூராளியாகிய நம்மடிகளி யற்றியகோவை பேரின்பத்தலைவனாகிய திருச்சிற்றம்பலமுடை யானை அவாவுவோர்க்கு. அவ்வவர்வுடையோருள் நம்மடிகளாகிய நம்பிகள் தலைவராகலின் அவ்வம்பலக்கோவைத்துறையுள் இழிந்து அத்துறைவழியே அருட்டுறையில் நெடுநேரம் ஆடிப்பேரின் பந்துய்த் தனர் என்க.

அலீதாவது—அவரது அழகு பரவையாரது கண்களில் அடங்கி அங்ஙனே நில்லாது அவரறிவின்கண்ணும் சென்று அவரறிவையும் தன்னுட்படுத்தித் தன்வழி நிற்கச்செய்யும் பெரியதோர் ஆற்றலுடைத்தாய் நின்றது எங்ஙனமெனின்-அறிவிற்சிறந்த பூவுலகமங்கையர் அறிவிலா ஆண்மக்கள் தமது மனநலத்தைக் கொள்ளை கொள்ளாவண்ணம் நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நான்கினையும் காவலாகக் கொண்டிருத்தல் அவரது இயற்கை, இப்பரவையார் அந்நான்கினையும் காவலாகக் கொண்டவரன்று நாணத்தை உடம்பாகவும், மடமையை மனமுதலிய கரணங்களாகவும், அச்சத்தை உயிராகவும, பயிர்ப்பை உயிர்க்குள்ள அறிவாகவும் கொண்டுள்ளவர். ஏனெனில் இப்பரவையார் இறைவனது அருட்பிரதிபிம்ப மாகலான் இவர் இறைவனருள் பெறாத மக்களை மக்களாக நினையார், அவர்களை விலங்கினங்களோ டொப்ப நினைப்பர். சிவனருள் சிறிதுபெறப்பெற்ற கவுரி என்னும் மங்கையரே "பெண்மாசகழிய வொரு சிவனடியார் தமைக்காணப் பெறாமல் இன்று, கண்மாசு படுவது" என்று சிவனடியாரைக் காணவிரும்பினரேயன்றி அல்லாதாரைக் காண நாணினா ரன்றோ! அவரே நாணினரென்றால் இப்பரவையார் மக்களை மாக்களாக நினைப்பாரே யன்றி மக்களாக நினையாரென்பது சொல்லவும் வேண்டுமோ இன்னணமான வன்மைபெற்றுள்ள இவரது நாணமுதலிய நான்கினையும், சுந்தரமூர்த்திகளது திருமேனியி னின்றும் எழுந்த கண்ணால் கொள்ளக்கூடாத அழகானது-ஆகாய

விடமும் போதாதென்று சொல்லும்படி பேரொளிப்பிழம்பாய் மேலுங்கீழும் சுற்றுமுற்றும் பலகிரணங்களைப் பரப்பிற்று. பரப்பவே - தன்னடியையே நோக்கிச்செல்லும் கடப்பாடுடைய பரவையார் நமதுகண்கள் கூசும்படி இன்று ஒரொளி நமதுகண்களுக்குமுன் பரவுகின்றதே இவ்வொளி யெவரொளியென்று நிமிர்ந்து சுற்றுமுற்றும் பார்க்கும்போது அவ்வொளியுடையராகிய சுந்தரமூர்த்திகளை எதிரேநோக்கி (கண்ட)னர் நோக்கவே - அப்பரவையாருக்கு அளவுபடாத (ஆசையானது) ஓர்பேராசையாய் வன்மைகொண்டு தன்வசமாக்கிக்கொண்டு மேலெழுந்துநின்றது.

(கசச) அளவுபடாதது என யாவர்பாலும நிற்கும் ஆசையானது - பரவையார்பால் பேராசையென் றழைக்கப்படும் ஓர் அளவுட்பட்டு எழுந்துநின்று அப்பரவையார்பால் நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு எனப் பிரிவுபட்டுநின்ற அந்நான்கின் தன்மையைப்போக்கித் தன்மயமாக்கியது. அஃதாவது - சுந்தரமூர்த்திகளைக் காண்பதில் நாணமற்றுக்காண்பதில் ஆசையும், காண்பதனால் அறியவரும் அழகு முதலியவற்றை எண்ணி எண்ணி யறிவதில் மடமையற்று அறிவதில் ஆசையும், அறிவதனால் அவரைக் கூடவேண்டுமென நினைக்கவரும் அந்நினைவு அச்சமற்று அவரைக் கூடுவதில் ஆசையும், கூடுவதனால் உண்டாவதாகிய பரிசசம்பந்தத்தில் அருவருப்பற்று விருப்புறும் ஆசையுமாய் வளரச்செய்ததேயாம்.

எவ்வாறெனின்,—"முன்னேவந்து எதிர்தோன்றும் முருகனோ" அஃதாவது—நமதுகயிலாயத்தில் அடிக்கடியும் கம

க்குமுன்னே வந்துவாது நாம் கண்டுகளிக்கும்படி அழகிய சுந்தரத்துடன் எதிரேதோன்றுகின்ற முருகக்கடவுளோ, முருகக் கடவுளாயின் இப்போது நமக்குண்டாகிய இக்காம வாசையை விளைவிக்கமாட்டாரே ஆகலின்-"பெருகொளியால் தன்னேரின் மாரனே" அஃதாவது-பெருகிவளாநின்ற பிர காசத்தினால் தனக்கு ஒப்புசொல்லக்கூடாத மன்மதனே, மன்மதனாயின் அவன நமது இறைவனால் அன்று அரூபியா யினனே அவன் இன்று நாம்காண எவ்வாறு உருவங்கொ ண்டு வருவான். ஆகலான்-"தார்மார்பின் விஞ்சையனே" அஃ தாவது - நறுமணங் கமழும மலர்மாலையினை யணிந்திருக் கும் வித்தியாதரரில் ஒருவனே, வித்தியாதரனாயின்-போகரூ பியா கமாத்திரம் இருப்பானேயன்றி சிவனருட்கோலத்தைப் பெற்றுடையனுய் வருவனே வரான் ஆகலான் - "மின்னேர் செஞ்சடையண்ணல் மெய்யருள்பெற்றுடையவனே" அஃதா வது - மின்னலையொத்து மின்னும் செஞ்சடை யையுடைய இறைவனது மெய்மையான திருவருள்பெற்றுடைய மெய் யடியவரோ, பொய்மையான போகத்தை விரும்பும் பொய் யடியாரைப்போ லாகாது மெய்மையான அன்பையேவேண் டும் மெய்யடியராகக் காணப்படும் இவர், "என்னேஎன்மனந் திரித்த இவன்யாரோ என நினைந்தார்" அஃதாவது நாம் "முன்பு யுய்ந்துதாகிய ஒருவேட்கை" எனவே - நாம் முன் கயிலாயத் தில் ஒருமுகரைக்கண்டோம் அவரது காட்சி நமதுகண்ணுக் கின்பஞ்செய்ததேயன்றி நமதுமனத்தை மயக்கிஆசையை விளைவித்ததின்று. இன்று இவரதுகாட்சி நாம் கொள்ளும்

கூட்டாத ஆசையைக்கொடுத்து நமதுமனத்தையும் மயக்கி யதே இது என்னகாரணம். இவர் மெய்யருள்பெற்றுடைய வரா! அல்லவெனின், நாம் மெய்யருள்பெற் றுடையார்க்கு முயங்குவதன்றி ஏனையோர்க்கு மயங்கோமேஆகலான் இவர் நாம் அன்று கயிலையின்கண் கண்டவர்தானே! வேறொருவர் தானே! வேறொருவராயின் நமது கலங்காநிலை எங்கிலையா யிற்று என்று நினையாதனவெல்லாம் நினைந்தனர்.

(கசரு-கசசு) பரவையாரது நினைவானது முருகனே! மாரனே! விஞ்சையனே! மெய்யருள்பெற்றுடையவனே! இவன்யாரோ! என்னே! என்மனந்திரிந்தது என்று மாறி மாறி நினைந்துகொண் டிருப்பினும், அவரது காட்சியினாலுண் டாகிய ஆசையானது அவர் நினைவளவில் நிற்கப்பெறாது அதனைக்கடந்து அவரது உடம்பாகவும், கரணங்களாகவும், உயிராகவும், உயிரறிவாகவும் நிறைந்திருந்த நாணமுதலிய நான்கையும் அவர்பாலே சாயும்படிச் செய்தது. நாணமுதலி யவை சாய்ந்தன எனினும், அவருடைய உள்ளத்தில் என் றும்நீங்காத இறைவன் அன்பானது நாணமுதலியவை சாய்ந்தவழியே அவரைச் சாயவொட்டாது தந்நிலையில்நிறு த்தித் தியாகேசனைக்கண்டு தெரிசிக்குஞ்செயலில் வன்மை யுண்டாக்கி கோயிலுக்குள்ளே போகச்செய்தது.

அச்செயலை, நடுநின்ற மன்மதன்கண்டு அந்தோ! அந் தோ !! இஃதென்னை இவ்வதிசயத்தை நாம் யாவர்பாலும் கண்டதில்லையே ! என்று பதைபதைத்து யான் என்னென்

கேன் பார்க்கெடுத்துரைக்கேன் இச்சுந்தரனே இப்பரவை யாரைக் கண்டபோது கற்பகத்தின் பூங்கொம்போ என்று கூறி அவ்வழியே நம்வழிப் படுவான்போன்று காமன்றன் பெருவாழ்வோ என்று கூறினன். பின்னர் சிவனருளோ என்று நாம்நினைக்கும் வண்ணங் கூறினன் இப்புண்ணிய புருஷனைப் பார்க்கப்பெற்ற இபபரவையாவது நம்வழியே வருவாளென்று எதிர்பார்த்திருந்தோம். இவளும் முருகனே, தன்னேரில் மாரனே என்று நமவழிவருவாள்போன்று மிக்ககாதலுடன் கூறி கடைசியில் "மின்னேர் செஞ்சடை யண்ணல் மெய்யருள்பெற் றுடையவனே" என்று கூறி நம்மைப் பாழுங்கிணற்றில் தள்ளாததுபோல் தள்ளிவிட்டாள். ஆ! ஹா!! இது என்னகொடுமை என்று எண்ணி மீளவும் மனம்பொறாது, பரவையார் கோயிலுக்குள்ளே போகும் பொழுது அவரருகேசென்று தனது கரும்புவில்லை வளைத்து மலர்ப்பாணங்களை நாற்பக்கத்துமவிட்டு அவரைப் போகவொட்டாது தடைசெய்வான்போல் தடைசெய்யத் தலைப்பட்டனன் இவ்வாறு மன்மதன் விடும் மலர்ப்பாணங்களைப் பரவையாரது கூந்தலிலுள்ள வண்டுகள் கண்டு இஃதென்னை! மலர்கள் நாற்புறத்தும் சூழ்ந்து வருகின்றன. இது யாரிடுவது, யார் போடுவது என்று உற்றுப்பார்த்தன. பார்க்கவே மன்மதன் விடும் மலர்ப்பாணங்களென்றறிந்து இப்பா[illegible]ங்கன் இவரை இங்கு என்செய்யக்கூடும் இவன் அறிவு இருந்தவாறென்னே என்று அவனை யிகழ்ந்து அம்மலர் அப்பரவையார்பால் அணுகவொட்டாது, ஆரவாரஞ்

செய்து துகள்படுத்தின. அம்மலர்ப்பாணங்கள் அவ்வளவி லொழிய, அப்பூக்களால் சிறிதும் பரவையார் தாங்கப் பெறாது தியாகேசன் வீற்றிருக்கும் பூங்கோயிலுள்ளே சென்றனர்.

அது கண்ட மன்மதன அன்று இறைவன் முற்பட்டு உருவம் ஒழியபபெற்றோம். இன்று இவ்விருவரிடைப்பட்டு நம செயலழியப் பெறறோம். இனி இவாகள் செயல் எவ்வா றாகுமோ, நாமஇங்கிருததல தகாது பூங்கோயிலமர்நதபிரா னோ நெருப்புக்கண்ணன். இவாகளோ வன்கணாளர்கள் ஆக வின் இவர்களகண்படின் அருவமாய் வாழும் இவ்வாழ்க்கை யுமபோம என்று நில்லாது ஓடினன்

(கசஎ) மன்மதன் திருமபிப பாராதோட பூங்கோயி லுள்ளே பரவையார் சென்றபோது, இப்பரவையாரைக் காண வெளியே நின்றவராகிய சுந்தரமூர்த்திகள் உள்ளே செல்வதைக்கண்டு அப்பொழுது தமது அருகிருந்தாரை நோக்கி திருவெண்ணெய் நல்லூர்ப்பித்தன் என்னைத் தடுத்  தாட்கொண்டு என் மனத்திலுள்ளே தன்னைவைத்தான். அம்மனத்தை இன்று கவர்ந்துகொண்டு உள்ளேசெல்லும் மயிலபோலும் சாயலையும் இனிய கோவைக் கனிபோலும் சிவந்த வாயினையும் உடையவளாய் இளங்கொடிபோன்று காணப்படும் இவள் யாரென்று கேட்டனர். அவர்கள் சொ

கள் பெருமானே! ○ தேவர்களுஞ் சென்று சேர்தற்கரிய பெண்களிற்சிறந்த பரவையார் என்னும் திருப்பெயருடையார் அவர் என்றனர்.

(கசஅ) அடியார்கள். இவர்பேர் பரவை பரவையாரென்னும் திருப்பெயருடையவர் என்றுகூறவே சுந்தரமூர்த்திகள் - "என்னுளை எழுபரவையோ இவள் எனவே - இவளை நான் கண்டபோதே முதலாவது கற்பகத்தின் பூங்கொம்போ என்று ஓராசையெழுந்தது இரண்டாவது-காமன்றன் பெருவாழ்வோ என்று ஓராசையெழுந்தது, மூன்றாவது - பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ என்று ஓராசையெழுந்தது, நான்காவது - விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ என்று ஓராசைஎழுந்தது, ஐந்தாவது - அற்புதமோ என்று ஓராசையெழுந்தது, ஆறாவது சிவனருளோ என்று ஓராசையெழுந்தது, ஏழாவது - ஓவிய நான்முகன் எழுதவொண்ணுமை யுள்ளத்தான், மேவிய தன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ என்று ஓராசையெழுந்தது. இந்த ஏழாசையும் ஏழுகடலை ஒத்திருக்கின்றது. இவ்வாறான ஆசைப்பெருக்கை இவள் பெருக்குதற்

○ தேவர்களும் சென்று சேர்தற்கரியார் எனவே - உருத்திர கன்னிகையர் குலத்திற்பிறந்தவரெனவும் ஆகலான் இவ்குன்ளாரைப் பதியாக இவருங்கொண்டாரில்லை எனவும், அவ்வாறு ஒருவரும் [illegible]த்தாருமில்லை எனவும், ஆகவே இவ்குன்ளார்யாவரும் [illegible]ப்போற்றும் பெருமையிற் சிறந்தவரெனவும் குறித்த [illegible].

குக் காரணம் யாதென்று ஆராயின் பெண்மையினில் பெரும் பரவை எனவே - பெண்தன்மைக்குக் கூறும் இலக்கணங்க ளெல்லாம் கடல்போல் மிகப் பெருக்கமாக வுடையவளாயி ளுள், ஆகலான் பேரும் - பரவை - விரும்பு - அல்குலார் - பரவை எனவே - பெரிய இந்திராதி தேவர்களால் விரும்பப்பட்ட திலோத்தமை முதலியோரால் துதிசெய்யத்தக்க தெய்வமா யும் உள்ளவளாயினுள், இவளது அணிதிகழ் மணிமுறுவல் அரும்பர் அவை எனவே - அழகுவிளங்குகின்ற முத்துக்களை யொக்கும் பற்கள் முல்லை யரும்புகளை யொத்து ஒளிவீசிக் கொண்டிருக்கப் பெற்றவளாயினுள், இங்ஙனமான புன்ன கை யுடையாளான இவள் - திருவுருவின் மென்சாயல் ஏர்பர வை யிடைப்பட்ட சீர்பரவை ஆயினுள் எனவே - திருவுரு வத்தின் மென்மையிற்சிறந்த அழகிய கடலினிடத்துத் தங் கித் தோன்றி ஆடலிற்சிறந்த தாண்டவம்புரியும் இலக் குமிதேவி யாயினுள். இன்னமும் இவளது நாமவைபத்தை நான் என்னென்று சொல்லுவேன் என்றார்.

(கசக) அதன்பின்னர்-காதன்மிகுதியினுல் நினைக்கவரு ம் இத்தன்மையாகிய நினைவுகளை நாட நினைக்கும்போது இந் நினைவுகள் இங்கெழுந்தருளியிருக்கும் தியாகேசபெருமான் "வேள்வியில் முன்பு, தொண்டுகொண்ட அன்று நீகொண்ட கோலம் என்றும் புனைந்து நின்வேட்கைதீர மண்மேல் வினை புரிடி வாழ்வாயாக" என்றருளிய அருள்வகைபால் நமக்குத் தொடர்ந்துவரும் நினைவுகளாகும். இதுவேயுமன்றி இன்று

இங்கு தியாகேசன் அருளிய முறைப்படியே அன்று கயிலை யின்கண்ணும் "நீ தென்புவிமீது தோன்றி அம்மெல்லியலா ருடன் காதலின்பங் கலந்து அணைவாய்" என்றருளிய அருள்வகையானும் தொடர்ந்துவரும் நினைவுகளாகும் இந் நினைவுகள். இவ்வாறு அருள்வசப்பட்டு வரும் நினைவுகளா யின் நாம் என்செய்யக்கடவோம் அதனை நாம விலக்கினால் விலகப்படுமோ, அன்றியும் அந்நினைவுகள் அருட்செயலால் விளைந்து தொடர்ந்துவருவதா யிருத்தலினால், அவைகளை விலக்குதல் அவ்வருளை விலக்க முயல்வதாக முடியுமல்லவோ, நாம் அவ்வருளையும அவ்வருட்செயலையும விட்டு எதனோடு கூடி எதன் செயலைச் செய்வது அப்படிச் செய்வோமாயின் அது ஆகாமிய வினையாயும், அதுவே இருவினையாயும் அவ் விருவினை பிறவியையறியாத நமக்குப பிறவிதொடர்தனை யை விளைவிக்கும் விளைநிலமாயும் முடியுமன்றோ. அந்தோ! நமக்கு இவ்வினையேன்; இவ்வினைச்செயலேன், நம் தியாகே சன் தனது கருணையால "நம்மைத் தோழமையாக உனக் குத் தந்தனம" எனனுந் திருவாக்கை நமக் களித்திருக்கும் போது; நாம் அவ்வாக்கின்படியே "அவ்விறைவனோடு ஏக னாகி அவனருளின்வழி நிற்போமாயின் நாம் அவனுக்கு உடமை எனப்படுவோம், படவே நம்மாட்டு அஞ்ஞானகன் மம் பிரவேசியா, ஏனெனில், நாம் அவனுடைமை யாகலினா னென்க. அஃதாவது,—"நாம் ஞேத்திரேந்திரிய முதலிய இந்திரியாதிகளோ டியைந்து நின்று வினைகளை யீட்டுதற்கும் நுகர்தற்கும் வினைமுதலாகியகாலும், ஞானச்செய்திகள்

முதல்வன் விளக்கியவழி விளங்கி அல்லுழி விளங்குமாறின்மையின் (நாம்) அம்முதல்வன் வயத்தராயேமல்லது சுதந்திர ராயே மல்லேம். ஆகலான் நாம் செய்வனவெல்லாம் அருளின்வழிநின்று செய்யும் செயலாகக் கண்டுகொண்டிருக்கும் இவ்வடிமைத்திறத்திற் றவராதிருப்போம். இருப்போமாயின் நாம் எவ்வினைகளைச் செய்யினும் அவை நமக்குப் பந்தமாதலில்லை. ஏனெனில்,—அவ்வாகாமிய வினையெல்லாம் கூட்டுவிக்கும் முதல்வன் சந்நிதியில் உடலூழாய்க் கழியும்" அல்லதூஉம் "சார்ந்தாரைக் காத்தல் தலைவர்கடனாதலால்" யானெனதன்று தம்மாட்டு அடைக்கலமெனச் சார்ந்தவரை அவர்க்குவரும் ஏதத்தை நீக்கிக் களைகணாய் நின்றுகாப்பது தலைமைக்குணமுடையராயினார்க்குக் கடமையாகலான் (அக்கடமையை மேற்கொண்டு) தன்னைச் சார்ந்து தன்னடித்தொழில்செய்வாரைத் தன்போல் ஆகாமியவினைத் தொடக்கிலராகச் செய்வன் என்றபடி நமக்கு ஆகாமிய வினை யேறுவண்ணம் நமக்குக் களைகணாய்நின்று காக்குந் தலைவன் தியாகேசனன்றே என்று திருவருள் ஞானவிளக்கத்தால் அருட்செயல் பலவுநினைந்து பரவையாரைக் காட்டிக் கண்ணுறச்செய்த அவ் வருள்முறையில் தொடக்குண்டு, இத்தொடக்குட்படுத்திய நமது தலைவன்பால் சார்வோம் என்னும் துணிபுடையராய்ப் பரவையாரது காதல் நம்மை என்செய்யுமோ என்னுங் கவலையொழிந்து, இனி அருட்செயலின் திறத்தைக் காணுங்காட்சி கிடைத்ததென்று உண்

ளத்துள்ளே மகிழ்ந்து நம்பியாரூரர் தம்மையுடையானாகிய தியாகேசர் கோயிலுக்குட் சென்றனர்.

(கூ௰-கூக) அச்சமயத்தில் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் வருவதற்குமுன் ஆலயத்துள்ளே வந்த பரவைநாச்சியார் தியாகேசப்பெருமானை வலமாகவந்து பணிந்து போற்றி சந்நிதானத்தினின்றும் புறப்பட்டு ஓர்புறமாக ஒதுங்கிச் செல்வாராயினர். ஆரூரர் - பரவையாரது செல்லுகையைக் காணுதவராய் உள்ளேசென்று இறைவன்பால முன்பேகலந்துள்ள கலப்பால் கண்டவுடன் பெருகிய பேராசையினால் அடிபணிந்து பரவையார் தம்பாலராம் வண்ணம் விருப்பிய தமதுவேண்டுகோளை விண்ணப்பஞ்செய்து போற்றி விடைபெற்றுத் திரும்பித் தாம முன் கண்ட பரவையாரைக் காணும் விருப்பதுடன் வர, அவரைக காணமையால் எனது இனிய வுயிராகிய அன்னமன்பான்றவள் எவ்வழியாய்ச் சென்றனளோவாறு தேடுவராயினர்.

(கூ௨-கூ௩-கூ௪-கூ௫,) எவ்வாறெனின்,— எனது ஈசனுடைய அருளானது - ஒப்பற்ற ஞானப் பேரொளிப் பிழம்பாய்ப் பிரகாசித்து ஆன்மாக்களுடைய சிந்தை - மலமயக்கத்தினின்றும் நீங்கும்வண்ணம் அவர்களுக்குப் பாசரூபமாகிய வினைப்பற்றுகளை ஒழிக்கும் ஆசையில் மிகுந்திருக்குந் தன்மையைச் செய்வது. அவ்வாசையினால் பாசநீக்கம் உண்டானபின்னர் அதன்மேல் பெறத்தக்கதாகிய் வெப்பேற்றைப் பெறுதற்குரிய ஆசையைக் கொடுக்கத்தக்

சது. இத் தன்மையையுடைய அவவருள் என்சிந்தையை மயக்கியது. அது - எவ்வழியாய்ச் சென்றது.

மேலேசொல்லிய தன்மையிற் சிறந்த எம்பிரானுடைய ன்று என் சிந்தையை எவ்வாறு மயக்கிய தெனின்—, ஓர் பூங்கொடிபோல் ஒருருக்கொண்டு பையப் பைய அசைந்துநடந்து தேவர்பிரானுடைய திருவடியல்லது நம்பும் அறிவை அறியாத என்னறிவை அந்நிலையினின்றும் மாறி வேறொன்றை நாடும்வண்ணம மயக்கிச்சென்றது. அது எவ்வழியாய்ச்சென்றது. அத்திருவருள் இன்னமும்என்னை எவ்வாறு செய்ததெனின்! ஆன்மாக்களுக்கு மலநீக்கத்தின் பொருட்டு தனுகரணாதி பந்தங்களையும, அப் பந்தப்பெருக் கால் மலபரிபாகம் உண்டாய்ப் பாசக்ஷயம் வந்தபின்னர் சிவப்பேறெய்தற்கான வீட்டு நெறியையும் தந்தருளும் இறைவனுடைய திருவடியை என்சிந்தை நீங்காது அதிற் றனே பொருந்திக் கிடக்கும் அத்தன்மையை யுடைய என் சிந்தையை அத்திருவருள்வந்து மானைப்போலும் மருண்டு மருண்டு என்னை விழித்துப்பார்த்து அந்நிலையினின்று மயங் குமவண்ணம் செய்தது அது இப்போது எவ்வழியாய்ப் போயிற்று என்று மிகவும் ஆற்றகிலராய் எனது உயிராகிய அத்திருவருள் என்னைவிட்டு எவ்விடத்தில் நின்றது,என்று நின்றவிடத்தைத் தேடுவதற்குச்சென்று அருளுடைய அடி ர்குழாங்கள் கூடியிருக்கும் தேவாசிரிய மண்டபத்தைச் சேர்ந்தனர்.

(கஞிசு) எம்பிரானருள் எங்கொளித்திட்டதே" என்று கினைவுவதை அவ்விடத்தில் வினவாதொழிந்து, தம்முள்ளத் தின்கண் ஒன்றை நினைவாராயினர். அஃதாவது - நாம்தேடி வந்த அருளாகிய நமதுயிரை இந்தஆரூரை யாளுகின்றவ ராகிய ஆண்டவர் நமக்குக்கொடுத்தருளுவர். என்றெண்ணி அவ்விடத்திற்றானே தங்குவாராயினர். பொழுதும் போயி ற்று. அதுபோகவும் இரவின்கண் தோன்றுவனவாகிய யாவும்தோன்றிற்று அவையெல்லாம் தோன்றும்பொழுது இறைவன் நெற்றிக்கண்ணினால் தோன்றாதொழிந்து அருவ மாய்ப்போன மன்மதனுந் தோன்றினான். ஏனெனில் அன்று இறைவன் உலகிய லொழிந்து யோகநிலையில் நிற்கும்பொ ழுது நாம் அதற்குமாறானசெயலைச் செய்தபடியினால் உருவ மொழிந்து அருவமாயினோம். இப்பொழுது அவரது திரு வுருவராயும் அவருக்குத் தோழராயுமிருக்கின்ற சுந்தரப் பெருமான் பாவையாரைத் தமதுயிரெனக்கொண்டு அவ் வுயிரை இப்பொழுது நம்மிறைவன் இவ்வாரூரின்கண் தியா கேசனென்று திருநாமங்கொண் டிருக்கின்றன னாகலான் அவன் கொடுப்பானென்று எண்ணியிருக்கின்றார். ஆகவே நாம் அவருக்குத்துணையாய் அவரெண்ணம் முற்றும்பெறு மாறு நமது செய்கையைச் செய்வோமாயின் நம்பால் அவ ருக்கருளுண்டாய் நாமிழந்த உருவத்தைத் தந்தாலும் தந் தருளுவர் என்று துணிந்து அதுபோல் அவன் செயலைச் செய்யவந்தனனென் றொழிந்தற்பாலது. இச்செய்தி களிருக்க, பரவையாகிய நம்முயிரை, நம்முயிர்நாதனுக்

தியாகேசன் தந்தருளுவா னென்று தேவாசிரிய மண்டபத்திற் றங்கியிருந்த சுந்தரப்பெருமானைக் கண்ணுற்ற பரவையார் சுந்தரப்பெருமான் பாலராயினரோ! அவர்பா லாகாமல் தம்பாலராகவே யிருந்தினரோ! எனின் அதனைக்கூறுவாம்.

(கசுக) பரவையார் கோயிலுக்குள்ளே சென்று நீலகண்டனாகிய இறைவனை வணங்கி, வணங்கியபடன் தன்கணவனைப் பெறுதல்தா னென்று அக்கணவனைப் பெறுவார் போல் தன்னினத்தவராகிய சேடியர்களெலலாம் புடைசூழ்ந்துவரத் தன்னுள்ளத்திற் பொருந்திய பெருங்காதலோடு வெறுங்கையுடன் போவதொழிந்து தனத்தைக்கொண்டு போவதுபோல் இருதனங்களைக்கொண்டு அதனால் தளர்ந்த இடையையுங் கொண்டுசென்று வன்றொண்டர்பாற்சென்று அவரைக் கண்ணுரக் காணும்பொழுது இப்பரவையாரது உள்ளத்தேவாழும் மனமானது இவரறியாது இவருக்கு முன்னே அச்சுந்தரர்பாற்சென்று இவர்மயங்கத்தக்க எல்லா அவயவ விசேஷணங்களை அவர்பால் கொள்ளைகொண்டு வர அம்மயக்கப் பொருள்களை யெல்லாங் கண்டுகொண்டு மயக்கமீதூர்ந்தவராய்த் தமது மாளிகைக்குப் போயினர்.

(கஎ௦ - கஎக) போனபின்னர் அவரடிநீங்காதிருக்கும் நூபுரங்கள் அவருள்ளக்குறிப்பையறிந்து இப்பொழுது நமது ஓசை அவருக்குத் துன்பஞ்செய்யுமென் றெண்ணி மெல்லென ஒலித்தல்போல் ஒலித்தன. (அஃதாவது-மாளிகைக்கு வந்தபின் விரைந்து செல்லும் நடையின்றி சோர்ந்த நடை

பினராய் உள்ளேசென்று ஒருவரோடும் உரையாடாது மெல்ல மெல்ல மேல் உப்பரிகையின்மேற் சென்று குளிர்ந்த நிலவெரிக்கும் முற்றத்தருகில் மரகதத்தாலோடு பிரகாசிக் கும் இரத்தினவேதிகையின் மேல் அமைந்துள்ள மலர்பரப்பி யிருக்கும் பொற்கட்டிலில் இருந்தனர். அப்பொழுது ஆலயததுட் சென்றபோது தம்முடன் வந்திருந்த சேடியர்கள் தம்அருகிருப்பக்கண்டு அவர்களது முகத்தைப்பார்த்து இந்த ஆரூரரை ஆளுகின்றவரா யிருக்கின்ற நீலகண்டராகிய இறைவரை நாம் வணங்கப் போம்பொழுது நம்மெதிரில் ஓரழகர் வரக் கண்டோமல்லவா, அவர் யார்! நீவிர் அறிவிரா என்றுகேட்டனர். அச்சேடியர் எங்கள் தலைவியே! நாங்கள் அவரது பெருமையை என்சொல்லுவோம். நம்மால் காணப்பட்ட அப்பேரழகர்நம்மிறைவனாகிய சிவபெருமானுக்கே வழி வழியாய் அடிமைசெய்யவல்ல ஆதிசைவகுலோத்பவராம். அன்று பிரஹ்மவிஷ்ணுக்களாகிய இருவரும் மேலுங்கீழுந்தேட அவ்விருவருக்குங் காணப்படாது ஒருவனாய்நின்ற பெரியோன் திருநாவலூரின்கண் இவர் திருமணக்கோலங் கொண்டிருக்கும்போது அம்மணப்பந்தரில் யாவரும் மிகஎளிதாய்க் காணப் பெருங்கிழவனாய் வந்து அப்பேரழகர் எதிரேநின்று ஏசுந்தரா! நீ என்னடியானென்று சொல்ல நான்உன்னடியான் எவ்வாற்றாலாவேன் ஆகேன் ஆகேன் என்றுபன்முறையும்சொல்லப் பன்மறைசொல்லிய வாயான் நீ அடியேனல்லேன் என்றாலும் நானுனக்கு ஆண்டவனாகாதொழிவேனா நீயே எனக்கு அடியவன் நானே உனக்கு ஆண்

டவன் இதற்குப் பிரமாணங்களாக எழுத்துக்க ளிருக்கின் றன. அவ்வெழுத்துக்களை இப்பொழுது ஒருவராலும் மாற் றமுடியாது என்றுசொல்ல, அதற்கும் அஞ்சாது இதற்கு எழுத்தும் ஒன்றுளதோ ஏதேது நீ பழைய மன்றாடிபோல வும் காணப்படுகின்றாய். ஆஹா இது மிகஆச்சரியம் என்ற னராம், மன்றத்தில் ஆடுகின்றவராகிய அவ்விறைவனும் என்னை நீபழைய மன்றாடியென்று அறிந்தவனு யிருந்தும் நீ எப்படி எனக்கு அடிமையாகேன் என்று சொல்லத்துணி கின்றாய். என்னை மன்றாடியாக அறியாதவர் யாரோ! அவர் களன்றோ எனக்கு அடிமையாகேன் என்று மன்றாடுவார் கள். நானும் அவர்களிடத்தில் மன்றாடமாட்டேன். இது நிற்க. நீ சொன்னபடி நான் பழைய மன்றாடிதான் அதில் ஐயமில்லை. இனி என்னசொல்லுகிறாய் இது நம்மிருவருக் கும் உள்ள பெருவழக்காகும். இவ்வழக்கை யொழித்தல்

ல்லாம் வழக்காடி அவருக்கு ஆண்டவனாவதில் மிக்க ஆசையுடையவராய் அவரடியனாகேன்என்பதை வழக்கிட்டு அங்கிருந்தா ருள்ளமெல்லாம் கலங்கும்படிச்செய்யும்போது மணவாளராகிய அப்பேரழகர் வழக்காடவந்த வேதியரை நோக்கி ஓமறையோனே! நீ "பித்தனே" என்று மிக்ககோபங் கொண்டு சொல்ல, அப்பித்தனார் அவ்வாறு சொல்லியதற் குச் சிறிதுங் கோபங்கொள்ளாது உள்ளத்துள்ளே மகிழ் ந்து பித்தனென்றவரைப்பார்த்து யானுபித்தன் அதனைப் பின்னே தெரிவிக்கின்றேன். இப்பொழுது என்னைப் பித்த

னென்றதேயல்லாமல் இன்னம் என்னைப் பேயனென்றும் இன்னமும்பொறுக்கக்கூடாத பலதீங்கான வார்த்தைகளைச் சொன்னதும் அவைகளால் நான் நாணமடைந்து இவ்வழக்கையும் உன்னையும் விட்டுப்போகேன் போகேன். இதனை நீ உறுதியாக நம்பக்கடவாய். நான் சொன்னபடி எனக்கடிமையாய் என்னுடன் வருவதைவிட்டு இனி விசித்திரமான வார்த்தைகளைப் பேசிபொழுதுபோக்க வேண்டாம். இதோ உன்னடிமைச் சீட்டைப்பார் என்று அதனைக் காட்டினராம் ஓ! ஓ!! இக்கிழவன் எழுத்தும் உளதென்றனே அது மெய்மைதான்போலும் இப்பெருவழக்காளிஇவ்வெழுத்தும் இருக்குமானால் இவன் சொன்னதுபோலும் எவ்விதத்தும் வழக்காடி நம்மை அடிமையென்று யாவரும்அறிய நிலைநாட்டி நம்மைக் கொள்ளைகொண்டுபோவதில் சந்தேகமேயில்லை என்று உள்ளத்துள்ளே எண்ணி மனமும் பொறுக்காது துணிந்தவராய் அக்கிழவர் கையிலிருந்த ஏட்டைப் பறித்து ஏடாவது” அடிமையாவது, என்று கோபத்தோடும் சொல்லிக்கொண்டே கிழித்தெறிந்தனராம். அந்தோ! அப்போது ஆளவந்தவராகிய ஆண்டவர் பட்டபாடு இன்னபடியென்று சொல்லமுடியாதம். அவ்வாறெல்லாம்பட்டு அருமறைமுறை யோ முறையோஎன்று பலமுறையும் முறையிட்டுக் கொண்டிருக்க அம்முறையைக் கேட்டு அதற்கு வழிதேடாதவர் தம்மைக் கிழிபடுத்திய இம்முறைக்கு இதுமுறையாமோ” என்று ஓர் பெருமுறையிட்டு மற்றொருவோலையைக் காட்டி நீ கிழித்தவோலையோடு என்வழக்கும் கிழிபட்டதென்று

எண்ணவேண்டாம் இப்பொழுது நீ கிழித்ததனுலேயே என்வழக்கு நிலைபெற்றதென் றறிவாய் என்று வழக்கைப் பலப்படுத்தித் தமது அருட்டுறையாகிய திருவெண்ணெய் நல்லூருக்கு ஓலைகிழித்தவரை வரும் வகையைத் தேடித் தண்ணேன்றிக்கொண்டு முன்னே விரைந்து சென்றனராம் செல்லவும் வழக்கொழிக்கும் எண்ணத்தை மேற்கொண்டிருந்த நம்பியாரூரர் அந்தோ! நாம் இப்போது கொண்டிருக்கும் மணக்கோலம் ஒழிதற்கும் இக்கிழவன் கொண்டுவந்த அடிமைஎன்னும் வழக்கு நிலைபெறுதற்கும் நாம் செய்த செய்கைஆயிற்றேயன்றி இவன் வழக்கொழியவும் நாம்கொண்ட மணம் முற்றுப்பெறவும் ஆனதில்லையே நம் செயல் இப்படியொழியுமோ தெய்வசெயல் அப்படி வருமோ இன்னமும் எப்படியாமோ என்று எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணிஎண்ணி நெஞ்சம் புண்ணுகி அக்கிழவன் போனவழியே பின்றெடர்ந்துபோய்த் திருவெண்ணெய் நல்லூரை யடைந்து வந்தவழக்காளியின் திருவுள்ளப்படியே "அடிமை" என்பது பலவாற்ருனும் நிலைபெற்று யாவரும் அறிய அடிமையாளாய் கோயிலுக்குப்போய் தம்மை யடிமையாளாய் ஆளவந்தவரைப் பார்க்கும்பொழுது அவர் காணுதொழிந்தனராம். அவ்வொழிவு ஆளவந்தமுறைமையை அறியவொட்டாது திரோபவித்திருந்த திரோதசத்தியை ஒழித்ததாம். அதுவொழியவே சுந்தரப்பெருமானுரிய இவர் அருள்வயத்தராய் அருளாளரைநாடி என்னையாளவந்த பெருமானே! நானுனக் கடிமையாய் உனக்கு

நானியற்றும் பணியாதோ அது இதுவென்று பணிக்காது திருவுருக்கரந்தனையே இதற்கோ வழக்காடியது, எங்கொளித்தா யென்று ஏங்கிப் பார்த்தழைக்கும்போது நம்பெருமான் ஆளுடைநாயகியுடன் விடையூர்ந்து வெளியேதோன்றி மணவாளனே! என்னைப் பாடும்பணி நீ கூடும்பொருட்டு அடிமையென்று வழக்கிட்டுக் கொண்டேனுகலின் வன்றொண்டனென்னும் பெயருடையவனுய்ப் புண்ணியக்ஷேத்திரமாகிய இம்மண்ணுலகில் ஆங்காங்கும் நம்மைப் பாடிவருவாய். அதுவே நாம்விரும்பும் அருச்சனையாகும் என்றருளியபடி ஆங்காங்கும் திருப்பதிகங்களைப்பாடி அடிமை என்று மன்றாடிய சிற்சபைகருவந்து சபேசனைப் பாடியருளினராம். அப்பொழுது பாடிய இவரும், பாட்டுடைத் தலைவராகிய அவரும் அடைந்த ஆனந்தப்பெருக்கை ஒருவராலும் சொல்லும் தரமன்றாம், அது கண்டபோக்கே தெரியத்தக்கதாம், அந்த நடராஜப்பெருமான் யாதுகாரணங் கருதியோ அசரீரியாகத் திருவாரூருக்கு நம்பால் வருகவென்று பணித்தனராம். அவ்வாக்கின்படியே இங்கு திருவாரூர் எல்லைக்கண் வரும்போதே நமது தியாகராஜனும் அன்பர்களுடைய கனவின்கண்சென்று "ஆரூரன் நாமழைக்க வருகின்றான்" நீங்களெல்லாம் எதிர்கொண்டு சென்று அழைத்து வாருங்களென்று கட்டளையிட அக்கட்டளைப்படியே அடியவரெல்லாம் சென்று அவர்வரவேற்று மிக்ககொண்டாட்டத்துடன் தியாகேசன் சந்நிதிக்கு வந்துசேர்த்தனர். சேர்ந்த அவ்வளவில் நம்பியாரூரர் திருவாரூரரை என்பெலாம்

உருகப்பாடியருளினர். அப்பண்ணிசைப் பாட்டைக்கேட்ட அவர் இப்பாட்டுக்கு நாம் என்னபரிசளிப்பது எப்பரிசும் பரிசாகாது என்று கருதியோ வேறு யாதுகருதியோ "நம்மைத் தோழமையாக வுனக்குத் தந்தோம்," என்று திருவாக்களித்தனர். அவ்வாக்கைக்கேட்ட நம்பியாரூரர் ஆனந்தபரவசராக, ஏனைய அன்பர்குழாங்களெல்லாம் ஆனந்தக்கூத்தராய் அக்கணமே ஹரஹர என்னும் ஒலி எங்கும்பரவ யாவரும் "தம்பிரான் தோழர்" என்றுபோற்றி அடிபணிந்து இதுகாறும் எம்பிரானுராயிருந்த தியாகேசன் இன்று (தமது) பிரானுராயினர். தேவரீரே நல்ல தோழனுமாயினீர். இத்தோழமையதனல் இனி எங்கள்பா லுள்ள ஏழைமையொழிந்து உமது அடிபணியும் பெருஞ்செல்வ ராயினேம். என்று வாழ்த்தினர். அவ்வாழ்த்தொலியோடு வாழும் நம்பியாரும் நீர் யார் என்று கேட்ட சுந்தரனென்றார்.

(௬௭உ) சுந்தரமூர்த்திகளாகிய அவர், தம்பிரான் தோழரென்று சேடியர் சொல்லுவதற்கு முன்னமே எம்பிரானுகிய தியாகேசனுடைய தோழரோ அவ்வழகர் என்று கேட்டமாத்திரத்தில் வரலாறறிவதற்குமுன்னமே அவ்வன்றொண்டர்பால் சென்றிருந்தமனம் காதல்மீக்கொண்டு "சிறைகாக்குங் காப்பு எவன் செய்யும் மகளிர் நிறைகாக்குங் காப்பே தலை" என்றபடி சிறையைவிட்டு நிறையை மேற்கொண்டிருந்த அப்பரவையாரது நாணமுதலிய குணங்களுடைய அளவுட்படாது அவற்றினளவையெல்லாங் கடந்து மேலோ

வளர்ந்து பொங்கிற்று. பொங்கவே பரவையார் யாதொரு துணையுமற்று உயிரொன்றுமே தாங்கி பெருமூச்செறிந்து அவ்வுயிருஞ் சோர்வடைய மென்மையாகிய பூவணைமேல் வீழ்ந்தனர்.

(௩௭௩) வீழ்ந்தபோது அச்செய்திகண்ட சேடியர்கள் அந்தோ! இவரது குறிப்பை நாம் தெரிந்தவர்களாயிருந்தும் இச்சோர்வைத்தந்த அவ்வழகர் யாரென்று நம்மை வினவியபொழுது அவர்யாரோ நாமறியோமென்று சொல்லாது அவரது வரலாறெல்லாம் ஒருவாறு அவரது அருமை தோன்ற எடுத்துக்கூறினோமே இது என்னமடமை. இது நோக்கியன்றோ அறிவுடையான்றோர் காமத்தை விளைவிக்கும் ஓர் புருஷனுடைய அழகில் அறிவு செலுத்துதலொழிந்து மடமையையும், அதுபோலுமே நாணமுதலியவற்றையும் மங்கையர் பெருங்குணமாயும் காவலாயுங் கொண்டிருத்தல்வேண்டுமென்று கூறியுள்ளார் அக்கூற்றின் உண்மையை நாமறியாமற் போனபடியினாலன்றோ அது கூற்று (யமனு)க இப்போது வந்தது என்று மனம்நொந்து யாவரும் ஒருங் கேகூடி பரவையாரது ஆசைச்சோர்வு நீங்குமாறு ஆர் (சந்தன)க்குழம்பை யப்பியும் பனிநீரைதெளித்தும் இவ்வண்ணம் பலமுறையான் குளிர்ச்சி யுண்டாம்வண்ணம் செய்தனர். செய்யும் அவையெல்லாம் பெரிய தீயில் நெய்சொரிந்தாற் போலாயிற்று. அவ்வளவிற் போகாமல் மன்மதன் அந்நெருப்பின் மேல் சமித்தையிடுவதுபோல புஷ்பபாணங்களை யிட்டனன்.

(௧எ௪) இவ்வாறு சேடியரும் மன்மதனும் பரவையாரிடத் துண்டாகிய கொடியகாமத்தீயை நல்லயாகத்தீயைச் சமித்து நெய்முதலியவற்றால் வளர்த்தி அதிகரிக்கச் செய்வதுபோல் சந்தனக்குழம்பாலும் பனிநீராலும் பாணங்களாகிய மலர்களாலும் அதிகரிக்கச்செய்தனர் செய்யவே,புஷ்பசயன முதலியவைகளும பரவையாருக்குத் துன்பஞ்செய்யத் தக்கவைகளாகவே முடிந்தன. அதனால் புஷ்பசயனத்தில் உறங்கும உறக்கமும், மெல்லெனவீசும் தென்றற்காறறும், சந்திரனுடைய தண்ணியகிரணங்களும், சுகஞ்செய்வதொழிந்து பெருந்துன்பத்தையே செய்தன. இவ்விடத்தில் யாவுந் துன்பத்தையே செய்கின்றபடியினால் நாம் இதனை விட்டு வேறோரிடத்துக்குப் போவோமென்றெண்ணி மெல்லென்று மயில் எழுந்திருப்பதுபோல் எழுந்திருந்து நடக்கத்தொடங்குங்கால் அளகபாரத்தை யாற்றாதவராகி இலவ இதழேயல்லாமல் பவளத்தையும் ஒத்தவாயைச் சிறிதசைத்து தமதுள்ளத்தின்கண்நிகழும் துன்பத்தைச் சிறிதெடுத்துச் சொல்லத்தொடங்கினார்.

(௧எரு-௧எ௬-௧எஎ) நறுமணங்கமழும் மெல்லியகூந்தலைப் படைத்த எனது சேடியர்களே! என்னை இச்சந்திரன் தன்னுடைய கிரணத்தால் சுட்டெரிக்கின்றான். இது என்! நானிவனுக்கு என்னதீங்கு செய்தேன்! அவன் அப்படியிருக்க, நீங்களும் அவனிலும் கொடியராக விருக்கின்றீர்கள் ஏனெனில் சந்தனக்குழம்பாகிய தீயைப் பனிநீரோடுகலந்து

மேலே அப்புகின்றீர்கள் வீசுகின்றீர்கள். அதுசெய்வதில் நீங்கள் எப்பொழுதும் தவிரீர்தவிரீர். நீங்கள் தவிராது இத்தீங்குசெய்வது மல்லாமல் பொதியமலையிற் றவழ்ந்து இங்குவந்துலவுகின்ற நறுமணங்கமழும் தென்றற்காற்றும் இன்பஞ்செய்யுங் காற்றாய்வராமல் துன்பஞ்செய்யும் நெருப்பாய் வந்து வீசுகின்றது. பொதியமலைச்சார்பால் நறுமணச் சார்பு உண்டானதுபோல் இத்தீச்சார்பு இதற்கு எங்கிருந் துண்டாயிற்றோ அறியேன் இதுகாறும் நான் சொல்லிவந் தனவெல்லாம் நீங்கே எனக்குச் செய்துவருவதுபோல் கங் கையும் பாம்பும் தரித்துள்ள சடையனாராகிய சிவபெருமா னாருடைய அருள்பெற்றுள்ளாரென்று உங்களால் சொல் லப்பட்ட தம்பிரான்தோழனாரானது நாம் பெற்றுள்ள பேரரு ளில் ஒருசிறிது எனக்கு அருள்செய்கின்றனரா! நானிப்போ து படுமபாடெல்லாம் அவரால் உண்டானதல்லவா! அவரால் உண்டான என்பாட்டை தம்பிரானைத் தாம்பாடும் பாட் டால் ஒழிக்கப்படாதா! சகிகளே! இன்றிரவானது என்னள வில் புலருந்தன்மையை யடைவதாகத் தெரியவில்லை. அஃ தாவது-என்னைத் துன்பஞ்செய்யும இவ்விரவுக்காலம் எந் நாளும்போல் இந்நாளில ஒழிவதாகக் காணப்படவில்லை. அதனால் இவ்விரவால் உண்டாகுந துன்பததையோ ஆற்ற கில்லேன். என்னிடத்தில் இன்றளவும் நீங்காதுவாழ்ந்தி ருக்கும் நிறையுடைமையோ சிறிதளவும இனித் தரித்திருப் பதற்கில்லை. இவைபோலவே எனதுமனமும் ஸ்தனப்பெரு க்கும் வருகின்றன. இவ்வாறான துன்பத்தைக் கிடஞ்செய்

யும் அவராது ஆசைப்பெருக்கை ஒழிக்கவேண்டுமோயின் என்னளவிலிருக்கின்றதோ! என்னொருத்தியினால் ஆகத்தக்கதோ! அன்று. ஏனெனில் பெருவாழ்வுடையீர்! இப்போது எனக்குண்டாயிருக்குந் துன்பம் பலரும் ஓய்வில்லாது செய்யும் செய்கையினா லுண்டாகிய பெருந்துன்பம் இவரெல்லாரினுஞ் சிறந்து இந்நோய்வளர்ப்பதில் தலைவராயுள்ள மன்மதனோ என்பக்கலில் நின்றும நீஙகவேயிலலை. இம்மன்மதனார் எரிவிழிப்பட்டும் இவ்வாறுசெய்யும் வலியுடையராயிருப்பின் படாதிருப்பாராயின இன்னமும் எனசெயுவல்லரோ அறியேன். பிறைக்கண்ணியையும் கொன்றைமலரினையும சூடிய சடைமுடியினையுடைய இறைவனுருடைய அருள் பெற்றுடையாராகிய தமபிரான்தோழர்தான் யான் படுந் துன்பத்தை யறிவரோஎன்றால் அவரும்அறியார். ஏனெனில் யான் அவராசையால படுந்துனபததைப்போல் எனனுசையால் அவருந துன்பமடையவருமாயின் எனக்குண்டாகிய துன்பம் ஒழிநதேவிடும். அது அவருக் குண்டாகவுமில்லை எனக்கு இத்துன்பம நீங்கும் வகையும் தெரியவில்லை "யாருமற்றவருக்குத் தெய்வமே துணை" என்பதுபோல் தேரும் கொடியும் நெருங்கிவரும் திருவிழாச்சிறப்புவாய்நத வீதியினையுடைய திருவாரூருடைய தியாகேசரே! நீரொருவர்தான் என்துயரத்தை யறிந்தால் அறியலாமேயல்லாமல் வேறு யாவரறிவார். என்தெய்வமே! உனது அடியாளாகிய யான் உனதுதோழரால் சோர்வடைந்திருக்கின்றேனே இதுதானோ நானடையத்தக்கது. இச்சோர்வை நானடையவா

மோ! கங்கையும் பிறையும் சர்ப்பமாலைகளும் வெண்டலைமா லையும் உடையசடைமுடியினையுடையீர் நீராவது விடையி னையூர்ந்துவிரைந்து என்பால்வருவீர். உம்பால் அன்பிலா தவர்போல் நான் துன்பமுடையவளாயிருக்கின்றேன், நான் அன்பில்லாதவளுமல்லள் துன்பம் படத்தக்கவளுமல்லள் ஆகலின் நீர் எழுந்தருளிவந்து எனதுதுன்பத்தைப் போக் கியருளுவீர் என்றனர்.

(க௭அ) என்றிவ்வண்ணமாக அன்பினால் சுதந்தரங் கொண்டுபேசும பரவையாரையும், வன்றொண்டப்பெருமா னையும இம்மண்ணுலகில் வரும்வண்ணமாக ஸ்ரீகயிலையின் கண் இவ்விருவரையும் அடிமையாகவுடைய இறைவன் அருளினனுகையால் இப்பொழுது இருவர்காதலையும் முற் றப்பெறச் செய்யநினைத்து அதுபோலும் முற்றுப்பெறச் செய்யமுயலவேண்டியவர் அவரன்றி யாவரிருக்கின்றனர், ஆகலான் தேவர்களெல்லாம் வணங்கும் செல்வத்திருவாரூ ரின்கண் வாழும் "எம்பெருமான் அவ்வூரின்கண் வாழும் எல்லாஅன்பர்களுடைய கனவின்கண் அன்றிரவே சென்று நாமழைக்கவந்த தோழனுக்கும் நம்பரவையாருக்கும் நாளை க்கே நீங்களெல்லாருமிருந்து கலியாணத்தைச் செய்யக்கட வீர்களென்று அவர்களறிவில் அறியும்படித் திருவாய்மலர் ந்தருளினன்.

(க௭௯) அடியார்களுக்கருளியபடியே தம்மால்நிலைபெ ற்ற புகழுடைய நாவலர்கோனுகிய தமதுதோழரிடத்திற்

சென்று சுந்தரனே! நீகாதல்கொண்டு நம்மால் இன்றுவேண்டிய பரவையைத் தந்தோம் நமது அடியார்களுக்கும் பரவையை நாளையதினமே உனக்குக் கலியாணஞ் செய்துவைக்கும்படி கட்டளையிட்டுவந்தோம என்றருளி, அங்ஙனமே பரவையார்பாற்சென்று நம்பால்பரவிய அன்புடையாளே! நீகவலையொழிக நமதுதோழன்பால் உனக்குக்கலியாணம் வந்துவிட்டது நாளையதினம என்றருளிப்போயினர்.

(க௮௦) கனவின்கண் இவ்வாறருளிய திருவாக்கைக் கேட்டவராகிய பரவையாருடைய நெஞ்சத்தின்கண்கவலைக் கிடஞ்செய் கரையில்லாத துன்பமென்னும் இருளும் இரவும் ஒழியும்போது அத்துடன் ஒழியத்தக்க காமவிருளும் ஒழியுமாறு சூரியன் உதயஞ்செய்ய அக்காலத்தில் அருளுதயம்பெற்ற அடியார்களெலாங்கூடி அழியாத்துணையாகிய அருளாளர் அருளிய பேரருளையெண்ணியெண்ணி அவ்வெம்பெருமானைத் தொழுது கனவின்கண் கட்டளையிட்டபடியே நாவலூராளியாகிய சுந்தரமூர்த்திகள் மனக்கவலையொழிந்து மகிழுமாறும் இம்மணம் போலும் எம்மணம் எம்பிரானால் மணம்பெற்றது என்று யாவரும் அதிமாறும் தியாகராஜமூர்த்தியினுடைய தகுதிக்கு ஏற்ற சிறப்பினை யுடைத்தானதாய்ப் பரவையாருடைய கலியாணத்தைச் செய்துமுடித்தார்கள்.

(க௮க - க௮உ) பரவையாருடன் மணக்கும் மணக்கோலங்கொண்ட நாவலூரர் தேவராஜனாகிய தியாகேசனுக்

திருவருளால் பரவையாரது போகமார்த்த பூண்முலையாகிய பர்வதாக்ரமே யோகபரம்பரையால் துவாதசாந்தாதீதமாகிய பரவெளியைப் போய்க் கூடுவதற்குத் தாம்பற்றும் பற்றுக் கோடாக விரும்பி ஓர்நாளன்றிப் பலநாளும் பற்றிய அப்பற்றின் சம்பந்தத்தால் காணப்படாத திருவருளாகிய இறைவனடியை அப்பரவெளியிற்கண்டு அவ்வடியைத்தமது சிரத்திலும் இருதயகமலத்திலும் பிரகாசிக்கும்படியாகச் செய்து இவ்வாறான ஞானயோக சம்பந்தானுபவ சிவானந்தத்தைத் தந்து உள்ளக்கமலத்தில் வீற்றிருப்பதுபோல் கமலாலயத்திலும் வீற்றிருக்கும் இறைவனுக்குத் தமிழ்ச்சொல் என்னும் நல்லமலர்களாற் றொடுக்கப்படும் திருப்பதிகப்பாமாலைகளைச் சாத்தி அப்பாமாலைப்பெருக்குக் கிடமாகிய பரவையாருடன் கூடி தமது இறைவனுடைய விளையாடலைச் செய்துவருவாரா

(கஅரு - கஅச) எவ்வாறு செய்துவந்தாரெனின்! பரவையாருடன் கூடி அவரது இருகுன்றங்களாகிய குசங்களைச் சாரும்போதெல்லாம் சென்னியிலும் உள்ளத்திலும் இறைவனுடைய ஞானக்கிரியா சொரூபமாய்ப் பிரகாசிக்கும் அடிகளினின்றும் பெருகாநின்ற பேரானந்தப் பெருக்கைப் பரவையாருடைய திருமாளிகைப் பக்கத்திலும் பூஞ்சோலைகளிலும் பூந்தடங்களிலும் செய்குன்றுகளின் மீதிலும் சிறு மேடைகள் மீதிலும் குளிர்ச்சிபொருந்திய முத்துப்பந்தரிலும் இருந்துஇருந்து உண்டுகளித்து அவ்விடங்களினின்று

நீங்கி தியாகேசனைக் கும்பிடவேண்டுமென்னும் ஆசைமேற் கொண்டு, அமரரும் அதிசயிக்கும்படியான பொன்னுடை புடுத்து குங்குமப்பூமுதலிய கலவைகள் கலந்த சந்தனக் குழம்பைப்பூசி முடியிலும் மார்பிலும் தோள்களிலும் முன் னங்கைகளிலும் விரல்களிலும் இடையிலும் பூணவேண்டிய மாணிக்கமயமாயிருக்கின்ற ஆபரணங்களுள் பூணவேண்டு வனவற்றைப்பூண்டும் அணியவேண்டுவனவற்றை அணிந்தும் இந்திரசெல்வத்தின்மேல் செல்வமுடைய காட்சியிற் சிறந்த வராய், கையில்பொற்பிரம்பும், காதுகளில் குண்டலங்களும், மார்பில் துவளும் பூணூலும், திருநெற்றியில் திருநீற்றொளி யும் விளங்கப்பிரகாசித்தனர். இவ்வாறுபிரகாசிக்கும் சுந்தர ரது திருமேனியின் சுந்தரத்தையும் அச்சுந்தரத்துக்குச் சுந் தரஞ்செய்து காட்சிப்படும் ஆபரணச்சிறப்புகளையும் இவை யாவும் சைவபூஷணமாகவே பிரகாசிக்கச் செய்யவல்ல திரு நீற்றொளியின் சிறப்பையும் பலவாற்றானும் அழகிற்சிறந்த மங்கையர்கண்டு தம்பிரான் தோழராய்ப் பரவைநாயகராய் விளங்கும் இவருக்கு இவ்வளவுஞ்செய்யத்தகும் சிறப்புடை த்தானதே. அந்தோ! இவரணிந்திருக்கும் ஆபரணாதி அலங் காரங்கள் யாவும் அவரது திருமேனிக் கழகுசெய்வதாகியும் அவரது திருமேனியினழகு இவைகளுக் கழகுசெய்வதாகி யும் காணப்படுகின்றன. இவற்றைக்காணுறும் நாம் எதனைச் சிறந்த தென் றெடுத் தோதுவது என்று அதிசயித்துக்கூடி

சைவமெய்த் திருவின்கோலம் யாவருடைய கண்களிலும்

உள்ளங்களிலுங் தழைத்து நிரம்புமாறு வீதியின்கண் புறப்பட்டு வந்தனர்.

(கஅடு-கஅஅ) இவ்வழகிய திருக்கோலத்தோடு வீதியில் வரும்போது அவரது இருபக்கத்தும் பரவையாரது சேடியர்கள் நெருங்கி "திருநாவலூரினகண் அவதரித்த நல்ல சைவயானையே! என்றும், திரிபுரதகனஞ் செய்து மால்விடை யூர்ந்தவருக்கு அன்புருவமா யிருக்கின்றவரே! என்றும், அழிவில்லாத சிறப்பினுற் பெருமை பெற்றுள்ள ஆதிசைவ குலத்தலைவராகிய ஆரூரரே! என்றும், தனித்தனிபுகழ்ந்து பாடிவரவும், இவர்களைப்போலவே சேவற்காரர்கள் இருபக்கத்தும் யானை குரங்கு கோழி சிவல் கவுதாரி ஆகிய இவைகளைப்பற்றிக்கொண்டு அவைகளுக்குத்தாங்கள் கற்பித்துவரும் மொழிகளை அவைகள் சொல்லும்வண்ணம் சொல்லிவரவும், மலர்கள்நிறைந்த பூந்தட்டுகளையும் வாசனைவீசும் தாம்பூலத்தட்டுகளையும் ஏந்திகொண்டு மைதீட்டிய கண்களைப்படைத்த மங்கையர்கள் வரவும், பொன்னணிகளால் அலங்கரிக்கப்பட்டுள்ள குதிரைகளைப்பற்றிகொண்டு குதிரைச்சேவகர் பின்னேவரவும், நடுவே முத்துவிதானம் நிழல்செய்து வரவும், நான்குவேதங்களிலும் வல்லவேதியர்கள் வேதவொலியுடன் வரவும், மாலை அணி முதலியவற்றைத் தாங்குதலால் அசைதலையுடைய தோளையுடைய சுந்தரமூர்த்திகள் தியாகேசனுடைய கோயிலைச்சமீபித்து உள்ளே புகுந்து தேவாசிரியமண்டபத்தைச் சார்ந்தனர்.

(௧அ௬௧) சார்ந்தபோது அம்மண்டபத்தினுள்ளே விண்ணுலகில்வாழும் தேவகூட்டங்களொழிய மண்ணுலகில்மிக்க சிறப்புடன் வாழ்கின்ற எண்ணிறந்த அடியவரெல்லாம் கூடியிருக்கக் கண்டனர். கண்டபோது அவர்கள் திருநீறு சண்ணித்த திருமேனியினொளியும் அத்திருமேனியின் இடைஇடையே ஒளிவிடும் கண்மணியினொளியும் அவ்விரண்டொளியோடு சிவநாமங்களை இடைவிடாது உச்சரித்தலாகிய வாயொளியும் உடையவராயும், பாமாலைகளைப் பண்ணிசையோடுபாடுகின்றவராயும், தியானயோகத்தில் அசைவற்றிருக்கின்றவராயும், ஐம்புலன்களும் தத்தமக்குரிய விஷயங்களில் ஆவலோடு செல்லுதலொழிந்து ஒருங்குகூடி பேராசையுடன் பேரருளாளனாகிய இறைவனது திருவுருவமாகிய சிவலிங்கமூர்த்தியை வழிபடும அர்ச்சனை யுட்பட்டிருக்க ஆசைமேற்கொண்டிருப்பவராயும் இருத்தலைக்கண்டு மனம்நைந்து மெய்தானரும்பி விதிர்விதிர்த்து கைதான் தலைவைத்து கண்ணீர்ததும்பி உள்ளம்வெதும்பி அந்தோ! நாம் தியாகேசனுக்குத்தோழனும் பேறுபெற்று என்றும் மணக்கோலத்துடன் இருக்கப்பெற்றோமே யன்றி இவ்வன்பருள்ளாம் சிவமே பெறும் திருவெய்திற்றிலமே, இவரெல்லாம் திருமூலட்டானம் புலம்பலம்பாவரு தொண்டரன்றோ, புற்றிடங்கொண்டான் தன் தொண்டரன்றோ, திருமூலட்டானன் செங்கட்பொருவிடையான் அடித்தொண்டர்க்குத் தொண்டரன்றோ, திருமூலட்டானரெனச் சிந்தைசெய்து பூசனையைச் செய்யும் பூசுரர்களாகிய தொண்டர்களன்றோ, திருமூலட்டானனுக்

குப் பொருந்தாத் தவமுடைத் தொண்டர்களன்றே, திரு மூலட்டானன் செய்யபூங்கழலானடித்தொண்டர்களன்றே, எங்கள் திருமூலட்டானனாகிய புண்ணியன்தன்னடித்தொண் டர்களன்றே, திருமூலட்டானனாகிய திருக்கயிலைப் பொருப் பன்விருபபமர்தொண்டர்களன்றே,திருமூலட்டானனுக்குப் பொய்யன்பிலா அடித்தொண்டர்களன்றே, இராவணன் றன் வலிவாட்டுவித்த பொற்கழலானடித் தொண்டரன்றே இத்தன்மையான சீலம்வாய்ந்த அருளாளர்க்குத் தொண்ட ராம் புண்ணியத்தை இதுகாறும் பெறுதிருக்கின்றேமே, உன்னவரியனாயும் ஒருமகள் கேள்வனாயும் உள்ள நம்பெரு மான் பரவையெனும் மெல்லியலைக்கூட்டி அவள்தன் பொன் னருமுலையோங்கல் புணர்குவடே சார்வாகப், பன்னாளும் பயில்போக பரம்பரையில் நம்மைச்செலுத்தி அங்குகாணப் படும் கருதுவதன் முன் கருத்தழியப்பாயும் இரவுபகலில் லா இன்பவெளியூடே நாம் விரவிவிரவிநிற்பவும், அங்ஙனம் நிற்கச்செய்து அதன்பின்னர் அங்ஙனம் மிகவும் விரை ந்துவரும் அருளானந்தத்தைப் பருகவும் செய்தனன். அது போலும், இங்குகாணப்பெற்ற புண்ணியசீலராகிய அடியார் களுடைய கூட்டத்தில் மருவிப் பெறத்தகும் சுவானுபூதியா கிய சிவானந்தப்பெருக்கையும் நாம்பெறுமாறு இங்குள்ள அடியவர் திருக்கூட்டத்தவர்க்கு நம்மை அடியானாகப் பண் ணுவான் எந்தநாளோ என்று பரமேஸ்வரனாகிய தியாகேச னுடைய திருவடிகளைச் சிந்தித்து உள்ளே செல்லத்தொடங் கினர்.

(கக௩0—கக௩௪) அங்ஙனந் தொடங்கும்போது தம்மைச் சார்ந்தவர் கருதுங்கருத்தை அக்கணமே முடிக்குங்கருத் துடைய இறைவனே இவருக்கு இறைவனாகலின் தமது தோழராகிய சுந்தரமூர்த்திகள் விரும்பிக்கருதிய தொண் டர்க்குத் தொண்டராம் புண்ணியத்தை அக்கணமே முடிக் கத் திருவுள்ளத்தெண்ணினார். அவரெண்ணிய திருவுள்ளப் படியே "சிவனாரது செந்தாமரை மலர்போன்ற திருவடி யையே பற்றாகப்பற்றி வேறு எப்பற்றினையும் அறவெறியும் "விறன்மிண்டர்" என்னுந் திருநாமம்பெற்றுள்ள பெருமா னார் அன்று தேவாசிரியத்தை வந்தடைந்து அளவிலா அடி யார்குழாத்தைக்கண்டு அளவிலா ஆசைகொண்டு அவர்க்காட் பட்டு அவரடித்தொழாதார்க்கு அக்கணமே இடையூற்றைச் செய்யும் அரிய சிவபுண்ணியத்தைத் தாம் பெறுதற்கரிய பேறாகப்பெற்று அவர்களுக்குச் செய்யப்படும் உரியதொண் டாகச் சேவகத்தொழிலை மேற்கொண்டு அங்கு உலாவிக் கொண்டிருந்தனர்.

எனக்கு "தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் உண்டாங்கொலோ" என்றெண்ணி அடியார் கூட்டத்துக் குச்சமீபமாகச் செல்வதற்கஞ்சி ஒருபுடையொதுங்கிச்செல் லும் சுந்தரமூர்த்திகளது செல்லுகையை அவ்விறன்மிண்ட நாயனார், அஞ்சிச் செல்வதாகக்கருதாது அஞ்சாது செல்வ தாகவே கருதி அடங்காக்கோபங்கொண்டு அக்கணமே அங் குள்ளார் சிலரைப்பார்த்து அடியார் அடிபணியாது அப்

புறஞ்செல்லும் இவர் எப்புரத்தார் என்று வினவி இவர் எப்புரத்தாராயினும் எமக்கென்னும். இவர் உள்ளேபுகும் தகுதியுடையவரன்று. ஆகவே இவர் உள்ளேசெல்லாவண்ணம் அப்புறப்படுத்துங்கள். என்று சொல்லியபொழுது அடியவரெல்லாம் அஞ்சி விறன்மிண்டரைப்பார்த்து அடி பணிந்து தொண்டர்சீர்பரவும் அன்புடைப் பெரியோரே! புறம்போகச் செய்யும்படிக் கட்டளையிட்ட அவர்தம்பிரான் தோழராயிற்றே அவர் எம்மால் புறம்பாக்குந் தன்மையரோ தேவரீர் அவர்செய்தி யறிந்திலீர்போலும் என்று நடுக்க முற்றுச் சொல்லும்பொழுது விறன்மிண்டர் அடியார் அடி பணிய எண்ணாது செல்லும் இவரை யாதுஎண்ணித் தோழமைகொண்டனரோ! அவ்வெம்பெருமான் இவரைத்தோழமையாகக் கொண்டதனாலே நாம் அடியவர்களை வணங்குத லெற்றுக்கென்று அதனை யொழித்து இறைவரை நேரே தொழுதற்கு இவர்செல்லத்துணிந்தனர்கொல்நன்று!நன்று!! இறைவன் "பரந்துபல்லாய் மலரிட்டு முட்டாது அடியே யிறைஞ்சி, யிறந்த எல்லாம் எமக்கே பெறலாம் என்னும் அன்பருள்ளங் கரந்துநில்லாத கள்வ"னாயிற்றே அக்கள்வனைக் காணுமிடமாகிய அடியவரிடத்துக்காணாது அவ்வன்பர் காணுமிடத்துக்கு இவர் நேரேசென்று காணுமாறெங்ஙனே யானறியேன். இவரைஅன்றுவெண்ணெய்நல்லூரில் அடிமையென்றுகொண்டு இங்குதோழமை கொண்டது இவர் இங்கு வேண்டியிருக்கும் போகநலம்பெற்று வாழ்வதற்குத்தானோ, இவை யெல்லாம் பெற்றுவாழினும் வாழுக. இவர் எமக்குப்புறம்

பானவரே! இவரைப்பிரியாத்தோழமையாக அவ்விறைவரும் கொண்டிருப்பின் அவரும் எமக்குப் புறம்பானவரே யாவர் என்றனர் இருவரும் அங்கு இல்லாமல் புறம்போதத்தக்கவரே என்று அன்பர்கள்பால் வைத்த மெய்யன்பால் அருதியாக நிக்கிரக அநுக்கிரகஞ்செய்து வந்த பல நாட்களுள் திருவாரூர் கோயிலாக்கொண்டநாள் இந்நாள் என்று யாவராலும் அறிவதற்கில்லாமல் வாழ்கின்ற இறைவனும் சுந்தரரும் புறகென்று சொல்லிய உறுதியாகிய அந்த மெய்ம்மொழியை நம்பியாரூரர்கேட்டு உள்ளேபோவதற்குந் துணியாமல் வெளியே வருவதற்கும் மனங்கொள்ளாமல் சிறிது நேரம் மயங்கிப் பின்னர் நம்மைப் "புறகு" என்றதுபோலும் நமது இறைவனையும் "புறகு" என்றனரே அவர் என்னாயினரோ அவ்வதிசயத்தைக் கண்ணுறுவோ மென்று கொற்றவாயில்பணிந்து இருகரங்களையுங் குவித்து நோக்கும்போது நறுமணங்கமழுங் கொன்றைமாலைவிளங்கத் தோழர் காணுமாறு தமது திருகோயிலுக்குப் புறம்பே எதிரேதோன்றி வருவத்தைக்காட்டி நின்றனர். நின்ற அவ்வருட்கோலத்தைக் காணப்பெற்றதோழனர் தமது தம்பிரானாரது பாதங்களைப் பணிந்து அப்பாதங்களைத் தலைமேற்கொண்டு உனது அருளுருவாகிய பரவையைக்கூட்டி அதில் ஆழ்ந்திருக்கச் செய்ததுபோலும் அன்புருவாகிய அடியார்கூட்டத்தோடுகூடி அபரா அன்பினைப்பெற்று சிவானந்தமென்னும் பேரானந்த சொரூபியாய் யானிவ்வுலகில் வாழுமாறு செய்தல்வேண்டுமென்று குறைந்தடைந்தார் ஆழாமைச் [illegible]

கும் திருவடிகளை வேண்டிப்பின்னரும் அவ்வடிகளைநோக்கி இவ்வடிகளாகிய செந்தாமரை அன்பர்சிந்தையில் மலர்ந்து பெருக நின்ற பரமானந்தமென்னும் நல்லதேன் வெள்ளத்தை வேதங்களென்னும் வண்டுகள் சூழ்ந்து உண்ணுநிற்கின்றனவன்றோ, அந்தநல்லதேனைனது நாளும் பருகிக்களிக்கும்படி எதிரே இங்ஙனம் நின்றனவன்றோ, இன்னமும் இவ்வடிகளின் பெருமையையென்னென்று கூறுவேன். இவ்வடிகள் உலகெலா முய்யப்பொன்னம்பலத்துள் நடனமாடுவன, அன்பர்கள் சித்தங்கலங்க இயமன்வருவானாயின் அவனுயிர்மாளும்வண்ணம் கோபித்தழிக்கும் கோபத்தையுடையன, நறுமணங்கமழும் பூமாலையணியப்பெற்ற கூந்தலையுடைய உமாதேவியார் தமதுகைகளால் மெல்லென்று தடவச்சிவப்பேறியுள்ளன, சைவவொழுக்கத்திற் சிறந்த மாதவர்களுடைய நெஞ்சத்துள் பிரகாசிப்பன, பரிபாகம் வரம்பெறாதவரை அது வரும்வண்ணம் அவரை வேதிப்பன. ஆதியந்தங்காணா தெழுகின்ற சோதிக்குள் சோதியாய் ஒளிரும் தன்மையுடையன, மாலும் அயனும் அகழ்ந்தும் பறந்தும் காணாத அளவினையுடையன, வேதங்களெல்லாம் தமதுமுடிமேற் கொண்டிருப்பன, பேதையேனாகிய யான் அடிமையாகேனென்று வழக்காடிய பெரியபிழையினைப் பொறுத்து என்னையாள்வன, எனதென்றனுபவிக்கவரும் இன்பங்களையெல்லாம் அங்ஙனம் அனுபவிக்கவொட்டாமலும் அவைகளால்வரும் ஆகாமியமாகிய குற்றங்களை என்னுடையதாக்காமலும் இருத்தற்கு என்னுடனாய் இசைந்திருப்பன.

(கக௫) இவ்வாறு திருவடியைப் புகழும்போது இடபாருடராகிய இறைவரும் அடியார் நடுவுள் கலக்குமாறு அடியைவேண்டும் நம்பியாரூரருக்கு அதனையே அருள்செய்யக் கருதி அடியார்களுடைய வழித்தொண்டு இத்தன்மைத்தா மென்று அவ ருணருமாறு அவ ரறிவின்கண் முன்னர் விளக்கினாலன்றி விளங்கா தாகலின் முன்னர் அறிவின்கண் விளங்குமா றுணாத்தியும், பின்னர் அவருண்மையை உள்ளே உணர்த்திய வண்ணம் வெளியேயும் வாக்கினாற் சொல்லும் வண்ணம் திருவாக்கான் அவர்களுடைய பெருமையை அருளிச்செய்வாராயினர்.

(கக௬)பரவைமணவாளனே! கீளார்கோவணமும் திருநீறும் மெய்யிற்பூசி உருத்திராக்கமணியையும் தாங்கியிருக்கும் பெருமையால் எமக்கு ஒப்பானவராகின்றனர்-அஃதாவது அருளுருவத்துக் குரியாரெல்லாம் யானாகவே நினைப்பதற்குரியராகின்றனர். எமமைச்சோஹம்பாவனையாற் பாவிக்கும்பாவனையில் நீங்காதிருப்பவராகலான் எம்மைப்பெற்றவராகின்றனர். எமமோடு ஏகமாகிநிற்கும் பணியில் வழுவாது நிற்பவராகலான் உலகை வென்றவராவர். அஃதாவது மலமாயா கன்மங்களை வென்றவராவர். அவற்றை வென்றாகையினால் ஊனமேலொன்று மில்லார். அஃதாவது பிராரத்தானுபவங்கள் வந்துவாதிப்பதும பேதிப்பதுஞ் செய்யாமலிருக்கப் பெற்றவராவர். செய்யாதொழியவே அருமையாம் நிலையில்நின்றார் - அஃதாவது தமது அறிவிச்சைசெயல்கள்

அருள்நிலையினின்றும் நீங்காதிருக்கும் நிலையில் நிற்பவரா யிருப்பர். அந்நிலையில் நிற்கப்பெற்றதனால் அன்பினால் இன்பம்ஆர்வர். அஃதாவது இறைவனாகிய எனது அறிவிச்சைசெயல்கள் அவரது அறிவிச்சை செயல்களை ஆண்டு அவ் வறிவிச்சை செயல்கள் காணும் உபகாரத்தையும், காட்டும் உபகாரத்தையும் மாறாது உணரும்வகையைச் செய்து எம்பால் அன்பினையே விளைவித்துப் பேரின்பத்தை நுகர்விக்கச் செய்ய அதனை நுகர்கின்றவரா யிருப்பர். அந்த நுகர்ச்சியாகிய பேரின்பானுபவம் கைகூடவே இருமையுங் கடந்தோராவர். அஃதாவது. இருவினைகளையும், இன்பத் துன்பங்களையும், பிறப்பிறப்புகளையும் ஒழிந்தவ ராவர். இவ்வாறான இலக்கணத்திலும், அனுபவத்திலும் வழுவாதவர்களான இவ்வடியார்களை நீ சென்றடைவாயாக என்றார்.

ஆரூர் நாதனாகிய தம்பிரானார் - அடியார்கள் தமது திருவேடத்தால் தம்மைப்போலும் பெருமையுடையா ரென்றும், தம்மைத் தமது உள்ளத்தின்கண் செய்யும் இடைவிடா தியானத்தால் தம்மைப் பெற்றாரென்றும், தம்மோடு ஏகமாகி யிருத்தலால் உலகை வெல்வாரென்றும், தமது அருளாலல்லது ஒன்றையும் செய்யாமை யாகிய பணியில் வழுவாதுநிற்றலால் ஊனமேலொன்று மில்லாரென்றும், மும்மலங்களையுங் களைதல், அடியாரோடிணங்கியிருத்தல், ஆலயந்தோறும் அரனெனத்தொழுதல் ஆகிய தமது அரிய செயலில் அறிவிச்சைசெயல்கள் நீங்காது நிலைபெற்றிருந்த

லால் அருமையாகிலையினின்றாரென்றும், அவ்வனமே தமது உபகாரத்தைக் கருதுந்தோறும் உண்டாகும் உருக்கத்திலும் எல்லாக்கருவிகளும கரைந்துகரைந்து இருகண்ணீர் மழைவாரத் துரியநிலைகடந்து பரவசப்பட்டிருத்தலால் அன்பினால் இன்பமார்வார் என்றும, நாம் அன்பினால் இன்பம் ஆர்ந்திருப்பவராது ஆகாமியவினையையும் பிராரத்தானுபவத்தையும் நம்முடையதாகவே கொண்டிருத்தலால் இருமையும் கடந்தாரென்றும் ஆகலான் இவரை நீ யடைவாயென்றும் தோழருக்கு அருளசெய்தனா.

(கஙஎ) அதனைக்கேட்ட தோழனார் எம்பெருமானே! நானிப்பொழுது குற்றமற்ற பெரியதோர் நெறியைப்பெற்றேன் என்னையெனின், உலகினன்கண் சிற்றின்பத்தி லாழ்ந்தார் பேரின்பதத்துறையை அறியாதிழந்தப் பெற்றவராயும் பேரின்பத்துறையில் செல்லப்பெற்முர் சிற்றின்பத்தைப் பெருந்துன்பத்துறையெனக் கண்டொழிந்து அதிற்சென்றவராயும் இருக்கின்றனர் யான்சிற்றின்பத்திலாழ்ந்து பேரின்பத்தையறியா திழந்தே னென்பதும், பேரின்பத்தைப் பெற்றுச்சிற்றின்பம் பெருந்துன்பமெனக்கண் டொழிந்தேனென்பதுமின்றி "பெற்றசிற்றின்பமே பேரின்பமாய் அங்கே முற்றவரும்பரிசு" எனவும், "முளையாதுமாவை" எனவும், "உடப்புடைய யோகிகளதாம உற்றசிற்றின்பம், அடங்கத் தம்பேரின்பத்து ஆக்கில்-தொடங்கி, முளைப்பதும்வென்றில்லை முடிவதும் ஒன்றிலலை இலைப்பதும் ஒன்றில்லை யிவர்" என

வும்கூறிய சித்தாந்தானுபவத்தில் என்னைநிறுத்தி அந்நெறி இந்நெறியென உலகம் உணர்ந்துய்யுமாறும் அருளிய பெரும! யான் உனதருட்செயலை என்னென்று கூறுகேன்.

அஃதாவது,—அங்கு வெண்ணெய் நல்லூரில் "அடிமை" யாள் என்றுகொண்டதனுண்மையும், இங்கு "தோழமையாக வுனக்கு நம்மைத்தந்தனம்" என்றதனுண்மையும் இன்று கண்டுணர்ந்தேன். என்னையெனின், என்னை யடிமையாகக்கொண்டதனால் நான்பெறத்தக்க பேரின்பானுபவமும் தோழமையாக உன்னை எனக்குத் தந்ததனால் நான் பெறத்தக்க சிற்றின்பானுபவமும்பெறறேன் என்றும்உணர்ந்தேன். அக்கணமே அவ்வுணர்ச்சியேயளறி, சங்கரா! தந்தது உன் றன்னைக் கொண்டது என்றன்னை. இவ்வாறு பரிவர்த்தனை செய்ததில் யான் உன்பால் அந்தமில்லா ஆனந்தம் இப்போது பெற்றவனுயினேன். நீ என்பால் பெற்றது யாதோ அதனை யா னறியகில்லேன். என்ற திருவாக்கின் வியப்பினையுமாம். அஃதாவது. சிற்றின்பம் என்பது அந்தமுடைத் தானதால் அதுசிற்றின்பமெனவும், பேரின்பம் என்பது அந்தமற்றதனுல் அது பேரின்பமெனவும் பெயர் பெற்றன. அங்ஙனமிருக்க என்பாட்டு நீவழக்கையும்அருளை முன்னிட்டுச் செய்த உபகாரச்செயல்களால் அந்தமுடைய இன்பம் இதுவெனவும், அந்தமடையாத இன்பம்இதுவென வும் வேறுபிரித்து அறியாதொழிந்தேன். எங்ஙனமெனில் யான் சிற்றின்பத்திற் குரிமையாகப் பெற்றது "பரவை" பே

றின்பத்துக் குரிமையாகப்பெற்றது இனிக்கூடப்போகும் அடியவர்கூட்டம். இவ்விரண்டும் கூடியது உம்மாலேயாம். உம்மாலே கூடப்பெற்ற இவ்விரண்டனுள் - சிற்றின்பத்துக்குரிமையாகப் பெற்ற பரவைபால் பெற்றது சிற்றின்பந்தானோவென்றெண்ணுமளவில் அது பேரின்பமாகவே முடிந்தது. எவ்வாறெனின், யான் பரவையைக் கண்ணுற்ற காலத்தும் பின்னர் அவரை விரும்பியகாலத்தும் விரும்பியபடியே அவரைக் கூடியகாலத்தும் கூடி அனுபவித்தகாலத்தும் அனுபவித்து ஆனந்தமுற்றகாலத்தும் அநந்தத்தை யடையும் சிற்றின்பத்தைக் கண்டேனில்லை. அஃதாவது -உன்னைக்கண்டே பரவையைக்கண்டேன், உன்னைவிரும்பியே அவளைவிரும்பினேன், அவரை நீகூட்டவே நான்கூடினேன்: நீ அனுபவிக்கச்செய்தே நான் அனுபவித்தேன், அவ்வனுபவத்தில் நீ உதிக்கச்செய்த ஆனந்தத்திலேயே நான் ஆனந்தித்தேன். இங்ஙனமான அனுபவத்தையே நான்பெற்றேனாதலால் பரவைபால்பெற்றது சிற்றின்பமாகாது பேரின்பமாகவே முடிந்தது. சிற்றின்பத்தைக் காணுமுறைமை எவ்வாறெனின்! உன்னைக்காணாமல் பரவையையேகண்டும், உன்னை விரும்பாமல் அவரையேவிரும்பியும், நீகூட்டாமல் நானேகூடியும்,நீஅனுபவிக்கச்செய்யாமல் நானேயனுபவித்தும்,நீஉதிக்கச்செய்யாத ஆனந்தத்தில் நான் ஆனந்தித்தும் இருப்பேனாயின் பரவைபால் அதனைக்காணலாம். அன்றியும் பரவை என்பதனால் அதுகடலென்றாயிற்று. ஆகவே அங்குண்டாகும் இன்பம் சிற்றின்பமாமாறு யாங்ஙனம். அல்லதூஉம் அடியார் நடுவுள்

நாளிருக்கும் செயலை என்னை அடிமைகொண்டகாலத்து அதற்குப்பயனாகச் செய்யவேண்டியதாயிருக்க அங்ஙனஞ் செய்யாது, என்னைத் தோழமைகொண்டு என்றும் மணக் கோலத்துட னிருக்க அருளியதற்குப் பயனாகப் பரவை யைக்கூட்டியும், "வேட்கைதீர விளையாடுவாய்" என்றருளிய படி மாளிகை சோலை செய்குன்றுமுதலிய எல்லாவிடங்களி லும் விளையாடும்படிச் செய்தும், அவ்வின்பப் பெருக்கைத் தந்தருளிய உன்னைக்கண்டு களிக்குமாறு நான் சகலபோக வைபவத்துடன் வரும்போது அன்றுசெய்யவேண்டிய அடி யார்நடுவுளிருக்கும் செயலை இன்று நீசெய்யத் திருவுளத் தெண்ணி அடியவர் திருக்கூட்டத்தை நான்காணுமாறு செய்து, கண்டஅப்பொழுதே இத்தொண்டர்க்குத் தொண் டராம் புண்ணியம் நமக்கும் உண்டாமோஎன் றெண்ணும் அவாவையுந்தந்து,அவ்வவா இன்றேதீர வன்றொண்டனாகிய எனக்குத் தகுதியாக விறன்மிண்டரையுங் கூட்டி, உமக்கு ஆட்பட்ட அடிமையாகிய என்னையும் என்னை ஆட்கொண்டு ஆண்டவனாகிய உம்மையும் புறகு புறகு என்று அஞ் சாது கூறும்படிச்செய்து, அதுகேட்டயான் இதற்கு என் செய்யக்கடவோமென்று உமதுதிருவடியை நினைத்து அடி பெயர்த்து நான்வரும்போது என் அடிகளாகிய நீரும் திரு வடியை நான்காணுமாறு காட்டியருளினீர். காட்டக்கண்ட பின்னர் அடியவர் பெருமையறியாத சிறியேனுக்கு எடுத்துக் கூறி "இவரைநீயடைவாயென்றும் அருளினீர். இதனைநான் ஆராயுங்காலத்தில் பரவையைக் கண்டதுமுதல் திருவடி

யைக் காணுமளவும நீசெய்வித்து வந்தனவும் அதுபோல நான் செய்துவந்தனவும் இனி அடியார் நடுவுளிருந்து பெறத் தரும் பேரினபத்துக்கேற்ற செயலேயாய் வரக்கிடந்தனவாகக் காணப்படுகின்றனவே யன்றி சிறறின் பத்துக் கேறறசெய லாகக் காணப்படவில்லை.

ஆகலான் "ஏதந்தீர் நெறியைப்பெற்றேனுயினேன்" என்று எதிரேவணங்கிப போறறியபொழுது தமது தோழனர் கூறி யவையெல்லாந திருவுளளததடைதது மகிழ்நதவராய், மீள வும சுநதரமூாததிகளைப் பார்தது நீ அவவடியவர் திருகூட் டததவரைபபொதுவாகப் பணிநதுபோறுமல் அவாகளில் முதன்மையாக எடுததுக கூறவேண்டியவரை முன்னே எடுத் துக்கூறிப பணிதல்வேண்டும். அதுவேயுமல்லாமல் அவர்க ளுடைய மெய்சசெயலுந தோன்றக் கூறவேண்டும். அஃதா வது, எமமுடைய தனமைமுதலியயாவும் விளங்கச் சொன் மாலையாற் பாடி எமமைமகிழ்விப்பதுபோல் பொய்மையற்ற அவாகளது மெய்மைசசெயலெலலாம விளங்கச் சொன்மாலை யாற்பாடி அவாகளை மகிழ்விததுப பணிவாயாக என்றனர்.

திருத்தொண்டத்தொகையருளல்

(கக௲) இவ்வண்ணமாகத் தன்னை யாளுடை நாயகனு கிய இறைவன் சொலலியருளியதைத் திருமுனைப்பாடி நாட ராகிய சுநதரமூர்ததிகள் தலையாலவணங்கிக்கேட்டு நின்று எம் பிரானே! நீ என்னறிவின் கணின்று நீ அறிவிப்பதை யறிய வும், என்னுவின்க ணின்று நீ சொல்வதைச் சொலலவும், யா

ஞர்! நீயே அறிபவனும் நீயே சொலலுபவனுயும இருக்கின் றனை. இஃதுண்மையாக, அவர்கள் தம்மை "நீதியானும் கோ திலாவாய் மையானும்" நீ சொன்மாலையாற் பாடுவாயென்று பணித்தது என்னையோ! அப்பெரியோருடைய வரலாறு இத்தன்மைத்தா மென்றும, அவாகளுடைய அருட்குணச செய்கைகள் இததன்மைத்தா மென்றும நா னெங்ஙனம அறியவலலேன். நானெப்படிபபாடவலலேன் யான ஒனறும அறியவலலே னலலேன், சொல்லவல்லேனலலேன யானா! (சுதந்தாமறறவனன்றே) நீ அருளியபடி நான்பாடுவது எப் படியோ, அபபடி நீயே பாடி அருளலவேணடுமென்றனர்.

(கககக) மலையரையன் மகளைத தனபாகததில ஆளு நின்ற அருளாளன் ஆன்மாக்களெலலாம முமமலச்சார்பாற படுந துன்பங்களெலலா மொழிநது ஆன்மசுததியும பாச க்ஷயமும் ஸ்ரீபாதம அணைதலு மாகிய மூவனையும பெறறு அயரா அன்பினையுடைய அன்பர்கூட்டததோடு வாழ (உண் மையை உண்மையாகக்கூறிய) வேதவாக்கால "தில்லைவாழ் நணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று அளவில்லாத புகழ்படைத்தவனுகிய நடராஜமூாத்தியை முன்னுகக்கொண்டு மூவாயிரவரொன்று புகழும் மூவா (கெடாத) புகழ்பெற்ற அந்தணர்களைத் தாமெடுத்துக்கூறிய அம்மொழியோடு சுந் தரமூர்த்திகளை நோக்கி மொழி இசைப்பாய் என்றருளினா அஃதாவது, திருத்தொண்டத்தொகையைப் பண்ணிறைந்த பாடல்வழியாய்ப் பாடுவாயென்று அருளிச்செய்தனர்.

(உ00) திருவாரூர்த்தியாகேசர் "பாடுவாய்" என்றருளிய அக்கணமே தமது தலையில் திருவடிபொருந்தவணங்கி "தில்லைவாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்ற அடியே பாட்டுக்கு முதலடியாகக்கொண்டு ஏனைய அடிகளையெடுத்துச்சொல்லி முடிப்பதற்கு அருளாகவும் கொண்டு பாடத்தொடங்கியபோது இந்நாவலர் பெருமானைப்போலும் அடியையும் முடியையும் காணப்பெறாத அயன்மாலுக்கரியபெருமான் எழுந்தருளினர். எழுந்தருளினரெனவே சுந்தரமூர்த்திகள் எதிர்கொண்டுநின்ற பெருமான் கோயிலுக்குள்ளே எழுந்தருளினரோ, அன்றி விறன்மிண்டர் "புறகு" என்றதனால் அவராணைகடவாமல் கோயிலுக்குள்ளே எழுந்தருளாமல் அடியார் கூட்டத்துக்குள்ளே புகுவதற்குத் தேவாசிரியத்துள்ளே எழுந்தருளினரோ அறியோம் அல்லது நம் இறைவனார் நாவலர் பெருமானார்தம் பாட்டுகந்தபெருமானாகலான் இவர்பாடுச் செல்லுமிடத்துக் கெழுந்தருளுவா ரல்லது பாட்டில்லாவிடத்துக்குச் செல்லத்துணியார். அன்றியும் இவரன்றிப் பாடவறியார் ஆகலான் தேவாசிரியத்தே எழுந்தருளினரென்பதே திண்ணம். இது உண்மையாகலான் அவ்வுண்மை நிலையைக்கண்ட அடியார் அடிமைவேண்டிய சுந்தரமூர்த்திகள் தேவாசிரியத்திற் கூடியிருக்கும் அடியவர்பால் சார்வதற்கு நின்றவிடத்தினின்றும் பெயர்ந்து செல்வா

(உ0க) சென்று அத்தேவாசிரியத்தை யணுகுவதற்கு முன் தூரத்தேநின்று அடியவர்கூட்டங்களை நோக்கிப் பலமுறையும் பணிந்தார். அங்ஙனம் பணியுந்தோறும் அடியார்பாலிருக்கும் அன்பு இவர் பால் வந்துவந்து சேர்ந்தது. சேரச்சேரத் தாழ்ந்து தாழ்ந்து எழுந்தெழுந்து சமீபத்திற்

சென்று "எங்கள் குடிகெடினும் புரந்தரன் மாலயன் வாழ்வு கொள்ளேன்" என்றும், "நரகம்புகினும் நின்னது அடியாரோடு அல்லாலகள்ளேன்" என்றும், "உன்னையலலாது பிறதெய்வம் உளளேன்" என்றும் இவைபோலும்வேண்டும் மனத்தின் மையிற் சிறந்த அடியார்களுக்கெல்லாம் பொதுமையாய் அடியேனென்று சொல்லாமல் "திருநீலகண்டத்துக் குயவ னார்க்கடியேன்" என்று அவ்வப் பெரியாருடைய பெயராற் கூறி அடியேனென்றும், அடியார்க்கும் அடியேன் என்றும் கூறும்போதெல்லாம் பெருகும் ஆர்வத்தோடு" திருத்தொண டத்தொகை" எனனும் திருப்பதிகத்தைப் பாடி யருளவா ராயினர்.

(உ0உ) எம்பெருமானாகிய வனறொண்டப்பெருமா னார் தேவர்பெருமானாகிய இறைவனது திருவருளும் அத்திருவருளால உணரவரும் ஞானமும் ஆன்மாக்களெல் லாம் பெற்று அவ்விறைவனையேத்த, தமது பெருமான் "தில லைவாழந்தணாதம் அடியார்க்கும் அடியேன்" என்று எடுத் துக்கொடுத்த மொழியை முதலாககொண்டு அவ்வடியி லும் ஏனைய அடிகளிலும் செம்பொருள் தோன்ற திருத் தொண்டத்தொகையாகிய திருப்பதிகத்தைத் தமிழ்ப்பாமா லையாகப் பாடி அங்குவீற்றிருந்த அடியவா எதிர் நிறகும் விறன்மிண்டப் பெருமானார் திருவுள்ள மகிழுமாறு வீழ்ந்து பணிந்து அழியாப் பேருவகையைப் பெற்றனர்.

கந்தரதேசிகாயநம:

# தடுத்தாட்கொண்டபுராணம் முற்றிற்று.

சிவசுந்தர விக்ரஹாயநமஃ.

# ஏயர்கோன் கலிக்காமநாயனார்

## புராணம்.

(௯) "தீதிலாத் திருத்தொண்டத் தொகைதரப் போதுவார்" எனவே - இருவினைப்பட் டுழலும் ஆன்மாக்க ளுடைய சரித்திரம்போல் அல்லாத, அருள்வசப்பட்டு அன்புடைய ராய் இறைவன் தொண்டிற்பட்டுழன்றவருடைய திருநாமக் கோவையாகிய திருத்தொண்டத் தொகையை ஓதியருளவே வந்த பெருமான் சுந்தரமூர்த்திகளென்க. அச்சுந்தரமூர்த்தி கள் திருவாய்மலர்ந்தருளியபடியே அடியார்க்கடியராகும் நெ றியில ஆசைமீதூர்ந்து அதனினின் றும்நீங்காதமனமுடைய வராய் அவ்வாசைமுற்றுப்பெறுமாறு முப்போதுந்திருமேனி தீண்டும் தவத்திற்சிறந்த தமது குலத்துக்கேற்பத் திருவா ரூரின்கண் ஒருத்தனுய் உலகேத்தநின்ற பெருமானை முப் பொழுதும் முட்டாது தொழுதலாகிய அன்பினை யுடைய ராய்ப் பணிந்து, அப்பணியாதல் தியாகேசனிடத்திற் பெருகிய காதன்மிகுதியால் அத் திருவாரூரைவிட்டுப் போவதற்குத் துணியாதவராய் அத்திருப்பதியிற்றானே தங்கியிருந்தனர்.

(௧0, ௧௧.) அந்நாளில் முயற்சி பலவற்றுள்ளும் சிறந்த நன் முயற்சியாகிய உழவுத்தொழிலால் வளம்படச் சிறந்த தலைமைப் பாட்டினையுடைய வேளாள குலோத்பவராகிய

குண்டையூர்க் கிழார் என்னும்பெருமையிற்சிறந்த பெரியோர்-சந்திரசேகரனாகிய இறைவனார் வேதியருட்சிறந்த பெருங்கிழவராய்ப்பெருவழக்கிட்டு அவ்வழக்கில் வெற்றிகொண்டு தம் மாட்டுள்ள பேரருளுடைமையை ஆளுதற்குப் பேராளராகக்கொண்ட ஆளுடைய நம்பிகள் இவர்தாமென்று அடியரால் அறிந்து, செந்நெல்லும் பொன்னிறமுள்ள இனியபருப்பும் செழுமையாகிய கரும்பினது இனிய பாகு முதலியனவும் இவைபோலும் உணவுக்குரிய வளமிக்க பலதானிய வகைகளும் காய் கனி வகைகளும், நிலைபெற்ற சிறப்புவாய்ந்த வன்றொண்டப் பெருமானார் அருமையோடும் இன்சுவையோடும் அமுது செய்தருளும் வகையாக, அவ்வமுது படைக்கும் பணியில் வேறொருவர் புகுவதற்கு இடமில்லாமல் தாமே வேண்டுமளவும் வழுவாது நடத்திவருமபணியில் தளராதவராய் நாளுக்கு நாள் உறுதிகொண்டு அநதோ! இத்தனை நாள் அவ்வெம்பெருமானாரது பெருமையையறிந்து அவரடிக்காட்படா தொழிந்தோமே அவ் வடிகளுக் காட்பட் டொழுகுவதற்கன்றோ இம்மண்ணுலகிற் பிறநதது "மண்ணினிற் பிறந்தார் பெரும்பயன் மதிசூடும், அண்ணலார் அடியார் தமை அமுதுசெய்வித்தல், கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல், உண்மையாமெனில் உலகர்முன் வருக" என்றுகூறிய அழிவிலா மெய்யுரையால் என்னை முன்னிருந்த பெண்ணுருவாகவரச் செய்தனரன்றோ இவர் முன் வந்த ஆளுடையபிள்ளையார். அக்காட்சியைக்கண்ட அன்பிற் சிறந்த அடியவரால் அடியவர்பெருமை நாம் கேட்டிருக்கும்

என்செய்துக்கிடந்தோம். இப்படியும் இவ்வேளாண் குடியிற் பிறந்தவர் இருப்பதும் உண்டோ. என்போலும் அறிவிலிகள் ஒருவர் இருப்பரோ அந்தோ கெட்டேன்! கெட்டேன் என்று நினைந்துநினைந்து உருகியுருகி ஆராக்காதல்கொண்டு, "அடியார்க்கடியேன்" என்று பன்முறையுங் கூறிக்கூறி அடியார்க்கடிமைபூண்ட அவரடிக் காட்பட்டு, அவரடிமையாயுள்ள நம்மையும் நம்பால் அவருடைமையாயுள்ள தனதானியாதிகள் யாவையும் இன்றே அவர்பாலாக்கி இனிஒழுகுவதே நமது கடமையாமென்று நிச்சயித்து, அதுபோல் அநேகநாளாய் மேலேசொல்லியவை யெல்லாம் படிக்கட்டளையாகப் பரவையார் திருமாளிகைக்கு அனுப்பிவருவதில தவறாது ஒழுகுவாராயிருந்தனர்.

(கஉ) இவ்வாறு நடத்திவருவதனால் "அன்பெனக்கு நிரந்தரமாயருளாய்" என்றும், "வேண்டாதொன்றும் வேண்டாது மிக்கஅன்பே மேவுதலே" என்றும், அறிஞரால் பலமுறையும்வேண்டப்படும் அவ்வன்புவளர அவ்வளர்ச்சியான் ஆர்வம்வளர அவ்வளர்ச்சியான் இவையே நாம்பெறும் பயனென்று குண்டையூர்க்கிழார் உணர்ந்து மகிழ்ந்திருக்கும் நாளில் காலவேற்றுமையான் வானஞ்சுருக்கிற்று. அது சுருங்கவேவளம்படு பொருளெல்லாம் வளர்தற் கிடமாகிய தானமுஞ்சுருங்கிற்று, அது சுருங்கவே உழவர் ஏரினால் உழவாராயினர். இவ்வாறாகவே குண்டையூர்க்கிழார் தமதுகண்ணும் நிரம்பு, மனமும் நிரம்ப, வீதியில் படியாட்களும் நிரம்ப, ப

வையார் திருமாளிகையும் நிரம்ப அனுப்பிவரும் நெற்படி முத லிய யாவும் நிரம்பஎடுத்து அனுப்புவதற்குப் போதாமை யாயிற்று. போகவே திருத்தொண்டத் தொகையருளும் பே ரருளின் பெருமாளாகிய நம்மையாண்டருளும் ஆளுடைய நம்பிகள் அடியார்கூட்டத்துடன் திருவுள்ளமகிழ்ந்து திரு வமுதுகொண்டருளும்மஹேஸ்வரபூஜை சிறப்புடன்நடந்து வர அதனைக் கண்டுகேட்டு யாவரானும்கண்டு கேட்டுணர்தற் கரிய பேரானந்தப் பெரும்பேறு - நமது உடலுள்ளவும் உயி ருள்ளவும் இம்மைக்குரிய எல்லாப்பொருளும் நம்பக்கல் நிர ம்பியிருக்கக் கிடப்பதுபோலும் நிரம்பியிருக்கப் பெற்றுடை யோம் என்று பேரருள்பெற்ற பெரியோரும் ஏனையோரும் வாய்நிரம்பக்கூறிய அப்பெருவாழ்வாகிய மானம் - வானமுந் தானமுஞ் சுருங்கவந்ததுபோலும் அழியவநததே இனிநாம் என்செய்யக்கடவோம் என்று மயக்கமற்றிருந்த மனத்தின் கண் மயக்கங்கொண்டு வருந்துவாராயினர்.

கோளிலிப்பெருமான் நெல்லருளல்.

(கரு, கச) அந்நாளவது திருவாரூரின்கண் எழுந்தருளி யிருக்கும் வன்றொண்டப் பெருமானாரது திருமாளிகைக்கு நெல்லெடுத் தனுப்பும் திருத்தொண்டு என்றும் உடையரா யினேம் என்றிறுமாந்திருந்த அவ்விறுமாப்பு குன்றுமாறு இன்று நெல்லெடுத்தனுப்பக் குறையாயிற்றே இதனைப்போக் குமாறறிகிலேனே! என்றுமயங்கியெண்ணுந்தோறும்கவலைக் கடமாய்த் துன்பவெள்ளத்தாழ்ந்து, அன்றெல்லாம் உணவு கொள்ளாது இரவில் துயில்கொள்ள அவர் துன்பத்து

துயில்கொள்ளும் அதனுக்காற்றாது அத்துயிலின்கண்ணே அருட்கண்ணுளனாகிய இறைவன் அவரது துயிலும் துன்பமும் இருளும் ஒழியவந்து, ஏ அன்ப! * நீரூரும் சடைமுடியானாகிய நாம் உன்பால் ஆரூரன்றனக்கு நெல்லைக்கொடுத்தோம். ஆகலின் நீ நமது திருத்தொண்டு நீரின்றமையா தொழிந்ததே என்று எண்ணியகவலையை யொழிவாயாக என்றருள்செய்து, பின்னர் அவருக் கருள்செய்தபடியே நெல்லையளிக்க சகலநிதிகளுக்குந் தலைவனாகிய குபேரனை யழைத்து நமது ஆரூரனுக்குத் திருவமுதளிக்கும் குண்டையூர்க் கிழானிருக்கும் பேரூரே அளகாபுரியிலிருக்கும் உனது நெற்கோட்டைக்கு இருப்பிடமாகக்கொண்டு இப்பொழுதே நிரப்பக்கடவாயென் றருளிப் போயினர் அவ்வாணையின்படியே குண்டையூர்க்கிழார் பேரூர்முற்றும் பொற்குன்றம்போல் பல நெற்குன்றங்களாக மேகங்களூர்வதற்கும் இடமின்றி ஆகாயத்தையளாவ ஒழியா நெற்போரைக் குவித்தனன்.

(கரு) "ஆரூரன்றனக்கு நெல்லைக்கொடுத்தோம்" என்ற திருவாக்கைக் கனவின்கண் கேட்டதுபோலல்லாமல் நனவின்கண் சொல்லக்கேட்டதுபோ லுணர்ந்து அதனைக்காணுமாறு

---

* இவ்வூர்மேல் நீர்பொழிதல் அற்றாலும் நம்முடிமேலுள்ள நீர் வெள்ளம் அற்றதின்று. அந்நீர் உளதாகவே அந்நீரால் உண்டாகத்தக்கநெல்லும் நம்பால்உளது ஆகலான் ஆரூரனுக்குக்கொடுக்க வேண்டிய நெல்லைக்கொடுத்து மகிழ்வாயாக என்பார் - நீராரும் சடைமுடியார் ஆரூரன் தனக்கு உன்பால் நெற்றந்தோம் என்றார்.

எழுந்திருப்பவர்போல் துயிலுணர்ந்தெழுந்து பார்க்குமள வில் இஃது என்மலே! நாம் நூல்களாற் கேட்கப்படும் பொன் மலேயும் வேறுநிலத்திற் காணப்படும் கல்மலேகளும் போலுங் காணப்படவில்லேயே இங்கு அளவில்லனவாய்க் காணப்படும் நென்மலேகளென்று அதிசயித்து இம்மலேகள் பொன்மலையை வளேத்தபுராந்தகனூர் திருவருள்விளேவித்த நென்மலேகளோ. இந்தவழியாய்ப் பெருஞ்செல்வத்தைக் காணப்பெற்ற இப் புண்ணியம் பரவையார் கொழுநருக் களித்துவந்த படிக் கட்டளேயின் புண்ணியத்தின் பாலதேயன்றி வேறு எவ் வகைத்தான புண்ணியத்தின் பாலதாகும் அன்றுஅன்று என்று அவர்கழல் போற்றி அவர் எழுந்தருளியிருககுந் திருவாரூரைநோக்கிக் கும்பிட்டெழுந்தனர்.

(கரு) எழுந்துமலேயைவளேத்தார் அளித்த இந்த நெற் குன்றங்களேப் பெயாப்பார்ஆர், பெயர்த்தால் எடுபபார்ஆர், எடுத்தால்கொண்டுபோவார்ஆர், கொண்டுபோனுல் செலுத் துவார்ஆர் இச்செயல் செய்வதற்கு நம் படி யாட்களேயும் உலகிலுள்ள எப் படியாட்களேயும் கணக்கிட்டாலும் அமை யுமோ அமையா! இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத் தன் இவனிறைவன் என் றெழுதிக்காட்டொணுதவனு டைய படியாட்களால் பெயர்க்கவும் எடுக்கவும் செல்லவும் செலுத்தவும் முடியுமேயன்றி வேறொருவராலும் ஆகத்தக்க தன்று. ஆனுல் அவரிடத்துப் படியாட்களே யார் கேட்ப வர் அவருக் காட்பட்ட நம்மடிகள்தான் கேட்கத்தக்கவர்

ஆகலின் அவ்வடிகள்பாற் சென்று நாம்பட்ட குறையும் அக்குறையை அப்பாற்படுத்திய அருளையும் விண்ணப்பஞ் செய்து இந் நெற்குன்றங்கள் பெயர்ந்து ஆங்குச்செல்லும் வகையைத் தேடுவோமென் றெண்ணிச் செலவா ராயினர். இவர் செல்வதற்குமுன் இச்செய்தியை இறைவனார் தாமே தமது தோழர்பாலுஞ் சென்று அறிவித்து, அதுகாணும் படிச் செல்லுவாயென்று அருளிச்செய்ய, அவ்வடிகளும் அறிந்து அவ்வதிசயத்தைச் சென்றுகாணுமாறு தாமும் எண்ணி குண்டையூரை நோக்கி வருவாராயினர்.

(கஎ, கஅ) குற்றமற்ற அருளின்வழியே தவறாது நின்று எல்லாருஞ்செய்யவல்ல ஆரூரர்வருகையைக் கண்ட குண்டையூர்க்கிழார் எதிர்கொண்டு விரைந்துசென்று தேடும்பொருள் தேடாமலே எதிர்ப்பட்டதுபோலும் எனவெண்ணி அவரடியில்வீழ்ந்து பணிந்தெழுந்துநின்று எம்மடிகளே! நம்அடிக்காட்பட்ட அன்றுமுதல் நேற்றுவரை அடியேனால் செய்யப்பட்டுவந்தபடிக் கட்டளைப்பணி இன்றுமுட்டுப்படுவது நோக்கி அதனையொழிக்கும் வகையறியாது மயங்கித் தியங்கித்துயிலும்போதில்நனவிலுந் தேவர்க்கரியனாகிய நம்மிறைவன் எனதுகனவின்கண்வந்து நம் ஆரூரனுக்கு உன்பால் நெற்றந்தோம் எழுக என்றருளினர். அடியேன் துயிலொழிந்து நெற்குன்றத்தைக்கண்டு பணிகுன்றிமயங்கிய அத்துன்பமொழிந்தனன். அடிகளைக் காணப்பெற்று அருளும் பெற்றேன். எம்பெருமானே! அடிகளுக்காக அருளிய நெ

னம்மலையின் ஆக்கம் இங்குள்ள மனிதரால் எடுக்கும் அளவி னையுடைத்தானதன்று. அது அடியேனாற் செய்யலாகும் பணியுமன்று என்று பணிவுடன் கூறிநிற்ப, அதனைக்கேட்ட பரவைக்காபகர் கிழாருட்சிறந்த குண்டையூர்க்கிழாரே! இறை வன் நெற்குன்றமளித்தது உமதுபணிகுன்றுவண்ணம் உமக் களித்ததேயன்றி எமக்கன்று. ஆகலான் அந்நெல் பரவை யார் மாளிகைக்குவந்து சேரும்பணியும் உம்முடையதே யல் லாமல் வேறு யாருடையதாகும் ஆகா. யானும் அடியார்க் கடியேனாகிய பாக்கியத்தைப் பெற்றுள்ளே னுகையால் உம துபணி முற்றுப் பெறுமாறு செய்விக்கின்றேன் என்று இனிய மொழிகூறி அவருடன்கலந்து குண்டையூர்வந்து சேர்ந்தனர்.

(கக-உக) சேர்ந்து குண்டையூர்க்கிழாரால் அளக்கப் படாதோங்கிய நெற்குன்றம் விண்ணுட்டை யளந்துசென்று அங்குள்ளார்க்கு மண்ணுட்டாராகிய கிழாரது செல்வத் துக்கு நிகராகுமோ உங்களதுசெல்வம் ஆகா, இது அழியும் பொருட்செல்வம்; கிழார் இன்றுபெற்ற செல்வம் என்றும் அழியா அருட்செல்வம் அதனையின்று அளந்துபாருங்க ளென்று இவரதுபெருமை அங்கும் பரவச்சென்றதுபோல் ஜென்றோங்கியிருக்கும் நெற்குன்றத்தைப் பார்த்து ஆஹா! எமது பெருமானருள் அடியவர்பால் எவ்வாறு குன்றாது ஓங் கிச்செல்லுமோ அதுபோலுமன்றோ இதுஓங்கிச் சென்றிரு க்கின்றது. என்றதிசயித்து இங்ஙனமான பேரருள் எம்பர

துள்ள தோழமைத்தன்மையாலோ,பரவைபால் வைத்துள்ள திருவுள்ளப்பற்றாலோ, கிழாரது அடிமைத்திறத்தில் வைத்த அன்பினாலோ நானறியேன் எம்மிறைவனே என்று தியாகேசனைப்போற்றி இந்நெல் பரவைமாளிகைக்குப் போவதென்றால் குண்டையூர்க்கிழார் சொல்லியதுபோலும் யாவரால் ஆகத்தக்கது. ஒருவராலும் ஆகத்தக்கதன்று. இதற்குரிய ஆட்களும் இந்நெல் அளித்தவனே கொடுக்கவேண்டுமன்றி இங்குஆளில்லை என்றெண்ணி குண்டையூர்க்கிழாரை நோக்கி உமக்கு இந்நெல்லையளித்த இறைவனார் எவ்விடத்திற் கோயில்கொண்டிருக்கின்றார் என்று வினவ, அவர் அடிபணிந்து இவ்வூருக்கடுத்த எல்லையி லிருக்கின்றார். அவ்வூர் திருக்கோளிலிஎன்று சொல்லப்படும் திருப்பதியாகும் என்று கூறினார்.

அதனைக்கேட்ட சுந்தரமூர்த்திகள் அவருடன் அத்திருப்பதிக்குச்சென்று இறைவனை முன்வணங்கி "வாளன கண்மடவாள் அவள் வாடிவருந்தாமே" என்று உள்ளத்துள்ளே நின்று எழுமபேரவாவோடு திருப்பாசுரங்களைப் பாடியருளினர். அப்பதிகத்தைச் செவிமடுத்த திருக்கோளிலி எம்பெருமானார் அப்பாசுரத்துள் "சில நேல்லுபெற்றேன்" என்ற வாய்மொழியைச் சிறிது திருவுளத்தேஎண்ணி அந்தோ! இந்நெல் குண்டையூர்க்குப் பெரிதாகுமேயன்றி பரவைக்கும் பரவையால் ஆளப்படும் திருவாரூருக்கும் பெரிதாகுமோ. அன்றி அவரால் செய்யப்படும் மஹேஶ்வரபூஜை

க்குப் பெரிதாகுமோ சிறிதாகுமோ எப்படியாகுமோ என்று ஐயுற்றனன்போலும் நமதுதோழன் என்று அவ்வையத் தைப்போக்க, நம்பியாரூரனே! இன்று பகற்பொழுதுகழிந்த தற்பின் பரவையினுடைய மாளிகை யளவேயன்றி உலகின் கண் சிறந்து விளங்கும் திருவாரூரின்கண் அவளால் செய்யப் பட்டுவரும் மகேஸ்வர பூஜையினளவாக அத்திருவாரூர் நிறைய இந நெற்களை நமபூதகணங்கள் கொண்டுவந்து சேர்த்துவிடும் என்று ஒப்பிலலாத அரியதொரு ஆகா யவாக்கினல் யாவரும கேட்கும்படி அருளினன்.

(உஉ, உ௩.) அத்திருவாக்கைக் கேட்டவுடன் தம்பிரா ருடைய திருவருளைப் புகழ்நதுபோற்றிப் பூமியில் தண் டாகாரமாகவீழ்ந்து பணிந்து மீண்டும் தேவர்களாலும் உணர்தற்கரிய திருவடிகளைத் தொழுது சோளிலிப பெரு மான்பால் விடைபெற்று குண்டையூரார் திருபபணியைப் புகழ்ந்து இன்று இவ்வதிசயத்தை இவ்விடத்திற் கண்டு இறைவனருளைப்போற்றப்பெற்றதுபோலும் நாளைத் திருவா ரூரின்கண் காணப்படும் அதிசயத்தையும் கண்டுகளித்துப் போற்றும் பேற்றைப் பெற வருவீர்களன்றோ வென்றுகூறி அப்பதியைவிட்டு அடுத்த அடுத்த விடங்களிலுள்ள திருப் பதிகள் தோறுஞ் சென்று திருப்பதிகங்களோதிப் பணிந்து பணிந்துசென்று திருவாரூரைப்போய்ச்சேர்ந்து கமலாலயத் தின்கண் எழுந்தருளியிருக்கும் அநாதிமூர்த்தியைப்பணிக்

து உள்ளத்தின்கண் நீங்காத பெருமகிழ்ச்சியுடன் போற்றி வெளியேவந்து அடியவரெல்லாம் இருபக்கமும் சூழ்ந்து வரப் பரவையார் திருமாளிகைச் சேர்ந்தனர்.

(உச) சேர்ந்து பரவையாருடன் வீற்றிருந்து தியாகேசன் திருவருளால் காணப்பெற்ற நெற்குன்றக் காட்சியின் சிறப்பையும் குண்டையூர்க் கிழாருடைய குன்றாஅன்பினையும் கோளிலிப் பெருமாளருளிய திருவாக்கின் திறத்தையும் அவர் உள்ள மகிழும்படி யாவும் சொல்லி இவ்வாறெல்லாம் எம்பிரான் செய்யும அருளிச்செயல்யாவும் உன்பால் வைத்த கருணைப்பற்றேயன்றி வேறில்லை யென்றறிவாய். இது வுண்மைதானென்று நீ நம்புவதற்கு ஓர் சான்று கூறுகின்றேன். எம்பெருமானாகிய நடராசன் எனக்குச்செய்ய வேண்டிய அருள் எது எதுவோ அவையெல்லாம் உன்னை யான் பற்றச்செய்யாது எனக்கு ஒன்றுஞ் செய்தானில்லையே, மற்றோருண்மையும் அறியக்கிடக்கின்றது. என்னையெனின்! நான் அன்றுகொண்ட மணக்கோலத்தை அன்றே தடுத்தொழித்தான் நானும் அஃதெண்ணு தொழிந்திருந்தேன். இங்கு அவனருளால் வந்தபோது அவனருளாக உன்னைக் கண்டு உன்னை யான்கூட இங்குஎழுந்தருளியிருக்கும் தியாகராசன் "வேள்வியில் அன்று கொண்டகோலம் என்றும் புனைந்து நின் வேட்கைதீர, வாழிமண்மேல் விளையாடுவாய்" என்றருளினன் இதனாலும், நான் எம்பெருமானால்பெறத்தகும் பேரின்பக்கடலுக்கு நீயோர் புணையாயினாய் என்றத

கன்கறியாக்கிடக்கின்றது என்று அப்பரவையாரோடு அளவளாவி மகிழ்ந்தனர்.

## சிவபூதங்கள் திருவாரூருக்கு நெல்லைக் கொணர்தல்.

(உரு - உஎ) திருக்கோளிலியப்பன் அருளியபடியே அன்றிரவே சிவபூதங்களெல்லாம் குண்டையூர் நென்மலையைக் கவர்ந்துகொண்டு திருவாரூர்ப்புகுந்து பரவையார் மாளிகையிலும் திருவாரூர் முற்றிலும் நென்மலையாக்கிக் கண்டவரெல்லாம் அற்புதமெய்தும் காட்சிபெறும்படியாக அமைத்தன. சூரியோதயத்தில் அவரவரும் வெளியேவந்து பார்க்கும்போது ஓரடியும் வைப்பதற்கின்றி எங்கும் நிறைந்திருக்கின்ற நெல்லைக்கண்டு இது நெல்மூட்டை. நெற்போர் என்று சொல்லும் அளவினை யுடைத்தானது. இது நெற்குன்றமன்றோ! இது என்றுங்கண்டறியாத அதிசயமன்றோ! நென்மலையாகிய இவை எவ்வுலகில் விளைந்தனவோ, என்பார். சிலர் மானைநேர் நோக்கியாராகிய பரவையாருக்கு இவ்வுலகு வாழவந்தவராகிய நம்பியாரூரர்வரவழைத்தநெல் அல்லவோவென்பார். சிலர் நாம் அங்கங்கும் மலைபோலிருக்கின்ற இந்நெல்மலைகளைக் கடந்து வெளியே எப்படிப்போவது என்று போவதற்கின்றிப் பழையபடியே வீட்டுக்குள்ளே போய் ஆலோசிப்பவரா யிருப்பார். சிலர் பாக்கியத்தின் சொரூபமாயிருக்கின்ற பரவையார்தான் இந்தநெல்லை எவ்விடத்தில்தான் அடக்குவார். அவருக்குள்ள பல பல அகன்ற விடங்களும் போதுமோ போதாவாம் என்பார்.

(உ௮) இவ்வாறு ஒவ்வொருவரும் பரவையார் எவ்வாறு அடக்குவார் அடக்குவார் என்று சொல்லிக்கொண் டிருக்கும்பொழுது அச்சொல் அடங்குவதற்குமுன் வன்றொண்டப் பெருமானாலன்றோ இத்தன்மையாகிய தான்யசம்பத்து நமக்குக் கிடைத்தது என்று அகமகிழும் சிறப்பினை யுடையராகிய பரவையார் இன்றைத்தினம் உங்களுடைய மனையெல்லைக் குட்பட்டிருக்கும் நெற்குன்றுகளை அவரவரும் தங்கள்தங்கள் வீட்டிற்கு வந்தவைகளாகக்கொண்டு உள்ளே கொண்டுபோய் வைத்துக்கொள்ளலாம் என்று பேரிகை யறைவித்தனர்.

(உ௯) அப்பறையோசையின் செய்தியை யாவரும் கேட்டு இஃதென்னகருணை! இதுஎன்ன உதாரம்! இப்படியும் சொல்வாருண்டோ! இஃதன்றோ அருட்செல்வம். அருட்செல்வம்பெறுதார்க்கு இப்பேரிரக்கம் உண்டாகுமோ. இது கைம்மாறுவேண்டா கடப்பாடல்லவா என்று அவரவரும் புகழ்ந்து பரவையார் அறைவித்த பறையின்படியே வீடுகளெங்கும் நெற்கோட்டை அளவில்லாமற்கட்டி சோற்றேக்கமற்று ஒவ்வொருவரும் நெற்கொண்டுசோறுகாண்பதின்றி சோற்றையேகண்டு கண்டோர்க் கெல்லாம் சோற்றையே கொடுத்துவரும் அன்னபூரணியாயினர். பரவையார் தாம் அறைவித்த ஓர்பறையேயன்றி வீடுகள்தோறும் அன்னம் வேண்டியவரெல்லாம் முக்காலும் வரலாம் வரலாம் பரவையார் செய்விக்கும் அன்னதானம் என்று அ

ரும் பலபறையோசைகளைப் பரவையார்கேட்டு இப்புகழும் புண்ணியமும் நம்மால் தேடப்பட்டதா! தொண்டர் சீர்ப் பாட்டைப் பாடிய நமது வன்றொண்டப்பெருமானால் வந்த வல்லவா என்று உள்ளமகிழ்ந்து அப்பெருமானாரது பொன்னடியைப் பணிவாராயினர்

(ருO) இவ்வகையாய் திருவாரூர்முற்றும தென்மலையாயும் அன்னமலையாயும் வழங்கச்செய்த ஆரூரர் திருவாரூரின் கண் நீங்காக்காதலுடன் வாழ்ந்துவருநாளில் செம்பொற் புற்றிடங்கொண்டு வீற்றிருக்கும் இறைவனுடைய செழுந் தேனைத் தம்மிடத்துப் பெருகிவரும் பெரியவிருப்பத்தினோடு தாழ்ந்து தமதுணர் வென்னும் வாயாற்பருகி இம்மண் ணுலகத்தாரும் அவ்விண்ணுலகத்தாரும் இப்பண்ணுடைப் பாடல்களை யாவர் பாடவல்லார் என்று அதிசயிக்குமாறு பாடியருளினர்.

கோட்புலியார் காணுதல்.

(ருக) பாடிவரும் நாளில் கோட்புலியாரென்னும் பெரியோர் அங்குவந்து அடிபணிந்து எங்குடி உய்யும் வண்ணமும் எம்பதிவாழும் வண்ணமும் எழுந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க அவரது வேண்டுகோளைத் தடுப்பதற்கெண்ணாது எழுந்தருளுவதற்கிசைய கோட்புலியார் உள்ளமகிழ்ந்து தமதூருக்குப் போயினர்.

(ருஉ) சுந்தரமூர்த்திகள் தேவரெல்லாம் ஓதுங்கிநிற்ப தொண்டர்களெல்லாம் கூடி நெருங்கியிருக்கும்

ரைக்காவல்கொண்டு தனியாளும் கடவுட்பெருமானது அடிகளை ஆராஅன்புடன் வணங்கிஅப்பெருமான் அருள்பெற்று அங்குநின்றும் புறப்பட்டு ஆங்காங்குள்ள நம்பருடைய திருப்பதிகளுக்குப்போய் உமைபாகரைப் பணிந்து பாடிப் பாடிச்சென்று கோட்புலியாரது பதியாகிய "நாட்டியத் தான்குடி" என்னும் பெரும்பதிக்குப் போவாராயினர். இவரது வரவுக் கெதிர்பார்த்து ஊர்முற்றும் அலங்கரித்து வைத்திருக்கும் கோட்புலியார் நம்பியாரூரர் வருகையை அடியவர் திருக்கூட்டத்தாலறிந்து எதிர்கொண்டுசென்று வணங்கி யான் உய்ந்தேன் உய்ந்தேனென்று ஆர்வம்பெருகத் தமது திருமாளிகைக்கு அழைத்துக்கொண்டுபோயினர்.

(௩௪) திருமாளிகைக்குள்ளே சென்றபின்னர் இரத்தினமயமாய்ப் பிரகாசிக்கும் பொன்னாசனத்தில் மூர்த்திகளை வீற்றிருக்கச்செய்து அவரது சேவடிகளைப் பரிசுத்தமாகிய புண்ணியதீர்த்தத்தால் விளக்கி அந்தீர்த்தத்தால்○ தன்னையும் தன்வீடுமுழுவதையும் புனிதமாக்கிக் கொள்வதற்குப் புரோக்ஷித்துக்கொண்டு பின்னர் உள்ளங்களிகூரச் சிறப்புடன் நறுமணங்கமழும் மலர்களால் அர்ச்சித்தனர்.

(௩௫-௩௮) அதன் பின்னர் பனிநீரா லிழைக்கப்பட்டதும் நல்லவாசனைக் கலவைகளால் கலந்துள்ளதுமான

○ பாததீர்த்தத்தால் தன்னை முதலில் தெளித்துக்கொண்டது தேகசுத்திக்கு எனவும் மந்திரங்களால் அர்ச்சித்தது மசுத்திக்கெனவும் அறிக.

சந்தனக் கலவையும், அதுபோலும் அகிற்கட்டையாலரி
கிய நல்லகலவையும் பரிமளமிக்க கஸ்தூரிக்குழம்பும் நல்ல
நெய்யும் பச்சைகர்ப்பூரமும் இதுபோலும் வாசனைத்திரவிய
முங்கலந்தஅடைக்காய்முதலியயாவையும்அப்படியே வெவ்
வேறுவிதமாய்க் கட்டியுள்ள பூமாலைகளையும்இரத்தினமாலை
முத்துமாலைமுதலிய ஆபரணவகைகளையும் இரத்தினத்தட்
டுகளில் அமைத்து இவையாவையும் வரிசைவரிசையாக எதி
ரேவைத்துநமஸ்கரித்துஅடியேனால்செய்யப்பட்ட இவ்வரிய
பூசையினையும் பூசாத் திரவியங்களையும் அங்கீகரித்தருளல்
வேண்டுமென்று பிரார்த்தித்து சோழராஜனது சேனாபதி
யாகிய கோட்புலியார் எதிரேநிற்கும்பொழுது அடியார்பூ
ஜையிலும் அவர்க்களிக்கும் பொருள்களிலும் மட்டுப்படா
மல் மனமுவந்திருக்கும் அவரது அன்பினைநாடி திருவுள்
ளங் கரைந்துநிற்ப அக்குறிப்புணர்ந்து எனது குறைதீரு
மாறு இம்மனையிற்றானே திருவமுதுங் கொண்டருளவேண்
டுமென்று வேண்ட அவ்வாறேகொண்டருளினர். அமுதுங்
கொண்டபின்னர் கோட்புலியார் அடிபணிந்து கடல்பொங்
குவதுபோல் ஆனந்தத்தாற் பொங்கிப்போற்றிப் பின்னர்
அவ்வளவில் அன்பு அடங்கப்பெறாது சிங்கடியார் வனப்
பகையார் என்னும் தமது இரண்டுபெண்களையும் அழைத்து
சுந்தரமூர்த்திகளுடைய திருவடியில் வீழ்ந்து வணங்கச்
செய்து தாமும்வணங்கி தமது வேண்டுகோளை விண்ணப்
பிக்கத் தொடங்கினர்.

(௩௯ - ௪0) அஃதாவது - இப்பெண்கள் அடியேன் பெற்றமக்கள் ஆகலான் இவர்களை அடிமைகொண்டு இவர்களுய்யும் வண்ணம் செய்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க அப்பெருமான் உமக்குப் பெண்களாகிய இவர்கள் எமக்கும் நன்மையின்மிக்க பெண்களேயாவர் என்று கருணையுடன்கூறி அந்த இரண்டுபெண்களையும் தமது தொடையின் மேலிருக்கசெய்து மகண்மையாக் கொண்ட மனக்கசிவால் இருவரையும் மார்போடணைத்து உச்சிமோந்து கண்ணீர் அரும்பி அக்குழந்தைகளால் விரும்பப்பட்ட பொருள்களையுங் கொடுத்து அவர்களைமகிழ்வித்துத் தமது பெருமானார் கோயிலுக்குப் போயினர்.

(௪௧ - ௪௫) பிரதமத்தில் கோபுரத்தைக்கண்டு பணிந்து தாழ்ந்து அன்புநிறைந்த வுள்ளத்தோடும் இருகரங்களையும் சிரமேற் குவித்துக்கொண்டு உள்ளேபுகுந்து இறைவனைக் கண்டு பணிந்து "பூணாணாவதோ ரரவங்கண் டஞ்சேன்" என்னும் பதிகத்தில் தமதுதோழமைத்தன்மையும் விடாதஅன்பினையும் கூறி அப்பதிகத்தின் திருக்கடைக்காப்பில் "சிங்கடியப்பன் திருவாரூரன்," என்று அம்மக்களிடத்துள்ள மகண்மை மறவாமையுங் குறிப்பித்துப் பாடியருளி விடைபெற்றுக் கோட்புலியாரிடத்தும் பிரியாவிடைபெற்றுப் புறப்பட்டு திருவலிவலம்என்னும் திருப்பதிக்குப்போய் அங்கெழுந்தருளியிருக்கும் இறைவனை "நன்றுமகிழுஞ் சம்பந்தர் நாவுக்கரசர் பாட்டுவேந்தீர்" என்று சிறப்பித்து இறைஞ்சி "வலிவ

வீந்தனில் வந்து கண்டேனே" என்று மகிழ்ந்தேத்தி அருள் பெற்று" அங்குநின்றுபுறப்பட்டுத் தமது திருவாரூருக்குப் போய்ப் பூங்கோயிற் பெருமானைக்கண்டு கழல்பணிந்து பரவையார் திருமாளிகையில் எழுந்தருளியிருந்து சிலநாள் சென்றபின்னர் அத்திருவாரூரைச் சூழ்ந்திருக்கும் கோயில் கடோறுஞ் சென்று பணிந்துபோற்றி தியாகேசனைப் பிரியு மாறின்றி மீளவும் திருவாருக்கு எழுந்தருளினர்

(சகூ - சஅ) அந்நாளில் பங்குனியுத்திரத் திருநாளானது சமீபித்தநாளாகக் கண்டு அத்திருவிழாநாளில பரவையாரால் செய்யபபடும் மஹேஸ்வரபூஜையாதி சிவதருமங்களுக்கு வேண்டும பொருளில்லாக் குறையை உணர்ந்து அக்குறையகற்றுமாறு பொருள்பெறுதற்கு நாமபுகுமிடம் திருப்புகலூரே என்றெண்ணி அப்பதிக்கேசென்று கோபுரவாயிலைக்கண்டு வணங்கி வலம்வந்து சந்நிதியின் முன்னே வந்துபணிந்து தமக்கு ஸ்ரீகயிலாயத்தின்கண் அமைநதுள்ள பழமையாகிய திருத்தொண்டை நினைத்து அப்படியே அப் பெருமானுக்குப் பூமாலைசாத்தி திருநீறுங்காட்டி உள்ளம் மகிழ்ந்து துதித்து வணங்கிநின்று தாம்நினைத்துவந்த பொருள்நாட்டத்தை இன்னிசைப்பாட்டால் அறிவித்து அறிவித்தல்போல் அப்பொருளை அப்பொழுதே இறைவன் அளிப்பாரபோற்கருதி சிறுதுநேரம் கும்பிட்ட வண்ணமாகவேயிருக்க, அப்பொழுது அருளாமையைக் கண்டு தமது மனதை அவர்பாலேவைத்து தாம்கோயிலைவிட்டு வெளியே

வந்து அங்கு அருகிலுள்ள ஓர்திருமடத்திற்சென்று அங்கு தமதிறைவனிடத்து நீங்காது சார்ந்திருக்கும் அறிவினையுடைய அன்பரைச்சார்ந்து ஓர்புறத்திலிருப்ப அப்பொழுது எம்பெருமானுடைய திருவருளால தம்மையறியாமல் நித்திரைவந்து மயக்கிற்று.

(௬௯) அது அருள்மயக்கமாகலான் அதனை மாற்றுவதற்குக் கூடாதவராய் அம்மயக்கத்துட்பட்டவராய் நின்ற அவ்விடத்தைவிட்டு அங்கு திருப்பணிக்காகச் சேர்த்திருக்கும் செங்கற்போரைக கண்டு இதுதான் துயிலுக்குரிய இடமென்று எண்ணி பலகைபோலிருக்கும் அச்செங்கற்களைப் பரப்பித தலைக்குயரமும அதனையே யமைத்துத் தாம் அணிந்திருக்கும் வெண்பட்டு உத் தரியத்தால் அதிற் படிந்திருக்கும் மண்ணைப்போக்கி அவவுத்தரியத்தையே அதன்மேல்விரித்துத் துயில்கூரப் பள்ளியமர்ந்தனர்.

செங்கல்லைப் பொன்னாக்கிக்கொடுத்தல்.

(௭0) சூழ்ந்திருநத ஏனைய அடியார்குழாங்களும் ஆங்காங்கும உறக்கங்கொண் டுறங்கினர் இவ்வாறு அடியார்களெல்லாம் உறக்கத்துடனிருக்க, சுந்தரமூர்த்திகளுடைய திருக்கண்களைப்பற்றிய நித்திரையானது நீங்கிப்போகக் கண் மலர்ந்தவராய் எழுந்திருந்து கல்மேல் விரித்திருந்த வெண் பட்டாடையை எடுக்கும்போது உள்ளேநின்று செம்பொன் னொளி வீசிற்று, அதுகண்ட பொன்னார்மேனியரது தோழனார் இப்பொன்னொளி எங்குநின் றுண்டாயிற்று காம் வெ

மண்ணின் கன்மேல் சயனித்தோமே யல்லாமல் செம்பொன்மே லன்றே இது என்ன அதிசயம் முன்னிருந்த கற்களையும் காணேம். முன்னே பரவையார்பொருட்டு குண்டையூரில் நெற்போரைக் கண்டோம் அதைப்போல் இங்கும் பொற்போரைக் காணப்பெற்றோம் இதுவன்றோ அவனருள் என்று புகலூரா னருள்வியந்து போற்றினர்.

(ருக) போற்றும்பொழுது ஏனைய அடியவர்களும் துயிலநீங்கி எழுந்திருந்து பொன்மலையைக்கண்டு அப்பொன்மலைக் குடையாரைச் சூழ, அவர்களுடன் பொன்வில்லியாருடைய தோழனர் கோயிலினுள்ளே சென்று புலவர்பெருமானே! பொனனிருககப பொன்னைக்கொடுக்காது கல்லைப் பொன்னுக்கியது அடிமையாகேன் என்ற எனதுவன்னெஞ்சக்கல்லையே உனககாளா யினியலலேன எனலாமே என்றுசொல்லும்படி பொன்னுக்கிய அதிசயநதோன்றவோ! நீ எப்பொருளை எப்படி சஙகற்பிககின்றனையோ அப்படியே அப்பொருளாகும் என்னுமெ உனது சங்கறபவிசேடந் தோன்றவோ! பொன்வேண்டியுழலும புலவர்களுக்குப் பிறர்பா லுழல்வது புலமைத தன்மையன்றென்று வுணர்த்தவோ! அறியேன் என்று "தம்மையே புகழ்ந் திச்சைபேசினும்" என்னும் திருப்பதிகத்தைப பாடி இம்மையே சோறுங் கூறையும் அருள்வானருள்பெறறுப் பரவிப்பணிந்து வெளிப்போந்து அச்செம்பொன்னெல்லாம் உடன்கொண்டு திருப்பினையூருக்குப் போயினர்.

## நடனதெரிசனம்.

(ருஉ—ருரு) அவ்வூருக்குட் சென்று திருக்கோயிலைக்கண்டு தம்மைத் தெரிசிக்குமளவும் அவ்வூரிறைவனர் பொறுத்திருக்கமுடியாது சுந்தரமூர்த்திகள் அவ்வூர் எல்லைக்குச் சமீபமாய் வரும் அவ்வளவிலேயே நடனகோலத்துடன் காட்சிதந்தருள அவ் வெளிமையைக்கண்ட ஆரூரர் அடங்கா அவாவுடன் எதிர்சென்று விழுந்துபணிந்து அவ்விறைவனை நோக்கி "ஆடுமாறு வல்லாரவரே யழகியர்" என்று திருப்பாசுரத் திறுதியிலமைத்துத் திருப்பதிகத்தைப் பாடித் தம்மைமகிழ்வுடன் பார்க்க விரைந்துவந்த அப்பனையூரிறைவனை மகிழ்வித்து அவரருளும் அவ்வூரில் வாழும் அன்பர்களது வாழ்த்தொலியும் பெற்றுச் செபபொற்கட்டிகளை ஆள்களின்மே லேற்றிக் கொண்டு அப்பதியைவிட்டுத் திருவாரூருக்குச் சென்று ஆட்களைப பரவையார்மனைக்குப் போகும்படி முன்னே அனுப்பிவிட்டுத் தாம் தியாகேசனைப் போய்ப் பணிந்து எனக்குவேண்டியவற்றை எங்கெங்குமிருந்தருளும் இறைவனே என்றுபோற்றிப் பரவையார் மாளிகைக் கெழுந்தருளிப் பரவையாரைக்கண்டு பங்குனித்திருவிழாவிற்குக் கொடுத்த பொன்போதுமோ! பெருமான் அருளுடையார்க்குக் கல்லும் பொன்னும் அஃதில்லார்க்குப் பொன்னுங்கல்லாம் என்பதை உன்னளவிற் காட்டினன் என்று பொன்னைக் கொடுத்த புகழ்கூறி மகிழ்வித்துத் திருவிழாக்களிகூர்ந்து அவ்வாரூருக்கு மிகவும் அணித்தாயுள்ள திருத்தளிக

சென்று இறைவனுக்குப் பாட்டளித்துத் தாம் பாட்டின் பயனைப் பெற்று மீண்டுந் திருவாரூருக்குவந்து பரவையாருடன் பலநாள் மகிழ்ந்திருந்தனர்.

(௫௬ - அஉ) ஓர்நாள் திருநன்னிலத்துக்கெழுந்தருளி இறைவர் கோயிலுக்குச் சென்று வலம்வந்து இறைவனைக் கண்ணுறக்கண்டு "தண்ணியல் வெம்மையினான்" என்னுந் திருப்பதிகத்தைப்பாடி அப்பாட்டே அவருக்குத் தாம் கொடுக்கும் பொருளாகக் கொடுத்து அப்பதிகத்தைப் பாடுவார்க்குப் பரலோகத்துப் போம்வகையும் செய்து அங்கு எழுந்தருளியிருந்தபோது திருவீழி மிழலையின்கண்வாழும் மேம்பட்ட அந்தணர்பெரியோர் தம்பதிக்கு சுந்தரமூர்த்திகளை எழுந்தருளச் செய்யவேண்டுமென்னும் அவாவுடையராய்த் திருநன்னிலமென்னும் அத்திருபபதிமுதல் திருவீழிமிழலையாகிய தம்மூர்வரையில் நடைக்காவணமும் பாவாடையும் பரப்பி வீதிகளின் இருபக்கத்தும் வாழைகளையும் கமுகமரங்களையும் வரிசைவரிசையாய்ச் சோலைபோல் நாட்டி மகரதோரணமுதலியவற்றை மேலிடமெல்லாந் தூக்கிநிறைத்துப் பின்னர்யாவரும் ஒன்றுகூடி வன்றொண்டர்பால் வந்து திருவடியில்வீழ்ந்து வணங்கி இவ்வடி எங்களூர்வரையில் எழுந்தருளுவிக்குமாறு பிரார்த்திக்கின்றோமென்று வேண்டினர். அவர்வேண்டுகோளுக்குச் சிந்தைமலர்ந்தருளவும் யாவரும் முகமலர்ந்து சகலவாத்தியங்களும் வேதகோஷங்களும் கோஷித்துக் கொண்டுவர விண்ணிழிவிமானத்தார் வீற்றிருக்

கும் வீழிமிழலையின் கண் வந்து அப்பெருமான் கோயிலைக் கண்டு அற்புதமெய்தி இக்கோயில் மாத்திரமன்று விண்ணி ழிகோயில் இப்பதியும் விண்ணுலகச்சிறப்பு இத்தன்மைத் தாமென்று இம்மண்ணுலகத்துக்குக் காட்டவந்த பதியே யாம் என்று புகழ்ந்து ஆராஅன்புடன் புளகாங்கிதராய்ப் பந்தமறுக்க வலல பெருமானைப் பணிநது எம்பெருமானே! நீ இவ்வீழிமிழலையைக்கொண்டது வேதமுணர்ந்தோதி வேதநெறிவழுவாது ஒழுகவல்ல இங்குள்ள வேதியர்க் கருள் செய்யவன்றோ ஆகலின் அவ்வருளை அடியேற்கும் அருள வேண்டுமென்று வேண்டித்திருப்பதிகமபாடி வாசிபறிந்து காசியளிக்கவல்ல மிழலைவாணர்பால், ஞானபபிரகாசமாகிய திருவருளைபபெற்று தம்மால் மகிழவேண்டிய மகிழ்வெல் லாம அவ்வநதணர் வேண்டியவாறெல்லாம அளித்து, திரு வாஞ்சியமும் திருநறையூர்ச் சித்தீச்சரமும் வணங்கி அரிசிற் கரைப் புத்தூரை யடைந்து புகழ்த்துணையாரைப் பதிகத் தில் புகழ்துபாடி அதற்கடுத்த பலதிவ்யக்ஷேத்திரங்களையும் தரிசித்துத் திருவாவடுதுறைக்கு இனியநினைவினாற் சென்று அங்கு கோச்செங்கட் சோழ நாயனாரது அவதார மகிமை யைப் பதிகத்தில் புகழ்ந்துபாடிப் பின்னர் காவிரியின் தென்கரையிலுள்ள பல பதிகளையும்பாடி அதன்பின்னர் திருவிடைமருதூர் திருநாகேச்சரம் திருக்கலயநல்லூர் திருக் குடமூக்கு திருவலஞ்சுழி திருநல்லூர் திருச்சோற்றுத்துறை திருக்கண்டியூர் திருவையாறு திருப்பூந்துருத்திமுதலிய க்ஷேத்திரங்களையுமபாடி திருவாலம் பொழிலின்கண் பெரு

மானைப்பாடி அன்றிரவு திருக்கண் உறங்கும்பொழுது அவ ரது கனவின்கண் "மழபாடியில் வருவதற்கு நினைக்க நீமற ந்தனையோ" என்று தமது திருக்கோலத்தைக்காட்டியருள அக்கனவின்கண்ணே கண்டுகளித்து விழித்துணர்ந்து அந்த க்ஷேத்திரத்துக்குப் போய் ஐயா மழபாடியுள் மாணிக்கமே எனக்கு நனவின்கண்ணேயன்றி கனவின்கண்ணும் காட்சி தந்தருளும் அருளாளனே! என்னை நீமறவாதிருக்கும் திரு வருளை எனக்குணர்த்தற்கோ என்னைநீ மறந்தாயோஎன்றரு ளியது. "உன்னையல்லால் இனி யாரை நினைக்கேன்" என்று மழபாடியுள் மணிக்கத்தைப்போற்றி விடைபெற்று காவிரி யின் இருபக்கத்திலுமுள்ள திருப்பதிகளெல்லாம பணிந்து போற்றி மேற்றிசையிலுள்ள க்ஷேத்திரங்களைத் தரிசிக்கத் திருவுளத் தெண்ணி திருவானைக்காவுக்குப் போய் சிலந்தி யின் திருப்பணியை நினைந்து நினைந்து மனமுருகி உருகிப் பாடி அடியார்களை நோக்கி என்னைப் புறம்பாக்காது "என் னையும் ஆளுடையார்" என்று அவர்களுடன் மகிழ்ந்துகூறி உறையூர்ச் சோழமகாராசனது முத்தாரத்தைக்கொண்டரு ளிய வரலாற்றையும் அமைத்துத் திருபபதிகத்தைப்பாடி ஆனைக்காவாரை மகிழ்வித்து, சிலநாள் அங்குவசித்திருந்து பின்னர் திருப்பாச்சி லாச்சிராமத்துக் கெழுந்தருளித் தம இறைவரைக் கண்டு பணியும்போது பரவைக்குப் பொன் கொடுத்த நாளாயிற்றே இன்று நீதந்தருளல் வேண்டுமென் னக் குறிப்புடன் எதிரேநின்று போற்ற அப்பெருமான் இவர் வேண்டுகோளை யுணராதவர்போல் வாளா (சும்மா)

இருந்தனர். அது பொறுதவராய் அங்கிருப்பதற்கும் மனங் கொள்ளாமல் புழுங்கிவருந்தி வெளியேவந்து ஒருபக்கமா யிருந்து நமக்குத் தியாகேசன் ஒருவருக்குங் கொடுத்தற்கரிய தோழமைதன்மையை நமக்குத்தந்த சிறப்பைநாடி க்ஷேத் திரங்களிலுள்ள மூர்த்திகளெல்லாம் நமக்கு வேண்டுவது ஏது எதுவோ அவைகளைநாம் வேண்டுவோமாயின் அவை யெல்லாம் நமக்கு அளவில்லாமல் கொடுத்துக்கொண்டு வரு கின்றனர். அதனை இவரறியாரா, அப்படிக் கொடுப்பதிலும் தாமதமில்லாமல் கொடுக்கவேண்டுமென்று கல்லைப்பொன் னாக்கிக்கொடுத்திருக்கின்றனர். அதனையறியாரா, அன்றியும் நாம்சிலக்ஷேத்திரங்களை மறந்துசென்றாலும் அந்தக்ஷேத்திர நாயகர்கள் என்னை மறந்தனையோ என்று சொல்லி நம்மைக் காண்பதற்கு விரும்புகின்றனர் அவ்வாறெல்லாமிருக்க,இவர் அவ்விறைவர்களைப்போ லல்லாமல் நாம்வந்தும் நாம எண் ணியபொருளை வேண்டுமென்று குறிப்பிட்டு எதிரேநின்றும் எண்ணும் எண்ணத்தை யறியாதார் போன்று சும்மாவிருப் பது என்னை! இவரப்படி யிருப்பாராயின் நமக்குக் கொடுப் பவர் ஒருவருமில்லையா! அந்தோ! அந்தோ! நாம் இதுகாறும் கண்டுவந்த க்ஷேத்திரங்களிலுள்ள பிரான்களேயல்லாமல் இன்னும் எத்தனைக்ஷேத்திரங்களில் நம் தம்பிரான்களிருக் கின்றனர் அவரெல்லாம் இவர்போலும் வறியர்களா! இவ ரைப்போலும் ஒருவரும் இரார். இவரிப்படியிருப்பது நம் மைத் தோழமையாகக்கொண்டதற்கும் மீளாவடிமை கொ ண்டதற்கும் அழகன்று என்று தோழமைச் சிறப்புத்தோன்.

றவும் தமதுவன்றொண்டின் திறந்தோன்றவும் இவ்வாறெல்லாம் எண்ணியவற்றை அங்கு தமமெதிரேநிற்கும் அடியவரை நோக்கி பிறதிருப்பதியில் இவரல்லாமற் பிரானுரில்லையோ வென்னும் பொருள்பட "வைத்தனன் தனக்கே" என்னும் திருப்பதிகததைப் பாடியருளினர்.

பாச்சிலாச்சிராமத்திறைவர் பொன்னருளல்.

அப்பதிகத்தைக் கேட்டருளிய பாச்சிலாச்சிராமத்தடிகள் இவன் "இவரலாதில்லையோபிரானுர்" என்று சொல்லியதுபோலும நாம் இவனலாது நமக்குத் தோழனில்லையோ! அடியானில்லையோ என்று சொல்லுவதற்கு இல்லையே! யாவரிருக்கின்றனர். எவவுலகினும் இல்லைஇலலை. அஃதாவது - வேதங்களெல்லாம நமமையன்றி எலலாம் தன்வயத்தனவாகவே படைத்தவர்களும், அநாதிமுத்த சித்துருவாகிய தூயவுடம்பினை யுடையவர்களும, செயற்கையுணர்வாலன்றி யாவையும் அறிந்தாங்கறிவதாகிய இயற்கையுணர்வினை யுடையவர்களும், திரோபவசததியால் ஆன்மாக்களுக்கு மும்மலச்சார்பு ஒழியும் வகைக்கு வேண்டுவனவும், அனுக்கிரக சத்தியால் பேரின்பானுபவம் எவ்வாற்றானும் வரும்வகைக்கு வேண்டுவனவுமாகிய கிரியைகளைத் தனது ஞானத்தானும் இச்சை யானும் செய்பவல்ல முற்றுணர்வுடையவர்களும், திரோபவசத்தியால் ஆன்மாக்கட்கு மும்மலச்சார்பு ஒழிக்கும் வகையைத் தேடுங்காலத்து ஒழிக்கும்...க்கு வேண்டும் கருவியாயுள்ள பாசரூபமாகிய மாயா

சத்தியைப் பரிக்கிரக சத்தியாகக்கொண்டு பாசகாரியங்களை இயல்பாகவொழிப்பதே யல்லாமல் அது தன்னோடாவது தான் அதனோடாவது நீங்காச்சம்பந்தமா யிருத்தலாகிய தாதான்மிய சத்திடாகக் கொண்டிருத்தலில்லாத தன்மையிற் சிறந்து இயல்பாகவே பாசங்களினீங்கி நிற்பவர்களும், ஆன்மாக்களுடைய பாசநீக்கத்தின்பொருட்டு தனதுசத்தியை திரோதானசத்தி யெனவேறுநிற்கச்செய்து பாசமாகிய மாயையைக்கொண்டே பாசச்செயலைப் போக்கியும், பாசச்செயலினின்று நீக்கியபின்னர் அருட்சத்தியை ஆன்மாவோடுகலந்து நிறகச்செய்து அவவருட்சததியை யுடைய சிவத்தை அறிவதுமற்று அறியாதிருப்பதுமற்று அதுவாயிருப்பதாகிய நிலையில் நிறகச்செய்தலாகிய பேரருளுடைமை யுடையவர்களும், அங்ஙனம் அறிவது அறியாதிருப்பது என்கிற செயலற்று சிவமாகவே யிருத்தலாகிய அந்நிலையில் தானேகாட்டுவானுமாய் தானே காண்பானுமாய் அஞ்ஞானகன்மங்களைப் பிரவேசியாவாறு அச்சிவன் முத்தர்களுக்குச் செய்தலாகிய முடிவிலாற்றலுடையவர்களும், அஞ்ஞானகன்மம் பிரவேசியவாறுசெய்த முடிவிலாற்றலால் சிவன் முத்தர்களுடைய அறிவிச்சை செயல்கள் மூன்றும் வியாபரிக்கும் இடங்களை நியமித்து அந்நியமவழியான் அசிந்திதனாய்நின்ற பதியைச் சிந்திதனாகக்கண்டு வழிபடும் பேரின்பத் தாழ்த்துதலாகிய வரம்பிலின்ப முடையவர்களும்இல்லையென்று பொதுவகையானும் சிறப்புவகையானும் வேதவேதாந்தங்க ளெல்லாம் பறையறைந்தாற்போற் கூறி

பிருக்க அவைகளைத்தாம் ஓதவந்தும் அவற்றின் பொருளை யுணரவந்தும் அப்பொருளைப்பிறர்க்குரைக்கவும்வந்துமிருக் கின்ற நிலையைப்பெற்றவரும் நம்மைப் பரமென்று எண்ணு வதற்றும், அனுதிமல சம்பந்தம் நீக்குதற்பொருட்டுக் கூட் டிய பந்தச்சார்பும் அப்பந்தநீக்கமும் அவ்விரண்டும் ஒழிந்த பின்னர்முத்திச்சார்பும அச்சாாபால்அனுபவிக்கப்படும்முத் தானுபவமும், அவ்வனுபவத்தால் விளையும் பேரின்பமும், அப்பேரின்பத்திலாழ்ந்து சுவைத்திருததலுமாகிய இவை யெல்லாம்மேலேகூறிய அஷ்டகுணசமபன்னமுடைய நம்மா லன்றித் தம்மால இல்லை என்பதை யறிவதுமற்று அதனுல் பரனுகியநம்மை ஆண்டவனென றும் நமக்குத்தமமை அடி யவரென்றும் கொள்ளுவது மற்றுத தாமே பிரமமாய் பிரம மாகிய நம்மையொழிதது அகம்பிரம்மாஸ்மி என்று அனு சந்தித்து அவ்வனுசந்தானமே யாவருக்கும வரப்போதிப் பதில் ஆற்றலும் மனவெழுச்சியும் உடையரா யிருக்கின் றனர். தேவர்முதலாயினரோ வெனின்? நம்மை வாழ்த்துவ தெல்லாம் தாம் வாழ்வதற்கும், மனமுருகினர் போன்று நம்மை வணங்குவதெல்லாம் தம்மையாவரும் வணங்குவதற் குமேயன்றி நம்மைவாழ்த்திவணங்கி நமக்கடிமையாயிருந்து வாழ்வதற்கன்று. யாவரும் படிக்கு ஆளாயிருக்கும் அடி மையாட்களைப் போலும் நம்பால் ஒன்றைப் பெறுமளவும் தமக்கு அடிமையாட்களே யாவர் பெற்றபின்னரோ நம்மை புறியவேயதியார். நமது தோழனுகிய சுந்தரன். "வைத்த னன் றனக்கேதலையும் என்னுவும் நெஞ்சமும் வஞ்சம் ஒன்

றின்றி உய்த்தனன் றனக்கே திருவடிக்கடிமை" என்றற் றொடக்கத்தனவாகக் கூறியவைகளில் யாவும் மெய்ம்மையே பொய்ம்மை என்பது சிறிதும்இல்லையன்றோ ஆகலின் ஆரூரன் வேண்டிய பொருளைக்கொடுக்காது தாழ்த்தல் முறையனறென அககணமெ ஙிதிகருவையை அவர்காணக்கொடுத்தருளினர். அதைக்கண்ட நமபியாரூரர் அவரதுகருணையை வியந்தும் "ஏசினவலல இகழ்ந்தனவலல எம்பெருமான் என்றெப்போதும், பாயினபுகழான் பாச்சிலாச் சிராமத்தடிகளை அடிதொழப் பன்னாள், வாயினாற் கூறிமனததினால் நினைவான் வளவயல்நாவல் ஆரூரன், பேசினபேச்சைப் பொறாத்திலராகில் இவரலா தில்லைபோபிரானார்." என்று இங்ஙனமான திருக்கடைக்காப்புக் கூறியருளினார். இத்திருப்பதிகத்துள் "ஏசின" என்பது யாவையெனின,—"பாச்சிலாச்சிராமத்து எம்பரமர் - பிததரேயொதது ஓர் நச்சிலராகில் இவரலா தில்லையோ பிரானார், எனவும, "அற்றவர்க்கு அருள்செய் பாச்சிலாச்சிராமத்து அடிகள் தாம்யாது சொன்னாலும் - பெற்றபோ துவநது பெறாவிடில் இகழில் இவரலாதில்லையோ பிரானார்" எனவும, "நாச்சிலபேசி நமர்பிறர் என்று நன்று தீது என்கிலர் மற்றோர்பேச்சிலை நெஞ்சே - பாச்சிலாச்சிராமத்தடிகளென்றிவர் தாம் பலரையும் ஆட்கொள்வர்பரிந்து- ஓர் பேச்சிலர் ஒன்றைத்தர இலர்ஆகில் இவரலாதில்லையோ பிரானார்" எனவும், "பாச்சிலாச் சிராமத்து எம்பரமர் கைபது கபாலம் காடு உறைவாழ்க்கை கட்டங்கம் ஏந்திய கையர்,|| மெய்பது புரிநூல் மிளிரும் புன்சடைமேல் வெண்

திங்கள் சூடிய விகிர்தர், மெய்யரேயொத்து ஓர் பொய்செய் வதாகில் இவரலாது இல்லையோபிரானர்" எனவும், பணம்பட டும் அரவம்பற்றிய கையர் பாச்சிலாச் சிராமத்து எம்பரமர், பிணம்படுகாட்டில ஆடுவதாகில் இவரலாது இல்லையோபிரா னர்" எனவும் கூறிவந்தனவே யாம்.

இகழ்ந்தன என்பது யாவையெனின்,—"அன்னை யே என்னேன் அத்தனே என்னேன் அடிகளே அமை யும் என்று இருந்தேன் - பாச்சிலாச்சிராமத் துறையடிகள், என்னையும் ஒருவன் உளன்என்று கருதி இறை இறை திரு வருள்காட்டாய் - பின்னையே அடியார்க்கு அருள்செய்வ தாகில் இவரலாது இல்லையோபிரானர்" எனவு, "பரிந்த வர்க்கு அருள்செய் பாச்சிலாச்சிராமதது அடிகள்தாம் யாது சொன்னலும் - புரிநதவனுளே புகழ்தக்கஅடிமை போகுநாள் வீழுநாளாகிப் - பிரிநதிறைப்போதில் போவ தேயாகில் இவரலாது இல்லையோபிரானர்" எனவும், "செடி த்தவஞ்செய்வார் சென்றுழிச்செலலேன் தீவினைசெற்றிடும் என்று - அடித்தவம் அல்லால் யாரையும் அறியேன் ஆவ தும் அறிவர் எம அடிகள - பிடித்தவெண்ணீறே பூசுதல் ஆனல் இவரலாது இல்லையோபிரானர்" எனவும், "பாச்சி லாச்சிராமதது அடிகள்தாம் யாதுசொன்னலும் - பிழைத் தது பொறுத்து ஒன்றீகிலராகில் இவர் அலாது இல்லை யோபிரானர்" எனவும், "பாச்சிலாச்சிராமத்து எம்பரமர் இட்டபட்டு ஆண்டு பணிப்பிலராகில் இவர் அலாது இல்லை

யோபிரானார்" எனவும், பாச்சிலாச்சிராமத்து எம் அடிகள்-பெருமைகள் பேசிச்சிறுமைகள் செய்யில் "இவரலாது இல்லையோ பிரானார்" எனவும் கூறிவந்தனவேயாம்.

வளவயல் நாவலூரானாகிய யான் "ஏசினவாகவும் இகழ்ந்தனவாகவும் பேசினபேச்சை, பாச்சிலாச்சிராமத்து அடிகள் பொறுத்தல்வேண்டும்." என்றது என்னையெனின்,—அவை ஏசினவுமல்ல, இகழ்ந்தனவுமல்ல வாகலானென்க. எங்ஙனமெனின்,—எம்பெருமான் என்று எப்போதும் பாயின புகழால் பாச்சிலாச்சிராமத்தடிகளை அடிதொழப்பன்னுள் - வாயினாற் கூறிமனத்தினால் நினைப்பவனாயுள்ளேன், அதுமட்டோ - "வைத்தனன் தனக்கே தலையும் என்னாவும நெஞ்சமும் வஞ்சம ஒன்றின்றி - உய்த்தனன் தனக்கேதிருவடிக்கு அடிமை, குழைத்துவந்து ஒடிக்கூடுதிநெஞ்சே குற்றேவல் நாடொறும செய்வான் - இழைத்தநாள்கள் தவா அன்பிலரேனும் எம்பெருமான் என்று எப்போதும் அழைத்தவர்க்கு அருள்செய் பாச்சிலாச்சிராமத்து அடிகள்" என்று நெஞ்சத்துக் கறிவுறுத்துகின்றவனாயுள்ளேன், "துணிப்படும் உடையும் சுண்ணவெண்ணீறும் தோற்றமும் சிந்திததுக்காணின் - மணிப்படுகண்டனை வாயினாற்கூறி மனத்தினால்தொண்டனேன் நினைவேன்-ஒருமையே அல்லேன் எழுமையும் அடியேன் அடியவர்க்கு அடிமையும் ஆனேன் - உரிமையால் உரியேன் உள்ளமும் உருகும்" தன்மையனாயுள்ளேன் ஆகலின் பேசின பேச்சைப்பொறுத்தருளல் வேண்டுமென்றார்.

ஏசினவல்ல இகழ்ந்தனவல்ல ஆகலின் ஆரூரன்பேசின பேச்சைப் பொறுத்தருளல்வேண்டும் என்று முடிக்காது, பொறுத்திலராகில் இவரலாது இல்லையோர் பிரானுர் என்று மீண்டுங்கூறித் திருக்கடைக்காப்புச் சாத்தியருளியது என்னையெனின், சுந்தரமூர்த்திகளை இறைவன் தொண்டரென்னும் அம்முறையிற் கொளளாது வனறொண்ட ரென்று அம்முறையிற் கொண்டதனுனும், கொண்ட அவ்வளவி லொழியாது தோழரென்று கொண்டதனுனும் அங்ஙனம் கூறவந்ததென்க அஃதாவது - இப்பதிகத்துள் தொண் டையும், வன்தொண்டையும் முன்னா எடுத்துக்கூறிப் பின் னர் தோழமையும் விளங்கக்கூறிஞர் என்றறிக.

அல்லதூஉம், தாங்கயிலையின்கண் சிவபிரானை நீங்கா திருந்த நிலைமையினின்றும நீங்கியகாரணமும், நீங்கி ஐம்புல வாழ்க்கையாகிய மானுடப்பிறப்புடன் நிலவுலகில வாழ வந்ததாகிய காரணமும், வந்து தமமு மனவாக்குக் காயங்க ளோடு இறைவன் தம்மை அடிமைகொண்ட காரணமும ஆகிய இம்மூவகை முறையும் விளங்க ஓதிய திருப்பதிக மாகலான் இறைவன் அம்மூவகைச் சொற்களையுங்கேட்டு அவற்றிலுள்ள மெய்வகைக்கு மிகவும் மகிழ்ந்து கொடு த்த நிதிக்குவையைப்பெற்று அவரது கருணைத்திறத்தை எண்ணியெண்ணி உருகிப்பாடிவணங்கி அப்பதியிடைவதி அத்திருப்பதிக்கு அருகில் இருக்கும் க்ஷேத்திரங்களை வணங்கிப்போற்றி மீளவும் அப்பதியில் சிலநாள் வசித் திருந்தனர்.

(அ௩-அ௫) பின்னர் அதைச்சார்ந்த இருபக்கங்களிலுமுள்ள க்ஷேத்திரங்களையெல்லாம் தெரிசித்துப் போற்றி, திருப்பைஞ்ஞீலியை அடைந்து அப்பெருமானை வணங்கிப் பிரதக்ஷணமாக வரும்போது அற்புதக்கோலத்தோடு அங்குவீற்றிருக்கும், பிக்ஷாடனமூர்த்தியைக் கண்டு களித்து கண்களினின்று ஆனந்தநீர் பெருக்கெடுத்துவரக் கைகளைக்குவித்திறைஞ்சி எம்பெருமானே! வண்டுகள் ஒலிக்கும் கூந்தலையுடைய மங்கையருடைய மனங்களைக் கவரும்படியாக உமமுடைய திருவடிவம் காணப்படுகின்றதேயன்றி பலிகொள்ளத்தக்க வடிவமாகக் காணப்படவில்லையே பலியிட வருகின்றவர் தங்களுயிர்ப் பலியை உம்மைக் கேட்பரேயன்றி அவர்கொண்டுவந்தபலியை உமக்கு எவ்வண்ணம் இடப்போகின்றனர் என்று பலபலவிதமாய் வியந்து புகழ்ந்து "காருலாவிய நஞ்சையுண்டிருள் கண்ட" என்னும் திருப்பதிகத்தைப் பாடி அவரிடம் பெறவேண்டிய அருட்பலியைப்பெற்று அன்பாகூட்டத்தையுந் தொழுதுவணங்கி ஆனந்தத்துடன் இனிமையோடிருந்து பின்னர் திருவீங்கிமலை முதலிய பலதலங்களையும் வணங்கி, கொங்குநாட்டிலுள்ள திருப்பாண்டிக்கொடுமுடிக்குப் போயினர்.

(அசு-அஎ.) போய்க் கோயிலுக்குட்சென்று வலம் வந்து அன்புடன் வணங்கிப் பொன்மேனியை நோக்கினார். நோக்குந்தோறும் பொங்கியெழும் பெரியஆசையினால் இப்பெருமானை நாம் மறக்கக்கூடாதென்று உண்மையாக

வெழுந்த மனக்குறிப்பினுல் தாம் மகிழ்ந்தவராய் எம்மிறை வனே! நான் உனது திருவருள்வசப்பட்டு என்னை நான் மறக்கவந்து உனது சொரூபவடிவத்தில் இலயித்திருக்கும தன்மைவந்த போதினும் எனது நாவானது உனது திருநாம மாகிய ஸ்ரீபஞ்சாக்கரத்தை மறவாது இனியசுவைபெருக உச்சரித்துக்கொண்டிருக்கும் தன்மையைப்பெற்றது அத ஞல் நான் எப்பொழுதும் பஞ்சாக்கரத்தின் பொருளாகிய சொரூபவடிவத்தையும், பஞ்சாக்கரத்தின தடத்தவடிவத் தையும மறந்தவனுயினேனல்லேன எனவே - நான் திருவ ருள் வசப்படாது சொரூபவடிவத்தில் போவேனுயின் தட த்தவடிவத்தை மறப்பேன். தடத்தவடிவத்தில வருவேனு யின் சொரூபவடிவத்தை மறப்பேன். அங்ஙனமின்றி நான அருள்வசப் பட்டேனுகலின் அவ்வருள் என்னறிவில் சொ ரூபவடிவத்தையும், என்னுவில் தடத்தவடிவத்தையும் நீங்கா திருக்கச்செய்கின்றது என்று அன்பினுல் இருவடிவத் தாலும் பிணிக்கப்பட்டவராய் "மற்றுப்பற்று எனக்கின்றி நின் திருப்பாதமே மனம்பாவித்தேன்" என்று சிவபெருமான் திரு நாமமாகிய நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாடியருளினு

(அஅ - ௬௧) உயிர்க்குறுதியாகிய ஸ்ரீபஞ்சாக்கரத திருப்பதிகத்தை உலகெலாம் உய்யும்வண்ணம் பாடியரு ளிய பின்னரும ஸ்ரீபஞ்சாக்கரபொருளில் தாம் நிற்கும் முறைமையினும் அதனை ஓதும்முறைமையினும், தம்முண ர்ச்சி நீங்காத ஒருமைப்பாடுடைத்தாய் நிற்ப, ஏனையதிருப்

பதிகளிலும் இவர்சென்று பதிகம்பாடவேண்டிய பணிமுற்
றுப்பெறுமாறு திருவருள் முன்னிற்பதால் அச்சிந்தை
யோடு அந்த க்ஷேத்திரத்தின் அருகிலுள்ள சிறந்தபதிகள்
தோறும் சென்று போற்றிப்பணிந்து அகத்தொண்டிநாட்டி
லுள்ள காஞ்சிநதிக்கரையிலிருக்கும் திருப்பேரூர் எனனும்
திருப்பதியை மிசுக அன்போடும் போய்ப்பணிந்து இக்
கோயில் என்னைத் தடுத்தாட்கொண்ட எம்பெருமான்
இருக்குங் கோயிலாமென்று அவ்வெண்ணத்துடன்
சென்று அன்பருடன்கூடி வலம்வந்து நடராஜன் சந்நிதி
யில்வந்தபோது தில்லையின்கண் தம்மைவசப்படுத்திய பேரா
னந்த நடனக்கோலத்தை நேராகக் காட்டியருளிய போது
அவ்வருட்கோலத்தில் பெருகவெடுத்துவரும் ஆனந்தவெள்
ளத்தில் திளைத்தவராய் இருகரங்களையும் குவித்து ஆனந்
தக்கண்ணீர் பெருக வீழ்ந்து வணங்கி என்பினையுருக்கும்
அன்புடன் எழுந்திருந்து இதுஇன்னது இதுஇன்னது
என்றுஅறிந்து இன்பநுகர்ச்சி செய்யவல்ல ஐம்புலன்களுக்
கும் இவ்வின்பம் இத்தன்மைத்தென்று சொல்லுதற்கும்
புலப்படாமல் அவைகள் அவ்வின்பத்துட் கலந்துகிடப்ப
அவ்வையுணர்வையுங்கடந்து எழுகின்ற பேருணர்வு தம்
துணர்விற்கலந்து மேலிட்டொளிர அவ்வொளியினால் தாண்
டவம்புரியுந் தம்பிரானைத் தலைப்படக்கிடைத்தது சைவசம
யத்தை யாளவந்த அரசராகிய ஆளுடைநம்பியாருக்கு
அதுகிடைத்தபின் அந்நிலைமையின்கண் விளைந்த விளை
வினளவை இங்கு யாவர் அறிந்துரைக்கவல்லவர்கள். யாவ

ராலும் அளத்தற்கரிய நிலையைப் பெறும் அருள்பெற்ற அன்புருவாகிய ஆரூரர் அந்நிலையைக்கருதி மகிழ்ந்து பேரின்பவெள்ளந் ததும்பப் பாடலைப்பாடிப் போற்றி அப்பெருமானையகன்றுபோவதற்கு மனங்கொள்ளாமல் அங்கு வசித்து இந்தத்தரிசனந்தந்து மகிழ்வித்த நடராஜப்பெருமான் பொன்னம்பலத்தின் கண்ணே தாண்டவம்புரியும் நடனத்தைக் கண்டு கும்பிடப்பெற்றால் வேறிடத்திற் சென்று இனி நாம் பெறப்படும் பயன் என்னிருக்கின்றது என்று சிதம்பரத்திற்குப் போக மிக்க ஆவலுடன் மறுபடியும் புறப்பட்டனர்.

(௯௨-௯௯) புறப்பட்டு மலை காடு நதிமுதலிய பலவுங் கடந்து பலபதிகளையுங்கண்டு வணங்கிப் பாடி வெஞ்சமாக் கூடல் திருக்கற்குடி முதலிய பலக்ஷேத்திரங்களையும் பணிந்துபாடி திருவாறைமேற்றளி என்னும் திருப்பதியை யடைந்து நாடோறும் பணியுங்கால திருவருள் நோக்கமும் மேன்மேற்கூட இன்னம்பர் என்னும் க்ஷேத்திரத்தையடைந்து பெருமானை வணங்க அங்கிருந்தபொழுது சுந்தரமூர்த்திகள் யாதுகருதினரோ அதற்கிறைவன் யாது செய்யத் தொழிந்தனனோ அதனை நாம் அறியகில்லோம். அம்மூர்த்திகள் தமது நெஞ்சத்தைநோக்கி "அங்கம் ஓதிஓர் ஆறைமேற்றளிநின்றும் போந்துவந்து இன்னம்பர் - தங்கினோமையும் இன்னதென்றிலர் ஈசனார் எழுநெஞ்சமே - கங்குல் ஏமங்கள்கொண்டு தேவர்கள் ஏத்தவானவர் தாம்தொழும்-பொங்கு மால்விடையேறி செல்வப் புறம்பயந்தொழப்போதுமே" என்று

பதிகமோதி தமது குறைபாட்டை வெளிப்படுத்தித் திருப்
புறம்பயமென்னும் க்ஷேத்திரத்தைச்சமீபித்தனர்

(௯௭-௧௦௦.) அங்குள்ள தொண்டர்களெல்லாம் "அன்று வெண்ணெய் நல்லூரினில் ஒப்பருந்தனிவேதியன் பழவோலை காட்டிநின்று ஆண்டவராகிய" வன்றொண்டப் பெருமானார நமது திருப்பதிக்கு எழுந்தருளிவர நாம் செய்துள்ள தவம் யாதோ என்று ஆராஅன்புகொண்டு எதிர்கொண்டுசென்று பணிந்தபோது பெருமானாரும் திருக்கோபுரவாயிலைவந்து சேர்ந்து தம்மைப்பணிந்த அன்பரோடு உள்ளேசென்று ஆனந்தநடனமூர்த்தியாய் வீற்றிருந்தருளும் இறைவனைப் பணிந்து போற்றி கைகுவித்துநின்று அப்பெருமானைப் பாட்டாகிய மலர்களால் அர்ச்சனைசெய்ததேயன்றி நறுமணங்கமழும் நல்லமலர்களால் அர்ச்சனைசெய்ய ஆசைகொண்டு அதுபோல அர்ச்சித்து பூமியிற்பொருந்த அஷ்டாங்க பஞ்சாங்கத்துடன் ஆசையோடுபணிந்து வணங்கி இங்ஙனம் பணிந்து வணங்கும் ஆசை மேன்மேல் உண்டாம் பேரருள் பெற்று அவ்வாசையை விளைவிக்கவல்ல அன்பினை மேற்கொண்டு கண்ணீரைப்பெருக்கிப் புதியமலர்போலும் காணப்படும் திருவடித்தாமரையில் மீளவும்பணிந்து போற்றி அவ்வடித்தாமரையை உள்ளத்துள்ளே கொண்டு கோயிலின்புறத்தேவந்து அன்பர்கூட்டங்களை நோக்கி அன்பர்காள் நம்பெருமான் "எங்குநிறைந்த பொருள்" என்றுசுருதிகூறியது எங்கெங்கும் கண்டுவணங்

துவதற்கோ வணங்காதொழிதற்கோ அங்ஙனம் வணங்காதாரெல்லாம் வணங்காதே யொழிந்துபோக, நாம் சைவராகலின் எப்பொருளின் தன்மையும் ஆகாத அப்பரம்பொருளாகிய நம்மிறைவன் நம்பால்வைத்த பரமகாருணியத்தினால் எங்கெங்கும் மூர்த்தியாய்க் கோயில்கொண்டிருக்கின்றனாகலின் நாம் அங்கங்குஞ்சென்று அவ்வம்மூர்த்திகளின் திருக்கோலத்தைக் கண்ணாரக்கண்டு மனமாறநினைந்து வாயாரவாழ்த்தி உடம்பாரப்பணிந்து தலையாரவணங்கி ஊனடைந்த உடம்பின்பயனைப் பெறுவோமாக என்று யாவரும் என்பின்உருக வுணர்ச்சிபொழிந்த அன்பின்உருவேயாக ஓதி யாவருடன் திருப்பதிகளுக்குப் போகத் தலைப்பட்டுத் தம்பிரான் எழுந்தருளியிருக்கும் பலபல பதிகளுக்குப் போய்ப் பணிந்துபணிந்து பரசிவாகாரராய் அவனேயாய் நிற்கக்கூடும் அருளைக்கூட கூடலையாற்றூரைச் சேர்ந்தனர்

(௧௨௩ - ௧௨௪) அவர் அங்கு எழுந்தருளியிருக்கும் தமது அடிகளை வணங்கவேண்டும் என்னும் எண்ணம் யாது காரணத்தாலோ மறந்து அவ்வூருக்குள்ளே போகாது திருமுதுகுன்றத்தை எண்ணி அப்பதிக்குப்போகும் ஓர்மார்க்கத்தைக்கண்டு அவ்வழியேபோகத் தலைப்பட்டனர். அப்போது கூடலையாற்றூர் இறைவன் அந்தோ! நம்பால் அவனுக்குள்ள அன்பால் அவன் நமக்குத் தொண்டனாயும், நமக்கு அவன்பாலுள்ள அன்பால் நாம் அவனுக்குத்தோழனாயும் உள்ளோம். இவ்வகைத்தான தாதான்மியசம்பந்த

முள்ள சுந்தரன் நமதுபுறமபபதத்துக்குவநது ஆரூக்காதலை நம்பாற்காட்டி அக்காதலோடு அடியாருடன்கூடி பலதளி களிலும் சென்றுசென்று நமதுசகளாகாரததை ஐம்புலன் களாரக் கண்டு அங்ஙனங்கண்ட அவவழியே உள்ளத் துள்ளே ஆசைப்பெருகக முடையனாய் அது அமுதப் பெருங் கடலாய்ப் பரவி அகாய.லில் ஒப்பற்ற தனிச்சுட ராய் மலைபோலோங்கித தோனறும நிஷ்களாகாரத்தில் இலயிததிருசசுப நிலையை யுடையவனுகலான அவனை நாம் கூடி நமதுகூடலை யாற்றாரில நாமகொண்டிருககும சக ளாகாரத்தைக்காடடி நம்மைபபாடும பணியிற்கூடடவேண் டும் என்று திருவுளத்தெண்ணி உமாதேவியாரோடுகூடி மெய்ப்பரம்பொருளாய் விளங்கும அவவிறைவன் ஓர்பிரா மணராகி நமபியாருரர்முன்புசென்று மனமுருகும வண் ணம் நின்றனர்.

அவவேதியரைக்கண்டு நமமைததடுத்தாள வந்தவேதி யரோவென்று மிக்க ஆசையுடன்பணிந்து திருமுதுகுன் றததுக்குப் போகும மார்க்கம யாது என்றுகேட்ட னா. வந்தவேதியா இமமார்க்கம் திருககூடலையாற்றூருக் குப் போகும மார்ககமாகும. அது அரியக்ஷேத்திரமாயிற் றே அங்கு செல்லாதுபோதல் முறையாமோ அவவூருக்குப் போக நான்வழிகாட்டுகின்றேன் என்று அவ்வழியாய்ச் செல்ல, சுநதரமூர்த்திகளும அவர்பின்னே சென்றனர். சில தூரஞ் சென்றபின் முன்னே வழிகாட்டிச செல்லும் பெரு

மானைக் காணுமா இவர் எவ்வாறுபோயினர். இவ்வதிசயம் அறியேனே என்று வழிகாட்டவந்த பெருமான் கூடலையாற் றூர் பெருமானே என்றுணர்ந்து அவ்வதிசயத்தையேபாடிக் கோயிலுக்குட்சென்று பணிந்து போற்றி திருமுதுகுன்ற (விருத்தாசல)த்தை யடைந்து திருக்கோபுரத்தைக் கண்டு நமஸ்கரித்துப் பொருள்வேண்டுங்குறிப்புடன் பாடும்போது அவர்குறிப்புணர்ந்தருளும் பெருமான்பன்னீராயிரம்பொன் கொடுக்க, அதனைப்பெற்று மிகவும் மகிழ்ந்தவராய் மீண்டும் "மெய்யை முற்றப்பொடிப்பூசி" எனனும் பதிகமொன்றைப் பாடி அவர் திருவுள்ளமகிழ பொன்னளிக்கும் பெருமானே! என்னுள்ளமகிழச்செய்த என்னையனே! திருவரூரிலுள்ள ளார் இஃதென்னவென்று மயங்கவும் பரவை அதிசயிக்கவு மாக இப்பொன்னெல்லாம் அங்குவந்து சேருமபடிச்செய்ய வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய முதுகுன்றர் ஆகாய வாக்கால இப்பொன்னெல்லாம இம்மணிமுத்தாநதியில் இட்டுப்போய் திருவாரூர்க்குளத்தில எடுத்துக்கொள்வாய் என்று அருளினர். அவ்வருள்பெற்று அப்பொன்னில் சரி பார்ப்பதற்கு ஓர்துண்டளவு மச்சமாக வெட்டி எடுத்துக் கொண்டு அப்பொற்கட்டியை மணிமுத்தா நதியிலிட்டு என்னையாண்ட அருளை இதிலறிவேனென்று எண்ணி நிருத்தர் கூத்தைக்கண்டு போவோமென்று சிதம்பரம் போகப் புறப்பட்டு கடம்பூர் என்னும் பெரியக்ஷேத்திரத் தையுங் கும்பிட்டுப்போற்றி தில்லையைக்கண்டு ஆரமகிழ வெய்தி வீதிமுதல் ஆலயமவரையில் அங்கங்கும பணிந்து

கனகசபையைக் கண்டனர். காணவும் தலைமேல் இரண்டு கரங்களையுங் குவித்து, பின்னர் அதனுள்ளே ஆடும் கூத்தனடி கண்டனர். கண்டபொழுதே கண்கள் ஆனந்தநீரை வெள்ளமாய்ப் பொழிந்தன. வாய் போற்றுவதற்கு முடியாமல் குளறுதலை யடைந்தது, உடம்பு உறுப்புகளெல்லாம் பூமியிற் படிய தண்டாகாரமாக வீழ்ந்து வணங்கிற்று உள்ளத்தில் கூத்துநிறையப்பெற்று நெஞ்சம் அக்கூத்திற் பெருகும் ஆனந்தத்தைத் தம்முள் நிறையப்பெற்றது

இவ்வகையாகக் கைகளும் கண்களும் உள்ளமும் நெஞ்சமும் நடராசன் வசப்பட்டு நிற்ப, நாவலர்பெருமானார் "மடித்தாடும் அடிமைக்கள்" என்னும் பதிகத்தைப் பாடத்தொடங்கி நெஞ்சத்தை நோக்கி நாம்பெற்றபேறு என்னென்று சொல்லுவேன் என்னையெனின்! ஆன்மாக்களுக்கு அனுக்கிரகிக்கத் திருவுள்ளத்தெண்ணி அவ்வனுக்கிரகமுறை அவர்களுக்கு கனுக்கிரகிக்குமாறு அவர்களுக்கேற்றவாறு திருவுருக்கொண்டனுக் அனுக்கிரகத்தைப் பெறும் நன்னெறியைக் காட்டி அந்நெறிவழியே செலுத்துங்காலத்து அந்நெறியினைக் கவறி வழுவினார்களாயினும், அத்தவறுக்குரிய தீங்கை அவர்கள் அணுகாவண்ணங் காத்தருளும் அருள்நிலையை நாம் பேரூரிற் கண்டோமல்லவா என்று அந்தக்கண்டநிலையைச் சிறப்பித்து மிக்க விருப்பத்துடன் பாடியருளி என்றும் நடராஜப்பெருமானை விட்டுப்பிரியாத திருவருளைப்பெற்று சந்நிதானத்தை

விட்டு வெளியேவந்து கோயிலைவணங்கித "தில்லைவாழந் தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று பாடியபடி அவ் வந்தணர்களாகிய பெருமக்களையும்பணிந்து அவர்களால் உபசரிக்கப்பெற்று அங்குத் தங்கியிருந்து எக்காலத்தும் ஒழியாத அன்பினால் அத்தில்லைமூதூரை வணங்கி கூற் றுதைத்தபெருமான் வீற்றிருக்கும் திருக்கருப்பறியலூருக குச் சென்று எல்லையில்லாத பெருமகிழ்ச்சி மனத்தில்வந் தடைய அங்குள்ள இறைவனை "மமானை மனத்தினால் நினைந்தபோது அவர்நமக்கு இனியவாறே" என்று தாமும் தமது தம்பிரானும் இனிக்கப்பாடி கைபிறைபற்றெழுது பிரி யாவிடைபெற்றுப் பிரிந்து பழமண்ணிப் படிக்கரையையும் வாழ்கொளிபுத்தூரையுங் கண்டு திருக்கானாட்டு இறைவனார் தம்மைக் கண்டுமகிழும்படி தாமே எதிர்தோன்றி காட்சி கொடுத்தருள நம்பியாரூரர்கண்டு களிக்கப்பெற்று எனக்கெளிவந்த பெருமானே! இதனை நான்மறப்பனோ என்று போற்றி எதிர்கொள்பாடியும் திருவேள்விக்குடியும் கண்டுபோற்றிப் பாடி வேள்விக்குடியாரோடு திருத்துருத்தி என்னும் திருக்கோயிலுடையாரையுஞ் சேர்த்துப்பாடி அவ் விடத்திற்றங்கியிருந்து பின்னர் அங்குநின்றும் புறப்பட்டு ஆங்காங்குள்ள பதிகளையெல்லாம் விடாது பாடிப்போற்றித் திருவாரூரைச் சேர்ந்தனர்.

(௬௨௫-௯௯) சேர்ந்த தேவர் முனிவர் நெருங்கியுள்ள கோபுரத்தைவணங்கி உள்ளேசென்று அளவில்லாத ஆசை

யோடு இருகரங்களையும் தலைமேற்குவித்து அடியார்களெல்லாஞ் சூழ்ந்துவர, சந்நிதானத்தையடைந்து "மூவாதமூதலாகி நடுவாகி முடியாத" திருமூலட்டானத்திறைவரை ஆசைதீரப்பணிந்து போற்றி அங்குநின்றும் பரவையார் திருமாளிகைக்கு எழுந்தருளினார் பரவையார் நம்பியாரூரர் வரவையறிந்து தமதுதோழிமாருடன் எதிர்சென்றுவணங்கி என் அன்புடைப்பெருமானே! தம்பெருமானைப் பல தளிகளிலும் கண்டுகண்டு கண்ணுங்கருத்துங் களித்திருக்கும் அப்பெருங்களிப்பில் "எங்களையும் நினைந்தருளும் தன்மையுடையோமாயினமோ" என்று தமதாற்றாமை புலப்படுமாறுகூற, ஆரூரர் எனது கண்ணுங் கருத்தும் நீயல்லாதனவாயிருப்பினன்றோ நீ "நினைந்தருளிற்று" எனுமென்று வினவியதொக்குமா. என்று பல இன்மொழிகளைக்கூறி அப்பரவையாருடன், மகிழ்ந்துறைந்து வாழுநாள்களில் ஓர் நாள் தாம்சென்று தரிசித்தக்ஷேத்திரங்களில் தமக்குநடந்த அற்புதங்களெல்லாம் விடாது கூறிவந்து முதுகுன்றத்தாருடைய அற்புதஅருளைக் கூறி நாயகமலாலய தீர்த்தத்துக்குப்போய் அப்பொன்னை யெடுத்துக்கொண்டு வருவோம் வருவாயாகவென்று அழைத்தனர் இம்மொழியைக்கேட்ட பரவையார் "இதென்ன அதிசயம்" "என்சொன்னவாறு" ஆறு எங்கேயுள்ளது, குளம் எங்கேயுள்ளது இதற்கும் உதற்கும் என்ன சம்பந்தம் நீர் எப்படிகேட்டீரோ அவர்தான் எப்படிசெய்யச் சொன்னார் அப்பொன்னை நம்பிதான் இப்பொழுது நம்பிவந்ததோ, தேவரீர் நம்பியென்னும் திருப்பெய

ருடையீர் ஆகலான் நம்பினீர் என்று புன்சிரிப்புடன் அச்செயலை நம்பாது கூற. நம்பியாரூரர் பரவையே நீ கூறியது தான் அதிசயம் என்ன கூறினாய் செங்கலைவந்ததே அது எங்கிருந்து எப்படிவந்தது அதுவும், செங்கல்லெல்லாம் செம்பொன்னாயிற்றே அதுவும் எப்படியாயிற்று. அப்படியே இப்போது சொல்லியதுமாம். எம்பெருமான் எம்பக்கல் செய்வனவெல்லாம அதிசயிக்கத்தக்கனவேயன்றி யாவாக்குஞ் செய்துவரும் செயல்போலல்லவே, இவ்வுண்மையை யானறிந்தவனாகையால நானும் கூறினேன். அவனும் அதுவே செய்தான ஆகலான் பொன்முழுவதும் எடுத்துக்கொடுத்தருளுவது பொய்யாது. உன்புன்னகையைப் பின்னர்க்காண்கின்றேன் இப்போது என்னுடன் வருவாயாகவென்று தான்பெற்ற பொன்மச்சத்தைக்காட்டி அழைத்துக்கொண்டு பூங்கோயிலுக்குட்சென்று இறைவன் அடி வணங்கி வலம்வந்து கமலாயத்தை யந்தடைந்து ஈசானிய திக்கில பரவையாரை யிருக்கச்செய்து தாம குளத்திலிறங்கி முதுகுன்றப் பெருமானை நினைத்துத் தொழுது அன்று குளத்தில்வைத்ததை எடுப்பவர்போல கையினால் எடுப்பதற்குக் குளத்தில்பார்க்க ஒன்றும் அகப்படாமையால் கையை ஆழவிட்டுத் தடவுவாராயினார்

(௩௧௨-௩௪0) தடவுதல என்னையோவெனின்; திருமுதுகுன்றத் திறைவராகிய நீற்றழகர் பொன்வேண்டி இவர்தடவுதலைப்போலும் இவர் பாட்டைப் பொருளாகக்கொண்டு

சதிரபார்த்திருப்பவராதலால் நமது சுந்தரன் கமலாலயத்துக்குவந்து பொன்வேண்டுமென்று மனத்தால் நினைத்தானேயல்லாமல் பாட்டால் ஏன் கேளாதிருக்கின்றான் என்று பாடலுக்கு ஆசைப்பட்டுப் பொன்னைத் தடவுவார்க்குப் பொன் எட்டாதவகையாகிய ஓர் திருவிளையாடலைச் செய்தனன். நாவலூரர் பொன்னை வேண்டியும் முதுகுன்றர் பாடலை வேண்டியும் இருக்கும் அத்தருணத்தில் பரவையார், மூர்த்திகளை நோக்கி "ஆற்றினிலிட்டுக் குளத்திற்றேடுவீர்" என்று முதுகுன்றர் அருளினார் என்றீர் இனியேனும் உண்மையைச் சொல்லும் என்று முன்னே "என்ன அதிசயம் இதுதான், என் சொன்னவாறு" என்று புன்னகையோடு கூறியதுபோல அப்பொழுதும் புன்சிரிப்புடன் கூறினார்

அச்சொல்லையும் புன்னகையையுங் கேட்டுங் கண்ட நாவலூரர் முதுகுன்றத்திறைவனை 'நீ சொன்னபடியே நானிங்குவந்து பரவைக்குச்சொல்லி அழைத்துக்கொண்டுவர நீ எனக்குப் பொருள்கிட்டாவண்ணம் பரவை என்செய்கையைக்கண்டு சிரிக்குமவண்ணமும் என் சொல்லைக்கேட்டுப் பரிகாசஞ்செய்யும்வண்ணமும் செய்தனையோ இது என்னை ஆட்கொண்டதற்கழகாமோ, இனியேனும் யான் வருந்தாவண்ணமும் அவள் நகைசெய்யாவண்ணமும் தேவரெல்லாம் அறியக்கொடுத்த பொன்முழுவதுங் கொடுத்தருளல்வேண்டும். "பொன்செய்தமேனியினீர்" என்று ஓர் பதிகம் பாடத்தொடங்கி எட்டுத்திருப்பாசுரங்களைப் பாடி

யருளவும் பொனவாராமையைக்கண்டு கவலையும் ஐயமு முற்று ஒனபதாவது திருப்பாசுரத்தில "எத்தாதே யிருந் தறியேன" என்னுந்திருக்கடைக் காப்புப்பாடலில் "எல்லா வுலகுங் காததாளும் அப்பலத்துக் கண்ணுள்ளுங் கண்ணு தலைக்கூத்தா, இப்பரவைமுன "தந்தருளாய்" என்று பாடியருளலும், அவ்வரியபதிகத்தைக் கேட்ட முதற்குன் றப்பெருமான பாடும்பணி கூடியவுடன் பொற்கட்டியானது மணிமுத்தாநதியினின்றும் கமலாலயத்துக்குவரும் முறைப் படியே வநதெழுநதது; எழவும் அதுகண்டு மகிழ்நது அப் பொற்கட்டியைக் கரையிலேற்றினா அப்பொழுது தேவா கள் மலர்மாரிபொழிந்தனா, இவ்வுலகிலுள்ளோர் "இந்த அதிசயம் என்னே இப்படியார்பெறுவார" என்று போற்றி வணங்கினா நம்பியாரூரா கரையேறித் தம்மிடத்திலிருந்த மச்சத்தையெடுத்து அதிலே குளத்திலெடுத்த பொன்னை உரைத்துப் பார்க்க மாற்றுக் குறைந்திருக்கக்கண்டனா. காணவும் நாம் குளத்தில் கையிட்டெடுப்பாகும்போது உடனே கைக்கு அகப்படாமல் தாழ்த்தப் பாட்டைக்கேட்டபின்னர் அகப் படும்படிச்செய்த திருவருளின் செயலேயாகும் இதுவும். ஆகலின் முதற்குன்றருக்கு நமது பாட்டுமீண்டும் ஏறினால் இப்பொன்னுக்கும் மாற்று ஏறும்போற காணப்படுகின்றது, என்று உடனே தம்பாட்டில் இறைவனுக்கிருக்கும் அன் பினைநாடி மிக்க அன்புடையராய் வாசிதீரும்படி மாசு தீர்ந்த பதிகத்தைப் பாடியருளினா. அருளவும், அப்பாட் டினையுவநது ஒருமா (ஒன்றின் இருபதில் ஒருபங்கு)

அளவு பொன்னுங் குறையாமல் எல்லாப்பொன்னும் வாசி
தீர்ந்த செம்பொன்னாகக் காட்டினார் காட்டவும், நம
முடையபாட்டும் அருள்பெற்றது இப்பொன்னும் மாற்
றுப்பெற்றதென்று மகிழ்ந்து கரையைவிட்டுப் பரவையா
ருடனபுறப்பட்டு பொற்குவியலினைத்தையும் வீதிநெருக்க
ச்சுமையாட்களின்மேலேற்றிப் பரவையார் மாளிகைக்குப்
போம்படிச்செய்து தாம் தமது பெருமானைத் தொழுது
இச்செயலெல்லாம் உனது திருவருட்செயலல்லவோ என்று
போற்றிப் பணிந்து அளவிறந்த அடியார்கள் அளவிறந்த
மங்கலவாத்தியங்களோடு வாழ்த்தியும் வணங்கியும் போற்றி
யுமவர, மகிழ்ச்சி நிறைந்த மனத்துடன பரவையார் மாளி
கையைப் போய்ச்சேர்ந்து அவரோடு மகிழ்வுடனிருந்து
அவரைநோக்கி முதுகுன்றப்பெருமானருளை நான கூறிய
பொழுது நீ "என்னவதிசயம்" என்றனையே அவ்வுரைப
படியே அவ்வருளாளன் பொய்யுரையாக்காது என்னுரை
பொன்னுரையாக்கி அப்பொன்னையும் உறையேறியபொன்
னாக்கினான், என்று முன் அவர்கூறிய உலங்கனவார்த்தை
யாகிய புறவுரையைப் புனைந்துரையாக்கி அவரையும் மகிழ்
வித்துத் தாமும்மகிழ்ந்திருந்தனர்.

(௩௪௧-௩௬௩)இருக்கையில் ஓர்நாள் புற்றிடங்கொண்ட
பெருமானைத் தணியாத ஆனந்தந் தலைசிறப்பத் தொண்ட
ருடன்கூடிப் பணிந்து பின்னர் அவ்வடியார்களை நோக்கி
நமக்கடிகளாகிய அடிகள் "பாறுதாங்கியகாட்டரோ படுதலை

யரோ மலைப்பாவையோர் கூறுதாங்கிய நபூகரோ குழைக்
காதரோ குறுங்கோட்டிள, ஏறுதாங்கிய கொடியரோ சுடு
பொடியரோ இலங்கும்பிறை, ஆறுதாங்கிய சடையரோ’’
என்று அருட்டிருமேனியை அன்புபாராட்டி வினவுவார்
போல வினவி அவ்விறைவனருள்பெற்று ஏனைய திருப்
பதிகளையும் வணங்கத் திருவுளங்கொண்டு புறப்பட்டு
திருநள்ளாறு திருக்கடவூர் திருக்கடவூர்மயானம் திருக்கட
வூர்வீரட்டம் திருவலம்புரம் திருச்சாய்க்காடு திருவெண்
காடு திருநனிபள்ளி திருச்செம்பொன்பள்ளி திருநின்
றியூர் முதலிய பலக்ஷேத்திரங்களையும் பணிந்து அரு
ளும் அன்பும் பாராட்டியதேயன்றி திருநின்றியூரின்கண்
“இணைகொள் ஏழெழுநூறு இருபதுபனுவல் ஈன்றவன் திரு
நாவுக்கரையன்’’ என்று அப்பர்சுவாமிகளது அருட்பாக்
களை வியந்துபாடி அப்பதியைக் கடந்துபோகின்றவர் மார்க்
கத்திலுள்ள நீடூர் என்னும் பதியையும் பாராதுபோயினர்.
அங்ஙனம் போம்பொழுது அவருள்ளத்தானாகிய “நீடூர்ப்
பெருமான் என்னைப்பணியாது போகின்றனையே என்று அவ
ருணர்ச்சியிலுணர்த்த அவ்வுணர்வான அந்தோ! ஆரூரனாகிய
யான் தன்னடிகாண்பதற்கு அன்பாய் அழைத்திட்ட “நீடூர்ப்
பெருமானைப் பணியாவிடலாமே’’ என்று திரும்பிச்சென்று
திருநீடூர் பெருமானடியைக்கண்டு ஆரா அன்புடன் பணிந்து
யான் உன்னைமறந்து சென்றாலும் நீ என்னை மறவாமல் உன்
னடிக் காட்படுத்தும் அருளாளா என்று அடிகளைப் பெய
ராவன்புடன் பெயர்ந்து மயிர்க்குச்செறிந்து பன்முறையும்

பணிந்துபணிந்து மீளாவிடைபெற்று திருப்புன்கூரைத் தரிசித்து திருக்கோலக்காவை நோக்கிப் போகும்போது அவ்வூரிறைவன் எதிர்காட்சிகொடுத்தருளினன். அக்காட்சியைக் கண்ட சிங்கடியப்பனார் அப்பொழுதே திருஞானசம்பந்தப் பெருமானுக்குத் திருத்தாளந்தந்த இரக்கத்தை வியந்து அவ்விரக்கமுடையானை "யானுங்கண்டுகொண்டேன்" என்று திருப்பதிகம்பாடி அங்கு அகன்று திருக்குருகாவூர் நோக்கிச் செல்லும்பொழுது யாதுகாரணத்தாலோ தாகமும் பசியும் தாமையறியாது வருந்த, அதற்காற்றுது நீரும் உணவும் வேண்டி அவ்விரண்டும் எண்டெவ்வாறு கிடைக்கப்பெறுமென்று எண்ணி வழியே போம்போது அவ்விரண்டையும் இருவரறியாத குருகாவூரப்பெருமான எடுத்துக்கொண்டு அவ்வழியில் நிழலைத்தரும் பந்தரை யமைத்து அப்பந்தலில் வேதியராய் நின்று சுந்தரமூர்த்திகளுடைய வரவைப்பார்த்தாக கொண்டிருந்தனர். அவ்வழியேவந்த நாவலூரர் அப்பந்தரைக்கண்டு இப்பந்தர் இங்கிட்டார் யாவர் என்று அதிசயித்து பந்தரினடைவர், அதில் தமதுவரவைநோக்கி யிருக்கும் வேதியரைக்கண்டு அந்தோ! இப்பந்தர் உடல் வெப்பத்தைப் போக்கியது, இவரது திருமேனி என்னுள்ளிருக்கும் அன்பைப் பெருக்கி எனதுள்ளத்தைக் குளிர்ச்செய்கின்றது என்று மகிழ்ந்து சிவாயநமவென்று உட்கார்ந்தனர். வேதியர்பெருமானுயிருக்கும் இறைவன் நாவலர் பெருமானைப்பார்த்து ஆரூரரே, நீர் நெடுநேரமாய்ப் பசியோடும் தாகத்தோடும் இருப்

பவராகக் காணப்படுகின்றீர். அப்பசியும் தாகமும் நீங்கப் பொதிசோறு இருக்கின்றது, அதனை கொடுக்கின்றேன்; அதனைப் பசியாரப்புசித்து இதோ குளிர்ச்சிமிக்க தண்ணீரிருக்கின்றது; அதனையும் உண்டு பசியையும் தாகத்தையும் போக்கிக்கொள்வீர்! நீர் பசியோடும் தாகத்தோடும் இருப்பதைப்பார்த்து என்மனம் என்னைவாட்டுகின்றது உண்ணும் உண்ணும் என்று சொல்ல, அச்சொல்லைக்கேட்டு இச்சொல், இவர்கொடுக்க இருக்கும் பொதிசோற்றினும், வாசமிக்க தண்ணீரினும், இனித்துப் பசியைப்போக்கிவிட்டதே, இவரன்றோ அந்தணராவர். என்று தெவிட்டா அமுர்தம் உண்டவர்போன்று அவ்வேதியரைப்பார்த்து உமமைக் கண்டு உமது அமிர்தவாக்கைக் கேட்கும்போதே பசியும் தாகமும் பறந்துபோயிற்று ஆயினும் உமமுடைய ஆணையைக் கடப்பதற்கு அஞ்சுகின்றேன் அப்பொதிசோற்றைக்காட்டும் என்று வாங்கி இப்பொதி அருட்பொதியோ! என்பால்வைத்த கருணைப்பொதியோ! என்றுவியந்து ஐயா வேதியரே! இப்பொதிசோறு இங்குக்கூடியிருக்கும் எண்ணிறந்த அடியார்களுக்குப் போதுமோ! போதாதே என்று சொல்ல, பொதிசோற்றெம்பிரான் நாவலரே! என்னசொன்னீர் போதுமோ என்றுசொன்னீர் இப்பொதிசோற்றுக்கு இவ்வடியார் கூட்டம்போதுமோ என்று நான்எண்ணுகின்றேன். இவ்விரண்டில் எதுமெய், எதுபொய் யான பொய்யனாயிருப்பின் இப்பொதிசோறு போதாமற்போகட்டும். ஐயா ஆரூரரே! அடியார்களுக்கெல்லாம் கொடுத்துப்பாரும்.

யச்ன பொய்யனென்பதும மெய்யனென்பதும பின்னே அறியவரும் என்று யாவரும உண்டு பசிதீரச்செய்தனர்.

செய்யவே, சுந்தரமூர்த்திகளுடன் வந்த பரிசனங்க ளெல்லாம் பசிதீர உண்டு சுவாமீ! இதுபோதும போதும. பெற்ற சோற்றுப்பொதியோ சிறிதளவினையுடையது, அது போக்கிய பசியோ அளவிறந்த போகது அளவிலலாதபசி இதுஎன்ன அதிசயம அதிசயம், மற்றும பெரியதோர அதி சயம காணபபடுகின்றது. முதலில காட்டிய சோற்றுப் பொதி சிறிதேனும் குறைந்ததோ வெனின் இல்லை. அது கண்ட அளவேயிருக்கின்றது இதனால வேதியர் பெருமா னாகிய நீர் புண்ணியா பொருமானென்று எண்ணததக்கவ ராகக காணபபடுகின்றீா, அன்றியும எஙகள தமபிரான் தோழனா எமது கூட்டததவாக்கு இசசிறுசோற்றுப்பொதி போதுமா என்று கேட்டதறகு நீா இப்பொதிசோற்றுக்கு இவ்வடியார் கூட்டமபோதுமா என்றீரே அதனை மெய் யாக்கிவிட்டீரே இஃதென்ன மாயமோ என்று அடஙகாப் பேருவகையைக கொண்டிருககும அடியாாகளை இறைவன் நோக்கி இததண்ணீரையும அருநதுஙகள என்று அருநதச் செய்தனர் அநநீரை யருநதினவரெல்லாம இதுதண்ணீரா! அன்றே இந்நீாக்கு எநத கஙகைமுதலியநீரும ஒபபாகா தே! அமிாதமும ஒவ்வாதே இதுஎநநீரோ! இறைவ னுடைய நாமம் எவவாறு அன்புர்களுடைய நாவில எப் படி இனித்து இனித்து ஊறுகின்றதோ அப்படியன்றோ

உள்ளெல்லாம் இனித்து ஊறுகின்றது. அந்தோ! அந்தோ! என்று தண்ணீரருந்திக்கொண்டே தண்ணீரளித்த தண்ணளியானது நாமகீர்த்தனங்களைப் புகழ்ந்துபாடி முன் பசிப்பிணியோடும் தாகவிடாயோடும் வந்த அச்சோர்வு நீங்கி அப்படியே யாவரும் உறங்கினார்கள். நம்பியாரூரரும் துயிலமர்ந்தனர். இவ்வாறு யாவரும் உறக்கத்திலிருக்கும்போது கங்கையைச் சடையிற்கரந்தவர் பந்தரோடு கரந்தொளித்தனர்.

(௧௩௪-௧௭௩) பந்தர்போக மேல் வெயில்வந்து தாக்க, சுந்தரர்பெருமானும், அடியவர் திருக்கூட்டத்தவரும், துயில் நீங்கி பந்தரெங்கே! தண்ணீரும் சோறும் கொடுத்தவரெங்கே! எங்கே! என்று சுற்றிச்சுற்றிப் பார்க்கும்போது எங்குங் காணாமையாக நாவலர்பெருமான் நமக்கு "நாவலன்" என்னும் பெயரிருப்பதேபோன்று நாற்பொதிச்சோற்றைப் பார்த்து இதுபோதுமா? துறிகரனையாயிருக்கின்றதே என்று கையிலைகாட்டியபோது அவ்விறைவனுடைய இதுவா "இதத்தனை" என்று கைகாட்டிக் கூறினனே அச்சொல்லின் பொருளையும் அப்போதறியாதொழிந்தோமே நம்மால் பித்தரென்று பேசப்பட்ட இவரைப் பித்தரென்று பிறரெல்லாம் பேசுகின்றனர், இவர் பித்தர் தம்மடியார்கட்குத் தம்மிடத்தில் பித்துண்டாம்படிச் செய்யும்பித்தரன்றோ என்று கூறி, திருப்பதிகத்தைப் பாடியருளி கோயிலுக்குட் சென்று * தங்கட்கு உண்ணும் அமுதத்தைக்கொடுத்து

உண்ணு அமுதமாய் விளங்கிய குருகாவூர்ப் பெருமானைக் கண்களாலுண்டு கையாரத் தொழுது உடம்பாரப் பணிந்து போற்றி அன்பருடன் அங்கிருந்து சிலநாள்கழித்துத் திருக் கழிப்பாலைக்கும் அதனருகிலுள்ள திருப்பதிகளுக்கும் போய்த் தில்லைமூதூருக கெழுந்தருளி "எடுத்த சேவடி யிறைஞ்சி" இன்புற்று திருத்தினைமாநகர் திருநாவலூர் முத லிய பலக்ஷேத்திரங்களிற்சென்று அங்கங்கும் அடியார்கள் எதிர்கொண்டுவரப் பலபலவைபவத்துடன் சென்று தம் பெருமானைப் பாடிப்போற்றித் தண்டகநாடாகிய தொண்டை நாட்டுக்கு வந்தனர் வந்து அங்குள்ள க்ஷேத்திரங்களை எல்லாங் கண்டுகளித்துப் பாடி அநேகநதிகளையும் முல்லை குறிஞ்சி மருதம் என்னும் நிலங்களையெல்லாங் கடந்து திருக்கழுக்குன்றத்தை யடைந்தனர்.

(கா௪-௧அ௪) அங்குள்ள அடியாரெல்லாம் எதிர்கொ ண்டுவணங்க அன்புடன் அவர்களோடுஞ்சென்று மலைமருந் தைப்பாடி மகிழ்ந்து திருக்கச்சூருக்குச்சென்று அங்குள்ள ஆலக்கோயிலையும் அடைந்து இறைவனைக் கும்பிட்டு வெளி யேவரும்பொழுது அமுதுகொண்டருளும் காலமாயிற்று. பரிசனங்களோ தூரத்தேவந்து கொண்டிருந்தனர் நாவ லர்பெருமானுக்கோ பசியோ சமீபத்தேவந்து உடலுள்ளே புகுந்து வருந்தும் வண்ணஞ்செய்து விட்டது; செய்யவும் அப்பெருமானாரது பசிதீர்க்க, மலையின்மேல் மருந்தாயிரு ந்த இறைவனார் பிரமகபாலம் என்னும் ஓட்டையெடுத்த

ஓர் வெறுமோட்டை எடுத்துக்கொண்டு அங்குள்ள அந்தணர்களில் ஒருவராகவந்து ஆரூரர் திருமுகத்தை மிக்க அருளோடும் பார்த்து நம்பியாரூரரே, இப்பொழுது பசியினால் மிகவும்வருந்தி இளைத்திருக்கின்றீர். அப்பசியினால் உணவின்மேல் உண்டாயிருக்கும் ஆசைதீர நான் இங்குள்ள அந்தணர் வீதியுள்ளே சென்று வீடுகள்தோறும் பிக்ஷைவாங்கி வருகின்றேன். ஆகலான் நீர் இவ்விடம்விட்டு அப்புறம் போகவேண்டாம், இதோ வந்துவிட்டேன் என்றுவிரைந்து சென்று அந்தணர்வீதியுள்ளே சென்று அவ்வந்தணர்களெல்லாங் கண்டுகளிக்குமவண்ணம் திருமுகத்தில் திருபுண்டரமாகத் திருநீற்றொளி விளங்கவும், திருமார்பில பூணூலின் ஒளி சுடர்விட்டெரிப்பவும், கடும்பகல் வெயிலால் அடிகொந்து பெயர்த்துப பெயர்த்து கண்டவர் மனமுருகும்படி வீடுகள்தோறும் சென்று அன்னபிக்ஷையைப் பெற்று, தாம் விரும்பியாட்கொண்டவராகிய வன்றொண்டர் முன்னே வந்து நாவலூரரசரே! இதோ கொண்டுவந்துவிட்டேன், என்றால் கொண்டுவரப்பட்ட கறிவகைகளோடு கூடிய நல்லபிக்ஷான்னத்தைப, பசிதீரஉண்டு இளைப்பாற்றுவீராக என்று அவ்வன்னத்தைக் கொடுத்தருளத் தொடங்கும்போது தம்பிரான்தோழர் அவரது திருமேனியின் சிறப்பையும் அவர்கூறும இன்மொழியின் சுவையையும் தம பசியை அவர்தம பசியாகக்கொண்டு ஐயமேற்றுக்கொண்டு வந்த இரக்கத்தின் மிகுதியையும், கருதிக் கருதி இப்படி யாவர் செய்வார்! இவ்வந்தணர் மிகப்பெரியோர் என்று

எழுந்து எதிர்பணிந்து அவ்வன்னத்தை வாங்கினார். வாங்கிய அப்பொழுதே அடியவர் திருக்கூட்டத்தவரும் வந்து கூடினார். அவர்களையுங் கண்டுமகிழ்ந்து அடியவர்காள்! நீங்களும் மிகப்பசித்திருக்கின்றீர்கள், நானும் பசித்திருக்கின்றேன் என்பசியும் உங்களபசியும் இப்பொழுதே தீரும்வண்ணமாக சர்வசீவ கருணாசாலியாகிய இங்குள்ள மருந்தீசர் இவ்வந்தணரை நமக்குத் தந்தனர் இவரது பெருமையை நான் என்சொல்வேன். இந்தப்பகற்பொழுதில் இவ்வீதியின்கண் யாவர் செல்லத்துணிவார் அந்தோ! நம்பசியைக் கண்டு பொறாசகாது இவ்வெயிலைத் தாம்பொறுத்து அந்தணர்களிடத்தில் பிக்ஷையேற்றுவந்து அன்னத்தைக்கொடுத்தார் அதையான்பெற்று உங்களபசியைக் கருதினேன். நீங்களும் கருதுவதனமுன் விரைந்துவந்தீர்கள். ஆகலின் நாமனைவரும் இச் சிவப்பிரசாதத்தைப் பசிதீரவுண்போம் என்று அவ்வன்னத்தை யாவருக்கும் வழங்கித் தாமும் உண்டு பசிதீர்ந்து களித்திருக்கும்பொழுது எப்பொருளினும் நீங்கா துநிற்பவராகிய மருந்தீசர் ஆரூர்அருகேயும் அந்தணராய்வந்து நீங்காதுநின்று பின் அவரறியாவண்ணம் மறைந்தருளினார்.

அதனையுணராத நம்பி ஆரூரர் இங்குநின்ற அந்தணரெங்கே! அன்பர்காள் யாராவது பார்த்தீர்களோ? எவ்வழியாய்ப்போயினர்? பசியோடிருந்த அப்பொழுது காணப்பெற்றஅவர் பசிநீங்கிய இப்பொழுது காணப்பெறுது போ

யினரே. வந்தவேதியர் சிவயோகிகளுக்கு எல்லாவுயிர்க ளிடத்தும் அருள் எப்படிநிறைந்திருக்குமோ அப்படியன் றோ யிருந்தது. ஏனெனில் அந்தணர் தம்மாட்டுவந்தவரது பசிப்பிணியை மாற்றும் அருளிற்சிறந்தவர். சிவயோகிகள எவ்விடத்தில் எவ்வுயிர்களைக் காண்கின்றார்களோ அவ் வுயிர்களுக்கு உற்றநோய் எதுவாயினும் அந்நோயைத் தமது நோயெனக் கருதி அதனை அககணமே நீக்கி அவ வுயிர்கள சுகித்திருக்கக்கண்டு அதைத் தமதுசுகமெனக் கருதி மகிழ்ந்துபோவர். அதுபோலன்றோ இங்குநீங்கிய அந்தணர். அவரை அனபாகாள்! அந்தணரெனபேனு! சிவ யோகிஎன்பேனு! இமமருந்தீசரே என்பேனு! நாம அவரை யாரெனறு சொல்லுவேன் எமமிறைவன இப்படியே மறைந்து மறைந்து தனனையறியும்படி செய்கின்றானேயல லாமல் மறைககாது அறியும்படிச செய்யவில்லையே. ஆனால இம்மறைப்பு நமபாலதோ அவன்பாலதோ வென்று இப பொழுது எண்ணிப்பார்ப்போமாயின் நமபாலதே. ஏனெ னில், நமக்கு எல்லாமாய வருபவன அவனேஎனறு உணர்த் தியும், பன்முறையுங் காட்டியுமிருக்க நாம அதனைமறந்து இவர் அந்தணர், அவர் இவர், அவன இவன், அது இது என்று எண்ணுவானேன். அவர் அவள் என்பவருக்கும அது இது என்பவைகட்கும நமக்குள்ளனவற்றையும நமக் கில்லாதனவற்றையும் அறிந்து அதற்கேற்ற செயல்களைச் செய்யுமோ அறியுமோ எல்லாம அறிபவனும எல்லாம்செய் பவனும் அவனேயாமன்றோ! குருகாவூர் இறைவன் பந்த

ரிட்டு பொதிசோறுமளித்து நாம் உறங்கும்போது பாந்தருடன் போனதுபோல இங்கு இப்போது விழித்திருக்கும்போதே போயினன். அவன் காட்டினாலல்லது நாம் எங்ஙனம் காண்போம். ஆகலின் நம் பசிக்கிரங்கி கடும்பகலைப் பாராது பலியேற்று வந்தளித்த அந்தணனும் பேரருளாளனாகிய நமது தம்பிரானே யாகுமென்று மதித்து அப்பா! நம்பொருட்டு "சிலம்பணி சேவடிவருந்த எழுந்தருளிற்றே சோறிரந்ததற்கே நாம் என்செய்தோம் என்று மனமுருகி அத்தனைப் பெருங்கருணையென்றும் அப்பெருங்கருணையாகிய அதுவோ சுணடுப பலியிரக்கவந்தது என்றும் அதிசயித்துக் கண்ணீர் மழை அருவிபோல பெருகக்கெடுத்து வழிய சரீரமுற்றும் புளகங்கொள்ள "முதுவாயோரி" என்று தொடுத்துப் பதிகந்தைப் பாடிமகிழ்ந்து வணங்கி நினைத்தவுடன் வந்தருள்செய்கின்ற இறைவன் வீற்றிருக்கும் மற்றைய திருப்பதிகளையும் பணிந்து செவ்வானம்போலும் பேரொளியுடைய திருமேனியராகிய திருவேகம்பர் வீற்றிருக்கும் காஞ்சிபுரத்தெல்லையை வந்தடைந்தனர்.

(௧௮௫-௨0௫) அச்செய்தியை அறிந்த காஞ்சிநகர்வாசிகள் அரிபிரமர்கள் தொடர்ந்தெட்டாத அரிய இறைவன் ஓர் வேதியனாய்க் கிழவனாய் அன்று திருவெண்ணெய் நல்லூரில் சபையின்முன்னின்று வழக்கிட்டு அவ்வழக்கை விடாது தொடர்ந்தே ஆட்கொண்டவராகிய வன்றொண்டப்பெருமான் இன்று நமது ஊருக்குவரும் பாக்கியத்தைப்பெற்(

மே என்று பெருமகிழ்ச்சியுடையராய் நகரமுற்றும மகர தோரண முதலியவற்றால் அலங்கரித்து பல்வாத்தியங்களோடும் அடியார்களெல்லாங் கூடி எதிர்கொண்டு சென்று திருவாரூர்ப்பெருமானைத் தரிசித்து, யாவரும்வணங்கினர். அவர்களைச் சுந்தரமூர்த்திகளும் வணங்கி, அவர்களோடு ஆராவன்புடன் கலந்து நகரினுள்ளே பிரவேசித்து அலங்கரித்திருக்கும சிறப்பெல்லாங்கண்டு பெருமகிழ்ச்சியுடையவராய திருநகோயிலைச்சார்ந்து "உந்தினைறா உனறன் ஓலக்கச்சூளைகள வாயதல பறறித், துன்றிநின்றார்தொல்லை வானவர்கட்டா பணியறிவான், வந்துநின்றார் அயனுந் திருமாலும பதிட்கசசியாய், இந்தினைறோம இனி யெங்ஙனமோ வந்திறைஞ்சுவதே" என்று கூறிய தேவாரப்பாடி தேவாகளெலலாம நெருங்கியிருககுங கோபுரத்தைககண்டு திருமேனியில மண்படிய வணங்கி உளளேசென்று அங்கங்கும வணங்கி இரத்தினமயமாய்ப பிரகாசிக்கும் கோயிலுக்குள் அஞ்சலிக்கரராக கையராய்ச்சென்று, காமாக்ஷி சமையயின வெள்ளத்தைக்கண்டஞ்சித தழுவிக்கொண்டிருக்குங் கோலத்தைக்கண்டு ஆனந்தபரவசத்தராய் அவரடிகளைத தமதுகரங்களால் தாமுந்தழுவிமெய்ம்மறந்து கீழேவீழ்ந்து வணங்கிப் பரவசமாய் விம்மிவிம்மி அழுது எழுந்து மெய்யன்புநிறைந்த சிந்தையுடன திருப்பதிகம்பாடி மாறுஆசையோடு வெளியேவந்து தொண்டர்களெல்லாம புடைசூழ்ந்து போற்ற அவ்வடியார்களிடமே தாமவாழுமிடமாகக் கொண்டிருந்து "அங்குள்ள க்ஷேத்திரங்களெல்லாம் தரிசிக்க எண்

ணிப் புறப்பட்டு முன்னர்காமகோட்டம்போய் அங்குள்ள அற்புதங்களையும் காமாக்ஷிதேவியையும் கண்டு காதலுடன் பணிந்து, திருமேற்றளிக்குச் சென்று இறைவனைத்தரிசித்து "தொந்தாவொண்சுடரே, என்னும் திருப்பதிகம்பாடி அங்கு நின்றும் * திருவோணகாந்தன்றளி, திருக்கச்சியனேகதங்காவதம், மற்றும் அங்குள்ள க்ஷேத்திரங்களெல்லாம் விடாது பணிந்து பாடிப்போற்றி சிலநாளிருந்து, பின்னர் திருவன்பார்த்தான்பனங்காட்டூர் திருமாற்பேறு முதலிய க்ஷேத்திரங்களையுந் தரிசித்துக்கொண்டு திருக்காளத்திமலைகருப் போய் கண்ணப்பதேவரது அனபின்றிறமெல்லாம் கண்டு அவரது அன்புருவையாய் அப்பெருமானைப்பாடி தமக்குப் பேரன்பைப் பெருக்கிய கண்ணபரடியில்வீழ்ந்து இவ்வடி எம்பெருமாள் முடியிலும் கண்ணிலும் பட்ட அரிய திருவடியன்றோ இவ்வடி என்னுளளத்தும் என்தலையிலும் பொருந்தும் பாக்கியத்தை இன்றுபெற்றேனே என்று கண்ணீரருப்பி மயிர்ப்புளகங்கொண்டு பன்முறையும் பணிந்துபணிந்து உள்ளமெல்லாங் கரைந்து வெளியேவந்து அங்குள்ள அடியாருடன் சிலநாளங்கிருந்து, பின்னர் வடதிசையிலுள்ள க்ஷேத்திரங்களைப் போய்ப்பணிவதற் கெண்ணுமல் அங்

---

* "திருவோணகாந்தன்தளி" தமது தோழமைத்திறமும், அடிமைத்திறமும் தோன்ற "நெய்யும் பாலுந் தயிருங்கொண்டு நித்தம் பூசனை செய்யலுற்றால், கையில் ஒன்றும காணம்இல்லை" என்னும் திருப்பதிகம்பாடி பொன்பெற்றுத் தாம் விரும்பியபடியே இறைவனைப் பூஜித்து மகிழ்ந்தக்ஷேத்திரம்

கிருந்தபடியே ஸ்ரீபருப்பதம், திருக்கேதாரம் முதலிய க்ஷேத்த திரங்களையெல்லாம் பாடிப்போற்றி வணங்கி நேரேகண்டது போலும் உள்ளம்மகிழ்ந்து சிலநாளிருந்து அங்குநின்றும் புறப்பட்டு மார்க்கத்திலுள்ள க்ஷேத்திரங்களையெல்லாம் தரிசித்துக்கொண்டு இவ்வுலகின்கண் சிவலோகம்போல் பிர காசிக்கும்திருவொற்றியூரைக்கண்டு சமீபத்திலவரும்போது அடியார்களெல்லாம் எதிர்கொண்டுசென்று பலவாத்தியங் களுங் கோஷிக்க அழைத்துக்கொண்டு வந்தனர்.

அவர்களுடனே கலந்து வந்து திருக்கோயிலின் வாயிலை யடைந்து ஆகாயத்தை யளாவியிருக்குங் கோபுரத்தைக் கண்டு வணங்கி உள்ளேபுகுந்து வலம்வந்து என்புமுரு கநைந்துருகக் கைகளைத் தலைமேல்குவித்து ஆசைவிழுந் தகதிமேழுவிழுந்து வணங்கி எழுந்துநின்று "மாநாதா" என னும் அரசனையெல்லாக்ஷேத்திரங்களையும் எழுதுவித்த ஏட்டு வரிசையில் திருவொற்றியூர் ஏகலாகவென்று வரிபிளந்தெழுதி வைத்த எழுத்தறியும் பெருமானது திருவடிகளில் பணிந்தனர். பணிந்தபோது அவ்வடிகளாகிய திருவருள் சிலவுணர்ச்சி களை (அஃதாவது முன் கயிலையினகண் ணிகழ்ந்த குறிப் பையும், அதுபோல இங்கு நிகழவருங்குறிப்பையும்) தோன்றும்வண்ணஞ்செய்ய, அவ்வுணர்ச்சியைக் கொண் டெழுந்து இனிய இசையோடுகூடிய பாட்டும்பாடிப் "பரவி" என்னும் பதிகத்தைப்பாடி, அறிவுபரவசமாய்ப் பே ரன்புபொருந்த வெளியேவந்து, தம்மாட்டுப் பேரன்பு

நிறைந்த அடியார்கள் பலரும் பிரியாது உடனிருந்து உப சாரஞ்செய்துவர, அங்கிருந்து எழுத்தறியும் பெருமானை, காலங்கள்தோறும் அடியார்கூட்டத்துடன் சென்று பாடித் தொழுது வந்து இன்புடன் இருப்பாராயினார்.

(உ0௬-உ0௯) இங்ஙனமிருக்கும் நாவலர்பெருமானுரை யுத்தேசித்து ஸ்ரீகயிலாயத்தைவிட்டு இவ்வொற்றியூரின் கண் அவதரித்து வளர்ந்திருந்த அநிந்திதையாரை இறைவ னார் அசசுந்தரப் பெருமானுரையே மணந்தருளுமபடியாகச் செய்து பின்னர் அந்நாவலர்பெருமானபால் தமது திரோ தானசத்தியின் செயலை நடத்திக்காட்டிய அற்புதத்திரு விளையாடலை இனிச் சொல்லுவோமாக.

அநிந்திதை என்று சொல்லப்பட்ட தேவியாரது சேடி யார் இறைவனுடைய திருவருளால் அவ்வொற்றியூரின்கண் வேளாண்குலத்தில் வாழ்கின்ற வேளாண்மையி (உபகாரத் தி)ற் சிறந்த ஞாயிறுகிழார் எனபவரிடத்தில் அவருக்கு மேன்மேல விருப்பத்தைவிளைவிக்கும புத்திரியாராகி அவ தாரஞ்செய்தனர். அவ்வநிந்திதையார் தாம் ஸ்ரீகயிலாயத் தில் உமாதேவியாரது பிரதிபிம்பமாகிய சேடியாரென்றும், ஆலாலசுந்தர நிமித்தமாக இப்பூவுலகுக்கு வந்தவரென்றும், ஒருவருணர்த்தாமல் தாமேஉணர்ந்து அவ்வுணர்ச்சியான் அக்கயிலையில் இருந்தவண்ணமாகவே இங்கும் அவவுமா தேவியாரை மறவாமல் அத்தேவியினது திருவடியில் மற வாத அன்புடையராய்த் தம்மோடொத்த சிறுமகளிர் கூட்

டத்தோடு விளையாடும் நிலைமையுடையராய அவ்வப்பரு வங்கடோறும் நடக்க, பின்னர் அப்பருவம் நிறம்பும் பருவத் தைப்பெற்று சிறப்பைக்கொண்ட வேளாண்மரபிற்குரியன வாய்வரும் ஒழுக்கத்தையும் தெய்வத்தன்மைக்குரியனவாய் வரும் தெய்வவொழுக்கத்தையும் உடையராய் அவ்வுற்றுல உலகிலுள்ளார் யாவரும் கண்டு அதிசயிக்கும் மேம்பா டுடையவராயும் நிலை வருந்துமவண்ணம் மேலெழுந்த குசங்களையுடையவராயும், வரும்பதமாகிய பருவத்தைத் தந்தையாரகண்டு தமதுமனைவியாருக்கு குறைப்பாராயினர்.

(௨௪௦) பெண்ணே! நமமுடைமகளுக்கு உருவத்தில் அமையவேண்டிய சிறந்த அழகும், உள்ளத்தில் அமைய வேண்டிய சிறந்த நற்குணங்களும் இவ்வுலகிலுள்ளார்க்கு அமையும்படியான தன்மையினின்றும் வேறுபட்டும் மேம் பட்டும் இருக்கும் பெரியதோர் தன்மை வந்திருக்கின்றது. அவற்றைநாம் அறியும் தரமுடையோமல்லோம் அக்கார ணத்தை யறியுந்தரத்தை யுடையரல்லராயினும் நம்மால் அறியத்தக்கதாகிய மணப்பருவம்வந்திருக்கின்றது அதற்கு நாம் என்செய்யக்கடவது. இவளுக்கு மணவாளனாய் வரு பவன் அறிவினும் குணத்தினும் தெய்வத்தன்மையினும் சிறந்திருப்பினன்றே இருவர்க்கும் காதலொத்திருக்கும். அது ஒத்திருப்பினன்றே இல்லறம் சிறப்புறற்றோங்கும். அது வோங்கினன்றே நமதுகுலமும் குடியும் குன்றாது வளரும். அத்தன்மையுடையான் நம்குடியில் யாவனுள்

ளான் என்று சொல்ல, கற்பிற்சிறந்த மனைவியார் நமக்கு நம்மினுமேம்பட்ட இவள் புத்திரியாகவரும் பாக்கியம் இருந்ததுபோலும் நமது மகளுக்கும் தாயினும் மேம்பட்ட மணவாளன் வரும்பாக்கியமிருக்கும் அதில் நீர் சந்தேகிக்க வேண்டியதேயில்லை. ஆயினும் விசாரிக்கவேண்டியது நமது கடமையாகலான் நீர் நமதுகுலத்தில் விசாரித்து நம்மகளுக்குரிய மணவாளனைக்கண்டு அவனுக்குக் கலியாணஞ்செய்து கொடும் என்றுகூறினார்.

(உக) சங்கிலியார் தாயுந்தந்தையும் பேசியவார்த்தைகளைக்கேட்டு இவர்கள் பேசியது நமக்குப்பொருந்தியதன்று. நாம் கயிலாயநாதனது திருவருளையே தமக்குயாவுமாகப் பொருந்தியிருக்கும் அவர் ஒருவருக்கே உரிமையுடையோமாயிருக்க இவர்கள் நமக்குரியான் யாவனென்று பேசும் வகை என்! ஆனால் இவர்கள்பேரில் குறைகூறுவது முறையன்று. ஏனெனின் நமக்குரியாராகிய அவர் வெளிப்பட்டு இங்கு வந்திருப்பாராயின் இவர்கள் இவ்வாறுபேசார் இதற்குநாம் என்செய்வது நமக்குவேண்டியவற்றைச் செய்வோராகிய இறைவரன்றோ இதையெண்ணிச் செய்யவேண்டியவர். அவர் இதுகாறும் செய்யாதிருக்குங் காரணம் என்னையோ! நமக்குரியார் எங்கிருக்கின்றனரோ! அவராவது இங்குவருதல்வேண்டும். இறைவராவது அவர் இங்குவரும்வண்ணம் செய்தல்வேண்டும். இருவருஞ் செய்யவேண்டியவற்றைச் செய்யாமையால் இருவரும் நம்மை மறந்தனர்போலும்

அவர்கள் மறந்திருப்பராயின் இவர்கள் பேசியதுயாதோ அதுவன்றோ இனிமுற்றுப்பெறும் என்று மனத்தில் அச்சங்கொண்டு பயந்து உணர்வுமயங்கி மிகவுஞ்சோர்ந்து பூமியின்மேல் விழுந்தனர்.

(௨௧௨) அதுகண்ட தாய்தந்தையர் இதுஎன்னகொடுமை! என்று பதைபதைத்து பரிவுடனெடுத்து ஏக்கங்கொண்ட மனமுடையவர்களாய் நம்முடையமகளாகிய இவளுக்கு நாம் பேசிவந்த இச்சமயத்தில் இப்படிவீழவந்தது யாதுகாரணமோ! என்று பலபலவாயெண்ணிப் பேசிக்கொண்டே தம்மேல் சாத்திக்கொண்டு நல்லபனிநீரைத் தெளித்துத் தட்டியுபசரிக்க, சங்கிலியார் மயக்கம் நீங்கப்பெற்றவராயிருக்க, அவரைத் தந்தைதாயார் கண்டு எங்கள் செல்வமே! எங்கள் குலமணிவிளக்கே! நாங்கள் உன்னைக் குறித்த நல்லகாரியத்தைப் பேசிக்கொண்டிருக்க உனக்கு இவ்வகைத்தான மயக்கம் எப்படி வந்தது? அதை நாங்களறியச் சொல்லவேண்டுமென்றனர்.

(௨௧௩) தாய்தந்தையர் இவ்வாறு கூறுவதைக்கேட்டபொழுது தமதன்னையை முகநோக்கிச் சொல்லத்தொடங்கி எனது அம்மையப்பர்களே! இப்பொழுது எனதுகலியாணத்தைப் பற்றி நீவிர் பேசிய அவ்வகை எனதன்மைக்குச் சிறிதும் பொருந்தத்தக்கதன்று, ஏனெனில் என்னை இடபாரூடராகிய இறைவன் ஒருவர்க்கு உரிமையளாக்கினன். இச்செய்தி எங்கு நடந்தது என்றுகேட்பிராயின்

றுகயிலாயத்திலே நடந்தது. அதற்காகவே நானும் இங்குவந் திருக்கின்றேன். ஆனால் உங்கள்பால்யான் வந்தது, நீங்கள் செய்ததவங்காரணமாக இறைவன் வைத்த கருணையினு லென்றறிவீராக நீங்கள் அதனையும் என்செய்தியையும் இன் னதென்றறியாமல் உலகினரைப்பற்றி உலகினர்பேசுவது போல் பேசியபடியால், அச்சொல்லுக்கு ஆற்றாது நான் மூர் ச்சையடைந்தேன் மூர்ச்சையடைந்ததனால் நான் இப்பொ ழுதுசொல்லிவந்ததில் ஏதேனுமசந்தேகமுண்டோவெனின், கிடையாது: அதுநிச்சயம. ஆகவேஇனிஎன்னை உங்களிடத் தில் வைததிருததல கூடாது திருவொற்றியூராகிய எழுத் தறிவார் என்னெழுததெல்லாம அறிவார அவர்பால் என் னைக்கொண்டுபோய்ச சேர்த்துவிடுங்கள அவரருள் என் விஷயமாய் எபபடிசசெல்லுகின்றதோ அப்படியே யான் செல்லுகின்றேன் நீங்கள பாதொன்றும ஐயங்கொள்ள வேண்டாம. சீககிரததில நடக்கும; யான் சொல்லியவண் ணஞ் செய்யுங்களென்றா

சங்கிலியாருடைய வார்த்தையைக்கேட்ட அவ்விரு வரும், அவள்பிரிவஞ்சிச் சோர்வும், தெய்வசம்பந்தமான வார்த்தையா யிருப்பதால் அச்சமும், அந்தத தெய்வத்தன் மையான வார்த்தை இம்மானிடப்பிறபபிலும் மறவாமையை நோக்கி அதிசயமும் அடைநத வுள்ளத்தினராய் அவ்வதி சயச்செய்தி பிறரறியாவண்ணம இருந்தனர். அவ்வா றிருக்குங்காலத்தில் இவர்கள் குலமுறையில் மிகவும்

நெருங்கிய ஒத்தசம்பந்தமுடைய ஒருவேளாளர சங்கிலி யாருடைய செயலையறியாமல் தன்மகனுக்குக் கொள்ள எண்ணி, சங்கிலியாருடைய தநதையார்பால தன்னினத துள்ள சிலமுதியோரை விடுததனர் அவர்களும அதுபோல வேவந்து சொன்னார்கள்.

(உகரு-உகசு) சொல்லவும், தநதையார் தனமகளது தெய்வத்தன்மை சொல்லக்கூடாமையா யிருத்தலினாலும, அவர்களுக்கும் மனககோட்டததுக்கு இடமிலலாமல செய்ய வேண்டி யிருததலினாலும, வேறுசில இன்மொழிகளைக் கூறிப் போகும்படிச் செய்ய, அவர்களும் சமாதானசிததத துடன் சென்றனர். இவர்கள் செல்வதறகுமுன் இவாகளை யனுப்பிய பிள்ளைக்குரியவன் ஒர்தீமையான செயலைச்செய்த வன்; இருபபதறகஞ்சி இறந்தவன்போல் தெய்வச்செயலா யிறந்தனன். அசசெய்தியைச் சஙகிலியாரைப பெறறா கேட்டு மயங்கிய மனமுடையராய், நம்மினத்தவருள இனி பிழைக்கவேண்டுமென்று மனமுடையவா நமதுசங்கிலி யாரை என்மகனுக்கு என்மகனுக்கென்று பேசும் தகாத வார்த்தையைப் பேசார்கள் என்கிற வார்த்தையை உலகி லுள்ளார் யாவரும்அறியச்செய்த முறைமைபோல இச் செயலைத் தெய்வம நடததியதாகத தெரியவருகின்றது. இனிநாம் எண்ணுவதனால் ஆம் பயனென்னை என்று துணிந்தவராய்ச் சில அறிவிற்சிறந்த பெரியார்க்கு தமது மகளுடைய செய்தியை உள்ளவாறு சொல்லி இவளை நாம

மகளாகக்கொண்டாடும் இன்பத்தைப் பெற்றோமேயன்றி, நமது குலமுறைக்கேற்றவாறு நம்முடன் கூடிவாழ்ந்திருக்கும் பாக்கியம் பெற்றோமில்லை என்று மனம்வருந்தி சங்கிலியார் சொல்லியவற்றைச் செய்யாதிருப்பதற்கும் அஞ்சி அவர் சொல்லியவாறே செய்வதற்குத் துணிந்தவராயினர்.

(உ௬௭-உ௨௪) ஏனெனில், நமது மகளுடைய செயலை நோக்குங்காலத்தில் தெய்வமேயாவள். யாவராலும் வணங்கப்படும் இறைவனுடைய பிரபாவத்தைப் பேசுவதன்றி வேறுபேசவறியாள் இதுபோலவே ஏனைய செய்கைகளும் இத்தன்மையையுடையவர் அவள்விஷயமாய் உலகவார்த்தை யைப் பேசத்துணிவரா! துணியார், அஞ்சுவர் என்று நிச்சயித்து சங்கிலியாரைப்பார்த்து அம்மா! உனதெண்ணப்படியே திருவொற்றியூருக்கு அழைத்துக்கொண்டுபோகிறோம் அங்கு எங்களால் அமைக்கப்படும் கன்னிகாமாடத்திலிருந்து தவம்புரிவாய் பின்னர் நீசெல்லும் கதியாதோ அது நெற்றிக்கண்ணராகிய இறைவனால் ஆகத்தக்கதேயாகும். நாங்கள் என்செய்யக்கிடக்கின்றது என்றுகூறி திருவொற்றியூருக்கு அழைத்துக்கொண்டுபோய் திருக்கோயிலுள்ளே சென்று சங்கிலிநாச்சியாருடன் யாவரும் இறைவனைப் பணிந்து, பின்னர் அங்குள்ள தம்மினத்தவருடைய இசைவினாலும், ஏனையோருடைய ஒற்றுமையாலும், அவ்விடத்திற்றானே ஓர்கன்னிகாமாடத்தை யமைத்து, அவர்க்குரிய ஏவலுக்கும் காவலுக்குமாகச் சில தக்கசேடிகளையமைத்து,

சங்கிலியாரைத் தாய்தந்தைமுதலிய யாவரும் பணிந்து நாங்களனைவரும் உனக்கு ஏற்றபணி செய்யுமவராக விருக்கின்றோம். நீ இறைவனுக்கேற்ற பணிசெய்யும் விருப்புடையவளாக இருக்கின்றாய். ஆகலின் நீ இக்கன்னிகாமாடத்திலிருந்து வாழ்வாயாக என்றுகூறி, அவரது பிரிவை எண்ணித் தாங்கமாட்டாத அன்புடையராய்க் கண்ணீர் ஆறாய்ப் பெருகிவர ஒன்றும் சொல்லுவதற்குக் கூடாதவராய் சூழ்ந்து பலமுறையும்பணிந்து தங்கள் ஊருக்குப்போயினர்.

(உஉஉ-உஉஎ) சங்கிலியார் தவநெறியுடையராய் அக்கன்னிகாமாடத்திலிருந்து பூஜாகாலங்கள்தோறும் தியாகேசனாகிய எழுத்தறியும் பெருமானைப் பணிந்து,முன்னரே கயிலையில் தாம்செய்துவந்த பணியையேசெய்ய, திரையிட்டிருக்கும் பூமாலைதொடுக்கும் மண்டபத்திலிருந்து மாலைவகையெல்லாந் தொடுத்து அவ்வக்காலங்கடோறும் அம்பிகைக்கு அம்பிகாபதிக்கும் கொடுத்து வருவாராயினர்.

இவ்வாறிருக்குநாளில், தியாகேசன் திருவருளால் ஸ்ரீ கயிலாயத்தில் விதித்த விதிமுறைதவறாமல் அங்குவந்திருக்கும் பரவைமணவாளர் திருக்கோயிலினுள்ளே புகுந்து, தம்பெருமானை நாடோறும் பாடிப்பணிவதுபோல் பாடிப் பணிந்து சந்நிதானத்தை விட்டு, அன்று தொண்டுசெய்வாரையும் அவர்கள்செய்யுந்தொண்டையும் காணும் கருத்துத் தோன்ற அக்கருத்தின்படியே என்பும் உள்ளமும்,

உருக பூமாலைதொடுக்கும் அடியார்களைக கண்டுமகிழ்ந்து பணிந்து, தாமரைததடாகம்போலும மலர்நிறைந்திருக்கும் ஓர் மண்டபத்தைக்கண்டு அதிசயித்து அதனைச் சமீபிக்கும்போது, அன்பினையே நாராககொண்டு அஞ்செழுத்தையே மலராக, நெஞ்சமானது தொடுத்துக்கொண்டிருகக, கைம்மலரால் பூவாகிய மலர்களைத் தொடுத்து, அம்மாலைகளை வழக்கம்போல் திரையைநீக்கி இறைவனுக்குச சாத்தும்படி அர்ச்சகரிடத்திற்கொடுத்து உள்ளேசெலலும சங்கிலியாரைக் கண்ணுற்றனர் கண்ணுற்றபொழுது பெருமானாது நெஞ்சம சிந்தைநிறைகாவாது தனதுநிறையினின்றும் நீங்கி அச சங்கிலியார்பால போய் வீழ்நதது. ஏனெனில நெஞ்சததின நிறைவானது, அது சாறுஞ் செலலுமிடங காணமல் அவரது காவலுக்குட்பட்டுக கிடநதது. தான் செல்லுமிடங காணவே அங்குசெலவது முறைமையாகலான் காவலைக்கடநது சென்றது சுநதரமூர்த்திகள் காத்ததும் செல்லுமிடத்திற செலுததற்கேயன்றி, செல்லுமிடத்தில செலுததாதிருததறகன்று. அன்றியும நாவலர் பெருமானும் சங்கிலியாரைத்தான் கண்டாரேயன்றி ஏனையோரைக் கண்டனரில்லை ஏனையோரும நாவலரைக் காணப்பட்டவரல்லர். காணப்பட்டவர் பரவையாரும் சங்கிலியாருமேயாம். ஆகலான் திருவாரூரில் பரவையாரைக்கண்டார். திருவொற்றியூரில் இன்று இவரைக்கண்டாரென்க. ஆகவே முறையற்றுப்போன சிந்தைவழியே சிங்கடியப்பனும் போக, மன்மதனும் புட்பபாணங்களை யேவினன். அனை

களும் தடைபடாது வந்துவீழ்ந்தன. வீழவும், சகிததிருப பதற்குக்கூடாதவராய் வெளியேவந்து சொல்லுவாராயினர்.

(௨௨௮) இங்கு காணப்பட்டவள் இன்னதன்மையை யுடையவளென்று என்னால் அறிதற்குக் கூடவில்லை. அத தன்மையுடையாள் இங்கு ஓர்பக்கத்தில் கட்டியுள்ள திரை யினுள்ளே காணபபட்டாள். அவள் தன்மையை அறியுந்தன் மை யானுடையனல்லனாயினும், அவளுருவததைக் காணப் பெற்றேன். அது எத்தன்மையா யிருந்ததெனின், பொன னிடததும் மணியினிடத்துப ஒளிவிடும ஒளியைஎடுதது, அமிர்தத்தோடுகலநது அதனபின்னா புதிய சநதிரனிடத் துள்ள குளிர்ச்சியோடுகலநது செயதுவைதத ஓர்மின்னற் கொடிபோ லிருநதது. இவவுருவத்தினளாகிய அவள் என் னுள்ளததை மாறுபடுததினள் இவள்யார்! என்று அரு கிருநத அடியார்களைக்கேட்டனர்

(௨௨௯) அவ்வடியார்கள வளருநதனமையினையுடைய சிவதருமததை விடாதியற்றிவநத சிவபுணணியத்தினால் இறைவனுககுரிய மாலைதொடுக்கும பணியைவிரும்பிச்செய் யும சஙகிலியாரென்னுந் திருநாமமுடைய கன்னிகையார் என்றுகூறினார் அவரது திருநாமததைகேட்டஆரூரர் நாம் வாழிடமாகிய ஸ்ரீகயிலாயத்தில் பரவையாகிய கமலினியா ரோடிருந்த அனிந்திதையென்று சொல்லபபட்ட சேடியன் றோ இங்கு சங்கிலியாரென்று சொல்லப்பட்டவள். இவ்

விருவர் பொருட்டன்றே நம்மிறைவன் நமமை மானுடப் பிறப்பில்.பொருந்திவரும்படிச் செய்வித்தார். அதனாலன்றே நமதுமனமும் மயங்கிற்று என்னும் உண்மையுணர்ந்து மயங்கினார்

(௨௩௦-௨௩௩) மின்னலைப்போல் ஒளிவீசும சடையினையுடையராகிய இறைவனுருக்கு விதிமுறைப்படியே ஆளாய்வாழ்கின்ற நமக்கு அவனருளால்வரும சிவப்பேறெனப்படும் அவனது பேற்றை நம்மைவருத்தும தவத்தினால் பொருந்தாவண்ணம் இசசங்கிலி தடுத்தது தான் இறைவனுக்குச் சாத்தப்படும மலரோடு நமதுயிரையும சேர்த்துக்கட்டிப் பொருநதச செய்யும உரிமையுடையவளாயிருக்கின்றபடியால இவளால்கொடுககப்படும மாலையை ஏற்போனுகிய இறைவனுலேயே, இவளை நாம பெறும உரிமையுடையோமாவோமென்று எழுத்தறியும்பெருமானிடத்துச் சென்றுவணஙகி,எமபெருமானே' உமாதேவியாரை விரும்பி உமதுதிருமேனியில் ஒருபககத்தை அவருககுக் கொடுத்துப் பிரியாதுமகிழநது வாழுகின்ற நீர், அவ்வெமபெருமாட்டியேயன்றிக் கங்காதேவியையும விருமபி அதநேதவியைவேறுபக்கம இன்மையாலோ, உமாதேவியார் அறியக்கூடாதென்னுமுறைமையாலோ, அவரறியாவண்ணம் உமதுமுடியின்மேல் வைததுக்கொண்டீர் யான்உமதுதோழனுகையால்உம்மைப் போலுமேயானும் ஒருத்தியோடிராமல்இருவரோடுமஇருக்க வேண்டுமென்று திருவுளததில் எண்ணியதுபோலும். அவ்

துண்மையாயின் "அன்புநாரா, அஞ்செழுத்தை நெஞ்சு தொடுக்க, அலர்தொடுத்து உன்னைத்தொடரும் சங்கிலி, உன்னருளே நாரா, என்னன்பேமலரா, என்னெஞ்சுதொடுக்கும் பாமாலையால உன்னைத்தொடரும என்னுள்ளக்கட்டை யவிழ்த்தாள். ஆகலான் அச்சங்கிலியால் கட்டவிழ்ந்த உள்ளத்தைப்பிணித்து உன்னை முன்போல் பாடச்செய்து எனது வருத்தத்தையும தீர்த்தருள்வாய் என்னையுடையானே! என்னெஞ்சம்வேறொன்றை எண்ணுவதில்லை. அது எண்ணுவதெல்லாம் யான்உனக்கடிமை அடிமை என்றெண்ணுவதொன்றேயாம் அவ்வளவு உறுதிபெற்று கட்டுற்றிருந்த கட்டை அவிழ்த்துவிட்டாள். என்னெஞ்சம இவ்வாறாயின் அதைவிட்டு நான் என்செய்யக்கிடக்கின்றது நானொன்றுமறியேன். இனியான் செய்பக்கடவது எதுவோ அதனை நீரே யருள்செய்யும்" என்று பலவாறாகக் கூறினா

(௨௩௪-௨௩௯) இவ்வண்ணம் இறைவன் திருவுள்ளம் உணருமாறெல்லாம் சொல்லிக் கோயிலின்புறத்தே வந்து ஓர்பக்கத்திருந்தனா. பொழுதும்போயிற்று போகவும், அவ்விரவினுல் உண்டாகும் துன்பத்துக்காளாய் அத்துன்பம் ஒழியுமாறு என்னிறைவனே! சங்கிலியை யான் புணரும்வண்ணம் செய்தருள்வாய் என்று, மிக இரக்கத்துடன் வேண்ட, அவ்விறைவன் ஆரூரர்பால வந்து நாவலனே! யாவருக்கும் பொருந்தவொண்ணாத தவத்திற்சிறந்த சங்கிலியை நீவேண்டியபடியே தருகின்றோம். நீ படுங்கவலையையொழி

வாயாக என்றருளியபொழுது, வன்றொண்டப்பெருமான்' அப்பொழுதே சங்கிலியாரைக் கலந்ததுபோல் இன்புற்று இறைவனை நோக்கி "அன்று வெண்ணெய்நல்லூரில் வலிய ஆண்டுகொண்டு, ஒன்றுமறியா நாயேனுக்கு உறுதியளித்தீர். அதுபோலும் இன்றும் என்னுயிர்காக்க சங்கிலியை மணம்புணர்க்க என்றுகொண்டு என்முன்னின்றருளினீர என்று மிக்க அன்புடன் போற்றி மலர்ச்சேவடிவணங்கி மகிழ்ந்தனர். இறைவனார் தமது வன்றொண்டர் மகிழ்ந்திருக்கக்கண்டு அவரைவிட்டு அந்த நடுராத்திரியிற்றானே சங்கிலியாரிருக்கும் கன்னிகாமாடத்துக்குச் சென்று தூண்டப்பட்ட சோதியையுடைய தீபம்போன்றவராகிய அவர கனவின்கண் சென்று, அவர்தம்மைக் காணும்படிச்செய்யவே, அச்சங்கிலியார் அதிசயமுற்று வீழ்ந்துபணிந்து பரவசமாய் அளவற்ற பேரன்புடையராய் எழுந்து அடியேனுய்யுமாறு இங்கெழுந்தருளிய இப்பேற்றுக்கு யான் செய்யுங் கைம்மாறு யாது' என்னசெய்வேனென்று கூறிநிற்ப, பெருக்கெடுத்துக் கருணைவெள்ளம் பொழிவதுபோலும் திருநீற்றொளி வீசும் திருமேனியுடையவராய் நிற்கும் இறைவன் தன் அருளின்வழிமாறாது தவநெறியை மேற்கொண்டிருக்கும் சங்கிலியை நோக்கி நான்சொல்வதைக் கேட்பாயாக. என்னிடத்தில் மிகுந்த அன்புடையவன். மேருமலைபோலும் மிக்குயர்ந்த தவத்திற்சிறந்தவன். திருவெண்ணெய் நல்லூரில் யாவரும்அறிய என்னடியானென்று கொண்டு என்னாலாளப்பட்டவன். அவன் என்னிடத்தில்

வந்து நீ என்வசமாயுள்ளவனென்றும், என்பால் அன்புள்ளவனென்றும், எண்ணி உன்னைத் தனக்குக்கேட்டான். அவன் எதுகேட்பினும் அவனுக்கு நான் இல்லையென்பது இல்லை. அவன் என்னை எது செய்யச்சொன்னாலும் நான் செய்யாதிருப்பதுமில்லை. ஆகலின் உன்னை அவனுக்குக்கொடுக்க உன்பாலவந்தேன். எனக்கு இல்லையெனாமல நீ இசைதல வேண்டும். நீ மகிழ்ந்து விதிமுறைப்படியே கலியாணஞ் செய்துகொண்டு வாழ்வாயாக என்றனா

(௨௪௦ - ௨௪௨) சஙகிலியாா, ஆதிதேவனாகிய இறைவன தனமுன்னின்று தமதுதோழனாருடைய எண்ணத்தைச் சொல்லியபொழுது, அவரடியிலவீழ்ந்து எழுந்துநின்று மிக்கநடுககத்துடன் எமபிரானே! தேவரீா இதுகாறும சொல்லிவந்தனவெல்லாம தலைமேறகொண்டனன் தம்பிரானே! நான தேவரீரால் சொல்லப்பட்டவர்க்கே உரியளாகின்றேன், அதிலையமில்லை. யாவரும அறிய விதிமுறைப்படி என்னை அவருக்குக கலியாணஞ்செய்து கொடுக்கவேண்டும. அடியாளுககு மறறொருவேண்டுகோளும உளதென்று மிக்க நாணத்தோடும கூறினார். அஃதாவது, என்னை அவருக்குக் கலியாணஞ் செய்துகொடுக்கும்பொழுது அவர் எனக்கொரு உறுதிமொழிசொலலும்படியாகத் தேவரீா செய்தருளல்வேண்டும். ஏனெனில என்னையாளவாரும் அந்நாவலர்பெருமான் திருவாரூரின்கண் மிககமகிழ்வோடும் வசிக்குந் தன்மையுடையரன்றோ, அக்காரணத்தை நீர்

அறிந்தவிஷயந்தானே, நீரும அக்காரணத்துக்கு முதல்வர் தானே, ஆகலான் நான் அதனை விரித்துச் சொல்லவேண்டியது என்னவிருக்கின்றது என்றனர்.

(உ௪௩-உ௪௫) எழுத்தறிவார் இவ்வண்ணம சங்கிலியார் கூறிய வார்த்தைகளையும அறிந்து, அதுகொண்டு வன்றொண்டருடைய நிலைமையினையும் தெளிந்து, சங்கிலியாரைப்பார்த்து அன்புடையாளே! உன்னைவிட்டுப் போகாமைக்கு அவன் ஒரு சபதமசெய்துகொடுப்பான். அச்சபதம அவன் அஞ்சத்தக்கதாக இருக்குமேயன்றி எளிதாகவிராது என்றுசொல்லி, அவரைவிட்டுத் தமமைத் தூதனுப்பும் விஷயத்தில் தேர்ந்தவராகிய வன்றொண்டரிடத்தில் வந்து தோழனே! நீ வேண்டியபடியே சஙகிலியினிடத்துச் சென்று உன்திறமெல்லாம அவளறியுமவண்ணஞ் சொல்லி உனது இஷ்டத்தைமுடித்தேன். நான முடித்தேனாயினும் அவள்பால உன்னாலமுடியத்தக்க குறையொன்றுளது. அது என்னாலாவதன்று ஆவதாயின முடித்தேவந்திருப்பேன் என்றுசொல்லத் தோழனார் மனமகிழ்ந்து வணங்கி முடிவிலாற்றலுடைய நீ முடித்தருளுமசெயலில என்னால்முடியத்தக்கதாக ஓர்குறையும உளதாகுமோ ஆகா, ஆயினும இதுயாதுகருதிச் செய்யுந திருவிளையாடலோ அதனை யானறிவனோ,என்னால் நீக்கத்தகுங்குறையாது அதனை அருள்செய்யுமென்ன, இறைவன் ஆரூரா! நீ அவளைக் கலியாணஞ் செய்துகொள்ளுவதற்கு ஒப்பியிருக்கின்றனையல்லவா! அவ

ளும் ஒப்பி உன்னால்கட்டப்படும் மங்கலசூத்திரத்திற்கு உடன்படப்போகின்றாளல்லவா! ஆகவே அவளால் சொல்லப்படும் வாய்மொழியாகிய சூத்திரத்திற்கு நீயும் கட்டுப்படவேண்டியது அவசியமன்றோ. அந்நியாயத்தை எண்ணியே அவள்சொல்லிய சொல்லுக்கிசைந்து உன்னைக்கொண்டு அதுமுடிக்கவந்தேன் என்னையெனின், அவளை நீபாணிக்கிரகணஞ் செய்யும்போது 'உன்னை நான் என்றும் பிரியேன்' என்று ஒரு சபதவார்த்தையைச் சொல்லுவதேயாம். அதனை இவ்விரவே சென்று அவள்முன்பு செய்வையாயின் நாளைக்கே கலியாணம் முடிவதற்கு ஐயமேயின்று என்றார்.

(௨௪௬-௨௪௮) நாவலூரரசர் அத் திருவாய்மொழியைக்கேட்டுச் சங்கிலியாருடைய கலியாணம் என்னசெய்தால் முடிவுபெறுமோ அதை யான்செய்வதில் என்னதடையிருக்கின்றது. ஆனால், அதனை யான் செய்வதற்கு உன்னருளை இப்போது யான்பெற்றுக்கொள்ளவேண்டும் என்று சொல்லவும், தம்பிரானார் புன்னகையுடையவராய் தமது தோழரது திருமுகத்தைப்பார்த்து நீ செய்யவேண்டிய சபதத்துக்கு என்னிடத்தில் திருவருள்பெறுதல் எற்றுக்கு? முன் நீவிரும்பியபடியே சென்றேன், சென்று கலியாணம் முடியும்வகையும் தேடினேன். அவையெல்லாம் திருவருளில்லாமலா ஆயிற்று அங்ஙனமிருக்க, நீ சொல்லவேண்டிய சொல்லுக்கும் திருவருள்வேண்டும் என்று கேட்கும் உன்

கருத்து யாதோ, அதனை வெளிப்படுத்துவாயாக என்றார் ஆரூரர், என்தம்பிரானே! சங்கிலி, தன்னைப் பிரியாமைக்கு என்பால் கேட்கவிரும்பியிருக்கும் உறுதிமொழியை, யான் கூறிவிடுவேனாயின், நீர் இவ்வொற்றியூரேயன்றி பிறபதிகளிலும் வீற்றிருக்கின்ற நான் அங்கங்கும் வெவ்வேறு கோலங்கொண்டிருக்கும் உம்முடைய கோலத்தைத் தவறாது கும்பிடவேண்டும் கடமையுடையேனாயிருக்கின்றேனே, அக்கடமையுடைய எனக்குப் பிரியேனென்னும் இவ்வுரை பொய்யுரையாய் முடியுமல்லவா, அதற்குயான் என் செய்யக்கடவேன். அதனையும் எவ்வாறு செய்தால் குறையுண்டாகாதிருக்குமோ அதனை உமதருள் அறியும். ஆகலான், அத்துணைவேண்டினேன அன்றியும், உமது அருளைவிட்டு எனக்கு எண்ணும் எண்ணமேது, செய்யும்செய்கையேது, சொல்லும் சொல்லேது, எனக்கு எல்லாம் உமதுதிருவருட்செயலே என்பதுநீர் அறியாததோ, என்று இறைவன் இரங்குமாறு விண்ணப்பஞ்செய்து அவ்வளவில்நில்லாது திரோபவசத்தியின் செயலால் தாம் ஒன்றுசொல்லுவராய் இறைவனைப்பணிந்து,எனது சபதந்தை விரும்புகின்றஅவள் உனது சந்நிதானத்தின்முன் செய்யவிரும்புவாளே யன்றி வேறிடத்தில்செய்ய விரும்பாள். ஆகலான, அடியேன்அவளோடு உன்சந்நிதானத்துக்கு வருவேனாயின் நீ அப்பொழுது அங்கில்லாமல் வெளியேயிருக்கும் மகிழமரத்தடியில் மகிழ்ந்திருக்கவேண்டுமென்று, பணிந்து வேண்டினார்.

(உசக-உ௫உ) வேண்டுவார் வேண்டுவதே செய்பவல்ல பெருமான் நமபி! நீ வேண்டியபடியே நாம்செய்கின்றோம். ஏனெனில், இதுகாறும் நாம வேண்டியபடியே நீசெய்து வந்தாய் ஆதலால இவவொன்றிலாவது நான் உனவேண்டு கோளினபடியே செய்தலவேண்டும். அன்றியும் ஆன்மாக் கள் எனனிச்சைவழியே வருவதனாலும, ஆனமாககள் இச் சையின் வழியே நானபோவதனாலும உணடாகுமபயன் இத்தன்மைததென்று யாவா அறியபபோகினறா. ஆன் மாக்கள உணரவேணடிய உண்மை எதுஎதுவோ அவை யெல்லாம உனனால விளககுதறகனறே இபபூவுலகில யான் வரவிடுததது, உனனை வரவிடுததறகேறப நாமும உன்முக மாய் யாவும செயதுவருகினறோமெனறு சிலகுறிப்புரை களைக் குறிபபாலுணர்ததினா

இங்ஙனமான குறிபபுரையைககேட்ட தோழனா எம பிரானே! உனவேண்டுகோளினபடியே என்னையும என் வேண்டுகோளினபடியே உன்னையும் நடத்துந திருவருளை மேற்கொண்டிருப்பையாயின் எனக்கு இங்கரியது யாதிருக் கின்றது. என்று துதிதது சிரமேல்இருகரங்களையும் குவி த்து இறைவன் திருவருளபெறறு வெளியேவர, தோழர் தம்பிரான் சங்கிலியாருடையஅடிமைத்திறம் நோக்கி,தமது தோழரிடததுச்செய்யக் கருதிய திருவிளையாடலை நினைத் தோ, அவ்விருட்பொழுதிலேயே சங்கிலியாரிடத்துச் சென்று, அவர்க்குறுதியான வார்த்தையைச் சொல்லக்

கருதி, மீண்டும் முன்போல் கனவினகணணசென்று சங
கிலியே! நீசொல்லியபடியே ஆரூரன் சத்தியஞ்செய்யச் சித்த
மாயிருக்கின்றான். ஆனால் அவன் உனது சந்நிதானத்தி
னின்று பிரமாணம் செய்யும்போது நீ அதற்கு உடன்படா
மல் அவனை நோக்கி, தேவரீர் பிரமாணஞ்செய்ய வந்த போதே
செய்யப்போகும் பிரமாணத்துக்கு உட்பட்டவராயினீ
ரென்று நான் நம்பத்தக்கவளாயினேன், ஆயினும் பிரமா
ணஞ்செய்யப் பெறவேண்டுமென்று யானும் விரும்ப, தேவ
ரீரும் அதற்கு உடன்பட்டபடியால், இவ்விடத்தைவிட்டு
வெளியே சந்நிதானத்தருகிலிருக்கும் மகிழமரத்தடியில்
இருக்குசொல்லப்படும் பிரமாணவார்த்தையைச் சொன்னால்
போதுமென்று சொல்லி அச்சூளுரையைப் பெற்றுக்கொள்
ளுவாய் என்றனுக்கிரகஞ்செய்ய, சங்கிலியார் அஞ்சலி
செய்யுங் கரமுடையவராய்ப் பிரமவிஷ்ணுக்களுங் காண்டற்
கரிய நீர் ஒருமுறைக்கிருமுறையான் காண்டற்கெளியராயி
னீரே! இது என்னகருணையோ! அதுவேயுமன்றி உமக்கும்
உமது தோழருக்கும் உள்ளீடாகக்கிடந்த இரகசியவார்த்
தையை எனக்கு இப்பொழுதே வந்து உணர்த்தியபடியால்,
அடியாள் உமக்குண்மையான அடியாளுமாயினே னென்
பதையும் கண்கூடாக அறியவுமாயினேன், என்று இரண்டு
கண்களிலும் ஆனந்தநீர்பொழிய பொன்னடியில் வீழ்ந்
தெழுந்து போற்றினாள்

(உ௫௩-உ௫௬) இறைவனார் கோயிலுக்குட்போயினார்.
பின்னர் சங்கிலியார் கனவுநீங்கெட்டு நனவினையடைந்து

கண்துயிலாது இருகண்விழித்து கனவில்கண்ட காட்சி யையும், தமக்கு மணங்கூடிய அதிசயத்தையும் எண்ணி எண்ணி அதிசயித்துப் பின் கண் உறங்காது தமது அருகே உறங்கும் சேடியர்களைத் தட்டியெழுப்பி, எனது உயிர்த் துணையாகிய தோழிகளே! நான்கண்ட அதிசயத்தை என் னென்று சொல்லுகேன்! உங்களை நான் எழுப்புவதற்குமுன் எழுந்தறியும் பெருமானாகிய நமது ஐயன் என்கனவின்கண் வந்தனன். அவன்வந்தபோது அது கனவாக நான்கண்டே னில்லை. கனவாகவே கண்டேனென்று நடந்த செய்திக ளெல்லாங்கூறினா. அதனைச்சேடியர்கள்கேட்டு அச்சமும் அதிசயமும் உடையவராய்ச் சங்கிலியாரைப்பணிந்து போற் றும்பொழுது பொழுதும விடிந்தது. விடியவும் தோழிய ரெல்லாம் இறைவனுக்குத் திருப்பள்ளி யெழுச்சிக்குரிய திருப்பள்ளித் தாமத்தைத தொடுத்தற்கு மலர்கொய்யச் செல்லும்போது சங்கிலியாரும் உடன்சென்று கோயிலுக் குட்போயினர்.

இவர்போவதற்குமுன் தம்பிரான் தோழர் சபதஞ் செய்தற்கு இவர் வருகையைப் பார்த்துக்கொண் டிருப்பவ ராதலால், இவர் வந்தவுடன் அவரைச்சமீபித்து இனிய நோக்கத்துடன் நோக்கி, நீ பிணிக்கும் மலரோடு என்னெஞ் சத்தையும் பிணித்துத் தொடுத்தபூமாலையை உன்னிறைவ னுக்குச் சாத்தியபடியினால் உன்னோடு என்னையும் பிணிக் கத் திருவுளத்தெண்ணி உனக்குக் கனவின்கண்ணும் என

க்கு நனவின்கண்ணும் எளிவந்தருளி நான் வேறொருத் திக்கு மணவாளனுகாமல் முன் எனமனத்தைத் தடுத்து, அங்கேதபோல நீயும் ஒருவனுக்கு மணவாட்டியாகாமல் உன் மனத்தையுந் தடுத்துவைத்து இன்றுநமயிருவருக்கும் பெரு மணத்தைச் செய்துகொள்ளக் கட்டளையிட்டனன் அதுவு மன்றி எப்பொருளையும் பிணக்குவானுகிய அப்பெரிய லாளன நம்மிருவருக்கும் பிணக்குண்டாகாவண்ணமும்,உன் வேண்டுகோளின்படியும், ஒருசபதத்தையும் என்னைச்சொல் லக கட்டளையிட்டிருக்கின்றனன் அதுநோக்கியே உன் வரவை எதிர்பார்த்திருக்கின்றேன. நீயும்வந்துவிட்டனை; இனிச்செய்யவேண்டியவற்றைச் செய்யலாமென்றனர். சங் கிலியார் தோழருடைய வுரையும், தம்பிரானருடைய வாயு ரையும், ஒத்திருந்தபடியால் மறுத்துரையாக ஒன்றுங்கூறு மல் நாணத்தால் உடன்பாட்டைக் குறிப்பாற்காட்டிச் சேடி யரோடு கோயிலுட்போகத் தொடங்கினர்.

(உரை-௨௫௬) சுந்தரமூர்த்திகள் சங்கிலியாருடைய உடன்பாட்டின் குறிப்பினைக் கண்டு தாமும் பின்சென்று, சேடியர்களே! நான்செய்யவேண்டிய சபதம் சந்நிதானத் தில் செய்யவேண்டியிருத்தலால் யாவரும் நேரேசெல்லுங் கள் என்று சொல்லும்போது தோழியர் சங்கிலியாரது கன வினைக் கேட்டிருக்கின்றவ ராதலின் ஆரூரரைநோக்கி எங்கள் பெருமானைத் தோழமையாக ஆளப்பட்ட நீர் எங்கள் பொருட்டாய் அவரால் அறியப்படாத வேறொருவர்போல்

அவர்முன் சத்தியவுரைசெய்ய யாங்கள் விரும்புதல் முறைமையானதாகத் தெரியவில்லை. உமது தம்பிரானா எங்கும் நிறைந்திருக்கின்ற பெருமானுகலின் இம்மகிழடியின்கீழ் தேவரீர்சொல்லவேண்டிய வுரையைச் சொன்னால் போதும் என்றனர். தம்பிரான்தோழர் நமது நாதருடைய செயலையும் அவர்கள் சொல்லிய சூட்சியுரையையும் எண்ணுமல் நமமிறைவனை உள்ளேயிராமல இம்மகிழடியிலன்றோ நாமிருக்கச்சொன்னோம். அவவிடத்திலன்றோ இவர்கள் அதனைச் செய்யச் சொலலுகின்றனா அதனை நாம் மறுப்போமாயின் அதனுல் இவர்களுக்குச சந்தேகம உண்டாய் ஏதேனுமபழிச்சொல் வநதெய்தினுமெய்தும ஆனுல் நாம் சந்நிதானத்திறகுப் போகாமல இவ்விடத்திற போவோமாயின் அவரேன் அவ்விடததைவிட்டு அம்மகிழடிககுவருவார். எழுதததை அறியும பெருமானுயிருக்கின்ற அவர் நாம அவர்பாறசொல்லிய சொல்லின்பொருளேயும, இவாகள் இப்போது சொல்லிய சொல்லினபொருளேயும அறியாரா? அவர் இங்குவாரரா என்று துணிநது சேடியர்களே! என்னை எங்குசெய்யச் சொலலினும செய்கின்றேன என்று அவர்கள்பின் தாமும் போவாராயினர்.

(௨௬0-௨௬௧) போய் அம்மகிழமரத்தைக் கண்டு நம்மிறைவனை இங்குவந்திருக்கச் சொன்னோமே அதுபோல் வந்திருக்கின்றனரா இல்லையா என்பதைச்சற்று உள்ளத்தில் எண்ணிப்பாராமல் இறைவனது திரோதான சத்திவசத்த

ராய் அம்மரத்தை மூன்றுதரம் வலம்வந்து எதிரேநின்று சங்கிலியாரும் அவருடனிருந்தாரும் நன்றாய்க்கேட்கும்படியாக நான் இவ்வொற்றியூரில் இல்லாமற்போகேன் என்று கூறியருளினர். இச்சபதமொழியைக் கேட்ட சங்கிலியார் திருவருள் விளக்க முடையராகலான் அச்சபதமொழிக்கஞ்சி நாம் ஏன் அவர்பால் இம்மொழியை விரும்பினேம், இது என்னுமோ? அது வேறு ருங்காலத்தில் இவர் என்னுவரோ? அவ்வாறு தற்கு நாமன்றோ காரணமாகின்றோம்? இது என்ன பாவம்! கைலாயத்தில் இறைவன் கட்டளையிட்டபடி இவர் இப்பூவுலகில் இருவரிடத்திலும் கலந்திருக்கவேண்டியவரல்லவா? இவையெல்லாம் நாம் எண்ணுதொழிந்தோமே? நம்மைப்போலும் பாவி எவருளரோ என்று மனங்கலங்கி, யான் பாவியேன் என்று பலமுறையுங்கூறி, இறைவனும் இவ்வாறு செய்யச்செய்தனரே அதுவும் எனது பாவத்தைநோக்கித்தானே என்று உயிர்சோர்ந்து அறிவழிந்து ஆரூரருக்குத் தனது துயரம் தோன்றுதபடி ஒருபுறத்தில் சோர்வாராயினா.

(௨௯௨ - ௨௭௪) இவர் இங்ஙனம் இவ்வாறிருக்க, நாவலூரர் மகிழுடையராய்க் கோயிலினுள்ளே சென்று வணங்கி எம்பெருமானே! என்பொருட்டு இப்போது நீ செய்தசெய்கையை என்னென்று சொல்லுவேன்! இப்படி யாவர்செய்யவல்லர்! என்பொய்யுரையை நீமெய்யாக வாழ்கின்ற இவ்விடத்தில் சொல்லவொட்டாமல அவள்வாய்மொழிகொண்டே மரத்தடியிற்செய்தாற் போதுமென்று

சொல்லும்படிச் செய்து, என்பொய்யுரையை அவ்வளவி லொழித்தனையே! இது மிகக அழகு! இவ்வகைத்தான அருளை எனக்குத் தருவதற்கல்லவோ இங்கு எழுந்தருளி யிருந்தது என்று பேரானந்தக்களிப்புடன் இருந்தனர். சங் கிலியார் தாமிருக்குமண்டபத்துட்சென்று பூமாலையைத் தொடுத்து காலங்கடோறுங் கொடுத்து நீலகண்டர்செய் தியை எண்ணி எங்களைக் காத்தருளலவேண்டும என்று இறைஞ்சி இருந்தனர்.

ஒற்றியூருடைய ஆதிபுரியார் அவ்வூரிலிருக்கும் அடியா ருள்ளங்கடோறும கனவின்கண் எழுந்தருளி அன்பர்காள்! இங்குவந்திருக்கும் நமது நம்பியாரூரனுக்குச் சங்கிலியைத் தேவர்கள் சாக்ஷியாகவும, அக்னிசாக்ஷியாகவும் கலியாணம் செய்துவைபபீர்களாக; இது நாம்செய்விக்கும் கலியாண மாகும். அதனை நீங்கள் நமது பணியாக எண்ணிச்செய்யுங் கள் என்று அனுக்கிரகிக்க அவ்வருட்பணியைத தலைமேற் கொண்டு நித்திரைவிட்டெழுந்து அடியாரெல்லாம் ஒன்று சேர்ந்து பேரானந்தங்கொண்டு அப்பதியிலுள்ளாரையுங் கலந்து அவர்களுக்குத தங்கள் கனவின் அதிசயத்தைக் றி, நமக்கு இதுசெய்யவந்த பாககியம் என்னபாக்கிய மென்று உள்ளத்தில் நிறைந்தமகிழ்ச்சியுடன் தேவர்களெல் லாம் பூமழைபொழிய, கண்ணிறைந்த காட்சியுடன் ஆரூர ருக்கும் சங்கிலியாருக்கும் கலியாணத்தைச் செய்து முடித் தனர். வன்றொண்டப்பெருமான் ஸ்ரீகயிலாயத்தில் "தென்

புவிமீது தோன்றி அம்மெல்லியலாருடன் காதல் இன்பங்
கலந்து அணைவாய்” என்றருளிய கட்டளைப்படியே, செங்
தாமரையாளைப் புறங்கண்ட சங்கிலியாரை மணந்து, அவ
ரது அழகையெல்லாம் கண்டும் கேட்டும், உண்டும் உயிர்த்
தும், உற்றும் கொள்ளைகொண்டு நீங்கா ஆசையுடன்
இருந்தனர்.

ஓர்நாள் திருவாரூரின்கண் நடக்கும் வசந்தோற்சவ
வைபத்தையும், அவ்வைபவத்தில் தியாகேசனுக் கெதிரில்
அழகிற்சிறந்த மங்கையரெல்லாம் புடைசூழ அவரிடையே
பண்ணமரும் மொழியுடையராகிய பரவையார் பாடும் பாட
லையும், அவராடும் ஆடலையும் கண்ணாரக்கண்டவர்போலும்,
காதாரக் கேட்டவர்போலும் மனத்திற்கொண்டவராய்,
“பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன்”
என்னும் திருப்பதிகத்தைப் பாடி நைந்து நைந்து ஓய்ந்
திருந்து, ஓர்நாள் துணிவுடையராய் ஒற்றியூர்த் தியாகேச
ரிடத்திற்சென்றுவணங்கி, எம்பெருமானே! நீ திருவாரூரின்
கண் பவனிவரும் அற்புதக்கோலத்தைக்காண ஆராக்காதல்
கொண்டிருக்கின்றேனே, யான் என்செய்யக்கடவேன் இனி
இங்கிருக்க ஆற்றகிலேன் என்று பணிந்து சந்நிதானத்தை
விட்டு வெளியேவந்து, சபதமொழியைக் கருதாது அவ்
வூரைவிட்டுப் போவதற்குத் தமது அடியைப் பெயர்த்து
வைக்கத் தலைப்பட்டனர்.

(உஎ௫-உஎஅ) அங்ஙனம் தலைப்படவும், கண்கள்
ஒளிமழுங்கின மழுங்கவும் தமதறிவும் மயங்கி மூர்ச்சை

யடைந்து பின்னர் தெளிந்தவராய்ச் செய்யுஞ்செயல் இது வென்று செய்ய அறியாதவராய்த் திகைத்து பெருமூச்செறிந்து, அந்தோ! இக்கொடுமை நாம்சங்கிலியாற்கூறிய சொற்றொடக்காகிய சபதத்தால் விளைந்த வினையின்பயனும் என்று நினைந்து, இவ்வினையின் துன்ப விளைவு நம்மைவிட்டொழிய, சங்கிலியால் நமமை ஒற்றிவைததவனைப் பாடுவோம் என்று திருவுளத்தெண்ணி "அழுக்குமெய்க்கொடு" என்னும் திருப்பதிகத்தை மனமறைநதுபோற்றி எனதடிகளே! எனது சொற் றவறுலுண்டாகிய குற்றத்தை நீக்கிட வேண்டும், முக்கண்ணுடையானே! கண்ணிழநததனாலுண்டாகியதுனபமொனறுனும, இஙஙனம இழக்கவந்தது சங்கலிகாரணமாய்வந்த பழியினுலெனறு சொலலவரும பழிச்சொல்லா லுண்டாகுந் துன்பமொனறுனும் நான்மிகவும் நாணமடைகின்றேன. இநத நாணத்தை நான் அடைய வேண்டிய காரணம, நீ எனக்கு "மகத்திறபுக்கதோர் சனியாய் ஆனபடியினுலன்றோ" என்றுபோற்றி இவன்செய்த அருள் இவ்வாறுயினும, திருவாரூர்த் தியாகேசனைக் காணவெண்ணிய என்னுசைபுண்படுமோ! படா. ஆகலான் நான்போவேனென்று துணிநதெழுநது மார்க்கததிற் போகும் அடியாரையே சகாயமாகப்பற்றி திருமுல்லை வாயிலென்னும் க்ஷேத்திரத்தை வந்தடைந்து அஙகு மாசிலாமணியாய் விளங்கும் பரஞ்சுடரைப்பணிந்து 'எனக்கு த திருவுமெய்ப் பொருளும் செலவமும் உன்சீருடைக்கழல்கள் என்றெண்ணியுள்ள என்கணணைச் சங்கிலிக்காகக்கொண்டனையே, அத

னால் நான் துயரடைகின்றேனே, அடியேன் படுதுயர்களை யாய், என்னும் பொருளமைந்த திருப்பதிகத்தைப்பாடி திருவாரூருக்குப் போகும்வகையையே நாடி, அடியாருடன் கூடி திருவெண்பாக்கம் என்னும் க்ஷேத்திரத்தை யடைந்து கோயிலுக்குப்போய் சந்நிதானத்தின் முன்னின்று "பிழையுளனபொறுத்திடுவர் என்று அடியேன் பிழைத்தக்கால், பழியதனைப்பாராதே படலம் என்கண் மறைப்பித்தாய், குழைவிரவு வடிகாதா கோயிலுள்ளாயோ" என்றுபாட அவ்வெண்பாக்கநாதர், சுந்தரமூர்த்திகள் தம்பால் தோழமையுடையரல்லாதார்போல் எண்ணினார்போன்று நாம் கோயிலில் இல்லாமல் எங்குப்போவோம் ஆகலின் நாம் கோயிலில் உள்ளோம், நீர்போகிறென்று ஊன்றுகோலொன் றருளினர்.

அருளலும், என்னுடைய பற்றுயுள்ளபெருமான் இக்கோலையோ, பற்றுக பற்றிசசெல்லத் தந்தனன் என்று, அங்குநின்றும்புறப்பட்டு திருவாலங்காட்டைச்சேர்ந்து, "முத்தாமுத்திதரவல்ல" என்னுந் திருப்பதிகத்தால் அடியார்க்கடியராதலைவேண்டி, அப்பதியைவிட்டுத் திருவூறல் என்னும் திருப்பதிக்குப்போய் அங்கெழுந்தருளியிருக்கும் பெருமானைப்பாடிப்பணிந்து விடைபெற்றுத் திருக்காஞ்சிக் கெழுந்தருளி உயிர்களுக்கெல்லாம் ஒழியாத கருணையினால் அறம் வளர்க்கும் நாயகியாய், காமகோட்டித்தலைவியாய் வீற்றிருக்கும் காமாக்ஷியம்மையை ஆராஅன்புடன் பணிந்து வருளுடையராய்ப்போற்றி, அறுதியாயுள்ள உலகமுற்

ரும அனைத்தை அழித்து ஆக்கும் முக்கடவுளாகிய திரு வேகம்பர் சந்நிதானத்துக்கு அடியார்களெல்லாம் எதிர் கொண்டழைக்கச் சென்று, தழுவக்குழைந்த பெருமா னைப் பணிந்துநின்று, அறிவிலியாகிய என்செயல் யாதும் இல்லை என்றறிந்த உனக்குமுன் யான் என்னென்று எடுத் துச்சொல்லுவேன்; யான் சொல்லுவதறியேன்; தேவரெல் லாம் உய்ய ஆலந்தானுகந்து அமுதுசெய்த கருணையாள னே! கச்சியேகம்பனே! யான் உனது பவளம்போன்ற திரு மேனியைக் காணவேண்டுமென்னும் அவாவுடையனாயிருக் கின்றேன் ஆகலின் உன்னையெண்ணுங் யான்முன்னைத் தூச செய்த பிழையினைப் பொறுத்து அருள்செய்யவேண்டு மென்று ஆராக்காதலோடும் அன்போடும் விண்ணப்பித்து, எம்பெருமானே! உனது திருமேனி எப்பிராட்டி, தனது தாமரை மலர்போன்ற கைகளால் தண்ணிய மலர்களைக் கொண்டு அர்ச்சிக்க, அவ்வர்ச்சனையேற்ற திருமேனியாகலின் அவ்வரிய திருமேனியைக் கண்ணுறக்காணுந் தன்மையெவ்வாறு போவேன். என்பிழை எவ்வாறிருப்பினும் இருக்க என வேண்டுகோளினபடியே கண்ணளிப்பாயாகவென்று வேண் டினார். வேண்டியபடியே தழுவக்குழைந்தபெருமான் முறைத் திகழ்து சொல்லுக்குக்குழைந்து இடக்கண்கொடுத்தருளித் தமது திருமேனியிலுள்ள முலைச் சுவட்டுக்கோலத்தைக் காட்டினான். கண்பெற்ற கண்ணுளர் அவ்வதிசயக்கோலத் தைக் கண்டு அடியேன் கண்பெற்றபயனை இக்கணமேபெற் றேன் என்றுபாடி ஆடிப் பரவசராய் நின்றருளும்போது,

ஆலந்தா னுகந்து[illegible]செய்தானும் தமதிடம்பிரியாததேவியோடு மீண்டுங் காட்சிதந்தருள, அந்த நிறைந்த கோலத்தைத் தமதுள்ளத்துள் நிறைந்த பேராசையோடுவணங்கி கைகளஞ்சலிகூப்பிப்போற்றிப் பின்னர் அன்பருடன் வதிந்திருந்தனர்.

(உகூய - ௩௱ய) ஓர்நாள், இடக்கண்பெற்ற இக்கண்ணைக் கொண்டு, "தென்திருவாரூர் புக்கு எந்தைபிரானை" காணவேண்டுமே,' இப்பொழுது பெற்றகண்ணை என்னுடைய "முந்தியெழும் பழையவல்வினை (ஓர்கால)மூட" பெறுவேனாயின் எங்ஙனங் காண்பே னென்று ஆரூரனைக் காணும் விருப்பமேற்கொண்டு முலைச்சுவடும் வளைத்தழும்பும் பெற்றுடையாரைப் போற்றி அருள்வசத்தராய்க் காஞ்சிநகரத்தைக்கடந்து "திருவாரூரை நான் என்றுகொல் எய்துவேன்" என்று சந்தவிசை பாடிக்கொண்டே அன்பருடன் வழி நடப்பாராயினார்.

அவ்வழியினகணுள்ள திருப்பதிகளைக் கண்டு அங்கங்கும் தமது இறைவரை விடாதுவணங்கி திருவாமாத்தூர் என்னுந் திருப்பதிக்குப் போய் ஆமாத்தூர் அழகரை வணங்கிப்போற்றிப் பதிகமும்பாடி தொண்டைவள நாட்டைக் கடந்து, சோழநாட்டை யடைந்தனர்

அந்நாட்டில் திருவறத்துறைக்குச் சென்று அவ்வறத்துறை நாதனை "கல்வாயகிலும்" என்னும் பதிகத்தாற் பாடிப் போற்றி அப்பதியைக்கடந்து ஏனைய பலபதிகளையும்பாடி

திருவாவடுதுறைக்குப்போய் கோயிலுக்குள்ளே சென்று "கங்கைவாழ் சடையாய் கணநாதா காலகாலனே காமனுக் கனலே,......திருவாவடுதுறையுள் அங்கணா, ஓர் கண்ணிலேன் எனை யஞ்சலென் றருளாய் யாரெனக்குறவு அமரர்களேறே" என்று தமது குறைகொண்ட திருப்பதிகம்பாடிப் பணிந்து திருவருள்பெற்று அப்பதியை விட்டுத் திருத்துருத்தி எனனும திருப்பதியுடைய இறைவனை வணங்கி அருளாளனே! "அடியேன்மேல் உற்றபிணிவருத்தம் என்னை விட்டொழிந்து போக அருளவேண்டு" மென்று வணங்கிப் பாடிப்பரவியபொழுது பரமனார் திருவருள்புரிவாராயினர்.

கண்ணோய் நீங்கவேண்டும கண்ணளா! கோயிலுக்கு வடபக்கத்தில வடகுளம் ஒனறிருக்கின்றது. அக்குளத்தில் நீ சென்று மூழ்குவையாயின் உனது கண்ணினிடத்திற் பரவிய, இப்பிணி தீருமென்று அருள்புரிந்தனர். புரியவும் அக்கட்டளையை மேறகொண்டு அத்தீர்த்தத்தின்முன்னே சென்று வேதப்பொருளெல்லாந திரண்டதிருமேனியதாகிய வேதேஸ்வரரைச் சிந்தித்துத தீர்த்ததிலிறங்கி மூழ்கினார். மூழ்குதலும் புதிதாகவந்த கண்படலத்தால் உண்டாகிய நோய்தீர்ந்து அந்தக்ஷணத்திலேயே திருமேனி முற்றும் இரத்தினமயமாய்ப் பிரகாசிக்கப்பெற்றுக்கரையேறிக்கண்டவரெல்லாம் அதிசயிக்கக் காட்சிதந்து பொன்னுடையுடுத்து பஸ்மருத்திராக்ஷ தாரணராய் அன்பர்களெல்லாம் அதிசயத்துடன் சூழ்ந்துவரக் கோயிலுக்குள்ளேசென்று தமது

குறைமுடித்த இறைவனாரை "மின்னுமாமேகம்" என்று தொடுத்து "அடியிணை தொழும்அன்பராம் அடியார், சொன்னவாறு அறிவார் துருத்தியார் அடிகளைச் செடியனேன் நாயேன், என்னுடம்படும் பிணியிடாகெடுத்த எமபெருமானை மறக்குமா றென்னே" என்று பண்ணிறைந்ததமிழ் பாடி கண்ணோய்நீக்கிய பெருமானது திருவருளைமறவாது அவ்விறைவனை அன்புடன் பணிந்து சிலநாள் அங்கிருந்து பின்னர் ஏனையபதிகளையும் பணிந்து மாலைப்பொழுதில் திருவாரூர் கண்ணுக்குத்தோன்றக் கண்டனர்.

திருவாரூரைக் கண்டபொழுதே ஆராக்காதலால் தாம் பெற்ற ஓர்கண்ணால் கோபுரத்தைக் கண்ணாரக்கண்டு பூமியில் தண்டாகாரமாக வீழ்ந்து பெருமூச்செறிந்து நேராகவணங்கி "தூவாயா" எனத்தொடுத்து "தொண்டுசெய்வார் படுதுக்கங்கள், காவாயே" "இங்கெமது துயர் களைந்து கண் காட்டாயென்று" சந்நிதானத்தின் முன்னேநின்று, பாடிப் பணிந்து வெளியேவந்து அடியார்களுடன் தனியேவேறிடத்திருந்து அர்த்தயாமகாலத்தில் திருமூலஸ்தானத்துள்ளே சென்று "குருகுபாய" எனப்பதிகத்தை ஆரம்பித்து, அதில் "அந்தணாளரைப் பருகுமாறும்பணிந்தேத்துமாறும் நினைந்து உருகுமாறும் இவை உணர்த்தவல்லீர்களோ" என்று தாம் அயலவர்போல் அடியார்களை வினவிப்போற்றி சந்நிதானத்தை விட்டு தேவாசிரியத்தி னிடத்துவந்து நமஸ்கரித்து தியாகேசன் வீற்றிருக்கும் பூங்கோயிலினுள்ளே

சென்று தம்பிரானைக் கண்டு அன்பினாற் பெருகிய ஆசையி னால் பூமியில் தண்டாகாரமாக விழுந்து மீண்டும் எழுந்து நின்று கண்ணொன்றாற் கண்டனர்.

அங்ஙனம் காணும்பொழுது எம்பெருமான் இவ்வொருகண்ணாற் காணும் அழகுடையவனாயினேன்! அந்தோ! இப்படியும் எனக்குவருமோ, நான் இத்துயரக்கடலுள் கிடத்தல் உன் திருவருளுக்கழகோ, குறைபட்டிருக்கும் என் மனக்குறைபோய் நிறைவாக மற்றொரு கண்ணைத் தந்தருளாய் என்று நமஸ்கரித்து, "மீளாவடிமை" என்னும் பதிகத்தைத் தொடுத்து, அதில் "நான் பிறரை வேண்டாது உமக்கே மீளா அடிமையாளாய், மூளாத்தீப்போல் உள்ளே கனன்று முகத்தான் மிகவாடி, ஆளாயிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால், வாளாங்கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே" என்று அடிமையும், தோழமையும் தோன்ற ஓதிய பொழுது இறைவன் தம்மைத் தெரிசிக்கவேண்டுமென்று வருந்தும் அவரது வருத்தத்தைத் திருத்த இரங்கிக் கருணை நோக்களித்து ஆரூரனே! நீ மகிழுமாறு செய்கின்றோமென்று வலக்கண்ணைப் பிரகாசிக்கச்செய்தனர்.

(௩௧௧-௩௧௨) மூர்த்திகள் இருகண்ணும் பிரகாசிக்கக் கண்டு முகமலர்ச்சியுடையவராய்ப் பூங்கோயிலில் அமர்ந்த தம்பிரானது அடியிணை மலர்களில் தமது கண்ணிணைமலர்களைப் பொருந்தவைத்து, கண்பெற்ற பயனைப்பெற்றவராய்ப் பணிந்தெழுந்து பரவசப்பட்டு உள்ளத்தராய் மீண்டும்

மீண்டும் பணிந்துபணிந்து, பணியுந்தோறும் பண்ணிசைப் பதிகங்களைப் பாடிப் பரமனை மகிழ்வித்து அவனருளைப் பருகிப் பருவரலொழிந்து தேவாசிரியத்தை வந்தடைந்து அங்கு ஒருபுறத்திருந்தனர்.

(௩௧௩-௩௪௫) சுந்தரமூர்த்திகள் இங்ஙனமிருக்க, இம் மூர்த்திகளைப் பிரிந்த பரவையார் மனம் ஆற்றாது, நமது நாயகர் இத்தனை நாள் தாழ்த்திருந்ததன் அறியாரே, இதற்குக் காரணம் யாதோ என்றெண்ணுதனவெல்லாம் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணுப், பகல் இரவாய், இரவுபகலாய் நாளெல்லாங்கழிந்து, நாள்கழியுந்தோறும் ஆசைமேலிட்டு அதனால் வாட்டமுற்றவராய் வாழ்ந்துவரும் நாளில், ஒரு நாள் தமக்குரிய சில்லால் சுந்தரமூர்த்திகள் ஒற்றியூரைச் சேர்ந்து அங்குச் சங்கிலிநாச்சியாரை மணம்புணர்ந்து தம்மை மறந்து வாழ்வதைக் கேள்வியுற்று தன்துள்ளக் குறிப்பை யுணரவல்ல சிலரை ஒற்றியூருக்கனுப்ப, அவர்கள் அவ்வாறே வந்து உண்மையை உண்மையாகவே யறிந்து பரவையார் பால்வந்து தெரிவித்தனர். அதனை யறிந்தமாத்திரத்தில் தம் மையறியாமல் கோபங்கொண்டவராய் மனஞ்சகியாது அம் மனத்தோடு தளர்வாராயினர்.

இவ்வாறு இருக்கும் நிலையில், சுந்தரமூர்த்திகள் வந்த செய்தியை அடியார்கள் பரவையாருக்கு வழக்கம்போல் தெரிவிக்க அவர்மாளிகைக்குச்செல்ல, அங்குள்ள பரிசனங் கள் அவர்கள் வந்த குறிப்பையறிந்து அவர்களை உள்ளே

செல்லவொட்டாமல் தடுத்து உங்களுக்கு இங்கென்ன வேலை சங்கிலித்தொடக்குண்டார்க்கும் இங்கென்ன வேலை? அவரும் நீங்களும் திருவொற்றியூருக்குப் போகலாம் என்று பலவாறாகப் பேசினார்கள்.

அவ்வன்மொழியைக் கேட்ட அடியவர்கள் அங்கு நிற்பதற்கும் அஞ்சினவர்களாய், சுந்தரமூர்த்திகளிடத்துச் சென்று, எங்கள் ஐயரே! தேவரீர் ஒற்றியூர்ச் சுந்தரமூர்த்திகளாய் விட்டபடியால், திருவாரூர்ப் பரவையார் இன்று எங்களைப் புறக்கடித்தனர் ஆகலான் இனி அப்பரவையார்பால் சுவாமிகள் மனத்தைப் பரவுதலொழிக, இதுவே எங்கள் வேண்டுகோளென்று வணங்கினர்.

நம்பியாரூரர், மிகவும் மனவருத்தமுற்றுச் சிறிதுநேரம் எண்ணி அடியவர்களில் சில முதியோர்களை மாத்திரம் அனுப்புவோமென்று சிலரைக் கூப்பிட்டு அனுப்பினர். அவர்கள் சென்று முன் அஞ்சிவந்த அடியார்கள்போல் வெளியே நின்று வாராது, எவ்வித வுபாயத்தினாலோ உள்ளேசென்று, அவரைக்கண்டு சாமபேததானதண்டம் என்னும் நான்கு வகையில் பேதனையால் அவர்மனத்திற்குச் சமாதானம் வருமாறு, சுந்தரமூர்த்திகள் செய்தசெயல்கள் ஒப்பத்தகாதனவேயாமன்றி, ஒருசிறிதும் ஒப்பத்தக்கன வன்றென்று கூறி அவரைத் தம்வசமாக்கிப் பின்னர் அம்மணீ! நீர் அறியாததை நாங்கள் என்னசொல்லப் போகின்றோம். நீர் பொறுமையிற் பரவையன் (கடலன்)றோ ஆகலான் பொறுமையை மேற்

[illegible] அவர்பால் முன்புபோல் அன்புபாராட்டுவேந்த நல் [illegible]ம் என்று சொல்லப்பரவையார், ஐயா ! என்னசொன்னீர் [illegible] நான் உயிர்விடவேண்டுமாயின் இப்போது சொல் [illegible]தை மீண்டும் சொலலுங்கள், இருங்கள் என்றார். அவர்கள் அச்சொல்லைக் கேட்டமாத்திரத்தில இருப்பதற்கஞ்சினவர் களாய் அக்கணமே வெளிவந்து ஆரூரர்பாலவந்துசுவாமிகாள்! தேவரீர் எண்ணியது எங்களபாலாவதலல, தேவரீர் இங் கிருப்பது தெரிநதால் பரவையாா உயிர்துறபபார்போலிருக் கின்றது; இதுதான் நாங்கள தெரிநதுகொண்டுவநத விசே ஷம் என்றுசொல்லி விடைபெறறுச சென்றனர்

அவர்களுக்கு விடைகொடுத்தசுநதரா இடர்பபாடுடை யராய் இனிநாம் செய்யும் செயலென்னையுள? இனி நம்மைத் தோழமைகொண்ட இறைவன் செயலை அறிவோம் என்று அவரைச் சிந்திததனர். சிநதிபபவர்கருச்சிறநது செந்தேன் முந்திப்பொழிவாராகிய தியாகேசர் அவர்முன்னேவர, நம்பி யரூரர் ஆராமகிழ்ச்சியுடன் அடிபணிந்து பரவையாரது நிலைமையைக்கூறி, பரவையை உயிர்விடுநிலையில் வருவித்த தும், உயிர்வருந்தும் நிலையில என்னை இங்குவைத்ததும், நீரன்றோ! எனக்கு நாயகன் நீரேஎன்பதும், நான் உமக்கு அடியேனென்பதும், தம்பிரான்தோழன் என்றபடி எனக் குத்தக்கதும் உண்மையாயிருக்குமாளுல் இந்த நடுராத்திரியி லேயே பரவைபாற்சென்று அவளது பிணக்கையொழித்து [illegible] அவளோடு சேரும்படிச் செய்யவேண்டும் [illegible]

கூற, சோழனார் வேண்டிற்றே செய்துவருபவராகிய அடியார்க்கெளியர் ஆரூரரைநோக்கி, எனபால் அன்ப! நீ துன்புறுதலொழிக, நீசொல்லியபடியே இப்பொழுதே தூதனாகச்சென்று நீ இட்டபணியைச்செய்கின்றேனென என்று அருளுடன் சொல்ல, ஆரூரர், பொன்னும்மெய்ப் பொருளும் போகமுந்திருவும் எனக்குத்தருபவன் நீயேயல்லவா என்று அடிபணிந்து, எம்பெருமானே! நீ சொல்லியபடியேசெய்ய, இங்குத்தாமதித்து நில்லாது விரைந்து செல்வீராகவென்று கூற, அவர்சொல்லுக்கினிக்கும் இறைவனார் அவர்சொல்லியபடியே தேவர்முனிவர் முதலாயினாரும் சிவகணநாதர் முதலாயினாரும் பின்தொடர்ந்துவர, தாமதமது பாதத்திலணிந்திருக்கும் சிலம்பு ஓசைபட வீதியிலேநடந்து பரவையார் மாளிகையைச் சமீபித்தபோது, தமது தெய்வவுருவத்தை மாற்றி தம்மை அருச்சிக்கும் அருச்சகர் திருவுருக்கொண்டு கதவடைத்திருக்கும் வாயிற்படியிலநின்று, பாவைபோன்ற பரவையே! கதவைத் திறப்பாயென்றழைக்க, அங்ஙனம் அழைத்த மொழியைக்கேட்ட பரவையார் நித்திரையற்றிருப்பவராதலால் இப்போது நம்மை அழைத்தவர் அருச்சகர் போல காணப்படுகின்றதே, அவர் இங்குவாராரே! இப்பாதிரவில் வந்தனரேஎன்று பயமுற்று இஃதென்னே! என்று திடுக்கிட்டெழுந்து வந்து கதவைததிறந்து சிவார்ச்சகரைக் கண்டு சுவாமிகாள்! இந்த நடுவிரவில் வந்த காரணம் என்னவோ? என்னவேண்டிவந்தோ? அதனைச்சொல்லியருளவேண்டுமென்று அடிபணிந்துநிற்ப, அருச்சகர்-"பாவாய்! நான்

நீ செய்யக்கூடுமான தொன்றை யானெண்ணி வந்தேனே யன்றி செய்யக்கூடாததை யெண்ணி வந்தேனல்லன் அது யாதெனில நம்பியாகிய சுந்தரன் இங்குவரவேண்டு மென்பதே யாம். இதனைக் கேட்டபரவையார் என்னைவிட்டுப் பிரிந்து ஒற்றியூருக்குசசென்று அங்கு சங்கிலித்தொடக்குண்டார்க்கு முன்போல் இங்கு பங்குனித்திருநாளுக்குவர என்ன சார்பிருக் கின்றது. இவ்வழகான காரியத்திற்காகவா இந்நராத்திரியில் நீர்வந்தீர். இதற்காக நீர்வரவும் தகாது, இக்காரியத்தை நீர் சொல்லவுந் தகாது போகலாம் என்று கூற இறைவன் அதனைக் கேட்டு ஓபரவையே! சுந்தரன்செய்த குற்றங்களை மனத்துட் கொள்ளாது ஒழிதலன்றோ உனது பெருந்தகைக்குத் தகுதி யாம, குற்றங்களைக்கருதி வெகுளிமேறகொளளுதல் உனக்குச் சாலபாகுமா, ஆகலின் அக்கோபததை யொழித்தற்கன்றோ நான் வேண்டிக் கேட்டுக்கொண்டது, வேண்டிக்கேட்டும் கோ பத்தையே மேறகொண்டு நான் சொல்லியசொல்லை மறுத் தல் அடாது என்றனர். அடாதென்று கூறிய சொல்லைக் கேட்ட பரவையார் நான் கோபமேற்கொண்டு கூறியது என் தகுதிக்குத் தகுதியற்ற தென்று கூறியதுபோல உம்முடைய தகுதிக்கு என் கடைத்தலைவாயிலின்கண் வந்து இந்தக்கரு மத்தைச் சொல்லல் உமக்குத் தகுதியோ, இது உமமுடைய தகுதிக்குப் பெருமையானதன்று, ஒற்றியூரில் உறுதிமொழி தந்தார்க்கு நீர் கூறும் மொழியும் நான் கூறும் மொழியும் உறுதியாமோ. உறுதியலலாத பயனில்சொல்லைப் பலமுறை யும் பாராட்டுகின்றீரே அதற்கு நான் இசைவனோ அவர்

ஒற்றியூரில உறுதிமொழி உரைத்ததுபோல் நான் திருவாரூரில் அவரைப் பார்ப்பதில்லையென்று ஓர் உறுதிமொழி கூறியுள் ளேன். ஆகலின் நீரும்போகலாம என்றுகூறினர்.

(௩௭௬-௩௫) வீதிவிடங்கபபெருமான அதனைககேட்டு தம்முள்ளத்தே நகைகொண்டவராய் இசசொல்போல் பரவை யாரிடத்துக் காதலகொண்டிருக்கும் நமபியாரூரர் சொலலும் சொற்களையும கேடகவேண்டுமென்னும் அவாவினுல் பரவை யாரிடம நில்லாது நமபியாரூரரை நோக்கிநீஙகினா. நமபிஆரூ ரா பெருநதகையாகிய ஆரூரரைப பரவையினது பிணககைத் தீர்த்து வருமபடித தொழுதோமே என்று மனமகிழ்நது பின் னரும் நான் வேணடியபடி பிணக்கையொழிதது வருவரோ யன்றி ஒழிககாதுவருவரோ! என்று எதிாபாாததிருககுஞ் சமயததில இறைவனுரும சமீபித்தனா. அவரைக்கண்ட ஆரூ ரா் நமதுவேண்டுகோளின்படி முடித்துவந்தனரென்று ஆராக் காதலுடன் எதிாசென்று என்னை வலிநதாட்கொண்ட முறை மைககேற்ப இபபோதும இசசெயலைச செய்துவநதீர் என்று சொல்லவும, நீ எண்ணியபடி முடிததுவந்தே னில்லை. எம் மிடதது ஆராககாதலுளள அவள எமமையும் வெறுத்தாள். அவள் வெறுத்துரையாடவும நான் பொறுத்தலை மேற்கொண் டவளுய் மீண்டும அவளைபபார்தது சுநதரன் இங்குவருதலை மறுத்தது உன் தகுதிககுத் தகுதியன்று என்று வேண்டினேன். அதறகு அவள் என்னைநோககிக் கூறியது என்னெஞ்சத்தைச் சுட்டுவிட்டது. அச்சுடுகையில் வெதும்பிக்கிடக்கும் என்

லைப்பார்த்து இங்கு என் நிற்கின்றீர் போகலாம் என்று கடு மொழிகூறினாள். நான்போகாதிருந்தால் முன்னிருந்த பிணக்கு சிறிதுசிறிதாய்த் தணிந்துவரும். நான் போனதினால் அடங்குந்தீயில நெய்விட்டு அடங்காதிருக்கச் செய்ததுபோலாயிற்று இதற்கு நான்என்செய்வேன் என்றுகூறியதை நம்பியாரூரர் கேட்டு நடுங்கி உமமுடைய சொல்லை அவளா தடுபபாள். உமது அடிமையை நாங்கள் வேண்டியிருக்க நீர் எங்களிருவருடைய அடிமைவேண்டாதிருததலை இன்றுவெளியாக்கினீர். எங்கள் அடிமையை வேண்டியிருபபின் பிணகொழிக்கவேண்டிய என்சொல்லின்படியே அவளபால் பிணக்கொழியுஞ்செயலைச் செய்திருப்பீரன்றே. உம்மிடததில் அடிமைவேண்டாது போகத்தையேவிருமபிய தேவாகள வேண்டுகோளின்படியே நஞ்சத்தையுண்டருளினீா தேவாகளபொருட்டு உம்மிடத்தில் அன்புளள திரிபுராதிகளுடைய முபபுரங்களை எரிததீர். சிறுவனுயினும் வேதமுற்றும படித்தவனென்று இயமனை யுதைத்தருளினீர். தேவர்கள் வேண்டததக்கவனுயுள்ள உமக்கு நான்வேண்டியபடியே முடிதது அடிமைகொள்வதில் உமக்கு என்னபயன்வரும் அவாகளோதேவர்கள் நானோமனிதன் நான் வேண்டியபடி செய்வீராயின் அவர்களோடு நான் ஒப்பாவன். ஒப்பாவேனுயின் அவர்களுக்குப்பகையை விளைவிக்குமன்றே. ஆகலின் எங்களை அடிமைகொள்வது மிகையென்று கழிதது விட்டீர்போலும். இவ்வெண்ணமுடைய உமக்குப் பரவை பிணக்குடனும் நான் பிணக்கைத் தீர்க்கும் வகையறியாது நெஞ்சத்தோடுபுலம்பியும் இருத்தல் உமக்குச் சாதகமாயிற்று.

ஆகலின் பிணக்குடன்வாராது என்செய்வீர். சுரவாடும் வன்றொண்டராகிய உமக்கு அடிமையாகேனோ என்னை எனக்கு நீ அடிமை அடிமை என்று அன்று ஏன் வழக்கிட்டு அடிமைகொண்டீர். இன்று யானையாருக்கடிமையாய் என் கவலையை யொழித்துக்கொள்வேன். மறந்துந்தவரை நினைந்து உனைமறவேன் நெஞ்சினொடு வாழவுமாட்டேன் என்னுந் துணிபுடையேனாகலின் உம்மெதிரிற்றானே உயிர்விடுவேன் என்று மூர்ச்சித்துவிழுந்தனர்.

(௩௫௬-௩௫௮) அதனைக்கண்ட இறைவனார் இரங்கிய திருவுள்ளமுடையராய் அவரது சோகத்துக்கு உட்பட்டவராய் அவரையெடுத்து எனதுதோழனே! உனதுகவலையை யொழிவாயாக. மீண்டும் அவளில்லத்திற்சென்று அவளது பிணக்கையொழித்து உனதுவருகையை எதிர்பார்க்குவண்ணஞ் செய்கின்றேன் நீஐயுறவேண்டாம என்றுகூறினர். அம்மொழியானது அமுதமாய் அவரையெழுப்பிற்று. எழுப்பவும் இறைவரைநோக்கி இவ்வாறனரோ எனது பயத்தைக்கெடுத்து எம்மை அடிமைகொள்ளவேண்டும் என்று துதித்துநிற்ப இறைவனார் பரவையார் மனைக்கு முன்போல் யாவரும சூழ்ந்துவரச்சென்றனர்.

(௩௫௯-௩௬௩) இறைவனார் மீண்டும வருவதற்குமுன் பரவையாரும வந்தவா அருச்சகரோ அன்று அன்று. நம்மையும் நம்பியாரூரரையும் மணஞ்செய்வித்த ஆதிமுதல்வரேயாவர் அவர்பால் அவர்சொல்லியமொழிப்படி இணங்காது மறுத்தது

என்னபாவம் இதனினும் பாவம் வேறுண்டோ. இருவராலும காண்டற்கரியதாகிய இரண்டனுள் ஒன்றாகிய அவரடி எனது வாசற்படியின் கீழ்ப்படியளவாகவும் அவரது முடி அவ்வாசற்படியின் மேற்படி யளவாகவும் காட்சிதந்தருளிற்றே அது என்னுடைய புல்லிய பிணக்கையொழித்து தமது தோழராது வேண்டுகோளை முடிப்பதற்கன்றே. இங்ஙனமான அருமையை நாடாது அவரைப் போமென்றுசொன்னேனே இது செம்பொருள் வாய்மைக்கண்டார் சொலலாமோ அவரையொழித்து பிணக்கைத் துணையாகக்கொண்டோமே இது என்னசெய்யும். கரும்பிருக்க இரும்புகடித்த தெய்த்தவாறாயிற்றே மீண்டும இறைவர் வரத்துணிவரோ அங்ஙனம் வாராதொழியின் இவவுடம்போடு நாம் வாழ்தலெற்றுக்கு! ஆதலின் இப்பிணக்கினால் அடையும் பயன் நாம உயிர்விடுதலேயாம் என்று நைந்து உயிர்விடத் துணிந்திருந்தனா. உயிர்க்குறுதியாகிய ஆதியார் அச்செயலையுணர்ந்து இவன உயிர்விடின் நமபியாரூரனும் உயிர்விடுவனன்றே இவ்விருவருமஉயிர்விடுவதற்குக்காரணம்நாம்ஆவமன்றே. சார்ந்தாரைக்காத்தல தலைவர்கடன் என்னும் பொய்யாமொழி நம்பாலஇன்றுபொய்யாகுமன்றே. அன்றியும்அங்ஙனஞ்செய்யின் சார்ந்தாரைககாத்தலாகிய தலைவர்வேறொருவர் உளரென்றும அத்தலைவர் நாமலலவென்றும் இன்று வெளிப்படுமன்றே என்று தமது தலைமைத்தன்மையையும் இவ்விருவரும் அன்பினால் தம்மைசசார்ந்திருக்குந் தன்மையும் உலகெலாம் அறியமுன்பு அருச்சகராய்வந்தவடிவத்தைநீக்கி அருசசனையையேற்கும் தியாகேசனுகவே எழுந்தருளினர். எழுந்தருளியபோது

பரவையார் மனக்கலக்கமற்று நாமெண்ணியபடியே வந்தருளினன். இப்பாக்கியம் நமக்கு ஆரூரரால் கிடைக்கப் பெற்றதன்றோ அவர் நம்மைவிரும்பாராயின் இவர்நம்பால் வருவரோ ஆகலின் இப்பாக்கியம நம்மிடம் வாழ என்னைகட்டளையிடுகின்றாரோ அதனைச் செய்வதே நமது கடமையாம். இப்பாக்கியம் இழத்தற்கான பிணக்கை ஒருகணமும் கொள்ளேனென்று விரைந்துவந்து அவரதுகோலத்தைக் கண்டு திருவடியில் வீழ்ந்து என் சிறுபுன்மொழிகளைப் பொறுத்தருளல் வேண்டுமென்று பன்முறையுங்கூறி அடியில்வீழ்ந்துபொருந்தி எழாமற் கிடந்தனர்.

(௩௬௪-௩௬௬) பரவையே! எழுக எழுக நாம் மீண்டும் வந்தது என்னையெனின்? நீ முன்கூறிய கடுமொழியைப்போலவே எனது தோழனாகிய ஆரூரனும் பலகூறினான். அதைப்பொறாது உன்பால்மீண்டும் வந்தனன். அவன் கூறிய கடுமொழிகள் யாவையெனின் நான் பரவைவீட்டிற்குப் போனேன் என்றும், சுந்தரன் இங்கு வரவேண்டுமென்று பரவையிடத்திற் சொன்னேனென்றும், அதற்கவள் நும்பெருமைநன்றென்றும், உமது பெருமைக்குத்தக்கதன்றென்றுங்கூறி, நீரும்போமென்று மறுத்துச்சொன்னாளென்றும், சொல்லுவதற்குத்தானோ நீர் தூதுபோனது, அதைவிடமற்சொல்லுவதற்குத்தானோ மீண்டும் என்னிடம் வந்தது உம்மைப்போலும் தூதுபோவார் கிடைப்பதுஅரிது அரிது. என்னை அடிமைகொள்ளக் கிழவராய்வந்தகாலத்தில் இல்லாவழக்கெல்லாம் பேசக்கற்றீரே இப்

போது பரவையினிடத்தில தூதுபோதற்குரிய சொல்லைச சொல்லக் கற்கவில்லையோ! என்னிடத்தில வநதபோது கிழத தனத்தைக்காட்டி எவ்வனன்பேசுமபேச்சைப்பேசினீரே இப் போது எவ்வனபுருஷராய்ப் பரவையினிடத்திற்போய் அவ ளைக்கண்டபோது கிழவனாய் கிழவனுக்குரிய பேச்சைப்பேசி என்னிடம் அதனைசசொல்லவந்தீரே. இதனை யோசிக்குமிடத் தில் நான் பரவையிடத்திற்போவதும் அவளும் நானும் களிப் புடன் வாழ்வதும உமக்கே சம்மதம் இல்லைபோலும் என்று தெரியவருகின்றது. ஆகவே உமக்குசசம்மதமில்லாதவனும் பரவையோடுகூடிவாழப்பெறுதவனுமாகிய நான் இனி இங் கிருபபதைவிட இறப்பதேநலமென்று உயிரவிடத்துணிந்தே னென்றான்

அன்புடையாளே! இவவாறன கடுமொழியைநான் ஒருவ ரிடமும் ஒருநாளுங்கேட்டதிலலை. அவவாறுசொன்னதேயல் லாமல் அவனுயிரை என்னடியிலவிடததொடங்கினான். நான் என்னசெய்வேன் எனதுளளமநடுங்கிற்று. பின்னா அவனை வேண்டாததெல்லாம் வேண்டிப் பரவையினிடததில் இன்னம் ஒருமுறைபோய்வருகின்றேன். நான் வருமளவும் நீ பொறுத திருக்கவேண்டும் என்றேன். அம்மொழியைக் கேட்டபின்னா சிறிது கோபநதணிநதவனாய் ஆனல் போய்வாரும் நீாவருமள வும் உயிர்வைத்திருக்கின்றேன்போம் என்றான் முன் உன்னி டம்நான்வநதபோதுநீயும் சுநதரனிடம்போவென்றாய். அவனி டம் போனல் உன்னிடம் போவென்றான். இருவராலும்

வெறுக்கப்பட்டநான் உன்னிடம் இருப்பதா அவனிடம் இருப்பதா? நானிருக்குமிடந்தெரியவில்லை. இனியேனும் என்மொழியை அங்கீகரிப்பையாயின் நான் உங்கள் இருவரிடத்திலும் வாழலாம். இத்திருவாரூரிலும் இதுவரையில இருந்துவாழ்ந்தது போல்வாழலாம். பரவையே! நீஎன்னசொல்லுகின்றாய் சுந்தரன் உன்னிடம் வர என்னைப்போகசொல்லுகின்றனையா? சுந்தரன் உயிர்விட என்னைப்போகச்சொல்லுகின்றனையா? உன்னெண்ணம்யாது? என்றார்.

பரவையார் தமபெருமானார் கூறியவாய்மொழியெல்லாம் கேட்டு உள்ளம அஞ்சி நடுநடுங்கி எனது தெய்வமே! நீர்முன்னே உமது தோழரிடத்தில மறையவராய்பபோய் வழக்கை விளைவித்ததுபோல் இபபோது என்னிடமும மறையவராய் வந்து இவ்வளவுவழக்கை விளைவித்துவிட்டீர முன்மறையவராய் வந்தவர நீரேஎன்று நான் அறிந்திருப்பேனாயின் இன்றிரவெல்லாம் தேவரீரைத தூதுநடக்கசெய்வேனு உமது தோழரையும் உள்ளம் வருந்தச்செய்வேனு இருவருக்கும் துன்பத்தை விளைவித்து உமது அருளையும, உமது தோழரது அன்பையும நான் பெறுதொழிவேனு அந்தோ! இதுபாவம் பாவம்!! இப்போது எங்கள் இருவர்பாலும் விளைவிதத விளைவெல்லாம் நீர் விளைவித்ததேயன்றி எங்களால் விளைந்ததன்று இப்போதும் என்னவினையை விளைவிக்கவோ என்னசொல்லுகின்றாயென்று என்னைக்கேட்கின்றீர. எங்கள் இருவரிடத்தும் விளைந்தசெயலெல்லாம் முன்னமே உம்முடைய செயலென்

றுணர்ந்திருக்கின்றோம். இப்பவும்உணரும்வண்ணமேசெய்தீர். எங்களுக்கு என்றும் ஒருசெயலும்வைத்ததில்லை. ஆகவே எங்கள் இருவரையும் இசைவிக்கவே இருமுறை தூதுவருவீராஞல் அடியாள் இசையாது என்செயவல்லேன் என்றனர்.

(௩௬௰-௩௬௧) பரவையாரது இனியமொழியைக்கேட்ட நம்பிதூதனார் பரவையே! நீ எனது மெய்யடியாளாகையால் அதற்கேற்ற நன்மொழிகளையே கூறினாய் மிகவும் மகிழ்ந்தோம். இனி எனது தோழனை மகிழ்விக்கவேண்டும் காமத்திருத்தல்கூடாது என்று உடனேபுறப்பட பரவையாரும் பின்றொடர்ந்துவந்து வீதிவிடங்கடப்போகவிட்டுத் தமது மாளிகையில் நின்றனர் பிரமவிஷ்ணுக்கள் இருவரும் தமது அடியையும் முடியையும் காணும்படி அருள்செய்யாத இறைவஞர், எனவே அடியைப் பூமியடியில் தேடினருக்கு அங்கு அடியையும், முடியை விண்ணுலக முடியில் தேடினருக்கு அங்கு முடியையுங்காணும்படி செய்யாது காணுதொழிந்தவர் அத்தகைய பேராளர் சுந்தரரும் பரவையாரும் இருந்தவிடத்தில் இருக்கத் தாமே ஓர்வீதியில் தூதாக இருமுறைசென்று இருவருக்கும் தனித்தனி அடியும் முடியும் காட்டியருளும் அருட்செயலை திருநீறுமயமாய்ப் பிரகாசிக்குந் திருமேனியாராகிய பலகணநாதர்களெல்லாருங்கண்டு அடங்காக்களிப்பினராய்ப் போவாரும் வருவாருமாய் முன்னும் பின்னும் சூழ்ந்துவர, இவ்வாறுவருவார் பரவையாரபால சுந்தரமூர்த்திகள் வந்துசேரவேண்டும் என்று தீவரங்கொண்டு சடைமுடியினுள்ள

கங்கை ததும்பி நீர்த்துளி சிந்தும்வண்ணம் வேகமாய்ச் சுந்தர மூர்த்திகள்பால வந்தனர்.

(௩௭0 - ௩௭௪) சிவதூதவனூர் போவதற்குள் சுந்தர மூர்த்திகள் நம்முயிர்காக்கும்பொருட்டுப் போனவர் இன்னமும வரவில்லையே, அவர் தூதாகச சென்றசெயலில் நம்முயிர் போகும்படியாகமுடிந்ததோ இருக்கும்படியாகமுடிந்ததோ இருக்கும்படியாக இருப்பின் இதுகாறும வந்தேயிருப்பார், அவா வராமையினுல் நமஉயிர் வாழ்வதறகிலலேபோலும், எல்லாவுயிரையும வாழ்விக்குமவகையை அறிந்த அவர் நம்முயிரைமாததிரம வாழ்விக்கும் வகையை அறியாது மயங்குகின்ருர்போலும், என்று எண்ணி எண்ணி மனமவருந்தி தூதுவனுரைப பார்ப்பேபாமென்று வீதியிலேசென்று கண்ணிமை கொட்டாது பாாததனா. பாாக்குமபோது தூதனுர்வருவதைக் கண்டு ஆராக்காதலகொண்டு எதிரேவிரைவாய்சசென்று தம பொருட்டாய்சசென்று சென்று நோகபபெற்ற அடியை முடியில் வைததுப பின்னர் எழுநது பெருமானே ! என்னுயிரைக் காகக எணணுது எனனையும தேவரீரையும வருந்தும்வண்ணஞசெய்த பரவையார்பால் என்னுயிரைககாக்கவல்ல மருநதைபபெற்றுவந்தீரா என்னுயிரைபபோக்கவலல விடத்தைப் பெற்றுவந்தீரா என்று கேட்டனா. தாம்விடமுண்டு அமிர்தததைத் தேவாகளுக்குக்கொடுத்துக காத்தபெருமான் சுந்தரர் உயிர்விடும்படியான விஷவார்த்தையைச சொல்வரோ. சுநதரா! பரவை உன்பாலகொண்டிருநதகோபத்தை

தோம். இனி நீ ஆனந்தத்துடன் அவள்பால போகலாம். இது வரையில் அவளால உன்னுள்ளத்துள் பரவிய துன்பத்தைப் போக்குவாய். இனி பரவை உனக்கு இன்பம் பரவசசெய்வாள இதில் ஐயமில்லை சீக்கிரமாகப போவாயென்றனர்.

அம்மொழியைக்கேட்ட சுந்தரமூர்த்திகள் துன்பமற்று எனக்கெளிவந்த பெருமானே! இபபடி யார்செய்வார். எனக்குப் பந்தத்தைக்கொடுத்து அதிலுள்ள துன்பததைக்காட்டி, அத்துன்பததை உணர்நதபின்னர அதிறருனே உனது பேரின் பத்தையும் அறியுமபடிச் செய்கின்றீரே! இவ் வுண்மை கண்டன்றோ "பநதமுமவீடும்படைப்பாய்" என்று பெரியோர் கூறியுள்ளார். இனி எனக்கு இடாசெய்யததக்கது யாதிருக்கின்றது எநநாளும இனிபநதத்தில வருந துன்பமில்லை இன்பமே என்று திருவடியில் வீழ்ந்து வணங்கினர். தூதனார் அவர்கொண்ட களிபபைக்கண்டு தாமும் களிதது. அன்ப! உன்னைககண்டு களிக்கவேண்டுமென்று சர்வாலங்காரத்துடன் எதிர்பாரத்துக்கொண்டிருககும் பரவைபால இப்பொழுதே சென்று அவளுளளததில பரவிக்கிடக்கும துன்பத்தைப் போக்கி இன்பததைப் பரவசசெய்வாய். என் தூது முற்றுப பெற்றது என்று அருளசெய்து தமது கோயிலுக்குட் சென்றனர்.

(௩௭௫ - ௩௮௪) தம்பிரான் தோழனார் நாம் பரவை மாளிகைக்கு இவ்வளவு களிப்புடன் போகவந்தது நமது பெருமான் அவள்பால சென்றுசெய்த வல்லபத்தினலன்றி

நமது வல்லபம் என்ன இருந்தது என்று மிக்கமகிழ்ச்சியோடும் பரவையார்மாளிகையைநோக்கிச்சென்றனர். செல்லும்போது பரவையார் பெருமானால் பிணக்குநீங்கப்பெற்றாராகலான் சுந்தரமூர்த்திகளைக்காணவேண்டுமென்னும் ஆசைமேற்கொண்டு தம்பிரான்தோழனார் நாம முன்னே வரக்கூடாதென்று மறுத்ததை எண்ணி இப்போது வருவதைமறுத்திருப்பரோ தம்பிரானார்சொல்லால் வராதிருப்பதைமறுத்து இப்போதேவருவரோ என்று கண்ணிமைகொட்டாது வரும்வழியைப பார்த்திருக்கும்போது அவர்வருவதைக்கண்டனர். கண்டதும் தம்முடைய பரிவாரங்களையெல்லாம அழைத்து தம்பிரான்தோழனார் அதோ வருகின்றார் நீங்களெல்லாம் சாமரை கொடி கொடைமுதலியவைகளையும, கலவைச்சாந்து நறுமணம்கமழும் பூமாலைமுதலிய மங்கலப் பொருள்களையும ஏந்தி எதிர்சென்று அழைத்துவாருங்கள என்றனுப்ப, அவர்கள் வரவைக்கண்ட சுந்தரமூர்த்திகள் தமதுபிரானார்து திருவருட்செயலைநாடி அவர்களோடு வருவாராயினா

பரவையாா சுந்தரமூர்த்திகளபால பிணக்குற்றுத தமது மாளிகையை ஒருவகைசசிறபபுமின்றி வைத்திருநதாராதலால அம்மாளிகையை அவர்வருவதற்குமுன சகல அலங்காரத்துடன் பொலிவுபெற்றிருக்கசசெய்து, எங்குந்தீபங்களையும பூரணகும்பங்களையும் நிறுத்தி, சநதனக்கலவைமுதலியவற்றை நறுமணம்வீச வீசித் தமது மாளிகையின் முன்னர் பூப்பந்தரிட்டு அங்கு எதிர்நின்று அவர்வருகையைப்பார்த்துக்கொண்டிருந்தனர்.

சுந்தரமூர்த்திகள் பரவையாரது பரிவாரங்கள்புடைசூழ்ந்துவர மாளிகையைச்சமீபிக்கவும், பரவையார் கண்ணாரக்கண்டு கண்களிகூர்ந்து ஆசைவெள்ளத்திலழுந்தி நாணமும் அச்சமுங்கொண்டு வணங்கியெழுந்திருக்க, சுந்தரமூர்த்திகள் செந்தாமரைமலர்போன்ற அவரது கையைப்பற்றித் திருமாளிகைக்குள்ளே புகுந்தனர்

புகுந்தபின்னர் இருவரும் ஒருவரையொருவர் பார்த்து நம்மிருவரையுங் கூட்டிக்களிக்கச்செய்தது நம்பெருமானார் கொண்ட தூதின் திறத்தினாலன்றோ என்று இருவரும் அவரது கருணைவெள்ளத்தை நாடி நாடி அங்ஙனம் நாடும் சிந்தையினுள் அழுந்துவார்போல் ஒருவரையொருவர் கலந்து இன்பவெள்ளத்துளழுந்தி உடம்பு இரண்டாய் உயிரொன்றாயினர்.

(௩௮௨-௩௮௮) பின்னர் இருவரும் ஈருடம்பாய் ஓருயிராய் சிற்றின்பம் பேரின்பமென்றிரண்டின்றி ஓரின்பமாய் அனுபவிக்கச்செய்த அத்துவிதானந்தமூர்த்தியை நிரந்தரமும் பணிந்து போற்றி மகிழ்ந்துவரும்நாளில், ஏயர்கோன் கலிக்காமர் என்னும் பெரியோர், தியாகேசன் தூதுசென்ற செயலைக்கேட்டு, அந்தோ! அடியனாயுள்ளவன், சகலலோக நாயகனாகிய இறைவனைத் தனது நாயகியினது பிணக்குத் தீர்ப்பதற்குத் தூதாக அனுப்புவதும் உண்டா! இச்செயல் செய்யத்தகுமா என்று நெஞ்சில் சிறிதும் நடுக்கங்கொள்ளாது செய்யச்செய்தானுமே அவன் அடியனாவனோ! இது என்னே! என்னே! பாவம்! பாவம்!! இப்பெரும் பாவச்

செயலை யான்கேட்டும் என்னுயிர் இறவாதிருக்கின்றதே அப்பாவமும் பொறுக்கலாகாது. இனி உயிரும் பொறுக்கலாகாது. மாதினிடத்திற் செல்லவேண்டியவன் தானாவது தன்னைச் சேர்ந்தவர்களைக்கொண்டாவது பிணக்கைத் தீர்த்துத் தான் போவதைவிட்டு தன்னைச் சாமனதகிக்க அது கொண்டு காமம அதிகரித்தலைச் செய்துகொண்ட அவ்வடியவன்செய்தி அங்ஙனமிருக்க. யாவர்க்குமேலோனாகிய கடவுள் அவ் வொருவன்பொருட்டுப பூமியில் நடந்து செந்தாமரை மலர்போன்ற திருவடிகள நோகத தேரோடும வீதியில் ஓர் இரவெல்லாம் போவதும வருவதுமாகத் தூதுபோகுஞ்செயலில உழன்றிருந்தனரென்றசொன்னால இதனினும அதிசயம் ஒன்றுண்டோ. இறைவன் தமது அடியராயுள்ளாரிடத்துத் தமதன்மைபக்காட்டத துணிவாராயின் அடியராயுள்ளார தமக்கு அவாபாலுள்ள அனபைக்காட்டத தலைபபடுகின்றனர். அவர் பெரியரிற் பெரியோராயிற்றே அபபெரியோரை சிறியரிற்சிறியோரும் செய்யக் கூசுவதாகிய இச்சிறுதொழிலில் ஏவலாமோ? இதுதானோ வன்றொண்டின் திறம். இப்புன்றொழிலில் அவரை யேவியகாலதது அவன துநெஞ்சம் சிறிதும் நடுங்கவில்லையா? இவ்வன்னெஞ்சுடையான் அவருக்கடிமைபூண்டது தன் மனையாட்டிக்கு வரும்பிணக்கைத்தீர்க்க தூதுவிடும்பொருட்டுத் தானோ! இது நன்று! நன்று! இதனை எண்ணுந்தோறும் நெஞ்சம் அஞ்சுகின்றதே! சொலல வாய்கூசுகின்றதே! என்உடல் நடுங்குகின்றதே! என் மனவாக்குக்காயங்கள் இவ்வாறுகும் வண்ணஞ்செய்த அவனைநானெப்பொழுது காண்பேன் அவன்

என் கண்முன்வருவானாகில், அவனும் என்முன்வர நானும் அவனைப் பார்க்கவருமாயின் அப்பொழுது என்னால் விளையும் விளைவு இவ்வண்ணமென்று என்னால் இப்போது சொல்ல முடியுமோ? என் தவத்தால் ஓர்கால் ஒருவரையொருவர் காண வருமாயின் அவனுயிரோடிருக்க நான் வாழேன். இறைவனுக்கு அடிமையுமாகேன் என்று பல வீரமொழிகளைக்கூறிக் கோபங்கொண்டிருந்தனர்.

இவர்செய்தி இங்ஙனமிருக்க, வன்றொண்டப்பெருமானார் இச்செய்தியைக் கேள்வியுற்று தமது தம்பிரானிடத்து அவருக்குள்ள வலிய அன்பினையெண்ணி அவசமுற்று நாம் தம்பிரானுக்குத் தோழமைபூண்டு அவனடியார்க்குப் பகைமை பூண்டோமே இதுதானோ நாம் அடியார்க்கு அடிமைபூண்டதிறம். நமதிறைவன் நமது வேண்டுகோளின்படி தூதுசென்றாலும் அடியார் வேண்டுகோளை மறந்தவரன்றே. ஏனெனில் அன்று விறன்மிண்டர் நம்பொருட்டுத் தம்மைப்புறகென்றகாலத்து புறகாயினாரேயன்றி உள்ளிருந்தனரா? ஆகலின் இக் கலிக்காமர் நம்பொருட்டு யாதுசொல்ல விருக்கின்றனரோ அறியோம். பரவையார் பிணக்கை நமதிறைவனைக்கொண்டு நீக்கிக்கொண்டதுபோல் கலிக்காமரது பிணக்கையும் இப்பெருமானாரைக்கொண்டே நீக்கிக்கொள்ளவேண்டுமென் றெண்ணித் தம்பெருமான்பாற் சென்று நாதனே! நீ என்பொருட்டாய்ப் பரவையினது பிணக்குத்தீர்த்தனை, அப்பிணக்கினும் பெரியதோர் பிணக்கொன்றுண்டாயிற்று அதனையுந் தீர்த்தருளல் வேண்டும்.

அது என்னையெனின்! பண்மயமாகிய மொழியுடைய
பரவைக்கும், சங்கிலிக்கும், எனக்கும் பற்றுயுள்ளார் உம்மை
யன்றி எவருளரார். அத்தன்மை. ஏனெனின்! பரவையும்
சங்கிலியும் என்னைப்பற்றியிருக்க அவ்விருவரையும் நான்பற்றி
யிருக்க நீ நடுவேயுறசெய்யும் பற்றுயுள்ளவன் நீயிலலை
யாயின் அவர்கள் என்னைப்பற்றுமபற்றுமாகார், நானும் அவர்
களைப்பற்றும பற்றுமாகேன் உம்மிடம் எனக்குப்பற்று மாறு
திருக்கவே அவ்விருவரையும் என்னைப்பற்றசெய்தீர். ஆகவே
பரவை உமதுபற்றேயன்றி என்பற்றன்று. அதனால் உமக்குப்
பற்றுயுள்ள பரவையினிடத்தில நீர் தூதுபோகவேண்டுவதே
யன்றி மற்றுயாவர்போவார். உமதுண்மையும எனதுண்மை
யும இதுவாயிருக்க, உம்பால அன்புடையவராகிய கலிக்காமர்
பரவை நான்பற்றிய பற்றுகவும அதற்கு உம்மை நான் தூது
விட்டதாகவும் எண்ணி என்னை இவன அடியனுவனு என்று
மனம வருந்துகின்றனராம். முன்விறன்மிண்டராகிய அடியார்
என்னையும் உமமையும பகுதியபாடு பெரும்பாடாயிற்றே,
இவர் என்னபாடுபடுத்த இருக்கின்றுரோ! அறியேன். ஆக
லின இதற்குசசெய்யவேண்டியது எதுவோ அதனையோசித்து
நீரேசெய்யும் என்று சொல்ல இறைவனுரும் அப்படியே
யோசித்துச் செய்கின்றேன் என்றனர். மறுநாளும் சுந்தர
மூர்த்திகள்சென்று என்னயோசனைசெய்தீர்? என்று கேட்ட
னர். இறைவனுர் யோசனைசெய்துகொண்டிருக்கின்றோம் அது
பற்றிய ஏக்கம் உனக்குவேண்டாம் என்றனர்.

கலிக்காமருக்கு வயிற்றுவலி கொடுத்தல்

(௩-அ௪-௩௧௧) சிலநாள்கழிந்தபின் இறைவன் வன்றொண்டருக்கும் கலிக்காமருக்கும் நட்புண்டாகும்வகை நினைந்து கலிக்காமர் திருமேனிவாடித் துன்பப்படும்படி சூலைநோயுண்டாக்கினர். அக்கணமே நெருப்பில்காய்ச்சியவேலை நுழைந்து குண்டுதல்போல கலிக்காமருடைய வயிற்றில் சூலைநோய் பிரவேசித்து அவரைப் படாதபாடெல்லாம்படுத்திற்று. அவர் மிகவும் வருந்திவருந்தி பூதநாயகனைப்போற்றி எமது பெருமானே! உனக்கு நான் என்னகுற்றஞ்செய்தேன், உன்னடியார்க்கு என்னகுற்றஞ் செய்துள்ளேன் ஒன்றுஞ் செய்ததில்லையே என்னை வருத்துகின்றனையே! இப்படியும் ஒருநோயுண்டோ! நான் படும்பாடு நீ அறியவில்லையோ உன்னையறியாது ஒரு செயல் நடக்குமோ! உனது திருவருட்செயல் இப்படியிருக்குமோ! என்போன்றவர்கள் உன் திருவருள் இனி வேண்டுவரா, நீ பேரருளுடையவரென்று தெளிவரா! தெளியார்! தெளியார்! இனி பொறுக்ககில்லேன என்று வேர்த்தும் புரண்டும் வீழ்ந்தும் எழுந்தும் மனவாக்குக்காயங்களாகிய முக்கரணங்களும் வருந்திப்பதைக்குஞ் சமயத்தில், அவர்க்கு ஈசனாகிய இறைவன் எழுந்தருளிவந்து, அன்ப! இச்சூலைநோய் என்னால் வந்ததன்று. இது எனது தோழனாகிய சுந்தரனால்வந்தது. ஏனெனில் நீ அவனை வருந்தும்படிச்சில எண்ணத்தாலெண்ணி வாக்கினாலும் வெளியிட்டுச்சொன்னதாக என்னிடம் வந்து மிகவும் வருந்திச்சொன்னான். அவன்பட்டவருத்தந்தான் உன்

னிடத்தில் சூலைநோயாக வந்ததெனறெண்ணுகின்றேன். ஆக லின் எனது வன்றொண்டன் தீராததால் தீருமன்றி என்னு லும மற்றொருவராலுந் தீராது. உன்னால் அவனுக்குண் டாகிய மனவருத்தந்தீருமாயின் அவனால் உனக்குண்டாகிய இவ்வுடற்பிணி அக்கணமேதீரும. அதனையெண்ணுவாய். இனி என்னை நினைந்து வருந்துதலொழிக என்று அருளினா.

(௯௯௨-௯௯௩) இதனைக்கேட்டநாயனார் இறைவனைநோக்கி என்தெய்வமே! என் தந்தையும, என் தந்தையின் தந்தையும் ஏனைய சுற்றத்தாரும ஆகியயாவரும உம்மையே தாங்கள் தொழும் தெய்வமெனறு பரமபரையாக வழிபட்டுவரும சிறப பினையுடையார். அவர்வழியில வந்தவன் நான். என்னுடலில் நிலைபெற்றுநின்று குடலைப் புரட்டுகினற இசசூலைநோயை, தேவரீருக்கு ஆட்பட்டேனென்று வமபாடிய வமபாடியைத தேவரீரும வமபாடி அடிமையென்று நேறறு ஆட்கொண்ட அவனு என்னிடமவநது போக்கும் வன்மையாளன். இப்படி தேவரீா சொல்லவநததும என்னுடைய பாவந்தான். தேவரீர் சொலலியதுபோல் அவனால இநநோய்தீரவதாயிருந்தால அவ னும் என்னிடம் வரவேண்டாம், இந்த நோயும்போகவேண் டாம், இந்நோய் என்னைவிட்டுநீங்காது என்ன துன்பஞ்செய்தா லும் அது எனக்குத்துன்பமாகாது இடபமாகிய தருமக்கொ டியை உயர்த்திக்காட்டும் இறைவரே! தேவரீர் சொல்லியது தருமந்தானோ! உமது அடிமைக்கு ஆசைப்பட்டு வழிவழி யடிமைபூண்டிருக்கும் எனக்குவந்தநோயை தேவரீரது அடி

மைவேண்டாது தோழமைவேண்டியவனால் தீருமென்றது என்னதருமமோ! பிறவிப்பிணிக்கு மருந்தாயுள்ள நீர் எனது சூலைநோய்க்கு மருந்தாதல்கூடாதோ, நீ இந்நோயைப்போக்கினால் போக்கும். தேவரீருக்கு இஷ்டமில்லையாயின் அந்நோயால் நான் வருந்தல் நலமே; வேறொருவரும்போக்க என்னிடம் வரவேண்டாம். பெண்போகத்தைவிரும்பி அவன் காமநோயால் வருந்த அந்தநோயைத் தேவரீர் பொறுக்காமல் தூதுபோவதாகிய சிறியதொழிலுக்குடன்பட்டு நீரேபோனீர், எனது சூலைநோயைக்கண்டு தேவரீர் சிறிதும்வருந்தாது அவனால் தீருமென்றீர். இது என்னதருமமோ, தேவரீரைத் தூதுபோக்கிய குற்றத்தைநாடி அவனைநான் பார்க்கக்கூடாதென்றிருக்க, அவன்வந்துதீர்த்தால் தீருமேயன்றி வேறொருவரால் தீராதென்றதை யோசிக்குமிடத்து என்னிலும் அவன் தேவரீர்பால் மிக்க அன்புடையவனென்றும் அவன் செயலெல்லாம் செயற்கரிய செய்கையென்றும், நான் அன்புடையன் அல்லனென்றும், என் செயலெல்லாம் சிறியசெயலென்றும் வெளியாயிற்று. ஆகவே, அவனை உயர்த்தி என்னை அவனுக்குமுன் தாழ்த்தத்துணிந்தீர் நான் அன்பற்றவனாக வெளிப்பட்டபடியால், இந்தநோயால் நான் வருந்தவேண்டியவனே, இதனைப் போக்குவதற்கு அவனும்வரவேண்டாம்; வேறொருவரும் வரவேண்டாம் என்று வருந்திக்கூறினர்.

### வயிற்றுவலியைப்போக்க வன்றொண்டர் வருதல்

இவர்கூறிய வாய்மையெல்லாங்கேட்டு இறைவன் ஒரு மொழியுங்கூறாது தாம் சொல்லியதையே நடத்த எண்ணி

மறைந்துபோய், சுந்தரமூர்த்திகளைக்கண்டு நமது கலிக்காமன் சூலைநோயால் வருந்துகின்றான். அதனை இப்பொழுதே நீ சென்று தீர்ப்பாயாக. இது நமது ஆணையென்றனர் அவ்வாணைமொழியைக்கேட்ட சுந்தரமூர்த்திகள் சிந்தைகளித்தவராய் அவ்வடியார்க்கு அடியேனாகப்பெற்றேனே இதனிலும் பேறு எனக்கு வேறுண்டோ என்றுபுளகாங்கிதராய் இறைவன்பால் விடைபெற்று உடனே புறப்பட்டுத்தமமுடைய அடியார்களைக் கூவி அன்பர்காள்! கலிகாமருக்கு சூலைநோய் தீர்க்கவரும் நமது வருகையை முன்னதாய்த் தெரிவிக்கச் செல்லுங்கள் என்று ஏவினார்.

அவர்களும் சுந்தரமூர்த்திகள் கட்டளைப்படியே அவரிடத்தில் தெரிவிக்க, அதனைக்கேட்டமாத்திரத்தில் இது என்ன கொடுமை, சூலைநோய் நம்மை வருத்துவதும், அந்நோயினும் பெருநோயாக நாம் வருந்த இறைவன்வந்து இந்நோய் சுந்தரனால் தீருமென்றதும், எம்பெருமான் சொல்லியதுபோல் நமது நோயைத்தீர்க்க அவனே இப்போது வருகின்றானென்றதும் நோயையே அதிகரிக்கச்செய்கின்றன. நம்பெருமானைத் தூதுபோகவிட்டவன் நம்மிடம்வந்து நோயைப் போக்குவானாகில் நாம் என்னாவோம். தூதுவிட்ட அன்பற்ற அவனோடு நாமும் சேர்ந்தவனாயினேம். இதுவரையில் அவனைக் குறைகூறியதெல்லாம் என்னாயிற்று. இதற்கென்செய்வதென்று

ர, அந்தோ! அவனே! நாம் பா

ந்தச் சூலையோடு! இனி நாம் வாழ்தலும் ஆகாது, அந்

நோயை உடைவாளினால் குத்தி உயிர்விடுதலே துணிபென்று துணிந்து எண்ணியதுபோற் செய்து உயிர்துறந்தனர்.

(௩கஅ-௩0௨) அதனைக்கண்ட தேவியார், நாமும் உயிர் துறத்தலே நலமென்றெண்ணி உயிர்விடத் தலைப்படுங்காலத்தில் சுந்தரமூர்த்திகள் மனையைநோக்கிவர அவர் வருகையைக் கண்ட சேவகர் திடுக்கிட்டு உள்ளேயோடி தேவியைக்கண்டு மூர்த்திகள் இங்கு எழுந்தருளினார் என்றுசொல்ல, அத்தேவியார் உயிர்துறப்பதையும் விட்டு தாம்கொண்ட துன்பத்தையும் மறந்து சூழ்ந்து அழுகின்ற சுற்றத்தாரையும் அழுவொட்டாது அடக்கி யாவரையும் அழைத்து நமது நாயகன் எதிர்கொண்டழைப்பதுபோல பூரணகும்பமுதலிய சகல மரியாதைகளோடும் சென்று அழைத்துவாருங்கள் என்று சொல்ல அவர்களப்படியே சகலவாத்திய கோஷத்துடன் எதிர்சென்று வணங்கி அழைக்க, சுந்தரமூர்த்திகளும் அவர்களது உபசாரங்களை யேற்று அவர்களுக்கு இனியமொழிகூறி முகமலர்ந்து அவர்களுடன் மாளிகைக்குச்செல்ல, உடனே சுற்றத்தார்கள் அரிய புட்பாசனமிட்டு அதில் எழுந்தருளியிருக்கச்செய்து அர்க்கியபாத்திய ஆசமனாதிகள் கொடுத்துப் பணிவுடன் நின்றனர். அவர்கள் செய்யும் உபசாரங்களை யேற்றுக்கொண்ட சுந்தரமூர்த்திகள் அவர்களை நோக்கி, கலிக்காமர் என்னுடன் விட்டு நீங்காது வாழவேண்டுமென்று எண்ணியுள்ளேன், அந்தப் புண்ணியமான பாக்கியம் என்னைக் கூடாவண்ணம் சூலைநோய்வந்ததாகக் கேள்வியுற்றேன். இப்போது அந்நோயைத்

தீர்த்து அவர் சுகமுற்றெழுந்திருக்க அவருடன் நான் வாழ வேண்டுமென் றெண்ணியிருக்கின்றேன், அவர் எங்கிருக்கின் றனர் என்று கேட்க, அவர்கள் அவர் இப்போது சுகமாக வேயிருக்கின்றார் ஓர் துன்பமுமில்லை என்று நடந்த செய்தி யைச் கூறாமல் இவ்வாறு கூறினார்கள். அவர்கள் துன்பமில்லை யென்று கூறினும் மீண்டும் சுந்தரமூர்த்திகள் அவர்களைநோ க்கி அவர் துன்பம் அற்றிருப்பினும் என்மனந் துன்பப்படு கின்றது. அத்துன்பம் அவரைக் கண்டாலன்றித் தீராது. ஆகையினால் அப்பெரியோரைப் பார்க்கவேண்டுமென்றனர்

(௪0௩ - ௪0௫) சுற்றத்தார் முதலாயினோர் அவர் திரு வாக்கை மறுப்பதற் கஞ்சி அழைத்துக்கொண்டுபோய்க் காட் டினர். சுந்தரமூர்த்திகள் அந்தோ! இதுஎன்ன யான்செய்த கொடுமை! இப்படியோ நான் பார்ப்பது. உதிரம் பெருக்கெ டுத்து வோட, குடர்சரிந்துகிடக்க இவ்வுடம்பினுள் இருந்த ஆவியார் உடம்பைவிட்டுப்போக, இதுதானோ நான் காணத் தக்க கோலம்! நன்று மிகநன்று!! இனிச் சொல்லவேண்டியது என்ன இருக்கின்றது, இதுதானோ நம் தியாகேசன் நீபோய் தீர்ப்பாய் என்று சொன்னது! இவ்வஞ்சத்தை நான் அறியா தொழிந்தேனே! இனி எண்ணுவதென்! இவர் எங்கே இப் போது போகப்போகின்றாரோ, அவ்விடத்திற்கு நான் அவ ருக்கு முன்போகின்றேன் என்று சொல்லிக்கொண்டே கலிக் காமர் வயிற்றில் குத்தப்பட்டிருந்த உடைவாளையெடுத்து தம் முயிரைமாய்க்க அவ்வுடைவாளைப்பற்றி யீர்த்து எடுத்தனர்.

கலிக்காமர் உயிர்பெற்றெழல்

எடுத்தபோதே கலிக்காமரும உயிருடன் எழுந்து இது செய்தார் யாவரென்று சுந்தரமூர்த்திகளைக்கண்டு அந்தோ! கெட்டேன் என்று அவர் கையிலிருந்த தமது வாளைப் பிடித்துக்கொண்டு இந்தச் சிவசுந்தரத்தையோ நான் பழித்தது! அப்பழியோ இச்சூலைநோயாய்வந்தது அந்தோ! நான் அறியாதொழிந்தேனே! எம்பிரானைவன சொல்லியும் கேளாதொழிந்தேனே! இனி அது சூலைநோயல்ல, அருளே என்று பகையெல்லாம் ஒழிந்து அன்பினராய் சுந்தரமூர்த்திகளைப்பார்க்க, அம்மூர்த்திகள் மகிழ்ந்தவராய் நம தியாகேசன் நாம தூதுபோக அனுப்பிய குற்றத்துக்கு நம்மை நோயுடபடுத்தாது, இப்பெரியோரை நோயுட்படுத்தி அதனை நம்மால தீரும் வகையைச் செய்து இவரது நட்பை இப்போது தந்தனரோ இவர்தான் நாம் தொழப்படும தியாகேசனுவார் என்று வீழ்ந்து வணங்கினார். நோயைப்போக்கி நம்மை வாழ்வித்த பெருமானை நாம் முன் விரைந்து வணங்கவேண்டியதாயிருக்க அப்பெருமான் வணங்க நாம இருந்ததுபெரும்பிழையாமென்று மூர்த்திகளைத் தாம் வீழ்ந்து வணங்கினார். அடியவரெல்லாம களித்தனர். தேவர்களெல்லாம் பூமாரிபொழிந்தனர்

(௪0௬ - ௪௦௭) இருவரும ஒருவரையொருவர் வணங்கிய பின்னர் இருவருடம்பும வேறுவேறு இருப்பதற்குப்பொறுது ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு நெடுநேரமிருந்து, அதன்பின்னர் ஒருசேர இருந்து, தேவரீருக்குவந்த காமநோயை

எம்பெருமான் தூதாகச் சென்று போக்கித் திருவருளாகிய பரவையின்பத்தில் மூழ்கச்செய்தான். அடியேனுக்குவந்த சூலைநோயைத் தேவரீரைத் தூதாக அனுப்பிப்போக்கி என்னுடலையும் உயிரையும் தந்து யான் தேவரீருக்கு உடலாயும், தேவரீருடைய உயிர் எனது உயிராயும் இருந்து வாழ்தலாகிய தனது அத்வைதானந்தமாகிய சிவானந்தத்தில் மூழ்கச்செய்தனன். இறைவன் கருணையிருந்தவாறென்னே! என்னே!! எம்பெருமான் அன்று தேவரீரை மறையவனாய் வந்து வலிந்தாண்டதுபோல, இன்று என்னை மறையவரிற் சிறந்த தேவரீராகவந்து வலிந்தாண்டனன். தேவரீருக்குத் தம்மைத் தோழனாகத் தந்ததுபோல எனக்குத் தேவரீரைத் தோழமையாய் அளித்தருளினன் அதுமட்டோ, அடியார்க்கடியனாய் வாழும் சிவபுண்ணியம் அற்ற எனக்குத் தில்லைவாழ் அந்தணர் முதலாகச் சொல்லப்பட்ட பொருளாளராகிய பெரியோர் அடிகட்கெல்லாம் அடியேன் அடியேன் என்று அடிமைபூண்ட அடிகளுக்கு அடிமைபூணப்பெறும் தந்தனன். இறைவன் தேவரீரையான் பழித்த பெரும்பிழையெல்லாம்பொறுத்து என்னைப் பேரானந்தத் திருத்தினன் என்றன்புடையராய் இருவரும் திருப்புன்கூருக்கு எழுந்தருளி அங்கிருக்கும் பெருங்கருணைத் தடங்கடலைக் கண்டுகளித்து அடிபணிந்து பின்னர் சுந்தரமூர்த்திகள் அந்நாளில் அந்தணனாகிய வேதியர் சிறுவன் உயிரைக் கவர்ந்தகாலனுயிரை நீகாலகாலனாய் வவ்வி அச்சிறுவனை என்றும்வாழவைத்தனை. அதுபோல் எனதுயிராகிய இப்பெரியோருக்கு வந்த சூலையை வவ்வி அவருயிரை

யும் என்னுயிரையும் வாழ்வித்தனை என்று மகிழ்ந்து திருப்பதிகம்பாடி அவ்விறைவனது திருவருள்பெற்று, அங்குநின்றுந் திருவாரூருக்குப்போய் இருவரும் தியாகேசரைக் கண்டு அடிபணிந்தெழுந்து, எனக்குவந்த கலியாகிய சூலையைப் போக்கி திருவுமெய்ப்பொருளும செல்வமும உமது சீரடியாகப்பெற்றிருக்கும இம்மூர்த்திகளாகியபெருவாழ்வையளித்தபெருஞ்செல்வமேயென்றார்கலிக்காமனார். பரமானந்தபபாவையையாளும் பேராசை எனக்குத் தந்ததுமன்றி எனக்கொரு சேனைபதியையுந் தந்தனையேயென்றார் சுந்தரபபெருமானார். இவ்வாறு இருவரும இறைவனைப்போற்றி விடைபெற்று பரவையார் திருமாளிகைக்குச் சென்றனர். அவ்வம்மையார் கலிக்காமரைக்கண்டு எதிர்கொண்டழைத்து ஆசனத்திருத்தித்தேவரீருக்குச் சூலைநோய்வரச் செய்தபாவியேன் யான். என்பிழை பொறுத்தருளவேண்டும என்றனபுடன்கூறினார். கலிக்காமனார் தேவரீரால் வந்தது சூலைநோயன்றே. சூலபாணியின் திருவருளன்றே. எம்பெருமான முத்தலைச் சூலத்தைத் ஏந்தியிருப்பதுபோல் உமதிருவரோடு எம்மையும ஒருதலையாகச் சேர்த்து ஆண்டுகைக்கொண்டனன் என்று இனனுரைகூறிப புகழ்ந்து அங்கு சிலநாள் வாழ்ந்திருந்து பின்னர் அமமூர்த்திகளின் ஆணையால் தமதூருக்குச்சென்று அடிகளைமறவாது வாழ்ந்திருந்தனர்.

ஏயர்கோன் கலிக்காமநாயனார் புராணம

முற்றிற்று.

# சேரமான்பெருமாள்நாயனார்

## புராணம்.

### சேரர்பெருமான் திருவாரூருக்கு வருதல்.

(௯௫-௭௯) பின்னர் சுந்தரமூர்த்திகள் இறைவன் எழுந்தருளியிருக்கும் க்ஷேத்திரங்கள்தோறும் சென்று திருப்பதிகம் பாடி திருநாகைக்காரோணஞ்சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் பெருமான்பால் தமக்கு வேண்டுவனவாகிய பொன்னும் பொன்னுடைகளும் நவரத்னங்களும் நவரத்னாபரணங்களும் கலவைச்சாந்து முதலிய பரிமளத்திரவியங்களும் வேகமாய்ச் செல்லுதற்குரிய குதிரையும் பொன்னுறையோடுகூடிய உடைவாளும்பெற்றுத் திருவாரூருக்குவந்தனர். அங்ஙனம் இருக்குநாளில் சேரமான்பெருமாள்நாயனார், தாம்செய்துவரும் சிவார்ச்சனைமுடிவில் நடராஜன் திருச்சிலம்போசை சிறிது நேரம் கேட்பதொழிந்து, பெருநேரம்கேட்பதாகச் செய்த இச்சுந்தரமூர்த்திகளைக் காண்பதற்குத் திருவாரூருக்குவர, அவர் வருகையையுணர்ந்த சுந்தரமூர்த்திகள் சிந்தைமகிழ்ந்து எதிர்கொள்ள, அந்நாயனார் தாம் தேடும்பொருள் எதிர்கொண்டு வரக் கிடைத்ததென்று விரைந்துவந்து மிக்க ஆசையுடன் வீழ்ந்துபணிந்தனர். தம்மைவணங்கிய பெருமானைத் தாமும் பணிந்து அவரையெடுத்து அன்புபெருக மார்போடணைத்துத் தழுவி இன்பவெள்ளத்தில் மூழ்கிக் கரையேறமாட்டாது இருவர் என்பும் உருகி உயிரும் ஒன்றாய் உடம்பும் ஒன்றாய்க் கிடந்தனர். இவ்வதிசயங்கண்ட தொண்டர்களெல்லாம் அள

வில்லாமகிழ்ச்சியடைந்து நமது சுந்தரமூர்த்திகள் நமது தியா கேசனுக்குத் தோழராயினர். இப்பெருமானுக்கு சேரமான் பெருமாள்நாயனார் தோழராயினர் என்று போற்றிப்புகழ்ந் தனர் சேரர்பெருமானது உயிரையும் உடலையும் தமதாகக் கொண்ட சுந்தரமூர்த்திகள் பருவக்கொண்மூப்படியெனப் பாவலர்க்கு உரிமையிலுதவும் சேரர்பெருமானது கரத்தைத் தமது கரத்தாற்பற்றிக்கொண்டு தியாகேசரைக் கண்டு வணங் கக் கோயிலுட்குள்ளே புகுந்து, தேவாசிரியத்தை முன்னே பணிந்து வலமாகவந்து நம்மையுடையாராகிய பெருமானைக் கண்டனர் சேரர்பெருமான் கண்ணீர் ஆறாய்ப்பெருக மீள வும் பூமியில்வீழ்ந்து வணங்கி, தியாகேசப்பெருமானும் சுந்த ரேசப்பெருமானும் தமது பாடலைக்கேட்டுமகிழும்படியாக மும்மணிக்கோவையைப் பாடினர் நாவலர்பெருமானாகிய சுந்தரமூர்த்திகளும் தமிழறியும்பெருமானாகிய தியாகேசனும் இந்த மும்மணிக்கு நவமணிகளும் ஒப்பாகா என்று செவி யாரக்கேட்டு மகிழ்ந்தனர் பின்னர் சேரமானரை அழைத் துக்கொண்டு பரவையார் மாளிகைக்குப் போக, பரவையார் இவர்கள் வருகையையுணர்ந்து குடவிளக்கும் பூரணகும்பமும் பூமாலைகளும் தூபகலயங்களும் தோழியரெல்லாம் தாங்கி வரத் தாம் எதிர்கொண்டு தமது பொன்மாளிகையின்கண் அழைத்துவந்து நவரத்ன மயமாய்ப் பிரகாசிக்கும் மஞ்சத் தில் எழுந்தருளச்செய்து அவருடன் தமது நாயகரையும் வீற் றிருக்கச்செய்து விதிதவறாமல் செய்யவேண்டிய பூசனையைச் சிறப்பாகச் செய்தனர். சுந்தரமூர்த்திகள் தமது திருவுள்ளப்

பாக்கின்படியே சேரர்பெருமானுக்குச் செய்த பூசையைக்
கண்டுமகிழ்ந்து, பரவையாரைப்பார்த்து சேரனுருக்கு திரு
அமுதமைக்கக் குறிப்பாக உணர்த்தினர். அக்குறிப்பறிந்து
அவருக்கும அவருடன் வந்த பரிசனங்களுக்கும் அறுசுவை
யோடுகூடிய உணவைசசெயது முடிதது சேரர்பெருமான்முன
வந்து பணிந்து அமுதுசெய்தருள எழுந்தருளவேண்டுமென்று
பிரார்த்திக்கும்பொழுது சுந்தரமூர்த்திகளும் பரவையாரை
நோக்கிப் பரவையே! இப்பெருமானுககு நீ அமுதுபடைக்க
என்னதவஞ்செய்தனையோ நேரமாய்விட்டது சீக்கிரமாக
அமுது செய்விப்பாயாக என்று சொன்னபோது பரவையார
தேவோபசாரம இராஜோபசாரம முதலிய உபசாரமுறைக
ளெல்லாம நன்றாய் அறிந்தவராதலால பெருமானுருககு இரா
ஜோபசாரமாக அன்னபாத்திரமாகிய பரிகலங்களை அழகு
பெறத் திருத்திச சுத்தஞ்செய்து இரண்டு பீடங்களில் சம
மாகவைத்தனர். சேரர்பெருமான் சுந்தரமூர்த்திகளைநோக்கி
நானொருவனே இங்கிருந்துண்பது, அப்படி உண்பேனுயின
அது விருந்தாகுமோ? தேவரீரும என்னுடனிருந்து உண்
டருளல்வேண்டுமெ என்று வேண்ட, சுந்தரமூர்த்திகள சிறிது
அஞ்சினவர்போன்றிருக்க, அக்குறிப்புணர்ந்து சேரர்பெரு
மான் வணங்கித் திருக்கரத்தைப்பற்றித் தேவரீருடன் யான்
உண்டருளும் பாக்கியத்தைத் தந்தருளல்வேண்டும். பரவை
யார் இடும் அமுதோ பாற்கடலிற்றேன்றிய அமுதமாகும்.
இவ்வமுதை எனக்குப் படைக்கும்படி கட்டளையிட்டது, நீல

கண்டனாகிய இறைவன் தேவர்களை நோக்கி, கடலில் அமுதுண்டாகும் அதனை நீங்கள் உண்ணுங்களென்று கட்டளையிட்டது போலும், என்று கூறியபொழுது சேரர் பேரன்பை மறப்பதற்கஞ்சி இசைந்தவராய் இருவரும் பரிகலத்திருந்து உண்டருள, பரவையார் மிகவும் மகிழ்ந்தவராய் என்ன புண்ணியஞ் செய்தோம் இம்மகேசுவரபூஜை யாருக்குக் கிடைக்கும் என்று மிக்க பரிவுடன் உபசரித்து அவர்களுண்டபின்னர் சேரர் பெருமானுடைய பரிசனங்களையெல்லாம் உபசாரத்துடன் உண்ணும்படிச்செய்ய அவரெல்லாம் இப்படி வேற்றுமையின்றி யாவருக்கும் அறுசுவையோடுகூடிய உணவைச் சலிப்பின்றி படைக்கவல்லார் யாவர், இது நல்விருந்து என்று யாவருங் களிகூரப் பரவையார் விருந்தின் கடனைமுடித்தனர்.

(௭௭ - அ) பின்னர் பரவையார் சேரர்பெருமானுக்கும் ஏனையோருக்கும் முறைப்படியே பனிநீரோடு நல்லகலவைகள் கலந்த சந்தனம் பூசக்கொடுத்ததும், நறுமணங்கமழும் நல்லமலர் மாலைகளைச் சாத்தியும், சாத்திக்கொள்ளும்படிகொடுத்தும், அதன்பின்னர் பஞ்சவாசத்துடன் தாம்பூலமுங்கொடுத்தும் மகிழ்வித்து உள்ளங்குளிர்ந்தவராய் சுந்தரமூர்த்திகளுடனிருக்கும் சேரர்பெருமானிடத்து வந்துபணிந்து திருநீறுபெற்று முடியிலும் நெற்றியிலும் இட்டு ஓர்புறமாய் நின்றனர். சேரர் பெருமான் எழுந்து யான் இதுகாறும் எம்பெருமானுக்குச் செய்துவந்ததொண்டினால் அடையப்படும் பயன் அம்மையில் எ[illegible]பதில்லாமல் இம்மையில் இப்பொழுதிலேயேபெற்றேன்

இங்ஙனம்பெற்றதுதான் நடராஜனது குஞ்சிதபாதத்தில் விளையும் பேரானந்தமென்று நாக்குழறக் கண்ணீர் அரும்பச் சுந்தரமூர்த்திகள் திருவடிகளை வணங்க, சுந்தரமூர்த்திகள் அவரை வணங்க பின்னர் ஒருவரையொருவர் தழுவி ஆராக்காதலால் சுந்தரமூர்த்திகள் எமது பெருமான் உம்மை எனக்குக் காட்டி வைத்தனரே இந்தக் கருணைக்கு யான் என்செய்யவல்லே னென்று மகிழ்ந்து, வீதிவிடங்கப் பெருமானாகிய தியாகேசனுடைய பவனிமுதலிய பலவித உற்சவங்களை அப்போதப்போதுங் கண்டுகளித்து இருவரும் நீங்காமல் இருந்தனர்.

(௮௧ - ௧௨௫) இவ்வாறிருக்கு நாளில் சுந்தரமூர்த்திகள் நீலகண்டருடைய பலதிருப்பதிகளையும் பணிந்து மதுரை முதலிய க்ஷேத்திரங்களையும் வணங்க நினைத்தனர். சேரர்பிரானும் நம்பியாரூரரைப் பிரியக்கூடாத ஆசையினாலும் தமக்குத் திருமுகமளித்த திருவாலவாயுடையாரை வணங்கவேணடுமென்னும் அன்பினாலும் உடன்போக நினைந்தனர். பின்பு இருவரும் ஆரூரிறைவரை வணங்கிப் பரிசனத்தோடும் பண்டாரத்தோடும் புறப்பட்டு கீழ்வேளூர் சென்று பரமனைப் பணிந்து காரோணச் சிவக்கொழுந்தைச் செந்தமிழ்மாலைகளால் துதித்து திருமறைக்காட்டையடைந்து நாவுக்கரசும் புகலிச்சிவக்கன்றும் திறக்கவும் மூடவும் பாடிய திருக்கதவை அணைந்து கண்களில் நீர் தாரை தாரையாய்வரும்படி நாயன்மார்களை நினைந்து வணங்கி வேதங்கள் பூசித்த மறைக்காட்டுமணியைத் தமிழ்மாலைகளால் இருவரும் துதித்து

சிலநாளவசித்து அகத்தியான் பள்ளியையும் கோடிக் குழ கரையும்பணிந்து கோடிக்குழகர் கோயில தனியே யிருப பதைப்பாத்து உள்ளமவாடி காடுகள நிறைந்திருப்பதைப பதிகத்தினுஞ் சிறப்பித்து பாண்டிநாட்டையடைந்து திருப்புத தூரை வணங்கி மதுரையைச்சேர்ந்து ஆலவாயப்பனைப பணிந தனர். அங்கு பாண்டியனமகளை மணந்து தங்கியிருந்த சோழ மகாராஜனும பாண்டியாபெருமானும இவர்களை எதிர்கொள்ளக் கோயிலை அடைந்து வலமாவருகின்ற சேரர்பெருமானையும அவா தோழரையும வணங்கி மகிழ்ந்தனா. சேரர்பிரான் சுந்தரேசரை வீழ்ந்துவணங்கி அடியேனைப பொருளாக மதித்து அளித்த திருமுகமெனனும திருவருளுக்கு முடி வுகாண்கிலேன் என்று மொழிகுழறப பாவிப் பணிந்து களி கூர்ந்தனா. பாண்டியனா இருவருக்கும பலவகை உபசாரங் கள்புரிய சிலநாள அளவளாவி இன்புறறிருந்தனா. பின்னா மூவேந்தருடன் திருமுனைப்பாடிநாடராகிய சுந்தரமூர்த்திகள திருப்பூவணம திருவாப்பனூா திருவேடகம் திருப்பரங்குன் றம முதலியபதிகளையடைந்து இறைவர்கழல்வணங்கி திருக் குற்றாலம முதலிய க்ஷேத்திரங்களைத் தெரிசிக்க எண்ணினர். பாண்டியராஜனும விடைகொண்டு திரும்ப, சேரர்பெருமா னோடு வன்றொண்டர் குற்றாலத்துக்கூத்தா குரைகழல் வண ங்கிக் குறும்பலா விமலரையும்தொழுது திருநெல்வேலி அழக ரையும் அணைந்துபோற்றி இராமேசுரமும திருக்கேதீச்சர மும பணிந்துப் பாமாலை பாடித்திரும்பி, திருச்சுழியல நாதரை நாவாரத் துதித்திருந்தனர். அன்றிரவில அவா கனவின்கண்

காளைப் பருவத்தோடும், திருக்கரத்தில் பொற்செண்டும், திருமுடியில் சுழியென்னும் ஓராணிகலமும் உடையவராய் எங்கும் இல்லாத பேரழகோடு என்புருகும்படி எதிரேகாட்டி நாமிருப்பது கானப்பேர் என்னும் திருத்தலம் என்று இறைவன்கூறி மறைந்தனர். அக்கனவு நிலையைச் சுந்தரமூர்த்திகள் உணர்ந்து அதிசயித்துநம்பெருமானுக்கு நம்பாலிருந்தஅன்புஎன்னேயோ என்று அகமகிழ்ந்து அவ்வதிசயத்தைச் சேரபெருமானுக்குச் சொல்லி இருவருமாகக் கானப்பேரூருக்குப்போய் "தொண்டரடித்தொழலும்" என்னும் பதிகம்பாடி, இந்தக் காளையாரை யான் கண்டு தொழப்பெறுவது இனி என்றென்று கண்டு கண்டு சிலநாள் அங்கிருந்து பிரியாக்காதல் உள்ளத்துள் வருந்த ஒருவாறு துணிந்து, திருப்புனவாயிலுக்குப்போய் அப்பெருமானை வணங்கி அங்கிருந்து அங்கிருக்கும் கோயில்கள் தோறும் சென்றுசென்று பாடி அதைவிட்டுக்காடுகளையும் மலைகளையுங் கடந்து, காவிரிநாட்டையடைந்து அங்கு திருப்பாதாளேச்சரமென்னும் தலத்தில பெருமானைப்பணிந்துபோற்றி மற்றவிடங்களிலுள்ள தலங்களையும் பணிந்து திருவாரூருக்குவர அடியார்களெல்லாம் எதிர்கொள்ள அவர்களை வணங்கிக் கோயிலுக்குப்போய் பேராசையுடன் கும்பிட்டு நெடும்பொழுதிருந்து பின்னெழுந்து பலபல பதிகங்களைப்பாடி சேரர் பெருமானுடன் பரவையார் எதிர்கொண்டழைக்க மாளிகைக்குள் எழுந்தருளியிருந்தனர்.

(௧௨௬ - ௧௪௦) அவ்வாறு இருக்கும்போது இருவரும் சில விளையாடல்களைக்கருதி, கருதியபடியே நிலச்சென்

பரிச்செண்டுகளை வீசியும், ஒருவராலும் விலக்குவதற்கரிய ஆட்டுச்சண்டைகளையுண்டாக்கி அதனைக்கண்டு மகிழ்ந்தும், கோழிச்சண்டைகளையும், பலபட்சிகளின் சண்டைகளையுங்கண்டு களித்தும் சிலநாள் கழித்தனர். சேரமான்பெருமானார் சுந்தரமூர்த்திகளோடு கலந்து இறைவனைக்கண்டு களிக்குங் களிப்பினாலும், இருவருமமாறிமாறிப் பாடுங் களிப்பினாலும், பரவையார் இடும் விருந்தினைக் காலங்கள்தோறும் உண்டு களிக்குங் களிப்பினாலும், அரசசெல்வத்துக் கேற்பப் பல விளையாடலைச் செய்து களிக்குங் களிப்பினாலும், பலநாள் போக்கியபின்னர், பின்சேரமான் பலநாள் பரவை மணவாளரைப் பணிந்து பணிந்து தமது ஊருக்கு எழுந்தருளும்படிப் பலமுறையும் வேண்டப் பின்னரிசைந்தனர்.

## சுந்தரர் சேரநாட்டுக்கேகல்.

சுந்தரமூர்த்திகள்தம்முடன்வர இசைந்தபின்னர் பெருங்களிப்படைந்து அடியார்களெல்லாம் பேரானந்தங்கொள்ள விருந்துசெய்து யாவரையும் பணிந்து பின்னர் இருவருமாக தியாகேசப்பெருமானிடத்தில் விடைபெற்று பரவையாரையும் வேண்டி அவரிடத்தும் விடைபெற்று இருவரும் புறப்பட்டு மேற்றிசை நோக்கிச்சென்று, காவிரிக்குத் தென்கரையிலுள்ள சிவக்ஷேத்திரங்களையெல்லாம் கண்டு வணங்கிப் பின் வடகரைக்குப்போய் அங்கு திருவையாறென்று தோன்ற கரங்களைச் சிரமேற்கூப்பி அங்குபோகத் தொடங்கும்போது காவிரியில் இருகரையும் புரள பெருவெள்ளம்போதலைக் கண்டனர்.

சேரபெருமான் சுந்தரமூர்த்திகளை நோக்கி இந்த ஐயா றுடைய அடிகளைக்காணுது எவ்வாறு நாம அப்புறம்போவது, என்மனம் மிகவும் கரைந்து உருகுகின்றது; என்னுள்ளத்தில் காணவேண்டுமென்னும் அன்பு வெள்ளம்பெருகி என்னை இங்கு நிற்கவொட்டாது அலைக்கின்றது. இந்நீர் வெள்ளத்தை நாம் எவ்வழியினாலாவது கடக்கவேண்டுமென்று மிக்க பரிவுடன் விண்ணப்பஞ்செய்ய, சுந்தரமூர்த்திகள் - ஓடங்கள் செல்லக்கூடாத பெருவெள்ளமாக விருக்கின்றதே என்று சில நேரம எண்ணி நமமைப் பாவையென்னும பெருவெள்ளத்தைக் கடக்கச்செய்த இறைவனுக்கு இந்தவெள்ளத்தை நாம கடக்கும்படியாகச செய்தல அரிதோ என்று, " பரவும பரிசொன்று அறியேன் நான் பண்டே உம்மைப பயிலாதேன, இரவுமபக லும் நினைந்தாலும மெய்த நினையமாட்டேன் நான், காவில அருவி சமுகுண்ணத் தெங்கங் குலைகளீழ்க் கருப்பாலை, அரவந் திரைக்காவிரிக்கோட்டத்து ஐயாறுடைய அடிகளோ" என்று சராசரங்களெல்லாம நிறைந்திருக்கின்ற இறைவன் கேட்கப பெருங்கூச்சலிட்டுக் கூப்பிடவும, கன்று கூப்பிட, அதன் தாய்ப்பசுவும உடன்கூப்பிடுவதுபோல இறைவனும் பெருங் கூச்சலிட்டு, வெள்ளம்வற்றி உங்கட்கு வழிகாட்டிற்று,வரலாம் வரலாம் என்று அழைத்தனர் அவவோசையைக்கேட்டு சுந்தரமூர்த்திகளைப்போற்ற மூர்த்திகளும் சேரர்பெருமானைவணங்கி இருவருமாய் பரிஜனங்களுடன் ஆற்றைக்கடந்து ஐயாற டிகளைக்கண்டு வாயாரப்பாடித தலையார வணங்கி மீண்டும் வந்து காவிரிநதியைப்பார்க்க அது முன்போல் மலைபோலே

ங்கிக்கரை புரண்டு செல்வதைக் கண்டு இறைவன கருணையைப போற்றி மேற்றிசைக்கண்சென்று அங்குள்ள தலங்களையெல்லாந் தெரிசனஞ்செய்து கொங்கு நாட்டிறகுபபோய அங்கிருநது மலைநாட்டையடைந்தனா

(கூ௯௩ - கூ௯௨) இருவா வருகையைக் கேட்ட அநநாட்டினரெல்லாம ஒன்றுகூடி எதிர்கொண்டழைக்கக் கருதி நாட்டைததும இதுபொன்னுலகோ சிவனவாழ் உலகோ என்றெண்ணுமபடியாக அலங்கரிநது கொடிங்கோரஞரை அணைநதபோது சேரபெருமான் மனமகிழ்நது அவாகளுடன் தாமுங்கூடி சுநதரமூாததிகளையழைததுக்கொண்டு திருவஞைசககளமென்னும க்ஷேததிரததிறகுபபோய் வலம்வநது தங்கள் பெருமானைக்கண்டு "முடிப்பது கங்கை" யென்று" எடுததுப பாடி சேரமானபெருமானேடு வணங்கி வெளியேவர, சுநதர மூர்ததிகளை சேரபெருமானார் யானையின்மேலேற்றி முன்னிருக்கசசெய்து தான்பின்னிருநது தமது கைகளால சாமரையை அசைததுக்கொண்டு மாளிகைகள நிறைநதுள்ள இராஜவீதியின் வழியே வநதனா.

அவ்வீதிவழியே வருமபொழுது இருபககததிலும புகழ்வோரெல்லாம அவவிருவரையுங்கண்டு நமபெருமானாகிய சேரருக்கு இவர் நலலதோழா எனறும், நாமெல்லாம இவரைககண்டு தொழுதற்கு அளவிலலாத தவததை முன் என்ன செய்தோமெனறும, இனி நமது மலைநாட்டார்பெறவேண்டிய பேறு என்னஇருக்கின்றதென்றும், நமது பெருமாள் பின்னிருநது சாமரையை அசைத்து வருகின்றாரே இவ்வரியகோலத்

தைக்காண்பீரென்றும் பலபலவாய்ப்புகழ்ந்தார்கள். போற்று வாரெல்லாம் பூக்களையும் பொரிகளையும் பொற்சுண்ணங்களை யும் சொரிந்து போற்றி வணங்கினார்கள். மகிழ்வாரெல் லாம் நமது பெருமானை தோழராகிய இசுந்தரமூர்த்திகள் எழுந்தருளியிருக்கப்பெற்ற சோழநாடே இவ்வுலகிற்குத் திலகமெனச்சொல்ல வேண்டுமென்று சொல்லி வியந்தார்கள். இவ்வாறு போற்றுவாரும் புகழ்வாரும் மகிழ்வாருமாய்ச் சூழ் ந்துவர குதிரைகளும் யானைகளும் நெருங்கியிருக்கும் அரசர் பெருமானுடைய வாயிலையடைந்து யானையினின்றும் இறங் கினர். அரசனும் அவர்முன் இறங்கி எதிர்வந்து பணிந்து அழைத்துக்கொண்டு வாத்தியங்களெல்லாம் பேரொலிசெய்ய மகா சிங்காதனத்தில் சர்வாபரண பூஷிதராய்ப் பிரகாசிக்கும் சுந்தரமூர்த்திகளை வீற்றிருக்கச்செய்து தாமும் எதிரேநின்று தமது தேவிமார்களை அழைத்து அவர்களுடன் பாதபூஜை செய்யத்தொடங்கினர். சுந்தரமூர்த்திகள் தமது பாதங்களை வாங்கிக்கொண்டு இப்படிச்செய்தலும் அதனைநான் ஏற்றலும் தகுமோ என்றுசொல்ல அரசர் பெருமான் சுந்தரமூர்த்திகளை அடிவணங்கி எமதுபெருமானே! அடியேன் ஆசைகொண்டு செய்யும்செயலெல்லாம் அங்கீகரித்து ஏற்றுக்கொள்ளவேண்டு மேயன்றி ஒன்றேனு மறுத்தல் கூடாதென்றுவேண்ட, அவர் வேண்டியதை மறுத்தற்குக்கூடாத அன்புடையராய் அவரால் செய்யப்படும் அரியதினும் அரியபூஜைகளுக்கெல்லாம் உடன் பட்டுப் பின் அவருடன் போஜனமுஞ்செய்து மகிழ்ந்தனர்.

(௧௦௫-௧௧௫) பின்னர் பரிமளமிகுந்த சந்தனக்கலவையைத் திருமேனியிற்பூசி பூமாலை, முத்துமாலை, இரத்தினமாலை முதலிய மாலைகளைச்சாத்தித் திருவுளமகிழச்செய்து சேஷித்த சந்தன முதலியவற்றைப் பிரசாதமாகக்கொண்டு தாமும் பூசிக்கொண்டு உடனிருந்து ஆடல்பாடல்களெல்லாம் செய்வித்துத் தமது ஆசையை நிறப்பிக்கொண்டனர். அன்றுமுதல் ஒவ்வொருநாளிலும் அவ்வாறே சகல ஆரவாரத்துடன் மஹாபூஜைகள் செய்துவருவதுமன்றி பூந்தோட்டங்களிலும், மலர்நிறைந்துள்ள தடாகக்கரைகளிலுமிருந்து பலவகையான சித்திரான்னங்களையும் உடனிருந்துண்டு மகிழ்ந்தும், நீர்விளையாடியும், அதுவேயுமன்றி மற்போர்செய்யவல்லாரை மற்போர்செய்வித்தும் மதத்தயானைகளைப் போர்செய்வித்தும் அவைகளையெல்லாம் கண்டு மகிழும்வண்ணம் செய்வித்துமவர், சுந்தரமூர்த்திகளும் எவ்வெவ்வகையான் தமதுதோழனார் களிக்கச்செய்கின்றனரோ, அவ்வாறேதாமுங் களித்துவருநாளில் ஒருநாள் திருவாரூர்ப்பெருமானை மிகவும் நினைந்து என்னுயிரை ஆரூரனை நாம் மறத்தலாகுமா என்று அங்கிருந்தே பதிகம்பாடி நான் இப்படியும் இருக்கலும் ஆமோ என்றஞ்சி சேரர்பெருமானிடத்தில் விடைபெற்றுப்புறப்பட அரசனாரும் யான் எவ்வண்ணம் தேவரீரைப் பிரிந்திருப்பேன் எங்ஙனம் வாழ்வேன், என்று பிரிந்திருப்பதற்கஞ்சி உடனேசெல்ல, இவரது ஆராக்காதலைக்கண்ட சுந்தரமூர்த்திகள்கண்டு இதற்கு நான் என்செய்வேன்?' இவருடன் இருப்பேனாயின், ஆரூரனைக்காண்பேனோ, ஆரூரனைக்காணப்போவேனாயின், இவரைக்காண்பேனோ, என்

னெஞ்சந்தடுமாறுகின்றதே என்று மூர்த்திகள் வருந்த, அதனைக்கண்ட அரசனும் மனம் வருந்தி அறிவுகலங்கி இன்று தேவரீரைப்பிரிந்திருக்க என்னால் முடியவில்லையே என்று வருந்தத்தையே மேற்கொண்டிருப்ப, மூர்த்திகள் நீர் வருந்துதலொழிக, நீர் இப்படி இருப்பின் நான் என் செய்வேன்? என்று அவரை ஒருவாறு சமாதானப்படுத்தி நீர் நமது பெருமான் கட்டளையிட்டபடி அரசாக்ஷியைப் புரிந்துவாருமென்று சொல்ல, அரசர் பெருமான் அவரை நோக்கி தேவரீருடைய திருவடிகளைக் கண்டிருப்பதே இம் மண்ணுலக அரசாக்ஷியும் விண்ணுலக அரசாக்ஷியுமாக எண்ணியுள்ளேன். ஆகலின் தேவரீர் எவ்வளவு சொல்லினும் திருவாரூருக்குத் தேவரீரைப்போகவிட்டு நான் இங்கிருப்பதற் கஞ்சுகின்றேன் என்று கண்ணீர் பெருகவிடுத்துச் சொல்ல, சுந்தரமூர்த்திகள், என்னுயிருக்கு இன்னுயிராயிருக்கின்ற எமது ஆரூரனை வன்னெஞ்சகனானேன் மறந்திரேன். மறந்திருப்பது உமக்கழகோ! அழகன்றே, ஆகலின் நீர் இங்கிருந்து அரசாள்வீர் உம்மை வேண்டுகின்றேன்; இருக்க இருக்க, என்று கும்பிட்டு வேண்டினார். அரசர் பெருமான தியாகேசனிடத்தில் சுந்தரமூர்த்திகளுக்கிருக்கும் அன்பினைக்கண்டு அதனைத் தடுப்பதற் கஞ்சி மந்திரிகளையழைத்து நம்முடைய நகரத்தில் இன்றொழிய நேற்றையவரையில் வந்து சேர்ந்திருக்கும் திரவியங்களெல்லாம் நமது தெய்வமாகிய இம்மூர்த்திக்கேயாம். ஆகலின் அந்தத் திரவியங்களெல்லாம் ஆள்கள் மீதிலேற்றி சீக்கிரத்தில் இங்குவரச் செய்யுங்கள் என்று கட்டளையிட, அவர்களும் அப்படியே திரவியங்களும் பொன்

னும் நவரத்தினங்களும நவரத்னாபரணங்களும் பொன்னுடை களும் பரிமளத்திரவியங்களும பொதிபொதியாய் ஆள்கள் மீதில ஏற்றி அணியணியாயக் கொண்டுவர, அவைகளை முன் னே போகும்படிசசெலுததிப பின்னா சுந்தரமூர்த்திகளைப் பணிந்தனா.

வேடுவர்பறி

(௧௬௪-௧௭௩) பணிநதஅவரை மூாததிகள எடுத்து தோளிறுகத தழுவி விடைதரவேணடிப பின் அவருக்கும் விடை கொடுததனுபபி மலைநாடுகடநது, பல காடுகளுங்கடநது திருமுருகன்பூணடி என்னும க்ஷேத்தி ரததைச சமீபிததனா. சமீபிக்கும பொழுது பரமசிவனுடைய ஆணையினால சிவபூதங்களெலலாம வேடா வடிவங்கொண்டு வந்து பொதிசுமநது வரும் ஆட்களை யெல்லாம அடிததும் இடித்தும புடைததும குத்தியும வெட்டியும பலவகையான துன்பஙகள்செய்து பொருள்களை எலலாம பறிததுக்கொண்டு அவாகளையோடட அவாகளும நில்லாமல ஓடினா. வேடர்க ளாய் வநத சிவ கணஙகளும் மறைநது போயினா. சுநதரமூர்த் திகள் இவ்வதிசயங்க ளெலலாஙகண்டு திருவருள இப்படியும் இருநததோ என்று அநதத திருமுருகனபூண்டியிலுள்ள கோ யிலுககுப போய் கைகுவிதது வலமவநது வீழ்நது வணங்கி எதிரேநின்று இந்த கொடியகாட்டில் 'எததுக்கு இங்கு இருந் தீர்' வேடுவா இப்படியுஙகொடுமை செய்து பொருளெல்லாங் கொள்ளை கொள்ளலாமோ என்று வருநதிக்கூற, சிவ பெரு மான் அதனைக்கேட்டு, நம்பி! உனக்கு நாமே எல்லாங் கொடுப்

பவனென்றும்,எல்லாம்செய்யபவனென்றும் சொலலியும் நடத்தியும் வருகின்றேனுகையால் அதுபோலவே சேரமான் கொடுத்த பொருளெலலாம நானே கொடுக்க இசசெயல செய்தேன் அவர்கள் வேடரல்லர், சிவகணங்கள். பொதிகளெல்லாம் கோபுரவாயிலின்கண் குவிந்திருக்கின்றன. எடுத்துக்கொண்டு போவாயென்றருள்செய்ய அப்படியே சென்று கோபுரத்தில் இருக்கக்கண்டு ஓடிப்போன ஆள்களையெல்லாங் கூப்பிட்டுப் பொதிகளெல்லாம், அவர் வசபபடுத்தி முன்னே போகும்படிச் செய்து, தாம் பின்சென்று திருவாரூரைச்சேர்ந்தனர்.

சேரமானபெருமான் சுந்தரமூர்த்திகளை கட்டளைப்படியே தன்னிடம போய்சசேர்ந்து சுந்தரமூர்த்திகள் திருமேனியை நினைந்து நினைந்து மனமுருகாநிறப அரசியலை நடத்திவந்தனர்.

# வெள்ளானைச் சருக்கம்.

## முதலையுண்டபாலனை யழைத்தல்

(ஙு-அ) திருவாரூரைச்சேர்ந்த சுந்தரமூர்த்திகளும சேரமான் பெருமானை மறவாதவராயிருந்து சில நாள் கழிந்தபின்னர் அவரைப்பார்க்க வேண்டுமென்னும் எண்ணமுடையவராய்ப் புறப்பட்டு ஆங்காங்குள்ள க்ஷேத்திரங்களைக் கும்பிட்டுப்பாடி கொங்குநாட்டைப் போய்ச்சேர்ந்து திருப்புக்கொளியூருக்கெழுந்தருளிப் பிராமணவீதிவழியாய் வரும் பொழுது அந்த வீதியில் எதிா எதிராயுள்ள இரண்டுவீட்டில் ஓர்

வீட்டில் மங்கலவாத்திய வோசையும், ஓர் வீட்டில் அழுகை யோசையுங் கேட்க அதிசயித்து சிலரை அழைத்து இது என்னவென்று கேட்டனர் அவர்கள் அந்த இரண்டு வீட்டிலும் இரண்டு பிள்ளைக ளிருந்தனர். அப்பிள்ளைகள் ஐந்துவயது உள்ளவர்கள். அவ்விருவரும் ஸ்நானஞ் செய்ய இங்குள்ள ஓர் மடுவிற் போயினர். அவருள் ஒருவனை அந்த மடுவிலுள்ள முதலை விழுங்கியது; மற்றொருவன் வந்து விட்டான. அவனுக்கு இன்று உபநயன கலியாணம் அங்கெழுந்திருப்பது மங்கல வாத்தியவொலி. மகனையிழந்தார் இன்று இருப்பானாயின் அவனுக்கும் இந்த மங்கலச்சடங்கை நாம் செய்வோமல்லவா என்றெண்ணி அழுகின்ற ஒலி என்றனர்.

அதனைக்கேட்டு மனமவருந்துகின்றபோது மகனையிழந்த தாய்தந்தையர் இருவருமவந்து திருவடியிலவீழ்ந்து வணங்கி எழுந்திருக்கஅறியாது மூர்ச்சித்துக்கிடந்தனர். அவர்களை எழுந்திருக்கச்செய்து மிக இரக்கத்துடன் நீவிர்தானோ மகனை இழந்தவர் என்றுவினவ, அவர்கள் சுந்தரமூர்த்திகளைக் கும்பிட்டவர்களாய், மகனையிழந்த துக்கம் முன்னிருந்தது, தேவரீரைக் கண்டபின்னர் அதனைமறந்தோம். ஏனெனில், தேவரீரைத் தெரிசனஞ் செய்யவேண்டுமென்று நெடுநாள் எண்ணியிருந்தோம். அது இன்று முற்றுப பெற்றது. முற்றுப்பெற்ற இந்தப்பேற்றைவிட்டு இனி வராதபிள்ளையை எண்ணிவருந்துவதனால் என்னபயன் என்று மீண்டுவணங்கினர்.

(கூ-கக) சுந்தரமூர்த்திகள்-மகனையிழந்து ஆற்றுத்துயர்க் கடலில் ஆழ்ந்துகிடந்த இருவரும் நம்மைக்கண்டபொழுதே

அத்துன்பக்கடலைக்கடந்தனரே! இனிநாமபிரிவோமாயின் மீண்டும் அத்துயரக்கடலில் மூழ்குவார்களல்லவா! இதுதானோ, நம்மைக்கண்டு அவர்கள் மகிழ்ந்ததற்கு நாம் செய்யும் நல்லருள் என்று திருவுளமிரங்கி நான் இனிமுதலையுண்டபாலனை யழைத்து இவர்களுக்குக்கொடுத்து இந்த அவிநாசியின்கண் எழுந்தருளியிருக்கும் எமதுபெருமான திருவடிகளைக்காண்பேன் என்று ஆணையிட்டு மடுக்கரையில் நின்று அவர்களைப்பார்த்து உங்களுடைய மகனை விழுங்கிய முதலை யிருக்கும் மடுஇதுதானோ என்றுகேட்க ஆமெனன "எத்தானமறக்கேன" என்ற திருப்பாட்டைத் தொடங்கி எம்பெருமானையே பற்றுக வாழ்வேன், பசுபதியே இவ்வூரிற்குநத்திடை இழியா (இறங்கி) குளித்த மாணி என்னைக்கிறிசெய்ததே எங்கோனே உனை வேண்டிக்கொள்வேன் பிறவாமையே (அவன்வேறொருபிறவி யிற்போயப்புகாவண்ணம்) கரைக்கான முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே என்று தமபெருமானைவேண்ட வேண்டியபடியே சிவபெருமானுடைய ஆணையாலஇயமன் அந்தப் பிராஹ்மணச் சிறுவனுயிரை முதலைவயிற்றில் புகுவித்தனன். பின்னர் அப்பிள்ளை முதலையால் விழுங்கப்பட்ட நாள்முதல அன்றளவும் சென்ற ஆண்டுகளுடன் அம்முதலை வாயினின்றும் வெளிப்பட்டனன்.

(௧௨-௨௯) அப்பிள்ளையைக்கண்டதாய் ஓடி அப்பிள்ளையை எடுத்துக்கொண்டுவந்து அப்பிள்ளைக்கு உயிர்கொடுத்த சுந்தரமூர்த்திகளுடைய திருவடியிலவீழ்த்தி தனது நாயகனுடன் தானும்வீழ்ந்து நமஸ்கரித்தனள். தேவர்கள் பூமாரிபொழிந்த

னர்-இம்மண்ணுலகிலுள்ளாரெல்லாம் அதிசயித்தனர். அந்தணரெல்லாம் உத்தரீயத்தைமேலே வீசி குதூகலித்தனர்; வேதவோசை கடலோசைபோல எழுந்தது; இவ்விதமான சம்பிரமத்துடன் சுந்தரமூர்த்திகள் அந்தப்பிள்ளையை அழைத்துக்கொண்டுபோய் அவிநாசியப்பனை வணங்கி பின்னர் யாவருடன் அவ்வந்தணர்வீட்டுக்குவந்து அந்தப்பிள்ளையின் தாய்தந்தைகள் களிக்குமாறு உபநயனகலியாணத்தைச் செய்வித்து யாவரும்போற்ற அவர்களுக்கெல்லாம் நல்ல ஆசிகள் புகன்று சேரனார் இருக்கும் மலைநாட்டை அடைந்தனர்.

சுந்தரமூர்த்திகள் போய்ச்சேர வருதற்குமுன் முதலையுண்ட பாலனை எழுப்பிய அற்புதச்செயலை அனேகர்சென்று அரசர் பெருமானுக்குத்தெரிவிக்க அவர்களுக்கெல்லாம் பொன்னாடைகளும் பொன்னாபரணங்களும் கொடுத்து அனுப்பினர். அச்சமயத்தில் சுந்தரமூர்த்திகள் வந்துவிட்டனர் என்றுகேள்வியுற்றனர். கேட்டவுடன் தம்மைமறந்து பரவசராய் ஆனந்தக்களிப்படைந்து என்னையனை அணைந்தாரோ? என்னையாளும் அண்ணல் அணைந்தாரோ? ஆரூரிறைவன் அணைந்தாரோ? என் துணையாம் தலைவனணைந்தாரோ? தரணியெல்லாம் உய்யவந்தவன் அணைந்தாரோ? என்று கூத்தாடி இப்பொழுது யானை களிக்கப் பேரிகை அடிக்கச்சொன்மின்கள் என்று அறைவித்தனர். மந்திரிகளை அழைத்து நம்பெரியோர் வருகின்றபடியால் நமது நகரத்தை அலங்கரிக்கச் சொல்லுங்கள், எதிர்கொள்ளப் புறப்படுங்கள் என்று அவரவருக்குங்கட்டளையிட்டுத் தான் யானையின்மேல் ஏறி எதிர்கொண்டழைக்கச் சென்று தமது எல்லைக்கண் வரு

கின்றசுந்தரமூர்த்திகளைக்கண்டு கீழிறங்கி அவரது திருவடிகளை வணங்கினர். மூர்த்திகளும இவரடிகளை வணங்கி ஒருவரை யொருவர் வணங்கி குசலங்களை வினவி, பின்னர் சுந்தரமூர்த்தி களை யானைமேலேற்றித் தான் பின்னிருந்து முத்துக் குடைபிடித் துச்செல்ல, சதுரங்கசேனைகளும் ஆரவாரக்களிப்புடன் புடை சூழ்ந்துவரத் தன் அரண்மனை வாயிலுக்குப்போய்க் கீழிறங்கி உள்ளேபுகுந்து மூர்த்திகளைச் சிங்காதனத்திருத்தி மங்கலங் கொண்டாடி அவ்விடத்திலேயே வீற்றிருக்கச்செய்தனர். சில நாள்கழிந்து அந்நாட்டிலுள்ள தலங்களெல்லாம் சென்று பணிந்து மகோதை என்னும் நகரத்திற்குப்போய் பலநாள் இருந்தனர். இருக்குநாளில் ஓர்நாள் சேரமானார் நீராடுஞ்சமயத் தில் சுந்தரமூர்த்திகள் தாம் கயிலாயத்திலிருந்துவந்து நெடு நாளாயிற்றென்று நினைந்து அங்குபோவதற்கெண்ணித் திரு வஞ்சைக்களமென்னும் கோயிலுக்குப்போய் வலமாகவந்து அன்புநிறைந்த உள்ளத்தராய் "சிவபெருமானை வணங்கிப் போற்றி - "தலைக்குத்தலைமாலையணிந்ததென்னே" என்னுந் திருப்பதிகம் பாடினர்.

(௬௦-௬௭) அப்பதிகத்தில் எம்பெருமானே! பாசவாழ்க் கையோடுகூடி வாழ்த்தக்க இவ்வுலகின்கண் யானும் பாசசம் பந்தமாகிய சரீரவாசியாய் உலாவிவந்தநாளில் என்னைத்தடுத்தா ண்டனை; யானும், செய்யும்பணியெல்லாம் செய்துமுடித்தேன். இனியான் முன்போலவே கயிலையின்கண்ணுள்ள சிவகணங்க ளோடு வாழ்தல் வேண்டுமென்று வேண்டினர். வேண்டியபடி யே சிவபெருமானும் எண்ணி, பிரமன்திருமால் முதலியவரை

யும் அழைத்து நமது வெள்ளையானையை அழைத்துக்கொண்டு போய், நமது ஆலால சுந்தரனை அந்தயானையின்மேலேற்றிக் கொண்டு இங்கு வாருங்களென்று கட்டளையிட்டனர். அக்கட்டளையைப்பெற்ற தேவரெல்லாம் ஒருங்கேகூடி சோதிசொரூபமாய்ப்பிரகாசிக்கும் வெள்ளையானையை அலங்காரஞ்செய்து அதனையழைத்துக்கொண்டு திருவஞ்சைக்களத்துக்குவந்து சிவபெருமானது ... லையடைந்தனர். அவர்கள் வருகையைக்கண்ட சுந்தரமூர்த்திகள் தாம் எண்ணிய எண்ணம் முற்றுப்பெற்றதென்று திருவுளமகிழ்ந்தவராய் அவர்களைக்காண, அவர்கள் மூர்த்திகளைக்கண்டு மிக்கவணக்கத்துடன் தேவரீரைக் கயிலாயத்துக்கு அழைத்துக்கொண்டுவரும்படியாகத் தேவரீருடைய சிவபெருமான் கட்டளையிட்டனர். வெள்ளையானையும் வந்திருக்கின்றது என்றனர்.

## கயிலைக்கு எழுந்தருளுதல்.

மண்ணுலகத்தில் வந்துசெய்யவேண்டிய வேலையெல்லாம் செய்துமுடித்தவராகிய சுந்தரமூர்த்திகள் அதனைக்கேட்டு மகிழ்ந்து வெளியேவந்து யானையைவலமாகவந்து அதன்மேலேறினர். பஞ்சவாத்தியங்களும் ஆகாயத்தில் கடலோசைபோல் முழங்கின. தேவர்கள் போற்றிப்பூமாரிபொழிந்தனர். இவ்வகையான சம்பிரமத்துடன் போகும்போது எல்லாவுயிர்களும் சொல்லுவதாகியசொல்லை அறியவல்லராகிய சேரமான்பெருமானை நினைத்தனர். நினைத்தபோதே சேரமான் அதனை அறிந்து தன் அருகிலிருந்த குதிரையின்மேலேறிக்கொண்டு திருவஞ்சைக்களத்திற்கு வந்து பார்க்கும்பொழுது, சுந்தரமூர்த்திகள்

யானையின்மேல போதலைக்கண்டு தாமபூமியில் இருப்பதைவிட்டு யானைக்குமுன் குதிரையைப் போகும்படி செலுத்தினர்.

யானைக்குமுன் போகும்படியான வல்லமை எப்படியுண்டாயிற்றெனின், அதன்காதில ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் சேரர் பெருமான் உபதேசித்தனர்; அந்தமந்திரவிசேஷத்தாற்சென்று அந்தயானையை வலமாகவந்து முன்னேசென்றது. இவ்வாறு சேரர்பெருமான் சுந்தரமூர்த்திகளுடன் போவதைக்கண்ணுக் குப்புலப்படும் வரையில் அவருடன் வந்த அமைச்சர் முதலானோர்கண்டுகளித்துப் பின் காணாராயினர். காணாமற்போகவே இனியாமெல்லாம் இங்கு யாரைப் பார்ப்பது; அந்தக்குதிரைக் கிருந்த புண்ணியம் நமக்கில்லாதொழிந்ததே என்று அன்புமே லிட்டவராய் தங்கள் கையிலிருந்த வாளினால் தங்களைத்தாங் களே வெட்டிக்கொண்டு வீழ்ந்தனர்.

(௩அ-௪௨. அப்படி வீழ்ந்தவரெல்லாம் வீரசரீரத்தைப் பெற்று குதிரைமேற்செல்லும் தங்கள் தலைவராகிய சேரர் பெருமானை வணங்கி அவர் கட்டளையை மேற்கொண்டு அவருக்கு முன்னே கயிலையைநோக்கிச் சென்றனர். சேரர்சேனை களெல்லாம் முன்செல்ல, அவைகளின்பின் அவர்கள் பெருமான் செல்ல, அவர் பெருமான் யானையின்மேல் வரும்பொழுது "தானெனை முன் படைத்தான்" என்னுந்திருப்பதிகத்தைப் பாடிக் கொண்டே கயிலாயத்தின் தெற்குக் கோபுரத்தை யடைந்து, அங்கு தமது தோழராகிய சேரருடன் இறங்கி உள்ளேபுகுந்து சிவபெருமான் சந்நிதானத்தில் உள்ள திரு வணுக்கன் திருவாயிலையடைந்தபோது சேரர்பெருமான்தடை

பட்டு நின்றனர். சுந்தரமூர்த்திகள் யானையின் மேல் உள்ளேசென்று சிவபெருமானைக்கண்டு விழுந்தெழுந்து தாயைப்பிரிந்து நெடுநாட்பிரிந்துசென்று மீண்டுந் தன் தாயைக்கண்டு ஆவலுடன் வந்து அணைதல்போலச் சமீபத்திற்சென்றனர். சிவபெருமான் அவரை அருகணைத்து ஆரூரனே! வந்தனையோவென்று அன்பு பாராட்டினர்.

(௪௱-௫) சுந்தரமூர்த்திகள் சிவபெருமான் பாராட்டிய அன்பினைப்பேபோலவும், அடியனேனுமிழைத்த பொறுத்து எனையாண்டு முடிவில்லாத பெருங்கருணையைத்தந்தனையே, அது என்னளவினதோ! என்று பலமுறையும் பணிந்து, சிவபெருமானிடத்து என்றுமுள்ள ஆனந்தவுருவினராய் நின்று பின்னர் எனது தோழனாராகிய சேரர்பெருமான் திருவஞ்சைக்களத் திருவாயிலில் நிற்கின்றனர் என்றனர். என்று விண்ணப்பஞ்செய்யவும், தேவர்களிற் பெரியவராகிய பிரமன்முதலியோர்களை நோக்கிநீவிர் நமது தோழனுக்குத்தோழனாகிய சேரர்பெருமானை அழைத்து வாருங்களென்று கட்டளையிட அவர்களிருவருஞ் சென்று அழைத்தனர். சேரனார் சிவபெருமான் ஆணையைத் தலைமேற்கொண்டு உள்ளே சென்று பெருமானைத் தூரத்தே நின்று பணிந்தெழுந்து போற்றி போற்றி என்று போற்றிக் கொண்டு நிற்ப, சிவபெருமான் புன்சிரிப்புடன் நாம் சுந்தரனை அழைத்தோமேயன்றி உன்னை யழைத்ததில்லையே, அழையாத நீ வந்தகாரணம் யாதென்று கேட்டனர்.

சேரர்பெருமான் எம்பெருமானே! அடியேனது அடிகளாகிய சுந்தரமூர்த்திகள் யானைமேல்வரும்போது அடியேன்

அவா முன சேவித்துக் கொண்டுவந்தேன். உமது கருணை வெள்ளமானது இங்குகொண்டுவந்து சேர்த்து விட்டதே யன்றி அடியேனை இங்கு வந்ததில்லை அடியேன ஒருவிண்ணபபஞ்செய்கின்றேன. என்னையெனில், வேதங்களாலும முனிவர்களாலும துதிப்பதற்கரிய பெருமையுடைய பெரியோனே! தேவரீரைப போற்றி உலா வொன்று பாடியிருக்கின்றேன, இப்பொழுது இவவிடம வன்றொண்டப பெருமானது பெரிய சபையாகக்காணப்படுகின்றது. இந்த மஹாசபையில அதனைத தேவரீர திருச்செவிசாத்தி அருளல்வேண்டும என்பதேயாம. சிவபெருமான் கருணை கூர்ந்து சொல்லுக என்றனர். சேரமானும திருவுலாவை அமுதம்போல திருச்செவியில் ஊட்டினர். சிவபெருமான் கருணை கூர்ந்து அன்ப! நீ நமது ஆலாலசுந்தரனுடன் பிரியாதிருக்கக்கடவாய் நீங்களிருவரும எமது கணங்கள புடைசூழ்ந்திருப்பத தலைவராகவிருந்து வாழக்கடவீர்களென்று அனுக்கிரகஞ்செய்தனர. அக்கட்டளையின்படியே இருவரும இருந்தனர்

மலர்மிசை யயனு மாலுங் காணுதற் கரிய வள்ளல
பலர்புகழ் வெண்ணெய் நல்லூ ராவணப் பழைமை காட்டி
உலகுய்ய வாண்டு கொள்ளப் பெற்றவர் பாத முன்னி
தலைமிசை வைத்து வாழுந் தலைமை நந்தலைமை யாகும்.

ஆலாலசுந்தரனார் பொன்னடிவாழ்க.

ஆசாரியபிரபாவம் முற்றிற்று.